உ

கணபதி துணை.

திரிசிரபுரம் மகாவித்துவான்

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் செய்யப்பெற்ற

# திருத்துருத்திப்புராணம்

திருக்கைலாய பரம்பரை, தருமபுர ஆதீனம்

உச-வது குருமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும்

சுத்தாத்துவித சைவசித்தாந்த பரமாசாரியவரிய

**ஸ்ரீலஸ்ரீ. சண்முகதேசிக மகா சந்நிதானம்**

அவர்கள் கட்டளை யிட்டருளியபடி

குற்றாலம், போர்டு உயர்தரக் கலாசாலைத்

தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

**திருவளர். ப. சிங்காரவேற்பிள்ளை**

அவர்கள் பார்வையிட்டு

எழுதிய உரை நடை, குறிப்புரையுடன்

ஷை கோவில் விசாரணையிலிருந்த

**திருவளர். சி. பொன்னுசாமிப்பிள்ளை**

அவர்கள் உதவியால் அச்சிடப்பெற்றது.

 **1933** [விலை ரூ. 1-8-0

உ

கணபதிதுணை.

# முகவுரை.

அநாதிமலமுத்தராகிய சிவபெருமான் அநாதிமலபெத்தர்களாகிய ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு அருளே திருமேனியாகக் கொண்டு அருளிய நூல்கள் பலவற்றுள்ளும் "வேதாகமபுராணவிதிகாசம்" எனப் பெரியோரால் எண்ணப்பட்டுச் சிறந்து நின்றன நான்கேயாம். அவை, வேதம் நான்கும், ஆகமம் இருபத்தெட்டும், புராணம் பதினெட்டும், இதிகாசம் இரண்டும் ஆம். இவற்றுள் புராணத்தை,

"எங்கு மாகி நின்றானு மியல்பறி யப்படா
மங்கை பாகங் கொண்டானு மதிசூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு நான்குக் குணர்வுமா
யங்க மாறுஞ் சொன்னானு மையாறுடை யையனே"

என்று தமிழ்மறை கூறுதலால் நான்கு மறைகளுக்கும் விளக்கமாகப் புராணமும், அங்கம் ஆறும் இறைவனாற் சொல்லப்பட்டனவென்று அறிவுறுத்தினதாகவே, புராணம் பதினெட்டும் மறைகளின் பொருள் கூறுதற்கு இன்றியமையாதனவாமென்க. புராணமென்ற சொற்பொருள் பழமையான வரலாறு என்பது. இப்புராணம் பொது, சிறப்பென இருவகைப்படும். மேற் கூறப்பட்ட புராணங்கள் பதினெட்டும் பொதுப் புராணங்களேயாம். இவைகள் இறைவனுடைய பழமையான வரலாற்றைக் கூறுவன. அங்ஙனங் கூறவே காலங்களும், தொண்டர்களும், அவ்வக்காலத்தில் அத்தொண்டர்கள் இறைவனருளால் பெற்ற இம்மை மறுமைப் பேறுகளும், அவற்றின் சாதனங்களும், பிறவும் புலப்படா நிற்கும்.

இனிச் சிறப்பாவன, அவ்விறைவனார் திருவுருவத்தின் சிறப்பும், அவ்விறைவன் வடிவுகொண்டெழுந்தருளி இருக்கின்ற ஒவ்வொரு தலங்களின் சிறப்பும், அவ்வடிவங்களை வழிபடுதற்கின்றியமையாத தீர்த்தமெனப்படும் நீரின் சிறப்பும், பிறவும் புலப்படுத்தா நிற்கும் தலப்புராணங்களேயாம். இவ்வாறு பலதிறப்படும் புராணங்கள் அனைத்தும் இறைவன் பொருள் சேர் புகழையே புலப்படுத்தும். ஆயினும் அப்

பொருள் சேர் புகழையே நுண்பொருளாகக்கொண்ட வேதாகமங்களி னும் பதினெண் புராணங்கள் மட்டும் விரிநூலாக அப்பொருள் சேர் புகழையே கதைத்தொடர்புறப் பருப்பொருளாகக்கொண்டு மிகுத் துக் கூறும். இதுவே புராணத்திற்கும் வேதாகமங்கட்கும் வேறுபாடா மென்க. இதனுல் புராணங்கள் வேதாகமங்களின் நுண்பொரு ளாகிய இறைவன் பொருள்சேர் புகழையே நன்கு விளக்கா நிற்குமென் பது ஒருதலை.

இதனுல் இறைவன் பொருள்சேர் புகழை விரும்பினுரிடத்து மலத்தைப்பற்றி வரும் இருவினைகளாகிய கருமங்கள் சாரமாட்டா வென்பது கொண்டு தெய்வப்புலமைத் திருவள்ளுவனுரும் “இருள் சேர் இருவினையுஞ் சேரா விறைவன், பொருள் சேர்புகழ் புரிந்தார் மாட்டு” என்றருளினுர். இதனை விரித்து “மூர்த்திதலம் தீர்த்தம் முறையாத் தொடங்கினர்க்கு, வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க் கும் பராபரமே” என்றுர் தாயுமானவரும். இவ்விருவருள், பொதுவும் சிறப்பும் அடங்கப் பொதுப்படப் பொருள் சேர்புகழே இருவினை நீக் கஞ் செய்யுமெனக் காரியவகையால் தெய்வப்புலமைத் திருவள்ளுவனுர் கூறினுரேனும் தாயுமானுர் பொது, சிறப்பிரண்டனுள் சிறப்பாய தலப்புராணங்களே அடங்க அதனை விரித்து மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றையும் முறையே கொண்டார்க்குப் பெருவார்த்தையாகிய குரு மொழி கிடைக்குமெனக் கருவி கூறினுரென்க. இதனுல் புராணங்கள் அனைத்தும் இருவினை நீக்கமாகிய காரியத்தையும், அதற்கேதுவான குருமொழியாகிய கருவியையும் அளிக்குமென்பது பெறப்பட்டது. இதுபற்றியே “கேட்டுறிற் சிவபுராணமே கேட்டுற” வெனவும், “செவி காள் கேண்மினகளோ சிவன் எம்மிறை செம்பவள, எரிபோல் மேனிப் பிரான்றிற மெப்போதும், செவிகாள் கேண்மின்களோ” எனவும் கூறு மாறறிக. புராணங்களனைத்தும் இறைவனுர் பொருள் சேர்புகழையே வலியுறுத்துமாதலின் அவையனைத்தும் அவ்விறைவன்பால் அன்பாய தொண்டர்க்கன்றி அன்பில்லாத வன்பர்களுக்கு எக்காலத்துமாகா வென்பது. இனி பொதுவுஞ் சிறப்புமாகிய புராணங்களால் கூறப்பெறும் இறைவனுர் பொருள்சேர் புகழையே தேவார திருவாசகங்களாகிய தமிழ்மறைகள் தழுவிச் செல்கின்றன என்பது அவைகளால் நன்கு தெளியப்படுமன்றே. அவற்றை விரிக்கிற் பெருகுமென்று விடுத்தனன். “ஞாலநின்புகழாக வேண்டும்” என்றருளியபடியே இவ்வுலகமுற்றும் புராணங்களே ஆயிட என் மனம் விரும்பா நிற்கும். அவற்றுள்,

திருத்துருத்திப்புராணம் வருமாறு; திருத்துருத்தி என்பது * குத்தால மென வழங்கும். துருத்தியாவது ஆற்றிடைக்குறை என்பர். உமையம்மையார் பரதமா முனிவர் மகளாகத் திருவவதாரஞ் செய்து காவிரி ஆற்றிற்கு இடையே ஒரு தலம் வகுத்து இறைவனை வழிபட்டமையால் அவ்விடம் துருத்தியெனப் பெயர் பெற்றது. துருத்தியெனப் பட்ட ஆலயத்தை நடுவில் வைத்து இரு பக்கமும் சென்ற காவிரி பின்னுள் கரை வகுப்பார் வகுத்திட அவ்வாலயத்தின் முன்னுகத் தெற்கிருந்து வடக்கோடியே அவ்வாலயத்தைத் தென்பாகமாக வைத்து வலமே சென்றது. இதனுல் பன்னூறு ஆண்டுகளாக அக்கோயில் முன்னுகவே தெற்கிருந்து வடக்கோடியே வலஞ்சென்றது என்பதற்குப் பற்பல அடையாளங்களும் இன்றும் உள்ளன. இக்காலத்தில் திருத்துருத்தி என்னும் பெயருடைய ஆலயம் அக்காவிரிக்குத் தென்கரையிலுள்ளது. இத்தலத்தில் விருட்சம் உத்தாலம் ஆதலால் அதனை உத்தாலவனமென்பர். அது இக்காலத்தில் குற்ருலமென மரீஇ வழங்கலாயிற்று. இதனைத் திருமணப் படலத்தில் காண்க. இதில் அரும்பன்னவன முலையம்மையோடு சொன்னவாறறிவார் எழுந்தருளியிருக்கின்றனர். இவரால் திருமணக்கோலங்கொண்டு திருமணஞ் செய்யப்பட்ட நாறுசாந்திளமுலையாளுடைய திருவுருவமும், அவர் மணவாளக் கோலங்கொண்டு மணவாளநாதரெனப் பெயர்பெற்ற அவர் திருவடிவைக் குறிப்பிக்கத் திருவடிப் பாதுகையும் அவ்வாலயத்தில் எதிர் எதிர் உள்ளன. இவ்வரலாற்றைத் திருமணப் படலத்தில் காண்க. இத்தல எல்லை ஐந்து குரோசம் என்பர். இத்துருத்தி ஆலயத்தைச் சூழ்ந்துள்ள திருக்கோயில்கள் பல உள. அவை அக்கினீசம், ஓங்காளீசம், காமேசம், வருணீசம், முனீசம், சோமசேகரம் என்பனவாம். அவற்றுள் முறையே அக்கினி, காளி, காமன், வருணன், எழுமுனிவர், சோமசேகரன் என்பவர்களால் சிவக்குறி நிறுவி வழிபடப் பெற்றன. இவற்றுள் அக்னீசம், சோழனுல் வழிபடப்பட்டமையால் சோழீசமெனவும் பெயர் பெறும். இதன் அண்மையில் அக்கினி தீர்த்தம் உள்ளது. காளீசம் காளியின் வரத்திற்கு எம்பெருமான் ஓமென்றருளினமையால் ஓங்காளீசமெனப் பெயர் பெறும். இதற்குத் தென்பாகத்தில் காளி தீர்த்தமுள்ளது. இதனை வழிபட்ட காளியம்

---

* இத்தலம் மாயவரமிருந்து கும்பகோணம் போகும் மார்க்கத்திலுள்ளது. S. I. R. ஸ்டேஷன். திருக்கைலாய பரம்பரைத் தருமபுரவாதீன பரிபாலனத்துக்குட்பட்டது.

மையார் அப்பெருமான் அருளால் அக்கோயிலுக்குச் சிறிது வடமேற்கில் கோயில்கொண்டு எழுந்தருளி அந்நகரைக் காவல் புரிந்திருக்கின்றார். வருணீசம்; பரிச்சேபன் மகன் சிவபக்தனுக்குக் காசநோயை மாற்றியருளியது. இது இப்போது காமாட்சியம்மை கோயிலெனக் கொண்டாடப்படுகின்றது. திருத்துருத்தியில் எழுந்தருளிய சொன்ன வாறறிவார் உருத்திர சன்மனுக்குக் காசித்தலம் போல் விசுவநாதராகக் காட்சி தந்தருளினமையால் அத்திருக்கோயில் சொன்னவாறறிவார் திருமுன் உள்ளது. வைரவர் திருவுருவம் இத்தலத்திற்குத் தென் கிழக்கில் உள்ளது. அத்தலத்தை "க்ஷேத்திரபாலபுர" மென்பர். திருமாலானவர் ஆதிகேசவரெனப் பெயர் பெற்று எம்பெருமான் திருமணக்கோலத்தைக் கண்டு களித்து இந்நகரத்தைக் காவல் புரிந்தருளுகின்றனர். அக்கோயில் ஓங்காளீசத்திற்குத் தென்பாகத்திலுள்ளது. இதற்குத் தென்பாகத்தில் புண்டரீக முனிவரால் இயற்றிய புண்டரீகத் தீர்த்தம் ஒன்று உண்டு.

இனி இத்திருத்துருத்தித் தலத்தைச் சூழ்ந்துள்ள தலங்களும் பலவாம். அவை தேரழுந்தூர், திருக்கோழம்பம், திருவாவடுதுறை, திருவாலங்காடு, வில்லிய நல்லூர், எதிர்கொள்பாலி, திருமணஞ்சேரி, திருவேள்விக்குடி, கடல்தங்குகுடி, குறுமுலைப்பாடி, கதிராமங்கலம், மார்க்கண்டபுரம் என்பனவாம். அவற்றுள் தேரழுந்தூர்; உமை அம்மை பரதன்மாமுனிவர் மகளாகத் திருவவதாரஞ் செய்யுமுன் கைலையினின்றும் தேரில் எழுந்தருளி வர அத்தேர் அழுந்தினபோது அம்மையார் பசுவாகி நின்று அவ்விடத்தில் சிவக்குறி கண்டு வழிபட்டமையால் அப்பேரெய்தியது. இந்நகர்க்கு அண்மையில் தொழுவமிட்டு அப்பசுவைக் காத்தமையால் அவ்விடம் தொழுவாலங்குடியெனப் பெயராயிற்று. அதை இப்பொழுது தொழுதாலங்குடி என்பர். அப்பசுவைத் திருமாலானவர் இடையராய் நின்று காத்தமையால் அவர் அந்நகரில் "ஆமறியப்பர்" என்று பெயர் பெற்று அழுந்தீசர் ஆலயத்திற்குத் திருமுன் எழுந்தருளியிருக்கின்றனர். திருக்கோழம்பம்; அம்மையார் பசு வுருவோடு சென்று உலாவ ஆண்டுச் சிவக்குறியில் தனது காற் குளம்பின் தழும்பு உண்டாகவே பின்னர் அறிவு பெற்றுப் பாலைப் பொழிந்து அச்சிவக்குறியை வழிபட்டமையால் அப்பேர் எய்தியது. திருவாவடுதுறை; அப்பசுவானது அரச வனத்தில் சிவக்குறி கண்டு பால் பொழிந்து ஒப்பிலா முலையாளெனப் பெயர் பெற்று ஆங்கேயுள்ள புனிதநீரில் மூழ்கித் தனது பசு உரு நீங்கப்

பெற்றமையால் அப்பேர் எய்தியது. இதனல் அத்தலத்தை வட நூலார் கோமுத்தி யெனவும் அப்புனித நீர் நிலையைக் கோமுத்தி தீர்த்தமெனவும் வழங்குவார். திருவாலங்காடு; அப்பசு தானே ஆலங் காட்டில் சிவக்குறி கண்டு பாலைப் பொழிந்து வழிபட்டமையால் அப் பெயராயிற்று. இதுவே பரதமுனிவர் தவஞ்செய்து சிவபெருமான் அருளால் திருக்குளங் கண்டு மூழ்கி அம்பிகையாகிய புதல்வியை அடையப்பெற்ற தலமாம். வில்லிய நல்லூர்; பரதமுனிவர் வேள்வி செய்து எம்பெருமாட்டி தோன்றிய அவ்வில்வடிவான வேள்விக் குண் டத்தே சிவக்குறிகண்டு வழிபட்டமையால் அப்பெயர் உண்டாயிற்று. இத்தீர்த்தத்தை ஓமக்குள மென்பர். எதிர்கொள்பாடி; சொன்னவாறறி வார் திருமணக்கோலங்கொண்டு திருமணத்திற்குச் செல்லப் பரதமுனி வர் எதிர்கொண்டழைத்துச் சிவக்குறி கண்டு வழிபட்டமையால் அப் பேர் அடைந்தது. திருமணஞ்சேரி; திருமணஞ் செய்த இடத்தில் மாமி சுமித்திரை வேண்டுகோளுக்கு எம்பெருமான் சிவக்குறியாயிடக் கண்டு வழிபட்டமையால் அப்பேர் எய்தியது. கடல்தங்குகுடி; பிரம்மாவின் தின கற்பத்தில் கடல் பொங்கி வரப் பிரம்மாவின் வேண்டு கோளின்படி திருமணஞ்சேரியில் மணவாளநாதர் திருக்கை அமைக்க அவர் திருமுன் சிறிது தூரத்தே கடல் தங்கியிடவும் ஆங்கே சிவக்குறி கண்டு பிரமன் வழிபட்டமையால் அப்பேர் எய்தியது. அது இப்போது கடலங்குடியென மரீஇ வழங்கும். குறுமுளைப்பாலி; முனிவர் எம் பெருமானர் திருமணத்திற்காகக் குறுமுளை செய்யவே ஆங்கே சிவக் குறி கண்டு வழிபட்டமையால் அப்பேர் எய்தியது. கதிராமங்கலம்; சூரியன் சொன்னவாறறிவார் திருவருள் பெறத் தன் பெயரால் மூத்த பிள்ளையாரையும் சிவக்குறியையும் நிறுவி வழிபட்டமையால் அப்பேர் பெற்றது. மார்க்கண்டபுரம்; மார்க்கண்டேயரால் சிவக்குறி நிறுவி வழிபட்டமையால் அப்பேர் பெற்றது. இது கதிராமங்கலத்திற்குச் சிறிது வட கிழக்கிலுள்ளதென்பர்.

இனி இத்திருத்தி என்பது அகத்திய முனிவர் முதலியவர்களால் வழிபட்டு அருள் பெறப்பட்டது. திருநெறித் தலைவர் நால்வருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனர் மூழ்கித் தமது கருமேகநோய் நீங்கப்பெற்றுச் சுந்தர தீர்த்தமெனப்பட்ட தாமரைக்குளம் ஒன்று சொன்னவாறறிவார் சன்னிதிக்கு வடபாகத்திலுள்ளது. அதனல் அத்தீர்த்தத்தின் மேல் கரையில் அச்சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கின்றார். இந்நாயனர் வரலாற்றை ஆசிரியர் பெரிய புராணத்தில் கூறப்படாத சில பகுதிகளையும் சேர்த்

துக் கூறியுள்ளார். அவை இன்றியமையாதவை. இத்தலம் திரு நெறித்தலைவர் நால்வர்களாலும், பட்டினத்தடிகள் முதலிய பிறமெய்த் தொண்டர்களாலும் துதிக்கப் பெற்றுள்ளது. இதனை இப்புரா ணத்தின் முன் காணலாம். ஏனையவெல்லாம் இப்புராணத்தின் அவ்வப் படலத்திற் காணப்படும். இவ்வாறு இத்தல வரலாற்றை மிகத் தெளிவாக விரித்துரைப்பது இத்திருத்துருத்திப் புராணமாகும். இது படிப்போர்க்கும் கேட்போர்க்கும் பத்திச் சுவையும், பொருட் சுவையும், சொற்சுவையும், ஓசை நலமும் இடையிடையே மனத்தை மகிழ்விக்குமென்பது ஒருதலை. இதனை இயற்றுவித்தவர் செங்குந்த மரபில் வந்த தியாகராஜ முதலியார் என்பவராவர். இவர் நன்றியை இவ்வுலகம் நன்கு பாராட்டாமற் போகாது. இதனை யியற்றினோர் வரலாறு பின்வரும் நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கத்தால் நன்கு விளங்கும்.

குற்றாலம் தெற்குத் தெரு, மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இப் புராணம் ஏட்டுப் பிரதியாக இருப்பது கண்டு எப்படியாவது அதனை அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டுமென்று அவாவுற்று அப்பிரதியை என்பால் கொடுத்து முன்னமே அச்சிடப் பலர் முயன்றும் இயலாமற் போயிற்று ஆயினும் இனியாவது பலர்க்கும் உபயோகமாகும்படி அச் சிட்டு வெளிப்படுத்தவேண்டுமென்று வற்புறுத்திச் கூறினர். அடியேன் இளமையிலேயே இதனைத் தேடி வெளிப்படுத்த முயன்றவனாயினும் இப்போது இயற்றிய ஆசிரியர் தந்ததுபோல ஏற்றுக்கொண்டு, ஒரு கைப்பிரதி செய்து ஒத்து நோக்க மற்றொரு பிரதி கிடைக்கப்பெறாமல் மிகவும் வருத்தமுற்று முயன்று எழுதுவோர் எழுத்துப் பிழைகளை இயன்றவாறு திருத்தி அரும்பன்னவனமுலை யம்மையாளோடு மேவிய சொன்னவாறறிவார் திருவருளைக்கொண்டு இப்புராணத்தை அச்சிட முயன்றனன். அப்போது தருமை ஆதீனகர்த்தரவர்களின் ஆக்ஞைப் படி அக்கோயில் விசாரணை செய்துவந்த திருவாலங்காடு சி. பொன்னு சாமிப் பிள்ளையவர்கள் தம்மாலியன்ற பொருளுதவியை இடையிடை யே செய்து என்னை இத்தொண்டில் ஊக்கி வந்தனர். அவர் கருத்தின் படி இப்புராணத்தின் புனைந்துரையான நாட்டுச்சிறப்பு, நகரச்சிறப்பு இரண்டும் நீங்கலாக வழக்கியலான 38 படலங்களுக்கும் உரை நடைச் சுருக்கமெழுதி அவ்வப்படலத்தின் இறுதியிற் சேர்த்துளேன். இப் புராணம் முற்றும் அச்சிட்டு முடிவதற்கு நன்கொடையாகப் பொரு ளுதவி செய்த செல்வப் பெரியார் பலராவர். அவர்கள் பெயர்கள் முற்றும் வரைந்து காட்டப்புகின் பெருகுமென்றஞ்சி அவருள் பேரு

தவி செய்த சிலர்களைமட்டும் பின்னர்க் குறிப்பிக்கின்றேன். இப்புராணத்தை அச்சிட முயன்றபோது நேர்ந்த இடையூறுகள் பலபலவாம். அவற்றையெல்லாம் பொருட்படுத்தா வண்ணம் அரும்பன்னவன முலையாளோடு மேவிய சொன்னவாறறிவார் திருவருள் இத்தொண்டை நிறைவெய்தச் செய்ததற்கு இத்திருவருளை என்றும் மறவாமல் போற்றுகின்றேன். இனி இப்புராணத்தில் என் கண்ணுக்கு அகப்படாத பிழைகள் பின் என்னாலும் பிற நண்பர்களாலும் அறியப்படுமேல் அவற்றை இரண்டாம் பதிப்பில் திருத்தி அச்சிட முயல்வேன். இப்புராணத்தின் அருஞ்செய்யுட் குறிப்புரை ஒன்று எழுதியுள்ளேன். அதனை இயலுமேல் இதன் இறுதியில் சேர்த்து அச்சிட விரும்பியுள்ளேன். இத்தொண்டு விரைவில் நிறைவெய்தத் திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் 23-வது குரு மூர்த்தியாக எழுந்தருளியிருந்த மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் கட்டளையிட்டருளியபடியே பொருளுதவி செய்த ஷ ஆதீனம் 24-வது குரு மூர்த்தியாக எழுந்தருளி இருக்கும் சுத்தாத்துவித சைவ சித்தாந்த பரமாச்சாரியவரிய ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரச் சந்நிதியவர்களாகிய மகாசந்நிதானம் அவர்களின் நன்றி இவ்வுலகம் போற்றற்பாலதே.

இவ்வாறே இனி என்னால் பதிப்பிக்கப்பெறும் எந்நூல்களையும் இடையூறின்றிப் பதிப்பித்து முடித்தருளுமாறு தண்ணார் தமிழளிக்கும் பெருமானை சிவபிரான்திருவடியைப் பன்முறை சிந்தித்து வணங்குகின்றேன்.

நன்கொடையாளர்.

உயர்திரு. ராம. அரு. அரு. ராம. அருணசலஞ் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை

,, K. R. வெங்கடராம ரெட்டியார் அவர்கள், கடலங்குடி.

,, N. T. R. ரெங்கசாமி ரெட்டியார் அவர்கள்,
ரைஸ்மில், நாரசிங்கன்பேட்டை.

,, T. P. இராமசாமிப்பிள்ளையவர்கள், திருவொற்றியூர் திருப்பணி,
சென்னை.

,, R. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள், ரைஸ்மில், குற்றாலம்.

,, N. R. சுப்பிரமணிய ஐயர் அவர்கள், தலைமை ஆசிரியர்,
போர்டு ஹைஸ்கூல், குற்றாலம்.

,, உபாத்தியாயர் சங்கத்தார் ஷ

,, மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள், கண்டராக்டர், தஞ்சை.

,, அமு. திருவம்பலஞ் செட்டியார் அவர்கள், நாகை.

சென்னை பிரசிடென்சி காலேஜ் தமிழ் லெக்சரரான
சென்னை யூனிவர்சிட்டிப் போர்டு, தலைவர் உயர்திருவாளர்

C. R. நமசிவாய முதலியார் அவர்கள்
இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

வாளுட்சி தரும்புலவர் இமையாது விழிதிறந்து வனப்பு நோக்கத்
தேனுட்சி தருங்கவிகள் பற்பலவா யிரமாகச் செய்து தந்த
கோனுட்சி தரும்புலவர் நாயகமா யிலகியென்றுங் குன்ருச் சீர்த்தி
மீனுட்சி சுந்தரனும் புலவர்மணி மாட்சியிவண் விளம்பற் பாற்ரே!

அன்னவன்செய் உத்தால வனமேன்மை செய்யதமி ழகத்திலுள்ளோர்
கன்னலெனக்கண்டென்னக்கனிந்துவழிதேனென்னக்கனிவுகொள்ளத்
தன்னமுமோர் குறையின்றி யச்சுவா கனமேற்றித் தந்தா னிந்நாள்
பன்னருஞ்சீர் இத்தொண்டே தமிழ்வளர்க்கும் நற்ருெண்டாப் பற்றி
னுனல்.

நல்லதமிழ் தேர்புலவன் நற்குணத்தான் அன்பர்நலம் நாடுஞ் சீரான்
பல்லவையில்துணிந்துரைக்கும்பண்புடையான்பதிநூலிற்பற்றுநீங்கான்
மல்லலஞ்சேர் மூவலூர் எனும்பதியான் குற்ருலம் வதிவோன் பண்ணில்
வல்லவனுஞ் சிங்கார வேலனெனுஞ் செந்தமிழின் வாணன் மாதோ.



## நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கம்.

இந்நூலாசிரியர் சோழநாட்டிலே திரிசிரபுரமென்னும் திருச்சிராப்பள்ளியிலே வேளாளர் குலத்திலே உயர் திரு. சிதம்பரம் பிள்ளையவர்கள் செய்த தவப்பேற்றால் அருமைப் புதல்வராய்த் தோன்றினர். இவர் மீனாட்சிசுந்தரமென்னும் பிள்ளைத் திருநாமம் பெற்று இளமையிலேயே தமிழ் இலக்கண இலக்கியங்களை வரன்முறை பிறழாமல் நன்கு பயின்றனர். அக்கல்வி வளர்ச்சியால் சிவன்பால் அன்பு தலைப்படவே திருவாவடுதுறையில் கருவது பட்டத்தில் எழுந்தருளிய மெய்த்திரு அம்பலவான தேசிகசுவாமிகள்பால் தீட்சைகள் பெற்றுத் தேவாரம், திருவாசகம் முதலிய அருட்பாக்களையும், அதற்கு இன்றியமையாச் சிறப்புடைய சித்தாந்த நூல்களையும் நன்கு பயின்று தெளிந்தனர். "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன் நற்றாடொழாஅ ரெனின்" என்பதனால் சிவ வழிபாடே சிறந்த பிறவிப்பயன் என்று துணிந்து உண்பதன்முன் மலர்பறித்திட்டுண்ணும் நோன்புடையராயினர். "தாமின் புறுவதுலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்," என்றபடித் தாங்கற்றனவெல்லாம் மாணவர்கள் எவராயினும் வேற்றுமை கருதாமல் அவரை அழைத்துக் கல்வி கற்பித்துக் கவிபாடச்செய்ய வல்லுநராய்த் திகழ்ந்தனர். இஃதன்றித் தம்மைக் காணுதவரும் கற்றுணரப் பல சிற்றிலக்கியங்களும், பேரிலக்கியங்களும் திருநெறித் தலைவர் அருட்பாக்கள் முதலான பன்னிரண்டு திருமுறைகள் சங்கநூல்கள் முதலியவற்றின் நுண்பொருளும், சித்தாந்த நன்பொருளும் மிக விளங்க அன்பு நெறியானும், விதிநெறியானும் இயற்றித் தமிழ் மொழியின் குறை தீர்த்தனர். இவ்வாசிரியரால் முடிவுற இயற்றப்பட்டுச் சிறியதும் பெரியதுமாய் வெளிவந்த நூல்கள் ஐம்பத்தொன்றென்பர். வெளிவராதனவும் முடிவுறாதனவுமான நூல்கள் பலவாம். இஃதன்றித் தேவாரம் பெற்ற தலங்களும் பிறதலங்களுமாகிய சிவதலங்கடோறும் சென்று இறைவனைப் பாடிப் பணிந்தனர். இக்கவியரசர் முன் யார் வரினும் அவர்கள் கவிபாட வல்லுநரென்பது அக்காலத்தவர் யாவரும் அறிந்ததொன்றாம். இதனால் "கம்பன் வீட்டுக் கட்டுத்தறியுங் கவிபாடும்," என்பது போலப் "பிள்ளை வீட்டுத் தறியும் பெருங்கவிபாடும்," என்ற பழமொழி வழங்கலாயிற்று.

இப்புலவர்பால் கல்விபயின்றவர் எத்தனையோ பன்னிருவராவார். அம்மட்டோ? இவர்பால் பயிலப்பெற்ற கல்வியே இக்காலத்தும் எக்காலத்தும் இத்தமிழ் நாட்டு மக்களின் தமிழ்ப் பயிற்சிக்குக் காரணமா

யிற்றென்றால் இக்கவிஞர் பெருமானார் நன்றி இத்தமிழ் நாட்டிற்கு எத்துணைத்தென்பது ஏழையேன் சொல்லுந் தரத்ததோ? இவ்வாசிரியர் திருவாவடுதுறையில் மெய்த்திரு, அம்பலவாண தேசிகர்பால் மெஞ்ஞானம் பெற்றனராயினும் அவ்வாதீன மடத்திலே "ஆதீனமகா வித்வா" னென்ற பட்டம் பெற்று அம்மடத்தில் நெடுநாளிருந்து துறவு பூண்ட மாணவர்களுக்கும், பிறர்களுக்கும் கல்வி கற்பிக்கும் கல்லூரித் தலைமை ஆசிரியராயினர்.

இத்தொண்டில் அமர்ந்தது முதல் இல்லறந் துறவறம் ஆகிய எந்நிலையில் நிற்பவராயினும் அவர் பயின்ற சிறு கல்வியைக் காணின் அக்கற்றவர்களை வேற்றுமை கருதாமல் ஆவ்வாதீனத்தில் கசு-வது பட்டத்தில் எழுந்தருளிய மெய்த்திரு, சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் திருமுன் அழைத்துச் சென்று அவரவர் கல்வித்திறமைக்கேற்ப அச்சுவாமிகளைப் பரிசளிக்கச்செய்து மேன்மேலும் தமிழ்ப் பயிற்சியில் அவர்களுக்கு மனவெழுச்சி உண்டாக்கிக் கழிபெருங் களியாட் டயரா நிற்கும் வழக்கமுடைய வேளாண்மையாளியாயினர். இப் பெருந்தகையார் போல் இடையிடையே ஒவ்வொருவர் தோன்றினும் நம் தமிழ் மக்கள் எத்தனையோ நலம்பெறக் காண்போம்.

இப்பாடல் சான்ற பெரும் புலவர்பால் கல்வி பயின்ற பெரியார் பலர் இக்காலத்தில் நன்கு மதிப்புடன் நன்னிலையிலிருந்தும், இவ்வாசிரியருக்கு இதுவரை யாதொரு (ஞாபகச்சின்னம்) அறிகுறியும் செய்துவைத்துப் போற்றாதது நம் தமிழ் மக்களின் நன்றியறிதலில்லாக் குறையென்றே கூற யாரும் முன் வராமல் போகார். இப்புலவர் பெருமானார் மாணாக்கர் தியாகராஜ செட்டியார் முதலிய பல ராவர். இக்கவியரசர் மாயூர நகரில் சிவனாரடிகூடி இன்புற்றனர். இவர்காலம் பத்தொன்பதாவது நூற்றாண்டில் பவ ஆண்டு பிறந்து யுவ ஆண்டின் வரை இருந்தனர் என்ப. வாழ்க.

முற்றிற்று.





திருக் கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்

உ௬-வது மஹா ஸந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்.



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனம்

24-வது மகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக பரமாசார்ய சுவாமிகள்

உ

கணபதி துணை.

தருமபுரவாதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசந்நிதானம்

# சண்முகதேசிகசுவாமி அவர்களின்

திருவடிக்கு விண்ணப்பித்துக்கொண்ட

உரிமை உரை.

---

திருவளர் மார்பனும் உருவளர் பூமனும்
அவ்விய மின்றிச் செவ்வி தேர்ந்திறைஞ்ச
அமரர்கோன் பூசையைக் கமமுறக் கொண்டருள்
வள்ளல் தலைவன் நள்ளுறுங் கமலையில்
ஊனசம் பந்தமில் ஞானசம் பந்தனார்
அருள்வழி வந்த தெருளார் தருமையில்
புத்தமு தென்னச் சித்தாந் தத்தேன்
அடுத்தநன் மாணவர்க் கெடுத்தெடுத் தூட்டி
இன்னருள் புரியும் பொன்னலம் மிக்கு
வருமுது குரவரில் இருபதொடு நான்கென
எண்முகப் புகழ்வளர் சண்முகக் குரவ !
ஏழைக் கிரங்கும் மாழைச் செல்வ !
பன்னூற் பொருளெலாம் தன்னல மின்றி
என்னரும் உணரப் பொன்னருள் புரிவோய் !
அருளின் கொள்கலம் தெருளி னிருக்கை
தானென நின்றே வானென வழங்கும்
வள்ளல் ! நின் உரிமை தெள்ளுற நின்ற
துருத்தித் தலத்தின் விருத்தியைப் புகலும்
பயனருள் புராணப் பதிப்பின் வளரும்
நலமுங் கொண்டு நலமுற
அருள்செய்வாய் நின் அருள்வாழியவே.

இங்ஙனம்,

ப. சிங்காரவேலன்.

2—3—34.

# திருத்துருத்திப்புராணம்

---

## படல அகராதி.

முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்.

# திருத்துருத்தித்தேவாரம்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

திருவிராகம் பண்—நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

வரைத்தலைப் பசும்பொனோ டருங்கலன்க ளுந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்திலங்கு காவிரிக்
கரைத்தலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினா
யுரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே. ௧

அடுத்தடுத் தகத்தியோடு வன்னிகொன்றை கூவிளந்
தொடுத்துடன் சடைப்பெய்தாய் துருத்தியா யோர்காலனைக்
கடுத்தடிப் புறத்தினா னிறத்துதைத்த காரண
மெடுத்தெடுத் துரைக்குமாறு வல்லமாகி னல்லமே. ௨

கங்குல்கொண்ட திங்களோடு கங்கைதங்கு செஞ்சடைச்
சங்கிலங்கு வெண்குழை சரிந்திலங்கு காதினாய்
பொங்கிலங்கு பூணநூலு ருத்திரா துருத்திபுக்
கெங்குநின் னிடங்களா வடங்கிவாழ்வ தென்கொலோ. ௩

கருத்தினாலோர் காணியில் விருத்தியில்லை தொண்டர்த
மருத்தியாற்ற மல்லல்சொல்லி யையமேற்ப தன்றியு
மொருத்திபால் பொருத்திவைத் துடம்புவிட்டி யோகியா
யிருத்திநீ துருத்திபுக் கிதென்னமாய மென்பதே. ௪

துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாதவென்னை மையல்செய்திம் மண்ணின்மேற்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படு முடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குகின்ற தென்னையே. ௫

வெயிற்கெதிர்ந் திடங்கொடா தகங்குளிர்ந்த பைம்பொழிற்
றுயிற்கெதிர்ந்த புள்ளினங் கண்மல்குதண் டுருத்தியாய்
மயிற்கெதிர்ந் தணங்குசாயன் மாதொர்பாக மாகமூ
வெயிற்கெதிர்ந் தோரம்பினா லெரித்தவில்லி யல்லையே. ௬

கணிச்சியம் படைச்செல்வா கழிந்தவர்க் கொழிந்தசீர்
துணிச்சிரக் கிரந்தையாய் கரந்தையாய் துருத்தியா
யணிப்படுந்த னிப்பிறைப் பணிக்கதிர்க் கவாவுநன்
மணிப்படும்மை நாகநீ மகிழ்ந்தவண்ண லல்லையே. ௭

சுடப்பொடிந் துடம்பிழந் தனங்கனாப மன்மத
னிடர்ப்படக் கடந்திடந் துருத்தியாக வெண்ணினாய்
கடற்படை யுடையவக் கடலிலங்கை மன்னனை
யடற்பட வடுக்கலி லடர்த்தவண்ண லல்லையே. ௮

களங்குளிர்ந் திலங்குபோது காதலானு மாலுமாய்
வளங்கிளம் பொனங்கழல் வணங்கிவந்து காண்கிலார்
துளங்கிளம் பிறைச்செனித் துருத்தியாய் திருந்தடி
யுளங்குளிர்ந்த போதெலா முகந்துகந் துரைப்பனே. ௯

புத்தர்தத் துவமிலாச் சமணுரைத்த பொய்தனை
யுத்தம மெனக்கொளா துகந்தெழுந்து வண்டினந்
துத்தநின்று பண்செயுஞ் சூழ்பொழிற் றுருத்தியெம்
பித்தர்பித் தனைத்தொழப் பிறப்பறுதல் பெற்றியே. ௰

கற்றுமுற்றி னார்தொழுங் கழுமலத் தருந்தமிழ்
சுற்றுமுற்று மாயினா னவன்பகர்ந்த சொற்களால்
பெற்றமொன் றுயர்த்தவன் பெருந்துருத்தி பேணவே
குற்றமுற்று மின்மையிற் குணங்கள்வந்து கூடுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்துருத்தியும்-திருவேள்விக்குடியும்.

பண் — சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

ஓங்கிமே லுழிதரு மொலிபுனற் கங்கையை யொருசடைமேற்
றாங்கினா ரிடுபலி தலைகல னாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினா லுமையொடும் பகலிடம் புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௧

தூறுசேர் சுடலையிற் சுடரெரி யாடுவர் துளங்கொளிசேர்
நீறுசாந் தெனவுகந் தணிவர்வெண் பிறைமல்கு சடைமுடியார்
நாறுசாந் திளமுலை யரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
வீறுசேர் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௨

மழைவள ரிளமதி மலரொடு தலைபுல்கு வார்சடைமேற்
கழைவளர் புனல்புகக் கண்டவெங் கண்ணுதற் கபாலியர்தா
மிழைவளர் துகிலல்கு லரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விழைவளர் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௩

கரும்பன வரிசிலைப் பெருந்தகைக் காமனைக் கவினழித்த
சுரும்பொடு தேன்மல்கு தூமலர்க் கொன்றையஞ் சுடர்ச்சடையா
ரரும்பன வனமுலை யரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விரும்பிடந் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௪

வளங்கிளர் மதியமும் பொன்மலர்க் கொன்றையும் வாளரவுங்
களங்கொளச் சடையிடை வைத்தவெங் கண்ணுதற் கபாலியார்தாந்
துளங்குநூன் மார்பின ரரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விளங்குநீர்த் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௫

பொறியுலா மடுபுலி யுரிவையர் வரியராப் பூண்டிலங்கு
நெறியுலாம் பலிகொளு நீர்மையர் சீர்மையை நினைப்பரியார்
மறியுலாங் கையினர் மங்கையோ டொருபக லமர்ந்தபிரான்
வெறியுலாந் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௬

புரிதரு சடையினர் புலியுரி யரையினர் பொடியணிந்து
திரிதரு மியல்பினர் திரிபுரமூன்றையுந் தீவளைத்தார்
வரிதரு வனமுலை மங்கையோ டொருபக லமர்ந்தபிரான்
விரிதரு துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௭

நீண்டிலங் கவிரொளி நெடுமுடி யரக்கனின் னீள்வரையைக்
கீண்டிடந் திடுவனென் றெழுந்தவ னாள்வினைக் கீழ்ப்படுத்தார்
பூண்டநூன் மார்பின ரரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
வேண்டிடந் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௮

கரைகட லரவணைக் கடவுளுந் தாமரை நான்முகனுங்
குரைகழ லடிதொழக் கூரெரி யெனநிறங் கொண்டபிரான்
வரைகெழு மகளொடும் பகலிடம் புகலிடம் வண்பொழில்சூழ்
விரைகமழ் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௯

அயமுக வெயினிலை யமணருங் குண்டருஞ் சாக்கியரு
நயமுக வுரையினர் நகுவன சரிதைகள் செய்துழல்வார்
கயலன வரிநெடுங் கண்ணியோ டொருபக லமர்ந்தபிரான்
வியனகர் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. ௰

விண்ணுலாம் விரிபொழில் விரைமணற் றுருத்திவேள் விக்குடியு
மொண்ணுலா மொலிகழ லாடுவா ரரிவையோ டுறைபதியை
நண்ணுலாம் புகலியு ளருமறை ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணுலா மருந்தமிழ் பாடுவா ராடுவார் பழியிலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்—திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பொருத்திய குரம்பை தன்னைப் பொருளெனக் கருத வேண்டா
இருத்தியெப் போது நெஞ்சு ளிறைவனை யேத்து மின்கள்
ஒருத்தியைப் பாகம் வைத்தங் கொருத்தியைச் சடையுள் வைத்த
துருத்தியஞ் சுடரினானைத் தொண்டனேன் கண்ட வாறே. ௧

சவைதனைச் செய்து வாழ்வான் சலத்துளே யழுந்து கின்ற
விவையொரு பொருளு மல்ல விறைவனை யேத்து மின்னோ
வவைபுர மூன்று மெய்து வடியவர்க் கருளிச் செய்த
சுவையினைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. ௨

உன்னியெப் போது நெஞ்சு ளொருவனை யேத்து மின்னோ
கன்னியை யொருபால் வைத்துக் கங்கையைச் சடையில் வைத்துப்
பொன்னியி னடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுந்
துன்னிய துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. ௩

ஊன்றலை வலிய னாகி யுலகத்து ளுயிர்கட்கெல்லாந்
தான்றலைப் பட்டு நின்று சார்கன லகத்து வீழ
வான்றலைத் தேவர் கூடி வானவர்க் கிறைவா வென்னுந்
தோன்றலைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. ௪

உடறனைக் கழிக்க லுற்ற வுலகத்து ளுயிர்கட் கெல்லாம்
இடர்தனைக் கழிக்க வேண்டி விறைவனை யேத்து மின்னோ
கடறனி னஞ்சமுண்டு காண்பரி தாகி நின்ற
சுடர்தனித் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. ௫

அள்ளலைக் கடக்க வேண்டி லரனையே நினைமி னீர்கள்
பொள்ளலிக் காயந் தன்னுட் புண்டரீகத் திருந்த
வள்ளலை வான வர்க்குங் காண்பரி தாகி நின்ற
துள்ளலைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. ௬

பாதியி லுமையா டன்னைப் பாகமா வைத்தபண்பன்
வேதிய னென்று சொல்லி விண்ணவர் விரும்பி யேத்தச்
சாதியாஞ் சதுமு கனுஞ் சக்கரத் தானுங் காணாச்
சோதியைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. ௭

சாமனை வாழ்க்கை யான சலத்தினு ளழுந்தவேண்டா
தூமநல் லகிலுங் காட்டித் தொழுதடி வணங்கு மின்னே
சோமனைச் சடையுள் வைத்துத் தொன்னெறி பலவுங் காட்டுந்
தூமணற் றுருத்தி யானைத் தொண்டனேன் கண்டவாறே. ௮

குண்டரே சமணர் புத்தர் குறியறி யாது நின்று
கண்டதே கருது வார்கள் கருத்தெண்ணா தொழிமி னீர்கள்
விண்டவர் புரங்க ளெய்து விண்ணவர்க் கருள்கள் செய்த
தொண்டர்க டுணையி னானைத் துருத்திநான் கண்டவாறே. ௯

பிண்டத்தைக் கழிக்க வேண்டிற் பிரானையே பிதற்று மின்கள்
அண்டத்தைக் கழிய நீண்ட வடலரக் கன்ற னாண்மை
கண்டொத்துக் கால்வி ரலா லூன்றிமீண் டருளிச் செய்த
துண்டத்துத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே ௰

திருச்சிற்றம்பலம்.

---

## வைப்பு.

### பொது.

### பண் பழம் பஞ்சுரம்.

### பாவநாசத் திருப்பதிகம்.

மாலைத் தோன்றும் வளர்மதியை மறைக்காட் டுறையு மணாளனை
யாலைக் கரும்பி னின்சாற்றை யண்ணா மலையெம் மண்ணலைச்
சோலைத் துருத்தி நகர்மேய சுடரிற் றிகழுந் துளக்கிலியை
மேலை வானோர் பெருமானை விருப்பால் விழுங்கி யிட்டேனே. ௧

சோற்றுத் துறையெஞ் சோதியைத் துருத்தி மேய தூமணியை
யாற்றிற் பழனத் தம்மானை யால வாயெம் மருமணியை
நீற்றிற் பொலிந்த நிமிர்திண்டோ ணெய்த்தானத்தெந்நிலாச்சுடரைத்
தோற்றக் கடலை யடலேற்றைத் தோளைக் குளிரத் தொழுதேனே.

## திருச்சாய்க்காடு—திருத்தாண்டகம்.

விண்ணோர் பரவநஞ் சுண்டார் போலும்
வியன்றுருத்தி வேள்விக் குடியார் போலு
மண்ணா மலையுறைவு மண்ணல் போலு
மதியரைய மங்கை யமர்ந்தார் போலும்
பண்ணார் களிவண்டு பாடி யாடும்
பராய்த்துறை யுண்மேய பரமர் போலுந்
திண்ணார் புகார்முத் தலைக்குந் தெண்ணீர்த்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே ௩

விலையிலா வாரஞ்சேர் மார்பர் போலும்
வெண்ணீறு மெய்க்கணிந்த விகிர்தர் போலு
மலையினார் மங்கை மணாளர் போலு
மாற்பேறு காப்பாய் மகிழ்ந்தார் போலுந்
தொலைவிலார் புரமூன்றுந் தொலைத்தார் போலுஞ்
சோற்றுத் துறைதுருத்தி யுள்ளார் போலுஞ்
சிலையினார் செங்க ணரவர் போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. ௪

## புள்ளிருக்குவேளூர்.

நெருப்பனைய திருமேனி வெண்ணீற் றானை
நீங்காதென் னுள்ளத்தி னுள்ளே நின்ற
விருப்பவனை வேதியனை வேத வித்தை
வெண்காடும் வியன்றுருத்தி நகரு மேவி
யிருப்பவனை யிடைமருதோ டீங்கோய் நீங்கா
திறைபவனை யெனையாளுங் கயிலை யென்னும்
பொருப்பவனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. ௫

## திருப்புறப்பயம்.

பன்மலிந்த வெண்டலை கையி லேந்திப்
பனிமுகில்போன் மேனிப் பவந்த நாதர்
நென்மலிந்த நெய்த்தா னஞ் சோற்றுத் துறை
நியமந் துருத்தியு நீடூர் பாச்சில்

கன்மலிந் தோங்கு கழுநீர்க் குன்றங்
கடனாகைக் காரோணங் கைவிட் டிந்நாட்
பொன்மலிந்த கோதையருந் தாமு மெல்லாம்
புறம்பயகம் மூமொன்று போயி னாரே. ௬

## திருவையாறு

இண்டைச் சடைமுடியா யென்றே னானே
யிருசுடர் வானத்தா யென்றே னானே
தொண்டாற் றொழப்படுவா யென்றே னானே
துருத்திநெய்த் தானத்தா யென்றே னானே
கண்டங் கறுத்தானே யென்றே னானே
கனலாகுங் கண்ணானே யென்றே னானே
யண்டத்துக் கப்பாலா யையா றனே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. ௭

## திருவதிகைவீரட்டம்.

காப்பு

சிறையார் புனற்கெடில வீரட்டமுந்
திருப்பா திரிப்புலியூர் திருவா மாத்தூர்
துறையார் வனமுனிக ளேத்த நின்ற
சோற்றுத் துறைதுருத்திநெய்த் தானமு
மறையார் புனலொழுகுகா விரிசூ
ழையாற் றமுதன் பழன நல்ல
கறையார் பொழில்புடைசூழ் கானப் பேருங்
கழுக்குன் றுந் தம்முடைய காப்புக்களே. ௮

## திருவாமாத்தூர்.

கல்லலகு தாங்கொண்டு காளத்தியார்
கடியவிடை யேறிக் காணக் காண
வில்லமே தாம்புகுதா விடுமின் பிச்சை
யென்றாருக் கெதிரெழுந்தே னெங்குங் காணேன்
சொல்லாதே போகின்றீ ரும்மூ ரேது
துருத்தி பழனமோ நெய்த் தானமோ
வல்லலே செய்தடிகள் போகின் றீர்தா
மழகியரே யாமாத்தூ ரைய னாரே. ௯

# திருத்துருத்தித் தேவாரம்.

## திருவாரூர்.

கருத்துத்திக் கதநாகங் கையி லேந்திக்
கருவரைபோற் களியானை கதறக் கையா
லுரித்தெடுத்துச் சிவந்த தன்றோல் பொருந்தமூடி
யுமையவளை யச்சுறுத்து மொளிகொண் மேனித்
திருத்துருத்தி திருப்பழனந் திருநெய்த் தானந்
திருவையா றிடங்கொண்ட செல்வ ரிந்நா
ளரிப்பெருத்த வெள்ளேற்றை யடர வேறி
யப்பனா ரிப்பருவ மாரூ ராரே. ய

## க்ஷேத்திரக்கோவை.

நறையூரிற் சித்தீச் சரநள் ளாறு
நாரையூர் நாகேச்சுர நல்லூர் நல்ல
துறையூர் சோற்றுத் துறைசூல மங்கை
தோணிபுரந் துருத்திசோ மீச்சுர
முறையூர் கடலொற்றி யூரூற் றத்து
ரோமாம்புலி யூரோ ரேட கத்துங்
கறையூர் கருப்பறியல் கன்றாப் பூருங்
கயிலாய நாதனையே காண லாமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

# சுந்தரமூர்த்திநாயனார்

## திருத்துருத்தியும் — திருவேள்விக்குடியும்.

பண்-காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்று
மன்னமாங் காவிரி யகன்கரை யுறைவா
ரடியிணை தொழுதெழு மன்பரா மடியார்
சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னாயே
னென்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
யென்னுடம் படும்பிணி யிடர்கெடுத் தானை. க

கூடுமா றுள்ளன கூடியுங் கோத்துங்கொய்
புனமேல்னலோ டைவனஞ் சிதறி
மாடுமா கோங்கமே மருதமே பொருது
மலையெனக் குலைகளை மறிக்குமா றுந்தி
யோடுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னையேன்
பாடுமா றறிகிலே னெம்பெரு மானைப்
பழவினை யுள்ளன பற்றறுத் தானை. ௨

கொல்லுமா லியானையின் கொம்பொடு வம்பார்
கொழுங்கனிச் செழும்பயன் கொண்டுகூட் டெய்திப்
புல்கியுந் தாழ்ந்தும் போந்து தவஞ்செயும்
போகரும் யோகரும் புலரிவாய் மூழ்கச்
செல்லுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னையேன்
சொல்லுமா றறிகிலே னெம்பெரு மானைத்
தொடர்ந்தடுங் கடும்பிணித் தொடர்வொழித் தானை. ௩

பொறியுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொழிந்திழிந் தருவிகள் புன்புலன் கவரக்
கறியுமா மிளகொடு கதலியு முந்திக்
கடலுற விளைப்பதே கருதித்தன் கைபோ
யெறியுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னைய
னறியு மாறறிகிலே னெம்பெரு மானை
யருவினை யுள்ளன வாசறுத் தானை. ௪

பொழிந்திழி மும்மதக் களிற்றின மருப்பும்
பொன்மலர் வேங்கையி னன்மல ருந்தி
யிழிந்திழிந் தருவிகள் கடும்புன லீண்டி
யெண்டிசை யோர்களு மாடவந் திங்கே
சுழிந்திழி காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னாயே
னொழிந்திலேன் பிதற்றுமா றெம்பெரு மானை
யுற்றநோ யிற்றையே யுறவொழித் தானை. ௫

# திருத்துருத்தித் தேவாரம்.

புகழுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொன்மணி வரன்றியு நன்மல ருந்தி
யகழுமா வருங்கரை வளம்படப் பெருகி
யாடுவார் பாவந்தீர்த் தஞ்சன மலம்பித்
திகழுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னாயே
னிகழுமா றறிகிலே னெம்பெரு மானை
யிழித்தநோ யிம்மையே யொழிக்கவல் லானை, ௬

வரையின்மாங் கனியொடு வாழையின் கனியும்
வருடியும் வணக்கியு மராமரம் பொருது
கரையுமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
காப்பீலி சுமந்தொளிர் நித்திலங் கைபோய்
விரையுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னாயே
னுரையுமா றறிகிலே னெம்பெரு மானை
யுலகறி பழவினை யுறவொழித் தானை, ௭

ஊருமா தேசமே மனமுகந் துள்ளிப்
புள்ளினம் பலபடிந் தொண்கரை யுகளக்
காருமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
கவரிமா மயிர்சுமந் தொண்பளிங் கிடறித்
தேருமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னாயே
னாருமா றறிகிலே னெம்பெரு மானை
யம்மைநோ யிம்மையே யாசறுத் தானை. ௮

புலங்களை வளம்படப் போக்கறப் பெருக்கிப்
பொன்களே சுமந்தெங்கும் பூசல்செய் தார்ப்ப
விலங்குமா முத்தினோ டினமணி யிடறி
யிருகரைப் பெருமரம் பீழ்ந்துகொண் டெற்றிக்
கலங்குமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னாயேன்
விலங்குமா றறிகிலே னெம்பெரு மானை
மேலைநோ யிம்மையே வீடுவித் தானை. ௯

மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி
மாறலார் திரிபுரம் நீறெழச் செற்ற
வங்கையான் கழலடி யன்றிமற் றறியா
னடியவர்க் கடியவன் றொழுவனூ ரான்
கங்கையார் காவிரித் துருத்தியார் வேள்விக
குடியுளா ரடிகளைச் சேர்த்திய பாட
றங்கையாற் றொழுதுதந் நாவின்மேற் கொள்வார்
தவநெறி சென்றம ருலகமாள் வாரே. ய

திருச்சிற்றம்பலம்.

---

## வைப்பு.

### பண் செந்துருத்தி

துருத்தி யுறைவீர் பழனம் பதியாச் சோற்றுத் துறையாள்வீ
ரிருக்கை திருவா ரூரே யுடையீர் மனமே யெனவேண்டா
வருத்தி யுடைய வடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வருத்தி வைத்து மறுமைப் பணித்தால் வாழ்ந்து போதீரே. க

### ஊர்த்தொகை. பண் டழம்பஞ்சுரம்.

துருத்திச் சுடரே நெய்த்தா னத்தாய் சொல்லாய் கல்லாலா
பருத்தி நியமத் துறைவாய் வெயிலாய்ப் பலவாய்க் காற்றானாய்
திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை யிடங்கொள் கயிலாயா
வருத்தித் துன்னை யடைந்தார் வினைக ளகல வருளாயே. உ

### வேள்விக்குடி. பண் நட்டராகம்

மூப்பது மில்லைப் பிறப்பது மில்லை யிறப்ப தில்லைச்
சேர்ப்பது காட்டகத் தூரினு மாகச் சிந்திக்கி னல்லாற்
காப்பது வேள்விக் குடிதண் டுருத்தி யெங்கோ னரைமே
லார்ப்பது நாக மறிந்தோ மேனு மிவர்க்காட் படோமே.

## திருவாதவூரடிகள் திருவாசகம்.

### திருத்தில்லைக் கண்டபத்து.

உருத்தெரியாக் காலத்தே யுள்புகுந்தென் னுளமன்னிக்
கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினா லாண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
யருத்தியினா னாயடியே னணிகொடில்லை கண்டேனே

## கீர்த்தித்திருவகவல்.

அருத்திதன்னி லருத்தியோ டிருந்தும்.

## ஐயடிகள் காடவர்கோனயனார்

## திருத்தலத் திருவெண்பா.

வஞ்சியன நுண்ணிடையார் வாட்டடங்க ணீர்சோரக்
குஞ்சி குறங்கின்மேற் கொண்டிருந்து—கஞ்சி
யருத்தொருத்தி கொண்டுவா வென்னாமு னெஞ்சே
திருத்துருத்தி யான்பாதஞ் சேர்.

## பட்டணத்துப்பிள்ளையார் திருவந்தாதி.

கூறுமின் றொண்டர் குற்றால நெய்த்தானந் துருத்தியம்போ
தேறுமின் வேள்விக் குடிதிருத் தோணி புரம்பழன
மாறுமின் போல்சடை வைத்தவ னூரு ரிடைமருதென்
றேறுமி னீரெம் பிரான்கச்சி யேகம்ப முன்னினைந்தே.

திருச்சிற்றம்பலம்.





உ

திருச்சிற்றம்பலம்.

# திருத்துருத்திப் புராணம்.

## விநாயகர் காப்பு.

பூமேவு பல்பசுக்கட் கொருதாமே
துணையாகிப் பொலிதரேற்ற
மாமேவு கயிலாய வரைநின்றும்
பதியாகி வருமா தேவன்
றேமேவு துணைபுணா வரும்போது
துணைவந்த திறத்தா லன்றோர்
பாமேவு துணைவந்தா ரெனப்பொலிவார்
துணையடிகள் பழிச்சி வாழ்வாம். ௧

## வலம்புரி விநாயகர் வணக்கம்.

பரவுபலர் வலப்புரித லானேமற்
றவர்க்குவலம் பண்ண லானே
விரவுசுவைக் கனிக்குவலஞ் செயலானே
மால்வளைகை மேவ லானே
காவுதவி ருயிர்கலக்க வலந்தாலா
னேவலஞ்சூழ் கையி னானே
புரவுவலம் புரியானை யெனும்பெயர்பூண்
டொளிர்கடவுட் போற்றி வாழ்வாம். ௨

## சொன்னவாறறிவார் வணக்கம்.

பொன்பூத்த மணிமௌலிக் கடவுளருந்
தடவுளரும் புழைக்கை வேந்துந்
தென்பூத்த மலரானும் பலரானும்
புகழ்கிரிச் செம்ம லானுங்
கொன்பூத்த மற்றையரு முற்றயரும்
பணியேற்றுக் குறித்த நல்கி
மன்பூத்த துருத்தியமர் சொன்னவா
றறிபவர்தாள் வணக்கஞ் செய்வாம். ௩

## அரும்பன்ன வனமுலையம்மை வணக்கம்.

விரும்பன்ன வனக்கொடியான் முதற்பலரு
நறுமுறுப்ப வெப்பா சத்தே
திரும்பன்ன வனமதுசீர் தெவ்வானென்
றருள்விலக்கல் செயாது கஞ்சத்
திருப்பன்ன வனமெனப்பற் றறுத்துய்ந்தார்
சுழாத்தொடுஞ்சேர் தென்னை யாண்ட
வரும்பன்ன வனமுலையா ளடிக்கமல
முடிக்கமல மாக்கி வாழ்வாம். ௪

## மணவாளசுந்தரர் வணக்கம்.

ஒருவருமுத் தமமறைக ளுணர்த்தினன்றி
யெஞ்ஞான்று முணர்த ராது
வெருவருமன் பதைதெளிய விளக்கிடுவான்
பெருங்கருணை மிகுதி யாலே
குருவருணற் கைலாய வரைநின்று
மணவாளக் கோலங் கொண்டு
பொருவருமுத் தாலகநன் னிழல்வந்த
பெருமானைப் போற்றி வாழ்வாம். ௫

## நாறுசாந்திளமுலையம்மையார் வணக்கம்.

துங்கமிகு மறைமுடிக்கு மெட்டாத
பெருங்கருணைச் சுயம்பு மூர்த்தி
சங்கநவில் குழைப்பெருமா னகன்மார்பத்
துபவீதந் தாருண் டாக்கும்
பங்கமிகு முடைப்புலவு மாறிநறு
மணம்புவனம் பரம்பி மேன்மேற்
பொங்கவொளிர் நாறுசாந் திளமுலையம்
பிகைமலர்த்தாள் போற்றி வாழ்வாம். ௬

## சபாநாயகர் வணக்கம்.

ஆறுறு மொழிதருபாக் கையாறு
நாலாறு மவிர்மூ வாறுங்
கூறுறு வழியுருவா னமர்தருமற்
றளபலவுங் குறித்தீ ராறும்

பாருறு மோரா றமுடித்தவனு
டணிமன்றம் படர்வீர் முத்திப்
பேருறு வேறிலைமற் றியாமுமதே
யுளங்கொள்ளப் பெற்றாய்ந் தாமால் எ

## சிவகாமியம்மை வணக்கம்.

ஒளிசெய்தனக் கமைகருவி யுந்தாணும்
பொன்னுணி பொப்ப வோவா
வளிசெய்பா மனுக்குடம்புந் தனக்குடம்பு
மொருதானே யாவ தன்றித்
தளிசெய்மணி மன்றனேயா னவிலுநடங்
காண்பாளுங் காட்டு வாளுந்
தெளிசெயொரு தானேயாஞ் சிவகாம
சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம். அ

## தெட்சணுமூர்த்தி வணக்கம்.

### வேறு.

பரவுடன் மூன்று மப்பாற்
பகருட லிரண்டு மாயத்
தாவுட லைந்து நீத்துத்
தன்றிரு வடியான் மாக்கள்
விரவவோ ருடலந் தாங்கி
விரிகல்லா லடியெங் காளும்
வாமுற வமரும் வள்ளன்
மலரடிக் கன்பு செய்வாம். கூ

## வைரவக்கடவுள் வணக்கம்.

### வேறு.

ஆக்குத னினக்குச் சுதந்திர
மன்றென் றலரவற் கறிவிக்கு முகிருங்
காக்குத னினக்குச் சுதந்திர
மன்றுகருதினென் றுடம்புறு நெய்த்தோர்
நீக்குதல் புரிந்தங் கரிக்கறி விக்கு
நெடியமுத் தலைக்கொடும் படையும்
போக்குதல் புரியா தொருகரத் தமைத்த
பொருதிறல் வடுவனைத் தொழுவாம். ய

## துணைவந்த பிள்ளையார் வணக்கம்.

வேறு.

மூலமல மென்னுமொரு கிழங்கையொரு
கோடகழ்ந்து முனிந்து பெருஞ்
சாலவமை யிருவினையா மிருமாசு
மிருமதமுஞ் சரிய மண்ணுங்
கோலமுயன் மும்மாயை மூவனத்தை
முக்கணழல் கொழிந்தித் தீக்கு
நாலமிளிர் வாய்க்கருணைத் துணைவந்த
குஞ்சரத்தை நண்ணு வாமே கக

## திருமுருகன் வணக்கம்.

இறைசெயனஞ் சத்தியென விறைபளித்த
திருக்கவுமோ ரிறைபுந் தாழா
தறைமுதலீ ரொழிபவிடை நெடுவரைவச்
சிரத்தடல்செய் ததற்கு மிபார்க்கு
நிறைதரவொன் றுற்றலாற் றுமைவே
றுற்றல்வலி நிகழத் தேற்றி
முறைநிறுவி யமரர்சிறை மீட்டபிரான்
றுட்டுணைகண் முன்னி வாழ்வாம். கஉ

## திருநந்திதேவர் வணக்கம்.

பரசிவமே பிரமமலர் மற்றைபரென்
பதுதரங்கம் படுநீர்க் கங்கை
வாமவிகா சியின்வாத ராயணமா
முனியெடுத்த மலர்க்கை யாலுந்
தாமிதுவண் கயிலாயத் தரியயன்முற்
சூழ்வினைத் தன்கை யாலுங்
கரவறத்தேற் றுபுகருணை கொழிக்குநந்தி
பிரான்மலர்த்தாள் கருதி வாழ்வாம். கங

## அகத்தியர் வணக்கம்.

வேறு.

ஒருவரைமண் புகவழுத்தி யொருவரையுட் குறமொழியா
வொருவரைமேற் கவித்தபச்சை யொருவரைபை வரிசிலையா
வொருவரைகைக் கொளும்பவள வொருவரையாக் குபுமலைய
வொருவரைமேல் வீற்றிருக்கு மொருவரையன் பொடுதுதிப்பாம் கச

வேறு.

## திருஞானசம்பந்த சுவாமிகள் வணக்கம்.

அரியயன் முதலோர் தந்த மாணையென் றிடுதற் கஞ்சி
விரிசிவ ஞானை யென்றே விளம்பவொற் றுமையி னாலே
திரிபுவ னமுந்த ஞானை சென்றிடப் பாடி யன்னான்
பரிபுரப் பதஞ்சார் காழிப் பனவனைப் பாடி வாழ்வாம். கரு

## திருநாவுக்கரசு சுவாமிகள் வணக்கம்.

முழுதுல கீன்ற தாயே முலைசுரந் தூட்ட வுண்டு
தழுவருட் சிவபி ரானைத் தந்தையாக் கொண்ட வள்ள
ளெழுதுகை யப்ப ரேயென் றுவகையிற் றொடரப் பெற்ற
வழுவறு வாக்கின் வேந்தர்மலரடி வழுத்தி வாழ்வாம். கசு

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் வணக்கம்.

யாவரு மறைபி னந்தத் தியறனக் கீதல் வேட்க
மூவரும் புகழ நின்ற முழுமுத லொருவர் நல்கு
தாவரும் பொருளும் வெளவித் தான்கொடுத் துவக்கப் பெற்ற
தேவரும் பரவும் நாவற் செம்மலைச் சேர்ந்து வாழ்வாம். கஎ

## மாணிக்கவாசக சுவாமிகள் வணக்கம்.

முழுதுல கவித்தை யென்னு மூடிருண் முருக்கி மாயப்
பழுதக றவமென் றோதும் பைம்பொரு ளுடையர் வாங்கி
யொழுகுதங் காதிற் கோப்ப வுயர்ந்தவா சகமென் றோதுஞ்
செழுமணி வாயாற் கான்ற சிவபோ கியர்தாள் போற்றி. கஅ

## தண்டிகேசுரர் வணக்கம்.

ஒன்றுமெய்த் தந்தைசூட லுடுத்த லுண்கல மிம்மூன்று
நன்றுமுற் பிள்ளையாரு நகுகடைப் பிள்ளையாரு
மென்றுமெய் திலரே யாக விடைப்பிள்ளை யாரென் றோதத்
துன்றுதா மேபெற் றின்பந் துய்ப்பவர்க் கன்பு செய்வாம். கசு

## அறுபத்துமூவர் வணக்கம்.

வேறு.

பத்து மூவர் பாவும்பி ரான்விருப்
பத்து மூவர் கண்ணும்பரற் சார்ந்துமுப்
பத்து மூவர் பாவப் பொலியறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம். உ0

## குரு வணக்கம்.

### வேறு.

இருவினை சிமிழ்க்க யாப்புண் டவத்தையோ ரைந்து மெய்தி
யொருவினை யுறாய் மாழாந் துழல்பவ ருழல்க ஞானத்
திருவினை யுறுங்கோ முத்தித் திருநகர் நமச்சிவாய
குருவினைப் புகழ்வோ மின்ப மல்லதோர் குறையு முண்டோ. உக

### வேறு.

குருவளர் துறைசை வகையா வம்பொற் குளிர்திரு மடஞ்சின கரமா
வுருவளர் முனிவர் பல்கணத் தவரா வுயர்பரா னந்தமே மாதா
மருவளர் சுகுண சுப்பிரமணிய வள்ளல்சே யாகவீற் றிருக்குந்
திருவளர் கருணை யம்பல வாண சிவனெம துளத்தினின் றகலான்.

கடவுள் வாழ்த்து முற்றியது

---

## பாயிரம்.

### வேறு.

துருத்தி நாயக னுலயத் தொண்டுசெய் தவரு
மருத்தி நீறுகண் மணிபுனைந் தலங்கெழுத் தைந்தும்
பொருத்தி நாவொளிர் புண்ணியத் தவரு மெய்ப் போத
விருத்தி மேவவெம் முள்ளத்தின் மருவுவர் விழைந்தே உ௩

சதாசி வப்பிரான் றிருவடித் தொண்டுசெய் தகையோ
ரிதாகி தப்பகுப் பெய்துநல் வழிச்செலு மியல்போ
ருதார மிக்கவ ருத்தம குணத்தினர் சிவமென்
பதார ணப்பொருள் வேறிலை யெனத்துணி பண்போர் உச

இனையர் யாவருந் துருத்திமாத் தலத்தம ரிறைவன்
புனைய வல்லமான் மியமெனும் வடமொழிப் புராணந்
தனைய வாய்மொழி பெயர்த்துவண் டமிழ்மொழி கென்ன
வனையர் சொன்மறு துட்கொடு பாடுதற் கமைந்தேன். உரு

இடத்து மேயவான் முன்விடை யுருவங்கொண் டியங்குந்
திடத்து மேயநம் மான்செழுங் காவிரிப் படுகாத்
தடத்து மேயபுல் லுணவுங்கொண் டுவந்தகன் மையினுன்
மடத்து மேயவென் புன்சொலுங் கொள்வது வழக்கே. உசா

மாயனுதியர் வணங்கவுத் தாலக வனத்து
மேயதம்பிரான் புராணத்தெவ் வழுவந்து விடினுந்
தூய தன்னருள் பிரேரகப் படுத்திய துணிபந்
நாய னோர்ந்தெனே முனிதரா னயந்துகொள் ளுவனுல். உஎ

இயங்கு ருதமெய் யெழுத்துயி ரோடுகலந் தியங்கு
மியங்கு ருதவென் புன்சொலுந் தன்னரு ளின்றி
யியங்கு ருதவண் டுருத்திவாழ் பாமன திகழோ
டியங்கு ருதமான் மியத்தொடு கலத்தலி னியங்கும். உஅ

மதியி லக்கண முணர்ந்தவ ரமைதிலைய வஃதுத்த
விதிவி லக்கெனு மிரண்டுமே தெரிந்துவிட் டனர்கொ
றுதிசி றப்பில்யான் பாடிய பாடலின் றுரிசு
மதிவி ருப்புட னமைத்தனர் கொளற்கைய மின்றே. உகூ

துருத்தி மேவிய சுந்தர ரொன்றெடு தொகுச
துருத்தி யார்படப் பூணினர் சொன்னவா றறிவார்
துருத்தி சேர்மலத் தியான்சொன்ன வாறுநன் றறிவார்
துருத்தி யாளர்சொற் றிடுவதென் னுருந்தொல் புவிக்கே. ௩௰

வேறு

மன்னிய துருத்தி யெம்மான் மான்மியந் தமிழாற் சொற்றுன்
பன்னிய கலைக ளெல்லாம் பகுத்தரி றபுத்து ணர்ந்தோன்
சென்னிய வானந்தோயுந் திரிசிரா மலையில் வாழுந்
துன்னிய புகழ்மீ னுட்சி சுந்தர நாவ லோனே. ௩௧

பாயிரமுற்றியது.

---

## திருநாட்டுப்படலம்.

அங்க மாமறைச் சிரத்தமர் சொன்னவா றறிவார்
சங்க வான்பிறை யரும்பன்ன வனமுலைத் தையல்
பங்க வாவவாழ் துருத்திமுற் பலதலம் பாய
துங்க மார்புகழ்ச் சோழநாட் டணிசில சொல்வாம். க

துறைமு ழக்கெழு கடன்முழக் கினுமிகத் துவன்று
நிறைமு ழக்கது காவிரி மட்டுமோ நிலவு
மறைமு ழக்கமு மாகம முழக்கமு மருவு
நறைமு ழக்கெழு பொழில்சூலாஞ் சோழநன் னுட்டில். உ

வான ளாவுதன் மகத்தெழு தூமமாத் திரமோ
மீன ளாவுகட் செய்யவாய் மடந்தையர் விரிபூங்
கான ளாவுதங் குழற்கிடு தூமமுங் கண்டூர்
தேன ளாவுதண் பொழில்சுலாஞ் சென்னிநன் னாட்டில். ௩

என்று மில்லன வுலோபமு மிடியுங்கொ லினியா
தொன்று ரோய்களு மிருதுவா லுறுமனுத் திறமும்
தொன்று நாயக னடிப்பணி செயாதிய ரூழிலு
நன்று பல்வள மலிதரு செம்பியர் நாட்டில் ௪

அரியர் வந்துவந் தடைபவ ருளுமிடி யாள
ரரியர் வந்தவ ரிருந்தவ ருளும்பழி யமைவா
ரரியர் விண்ணுல காதியல் லாலள றடைவா
ரரியர் செற்றிடப் பொலிதரும் வளவர்நாட் டம்மா. ௫

ஒரும ருட்புகட யும்பனம் பரமென வொளிர்ந்த
பெருமு கிற்குல மம்பர வழிக்கொடு பெயர்ந்து
பொருதி ரைப்புன லம்பரங் குடித்தெழீஇப் போந்தின்
வெருவ லத்திறு னம்பரத் துருக்கொடு மீண்டு. ௬

நல்ல துள்ளவர்க் காம்விளக் கழுமது நயவா
தல்ல துள்ளவர்க் காமுழக் கழுமறி வித்தாங்
கொல்லு நீருமொல் லாதவெவ் வுருமுங்கொண் டுறுதாஞ்
செல்லுந் தேமெலா மின்னுபு செவிடுற முழங்கி. ௭

தரணி யென்பெயர் தாங்கினன் யாம்பொழி தண்ணீர்
தரணி யெங்கும்வற் றிடச்செய லொடுகொ தித்தவி
தரணி யாய்விளை வித்திடு வேனிலோய் தபுக்குந்
தரணி யாதுமென் றதற்குற வவன்றனை மறைத்து. ௮

வரைய டங்கலு மாநிரை செறிபெருங் கானத்
தரைய டங்கலுந் தாமரை யோடைகா லேரி
நிரைய டங்கலு நெய்தலங் கைதைசூழ் வேலித்
திரைய டங்கலு மூவப்புற வெங்கணுஞ் செறிந்து. ௯

அருத்தி கூர்தரு கருமத்து முயலுந ராங்காங்
கிருத்தி யேயர ணைய்துறத் திவலைக ளிறக்கி
வருத்தி மாதவ முழப்பவர் மாட்டு வண்கருணை
துருத்தி நாயகன் பொழிதல்போற் பெருமழை சொரிந்தே. ௧௦

அண்மை யாளர்தஞ் சொலுஞ்செவிப் புலம்புகா தகலத்
தண்மை யார்மறை சளசள வெனுமொலி தழைப்ப
வெண்மை ஓதிம வண்டத்திற் கனைபலம் வீழ
வொண்மை வாரணத் தொண்டையிற் றுணைக ளுறழ்ந்த. ௧௧
மேய மாமழைத் தாரைகள் வியனிலங் குழிப்ப
வாய பற்பல குழிதொறுஞ் செம்பொன்மிக் கவிர்வ
தோய வெண்டிரைக் கருங்கடல் சூழ்நில மடந்தை
சேய தன்னிறம் வெளிப்படுத் தியதிறஞ் சிவணும். ௧௨
நிலத்து வாரு விகண்மலிந் தனசுர பிப்புனை
நிலத்து மிக்கார்த்த கான்யாறு போங்கா லானனை
நிலத்து வாவியா திகணிறைந் தனநர ஃகனை
நிலத்து நன்கூறின கவின்மணற் கேணி. ௧௩
ஆல மார்களத் தண்ணலா ருண்முழு கான்மாச்
சால வேற்றதன் முதன்மையைத் தவிர்த்தமர்ந் தாங்கு
நீல மேகம்பெய் நெடுமழை வெள்ளத்து மூழ்கு
ஞால வேனில்வெப் படங்கலு நலித்தமர்ந் தன்றே. ௧௪
வெள்ள நீர்பரந் திடுதலான் மேதினி பசுமை
கொள்ள வுள்ளபல் புல்லெலாங் குலவி யங்குரித்த
வுள்ள வன்புநீர் பரத்தலு முடம்புயர் நன்மை
நள்ள வெண்ணிலா வுரோமமுஞ் சிலிர்த்தநன் னலம்போல். ௧௫
முளைத்த புற்களாற் பச்செனத் தோன்றிய முந்நீர்
வளைத்த மாநில மடக்கொடி மழைபெயல் வெள்ளந்
திளைத்த வேதுவாற் செறிகுளிர் முழுமையுஞ் சிதையத்
தளைத்த மென்மையிர்ப் பைம்படாம் போர்த்தது தகையும். ௧௬
தருவெ லாந்தலை மிசைவிழு நீரெலாந் தள்ளி
யுருவ வாடிப் படுத்துவ வுவரிசூழ் வைப்பில்
வெருவு றுவுண வகப்படி னுண்டிடு விழைவோர்
பொருவில் வாயன்றி வேறிடம் புகுத்துவர் கொல்லோ. ௧௭
பயலும் வாவியு மோடையுங் கூபமும் படுக
ரயலு மாழிய கிடங்கருங் கால்களு மளவில்
வயலுஞ் சிற்றற வியலையும் புகும்புனல் வள்ள
லியலும் பேரு டகுதியிற் புகுந்திற மேய்க்கும். ௧௮

கரிய யானைத்தோல் போர்த்திய கண்ணுதற் பெருமான்
விரிய வாளரித் தோலுமெய் மீதுபோர்த் தாங்குத்
தெரிப வாகிய கார்குலம் போர்த்திய திறவா
னுரிய வெள்ளிய மூகிற்படாம் போர்த்திய தொருங்கு ௧௯

விழைவ ளம்பல வாக்குவான் மதிதொறும் விலகா
மழைவ ளஞ்சொல வல்லவ ரெவர்பெரு வளவர்
பிழைவ ளந்தபு நாட்டிடைப் பெருந்திணை யைந்துட்
குழைவ ளம்படு குறிஞ்சியின் வளஞ்சில புகல்வாம். ௨௦

மாக வானதி முழுகுவ மால்வரைக் கோடு
மேக ராசியுண் முழுகுவ வேங்கைவண் கோடு
வேக மாறுவா மெய்முழு குவகரிக் கோடு
மோக வேடுவர் நிறமுழு குவமுலைக் கோடு. ௨௧

எங்கும் வெண்டர ளங்கண்மிக் கிறைப்பன தட்டை
யெங்கு மீளவு மீனுவ குரலிருந் தட்டை
யெங்கு மங்கைய ரியல்கிளி கடிவது தட்டை
யெங்கும் வேட்டுவ ரிவறலம் மாதரு தட்டை. ௨௨

மொய்த்த தோன்றியோ டருவியி னொழுக்குவ முருகு
மொய்த்த வேங்கைவண் டுறுவகை வீசுவ முருகு
மொய்த்த வேடுவ முதியர்நீர் படிந்துறன் முருகு
மொய்த்த மற்றவர் வழிபடு தெய்வமு முருகு. ௨௩

வெய்ய வேட்டுவர் குறிஞ்சிசூ ழாணமும் விரும்பு
மைய்ய மற்றவர் மாதரா ரைவனம் வைத்தல்
செய்ய வாகிய கருவியுந் தலையணை செயலும்
வைய்ய மேத்திடப் பொலியுமால் யானைவெண் மருப்பே. ௨௪

பரவு சாரலிற் றவழ்மதி யலர்பசுந் தோன்றி
யரவு வான்படம் பைத்தமர் கின்ற தென் றஞ்சும்
விரவு மாமயில் கொத்துபு விரைந்துளம் வெள்கிக்
கரவு தீர்தரக் காணினு மற்றெனக் கழியும். ௨௫

சுரையி ருப்பினு விறவுளர் கவலைக டொடும்போ
துரைசி றந்தசெம் மணிவெளிப் படறெரிந் துந்த
வரைய கங்குடா வடியழ லென்றுள மறுகி
விரைய வோடியோர் கொடிசெறி புதலக மேவும். ௨௬

எல்லி யக்கொடி யுந்தழ லெனப்பொலிந் திடலாற்
புல்லி வெம்பய மங்கின்று போந்துவேய் புகுந்து
கொல்லி யாந்தழ லாங்கெழ வேறிடங் குறுகுஞ்
சொல்லி யென்னெவ னுறினும்வெய் யவாருர் துயரே. ௨௭

ஆப வீயவா யணுகிய வரையும் வெங்காகம்
பாய வெந்தநா ளினுமணு காப்பருப் பதமு
மேய தாயென நாலிரு பதப்புளாம் வெற்புந்
தூய மாதவக் குறிஞ்சியேல் யாமினிச் சொல்லென் ௨௮

வள்ள லாருணச் சாரமுட் டியதிரு மலையும்
விள்ளன் மேவுறு துறவிக ளருச்சிக்கும் வெற்பு
மெள்ள நீர்மகத் துவம்பொலி யினும்பல சிலம்புங்
கொள்ளன் மாதவக் குறிஞ்சியின் பெருமையார் குறிப்பார் ௨௯

பிழைவ ளந்தபு போதகா சிரியரிற் பெட்கு
மழைவ ளந்தபு காலையு மருவிநீர் மாண்பால்
விழைவ ளந்தரு குறிஞ்சியின் வளமெவன் விண்டா
முழைவ ளம்பொலி முல்லையின் வளஞ்சிறி துரைப்பாம். ௩௦

முன்னு மாய்ச்சியர் குழற்கணி வதுநறு முல்லை
மன்னு மான்மழை தாவவர் வளர்ப்பது முல்லை
இன்னு மாயர்புல் லுதலவ ரிடையிலா முல்லை
பன்னு மித்தகு பல்வளம் பரவிய முல்லை ௩௧

ஆன்ற வேய்ங்குழ லாயர்கைக் கொள்ளுவர் சுட்டுத்
தோன்ற வெங்கணு மேய்வன பாற்குடஞ் சுட்டுச்
சான்ற மாத்திரை யொன்றுமுற் சார்தரு சுட்டு
நான்ற நன்னுத லாய்ச்சியர் வனப்பெறுஞ் சுட்டு. ௩௨

திருந்த வெங்கணுஞ் செறிதா விளைவகோத் திரவம்
பொருந்த வாய்ச்சிய ரவயவம் பொலிவன திரவம்
வருந்த மாரிநீ ரினுஞ்சொட்டு மாத்துப் பத்திரவ
மருந்த வேண்டுவ துண்மையா னுவபி திரவம். ௩௩

மருவி யாவயிற் பரவுவ மல்குகார் மாலை
பொருவி லன்பர்தேர் வாமினர் தொடுத்தல் பூமாலை
வெருவி லேறுறத் தழுவமே வாரென்று மாலை
பொருவி லண்டர்கை தொழுதலு மொண்டுழாய் மாலை ௩௪

நன்று கைத்தெழுங் குறுமுய லதன்னய னவ்விக்
கன்று கைத்தெழு மதனய லானிளங் கன்று
நின்று கைத்தெழு மதனய னிலவுமாய் மழக்கள்
சென்று கைத்தெழு மொன்றினென் றதிகமாய்ச் சிவண. ௩ரு

கரிய மாயவன் றெய்வமாய்ப் பொலிதரு கானம்
விரிய மற்றவன் மேனியி னொளிபரந் தாங்குத்
தெரிய வெங்கணு மலர்வன செழுமலர்க் காயா
பிரியமிக் கெங்குஞ் சூழ்வன பெயற்கருங் கொண்மூ ௩சு

பூத்த பூவைமேற் பொன்மல ரிதழிபஞ் சாகை
யாத்த காட்சிமால் பொற்கலை போர்த்திய தேய்க்கும்
பாத்த வோர்புறச் செய்யதேத் தடையுறல் பகையூன்
கோத்த செஞ்சுடர்ச் சக்கரம் பொலிதிறங் கூடும். ௩எ

எள்ளுஞ் சாமையுங் கோத்திர வமுமிரும் பயறுங்
கொள்ளு சொன்னலு மவரையுந் துவரையுங் குலவ
விள்ளு மேனவுந் தடித்தன மிகவிளை திறத்தா
லுள்ளு மாவயி னிலதிலம் பாடெனு மொன்றே. ௩அ

வெள்ளி மால்வரை யானமர் நியமமேற் காட்டுப்
பள்ளி வானவர் சூழ்நெடுங் களம்பய றணீசந்
தெள்ளியோர் கங்கை கண்டசோ ழீசமுற் சிறந்த
புள்ளி மாத்தல முல்லையேற் புகலுவ தெவனே. ௩கூ

அண்டர் யாவரு முறுப்பெலா மாகிய வாக்க
ளண்டர் போற்றிடப் பொலிவன வளத்தெவ னறைந்தா
மண்டர் நாயக னளித்திடப் படுபெரு மருதத்
தண்ட ராதலத் தமைதரச் சிறிதெடுத் தறைவாம். ௪௦

வேறு.

தண்ணிய வோடை தோறுந் தடந்தொறும் பூப்ப வாம்ப
லெண்ணிய மருத மாக்க ளிகல்வலிக் கிணைவ வாம்பல்
கண்ணிய வாற்றுக் காலாட் டியர்கணக் கியைவ வாம்பல்
நண்ணிய வனையர் செவ்வாய் நகுமுத்த மொப்ப வாம்பல். ௪க

தாமரை மலர்க டோறுங் களிப்பொடு ததைவ வன்னந்
தோமி னந்தாதி யூநஞ் சுவட்டினும் படுவ வன்னங்
காமரு மின்ன லேய்க்குங் கடைசியர் மேனி வன்னம்
பாமவண் மடைய டைக்கப் படுப்பதுண் காத்த வன்னம். ௪௨

வளைபல முத்த மீன வடைதரும் வயல்வ ரம்பை
விளைகனிக் குலைக டாங்கி மிடைதரு மிகவ ரம்பை
களைகளை மடநல் லாரைக் கொடுதாழுந் தகவ ரம்பை
தளைகுழ லவரைக் கண்டார் தவார்கிளி யயபவ ரம்பை. ௪௩

மலைபடு பொன்னும் முத்தும் வைரமு மணிபு னல்வாய்த்
தலைபடு மருப்புஞ் சந்துந் தடந்திரைக் கையின் வான்றிக்
குலைபடு திறத்தின் வீசிக் குரைகடல் கிழியப்பாயு
நிலைபடு பெருக்கு மேவு நிறைபுனற் பொன்னி யாறு. ௪௪

பகர்சிவக் குறியி னின்றும் பல்லுநக் கிளைத்த வாபோ
ணிகரில்கொள் ளிடமே யென்று நிறைபுகழ் மண்ணி யென்றும்
புகரிலா வரிசி லென்றும் பொங்குநீர் முள்ளி யென்றுந்
தகர்தலி லினும்பல் யாறு கிளைத்ததண் பொன்னி நின்றும். ௪௫

தெங்கிள மட்டை யோலைச் செறிவென விருபாற் றுன்றிப்
பொங்கிருங் கால்க ளூடு புகும்பெரும் பொன்னி நீத்தந்
தங்குபல் வயலும் பாயத் தவாமகிழ் பூத்து மள்ள
ரங்குநின் றூர்க்கு மோதை யண்டமுஞ் செவிடுசெய்ப்பும். ௪௬

உடப்பில்வாள் வெட்டுக் காய மொழித்திடு மதகமென்ன
விடம்படு கழனி யுள்ள விடரெலா மில்லை யாகத்
தடப்புனல் புகூஉப் பொருத்துந் தன்மைதேர்ந் துவந்த மள்ளர்
முடம்படு நாஞ்சில் கொண்டாங் குழுதொழின் முபல்வ ரானர். ௪௭

வளைகருங் கோட்டு மேதிப் போத்தின்வன் பிபலின் மேலாற்
றுளைநுகங் கிடத்தி நாப்பட் டொடருமேர்க் கால்பொ ருத்தித்
தளைவட மாட்டி முட்கோ றரித்தொர்கை யொருகை மேழி
யளைதரப் பற்றி யாங்காங் கமைதர வுழன்மேற் கொண்டார். ௪௮

நெய்தொழி லாளர் பாச்செய் நீர்மையி னோர் செலுத்திச்
எய்துற வளைந்த பின்ன ரூடையாங் கியைத்த லேய்ப்ப
மொய்திறக் களமர் மாறி முனையலஞ் செலுத்த லாலே
வெய்துபற் றெழிந்து சாய்ந்தமேயபுல் லாதி யாவும் ௬௯

முண்டகங் குவளை யாம்பன் முருகுவீ யனைத்து மூழ்த்து
வண்டல்செய் செயற்கை யோடு மியற்கைவாய் கரிய சேறு
தண்டருஞ் செயற்கை கூட்டித் தவாமணத் தியற்றப் பட்ட
திண்டருங் காகதுண்டச் சேற்றினை நிகர்க்கு மாலோ. ௫0

வாம்புமே லுயா நீரும் வரியுமே லுயரு மென்று
காம்புதீ ராங்கு மள்ளர் கங்கரிந் தனரு யர்த்தி
நிரம்புமே டவலாம் பேத நீத்தாடி யனைய தாகப்
பாம்புமே லூர்ந்தா ரஞ்சொற் பசுமுளை விதைத்தார் நாளில் ௫௧

கலங்கனீர் தெளித ஞேக்கிக் கவிழ்த்து மாணவர் கோடேர்ந்து
மலங்கனீ ரொழியக் கல்வி வழங்குமா சிரியர் போல
விலங்க னீர்கொள்ளா மள்ளர் மென்முளை யளவு நோக்கி
யலங்கனீர் பாய்ச்ச வெண்மை யகன்றுபைத் தடர்ந்த வெங்கும்

மாதர்தம் பருவ நோக்கி மணப்பவ ரில்லந் தோறு
மேதக வவ்வை யுய்க்கும் விரகினர் பொருவ நாற்றின்
றீதகல் பருவ நோக்கிச் செறிபுனல் கழனி தோறு
மாதா மிகப்ப றித்து நட்டன ரளவின் மள்ளர். ௫௨

தவனிலம் புக்க மாதர் தாழ்ந்தன ரொழுத லேய்ப்ப
வுவமையில் கழனி புக்க வொள்ளிய முதல்க ளெல்லா
மிவர்தரும் படிமு னந்தாழ்ந் தெழுந்தன வளருங்காலத்
கவாறத் தினுக்கூ றென்னக் களைபல செறிந்த மாதோ. ௫௩

களைபல செறிந்த டார்த்தல் கண்டுவாய்க் கடைவார்ந் தோடக்
களைநனி நுகர்க ருங்காற் களமர்கள் பலரு மீதே
களைதரு பருவ மென்று கனாந்திடக் கழனி புக்கார்
சுளைமதி வதனத் தாற்றுக் காலாட் டியர்பல் லோரும் ௫௪

ஒருவரு முழத்தி மார்வா யொன்றற்கே பகைச்செவ் வாம்பல்
வெருவரக் களைந்தார் கண்கள் காட்டக்கான் மேவு விப்பப்
பொருவில்கைக் கமலஞ் சாடும் பொருப்பகை யொன்றதெஞ்சிற்
பருவரும் பலவி ராய துய்வகை யாரி லுண்டோ. ருசு

திருமலர் தருநம் பண்ணை செழித்திடக் காக்கும் வேந்தற்
கொருமலர் வளங்க ளெல்லா முத்திவீழ்த் தியது மற்றோர்
குருமலர் மேனி நந்தங் குறிபுணர்த் தியதென் றோரா
மருமல ரனைத்துங் கொய்தார் வன்பகை கொண்டு மாதர். ருஎ

அவாமுதற் குற்ற மெல்லா மறத்தவம் பணைத்தாற் போலத்
தவாமலர்க் களைக ளெல்லாந் தணத்தலிற் றடித்த பைங்கூ
ழுவாமதிக் கதிரைப் புல்லி யுறுகருத் தாங்கி யீன்று
குவால்படக் காய்த்துப் பின்னர் வீழ்ந்தன குலைகண் மாய. ருஅ

பிறைவடி விரும்பு கொண்டு பெருவலிக் களமர் யாரு
நிறை முத றடிந்தி யாத்து நெடுங்களத் திடைப்போர் செய்து
குறைபறச் சரித்துப் பின்பு கொடுங்கடாப் பிணையல் சூழ்வித்
தறைதரு பலாலம் போக்கித் தூற்றியாங் களவு செய்வார். ருகூ

அறவழிச் செலவுநீதி யாசுகொள் கடனு நல்கி
யுறமலி யெச்சம் வாரி யுயர்பெரு மனையி னுய்த்துத்
திறமலி தென்பு லத்தா ராதியர் சிறப்ப வோம்பிப்
பெறலரு மின்பந் துய்த்துப் பெரிதுவாழ் குடிக ளெங்கும். சூய

அரிசன மிஞ்சி யாதி யமைந்தபல் வளங்கொள் வாரும்
விரிதரு கதலி கந்தி விருப்புறு வளங்கொள் வாரும்
பரிதாக் கரும்புடைத்துப் பலபெரு வளங்கொள் வாரும்
புரிகனி வளங்கொள் வாரும் பொலிவர் பூம்பண்ணை யெங்கும். சூக

இடைமரு தாரூர் வீழியின்னம்பர் குடந்தை யம்ப
ரடைதிருக் குறுக்கை யெங்க ளாவடு துறைமா யூரஞ்
சடையவர் துருத்தி யாதித் தலம்பல தழூஉம் பணைச்சீர்
நடையெவ னுரைத்தா நெய்தல் வளத்தினு நவில்வாஞ்சில்ல. சூஉ

## வேறு

சுறவு மூண்மருப் பூன்றுபு தூணர்பலர் சூட்டி
யிறவு பாய்கடல் வலைவளம் படவெதி ரிறைஞ்சி
யுறவு கூர்பர தவர்க்கொரு வருண னுங்குதித்து
நறவு கூர்வளந் தந்துகாப் பதுநகு நெய்தல் ௬௩

நுரைசெய் வெண்டிரை யெடுத்தெறி வதுசிதக் கோடு
திரைசெய் முத்தென வரும்புவ செழும்புன்னைக் கோடு
புரைசெ யெண்ணரும் வலைக்குடி பொலிவது கோடு
வரைசெய் பலபட வியக்குவர் மறுவில்சோங் கோடு ௬௪

பரவு வாரியிற் படுவன கொடிவிடு பவளம்
பரவு வேலைவாய்த் தொழில்செயப் பொலியுமுப் பவளம்
பரவு மாதர்சீர்க் கிரியுமா னிறச்சிறப் பவளம்
பரவு மாயினட யுற்றவ ருறவதின் பவளம். ௬௫

ஓங்கு தாழையு ஞாழலும் புன்னையு மொருங்கு
வீங்கு நெய்தலு நறமணம் வீசிடா வென்னில்
வாங்கு தெண்டிரை யுணங்கன்மீன் வீசுறு வாசந்
தேங்கு மாநில நாசியைப் புதைத்தலே செய்யும். ௬௬

பெரிய செல்வர்க டப்முளும் பயன்படு பெற்றி
யரிய ருண்டென றெரிக்குமா மூவர்சிறு செல்வ
முரியர் தம்முளும் பயன்படு வாருமுண் டென்று
தெரிய வாவயிற் செறிவன சிறுமணற் கேணி. ௬௭

அரசு மாளிகை யுவளகத் தணங்கனு ரென்ன
விரசு வார்கட லகத்துறும் வெற்புமுற் பலவும்
பரசு மேவன்மேற் கொண்டுழல் பலரென மதவேண்
முரசு மேவவ னுலவுவ மரக்கல முதல ௬௮

புக்கு மாமறை போற்றிய தானமும் புலவர்
நெக்கு நேர்தொழு நாகையு நெட்டரா வொடுவெள்
ளக்கு மேவரை யார்முல்லை வாயிலும் பிறவுந்
தொக்கு மேவவாழ் நெய்தலின் பெருமையார் சொல்வார். ௬௯

தூயமெய்த்தவ நாவினுக் கரசரைச் சுமந்த
பாய மைக்கடற் பெருவளம் யாவரோ பகர்வார்
தீப வேனினண் பகலிடைச் செவ்விய தோற்ற
மேய பாலையின் வளத்தினுஞ் சிற்சில விள்வாம். எ0

பாய வண்டின மிடந்தொறு முரல்வபண் பாலை
நேய மார்தரப் பழுப்பன நிலவுட்ல் பாலை
யேய மாதர்க ளெய்துவ தின்பமாம் பாலை
யாய நானில மளித்தலிற் பொலிதரு பாலை. எக

உண்டு ளார்பிறி தொன்றுண வகையுத டொட்ட
மண்டு பாலைகள் பழுப்பன வுண்டுளார் மற்றொன்
றண்டு மேவினு யாவகை பழுப்ப கர்ச்சூரம்
விண்டு கள்ளிக ளுதுத்தகா ரகின்மிளிர் சுரத்தே எஉ

ஆத வங்கதி ருஞ்சுரக் கூமர்வழி யடைந்து
போத யாரையும் வருத்தினு மற்றவர் புழுங்கா
ரேத நீவுபே ரீங்தொடா மலகமாங் குருக்கு
மோத வாங்கனி யவ்வழி யடையவுண் டுவப்பார். எஙு

புறவு ணும்பரல் பஞ்சிதும் போம்வழிக் கோங்க
முறவு மீந்துவெம் பசிதெறுந் தாகநோ யொழிக்கு
மிறவி லாதவா மலகம் பாடல மலரீயு
நறவ வோதியார் கொழுநர்பின் செலனவி விலரே. எச

தன்னை யேத்துநர் தோல்வியைத் தாழ்த்து மாறருளு
மன்னை கொற்றவை வாட்படைச் செல்வினன் கமரும்
பொன்னை யொத்தகோட் டம்பொலி சுபப்பெரும் புகழை
யென்னை சொற்றனக் திணைமயக்கமுஞ் சிறி தினசப்பாம். எரு

வரைய கம்பொலி குமாநா யகன்மல ரடிக்கண்
விரைய முல்லையுங் கஞ்சமு நீலமும் விதுவு
முறைசெய் போகியும் வருணனு மிருக்கைநின் றொருவார்
கரையி லாதெடுத் தருச்சிப்பர் கன்னிகண் டுவப்ப, எசா

வேத நான்குமோர் பாணையே பற்றிய விதம்போற்
காத லார்கொடிச் சியரிடைச் சியர்கடைச் சியர்சீ
ரோத மார்பரத் தியர்முன்றி லுற்றுக்கை நீட்டி
யாதல் சால்துராப் பாவையைப் பற்றுவ ரம்மா. எஎ

தான வாரணந் துதிக்கையாற் சொன்னலைச் சாடக்
கான வாரணந் தினையுணக் கலப்புமுண் டொருசார்
மான வாரண மதிற்புற மாங்கனிச் சாற்றைப்
பேன வாரண மேற்றிடும் பெற்றியு மொருசார். எஅ

கன்ற ருந்தவா னொழுக்குபா லோடைநீர்க் கயத்து
ணின்ற ருந்துவ வோதிமம் பிரித்து நன்கதலி
யொன்ற ருங்கனி யட்டபாற் கலத்துக வுவப்பிற்
சென்ற ருந்துவர் குறும்பொறை நாடர்கள் சேர்த்து. எகூ

பணைவி ராம்வய லைக்கொடி கடலகம் படர
வணைவி ராம்பவ ளக்கொடி பனையக மளாவு
மிணைவி ராவிய திரண்முலை மடநலா ரிருவர்
துணைவி ராவிய வெதிரெதிர் மனைபுக றுணையும். அ௰

இன்ன வைந்திணை வளம்பொலி சோழநாட்டியல்பை
யென்ன சொற்றுளேஞ் சொற்றிடற் கெளிதுகொல் பிறர்க்குஞ்
சொன்ன வாறறி தம்பிரா னமர்திருத் துருத்தி
நன்னர் மாவளத் துஞ்சிறி தறிந்தவா நவில்வாம். அக

திருநாட்டுப்படலம் முற்றியது.

ஆக படலம் 2-க்கு திருவிருத்தம் ககஉ.

---

## ௩-வது திருநகரப்படலம்.

பூம கட்துப் புணர்க்குந் திருவய
ஞம கட்கு நன்கீயுங் கலைசயத்
தா்ம கட்கது நல்கு மவிர்வரைக்
கோம கட்குக் கொழுநர் துருத்தியே. க

பன்ன கேசன் பதிவயிற் செம்மணி
யென்ன வும்பொலி யில்லம் பொலிந்தொளி
மன்ன லாலென் றும் வானக ரம்பொரூஉஞ்
சொன்ன வாறறி வார்தந் துருத்தியே ௨

கொம்மை கூரும் பன்ன வனமுலை
யம்மை யோடெங்க ளண்ண லமர்தலாற்
செம்மை யாற்றிருத் தொண்டர் மனம்பொரூஉ
மும்மை நாடுமொழி யுந் துருத்தியே. ௩

யாரு மெய்தற் கிவறுந் திறத்தினு
லோரு மென்று மழிவின்றி யோங்கலாற்
சேரு மேன்மைச் சிவபுர முயபொரூஉம்
பாரும் விண்ணும் பரவுந் துருத்தியே. ௪

அலகி லாப்பொரு ளாக்கலி னுடொறு
மலகி லாவறங் காத்தலி னண்மினோர்க்
கலகில் பாவம் விளித்தலின் மூவரா
மலகில் சீர்த்தி யமைந்த துருத்தியே. ௫

தூய செம்பொற் றுருத்தித் திருநக
ராய பொன்னிற ஞாலமடுக் கல்கள்
பாய மாளிகை சூழும் பசுஞ்சட
ரூய மீவளை பைந்தழைச் சோலையே. ௬

பல்ல வண்டு பறந்து முழங்கலா
னல்ல மேக நயப்ப வணைதலாற்
சொல்லவா மலர்த் தோற்றத்தி னுற்பொழில்
வெல்ல வாங்கட லேயெனல் வெற்றித்தே. ௭

பூவின் வார்மதுப் பொங்குந் தடத்திடை
மாவின் றீங்கனி வாங்கவி வீழ்ப்பன
கோவின் மேய கொழுமதுச் சாடியுண்
மேவி னக்கனி வீழ்த்திடு வாரென. ௮

பட்ட வாளை வெடித்துமேற் பாய்தர
வுட்ட வாவச்ச மந்தி யுறழெறிந்
தட்ட வாளையஞ் சக்கடு வன்குலை
விட்ட தெங்கினெண் பாளை மிதிக்குமே. ௯

ஆய சோலை யகத்து நுழைதொறு
மேய பூமக ரந்தம்வி ரவலாற்
பாய செங்கதிர் பைங்கதி ராமெனி
லேய சீதள மிற்றெனல் வேண்டுமோ. ௰

தூவி யன்னந் துதைய வம்போருக
மேவி மல்குவி யன்புனற் பட்டமுங்
காவி யாவியுங் கண்டவர் மானத
வாவி கண்ணுறும் வாஞ்சை வெறுப்பரே. ௧௧

விண்ட செங்கழு நீர்மிளி ரோடையும்
வண்டர் பாண்செய் மலர்ந்தவுப் யானமுந்
தண்ட வாவளஞ் சார்ந்த துடவையுங்
கண்ட வானவர் கண்டிறை வாங்குமே. ௧௨

எண்ணி லாடவ ரின்னகர் மாதரு
மெண்ணி லாரொன் றியைவதன் றென்றுவே
ளெண்ணில் சாப மெடுத்து வளைந்தென
வெண்ணி றீங்கரும் பெங்குஞ் செறியுமே. ௧௩

செற்ற வாழைச் செழுங்குருத் தோங்குபு
விற்ற வாமுகில் விண்டட வாநிற்த
மற்ற வாழைவண் கூன்குலை தாழ்ந்துவந்
துற்ற மண்டட வாநிற்த மூறற்றே. ௧௪

தழையு மாநகர் சார்ந்தணி நோக்குவான்
விழையும் வெப்ப மிடியொரு காலத்து
நுழையு மாறில தாக நொடிப்பருங்
கழையுஞ் சென்னெற் கதிருஞ் சுலாவுமே. ௧௫

நகுது ருத்தி நகரத்தைச் சூழ்வன
ததசு ராதியர் தங்கால் களேயல
மிகுபெ ருக்கின் மிளிர்பெருங் காவிரிப்
புதுபு னற்பொலி யும்பல கால்களும். ௧௬

போற்ற நாளும் பொருந்திப் பொலிவன
மாற்ற மார்சங்க மேயல மாற்றருந்
தோற்றம் வாய்ந்த சுவைப்புனற் காவிரி
யேற்ற மாக வெடுத்தெறி சங்கமும். ௧௭

நிறக்குஞ் சோலையு ணேரிழை மாதரை
யுறக்கொண் டாடுவ வூசல்க ளேயல
மறக்குந் தன்மையின் மற்றது நோக்கிய
சிறக்கு மைந்தர் திகழ்தரு நெஞ்சமும். ௧௮

ஈரிரண் டென்றி யம்பலர் வாசமும்
வேரின் வாசமு மென்றளிர் வாசமுஞ்
சாரு மாகொடு தங்கிய நந்தனம்
யாரு மேத்த விலங்குவ வெங்கணும். ௧௯

துருத்தி மாநகர்த் தூவளத் தூட்சில
வருத்தி கூறப் பொதுவி னறைந்தனம்
பொருத்தி மேய புறமிடை யுள்ளெனும்
விருத்தி சானகர்ச் சீர்முறை விள்ளுவாம். ௨0

புறநகர் வேறு

சந்த வாரண முடியமர் தம்பிரா னிகவி
வந்த வாரணங் கீண்டவ னுயினும் வழுத்த
முந்த வாரண மாயதா லினமென முன்னி
யெந்த வாரணங் களுமவட் பயில்வன விரியா. ௨௧

முரித ருந்திரை யெறிந்துற முழங்குறு மந்நீர்
சொரித ருங்க டாமொரு மூன்றுமேற் றேன்றி
யிரித ருந்திற னிலாதகூம் பிகல்வெளி லெவரும்
புரித ருங்கலம் போகுயர் புழைக்கைமா வியானே ௨௨

# திருத்துருத்திப் புராணம்.

உழைம ருட்டுகட் சசிமுலே புணர்பவ னூரு
மழைம தக்களி றொருதவன் வாய்ச் சொலாற் கறுத்துத்
தழைநி லத்திடைச் சரித்துப்பின் விளர்த்தமை சாற்றிற்
கழைசு ளித்தெழு மிந்நகர் களிற்றிகல் கண்டே. உரு

பட்ட நீரிடைத் தந்நிழல் கண்டுதம் பகைவந்
துட்ட வாதுற்ற தென்றுநீ ரொருங்குகை வாங்குங்
கெட்ட தெங்கெனத் தியங்கும்பின் கெழுமநீர் விடுக்கு
மொட்ட வுற்றதென் றூற்றுமுற் செயலிவ்வா றுழலும். உச

உற்ற நாகமுட் கொடுபொலி வாரிநிற் கோரேழ்
கொற்ற நாகமுட் கொடுபொலி வாரிபல் லெமக்கென்
றற்ற மிந்நகர் செருக்குமண் ணவைகளே யேவின்
மற்ற வாரியஞ் சுப்புழைக் கையுட்படன் மதித்தே உரு

சீய முற்பல வுருவெடுத் திகலுடைத் திருமா
லாய விற்றுநம் முருக்கொள வவாவிய திறத்தான்
மேய வன்மையி னுஞ்சிறந் தனமென மிக்குப்
பாய வாம்பரி சிலேத்தலிற் சிலேப்பன பல்ல. உசு

ஏறு கைப்பவ னுயினு மியம்பினுங் கரிசு
பாறு மாமறை யனேத்தையு நம்முருப் பண்ணி
வீறு வாய்ப்புற வுகைத்தமே லவனுமை ரிடமென்
றூறு தாம்பரி யாவயிற் பயிலுவ வகலா. உஎ

உரிய தாகநம் முருக்கொள விழைதலி னுயர்ந்தோர்
கரிய மாயனே யரியெனக் கழறுவ ரின்னுந்
தெரிய யாரையுந் தாங்குவ னென்றுஞ்செப் பிடுவர்
புரிய வென்றுதா யெழுதல்போற் றுமெழும் புரவி. உஅ

துருத்தி மாநகர் வாம்பரிக் கானிலந் தோயா
வருத்தி மேவுறத் தாய்ச்செலு முண்மையை யறிந்தாம்
விருத்தி யாந்தம திருவிழை யிவுளியின் மேனி
வருத்தி நாஞ்செல றகாதென மதித்தன போலும். உசூ

பார்முடிக் குரமழுத்துவ தாயினும் பாமர்
வரமு டிக்குரா மழுத்திய மடனுள மதித்துத்
திரமு டிக்கவிழ் வொடுசெல்லும் பரிகண் மந்திரங்கள்
விரவு விட்பொலி பரியிலா யத்துமேல் விளங்கும். ௩௰

மண்கி ழித்தல்செய் யடியுமிந் திரனுமுண் மறுக
விண்கி ழித்தல்செய் முடியும்விண் ணெழுந்துழல் பவனா
னெண்கி ழித்தல்செய் கதியுங்கொண் டியங்குவ வெண்ணார்
கண்கி ழித்தல்செய் விறலுடைப் பெருங்கன கத்தேர். ௩௧

அடுத்த தேர்க்குலக் கால்பல வாற்றிடைச் சுவடு
படுத்தி டாவெனிற் பாய்பரி விலாழியும் பறப்பு
கடுத்த வாரணங் கான்றிடு மூவகைக் கடாமு
மெடுத்த சேற்றவ லாக்குமே போக்கிட மின்றி. ௩௨

பரிகள் கான்றிடு விலாழிமுன் படர்ந்தெழு நுரையப்
பரிகள் வாந்திரைக் குலங்கடுப் பொடுபின்பு படரும்
பரிய தேர்கலங் கொடிமாம் பாய்மா மதிற்சேர்
பரியும் வெண்டுகில் பாய்படர் மறுகிரும் பரவை. ௩௩

ஓடு தேர்கிலை யுற்றவப் பொழுதழூட் டுற்ற
நீடு வாம்பரி வாய்விடு விலாழிநன் னீத்தம்
பாடு சால்கட லெனவளைப் பதையுணர் பண்பு
கூடு சான்றவர் வையமென் றொருபெயர் கொடுத்தார். ௩௪

நண்ண லார்திறங் கிழித்திடு கால்கொடு நக்க
ளண்ண லார்திருத் தேர்கிழித் தேகுத லமைந்த
பண்ண லாசிர தம்பல செறித்தபல் கூடம்
விண்ண லாருல கலைதரா விதம்பரித் தன்றே. ௩௫

மான மென்பதே புனைபவர் பிடித்தவாள் சோரா
ரீன மென்பதொன் றறிகிலார் விழித்தகண் ணிமையா
ரான வெஞ்சமர் முன்வைத்த கால்பின்வைத் தமையார்
வான விஞ்சையர் களும்வியப் புறுமற வீரர். ௩௬

ஒருகை தம்முடல் காத்திடு தோலினர் மற்று
மொருகை தெவ்வுட லழித்திடு வாளின ருடல்போ
தொருகை முன்செல றவிர்ந்தது முடங்கிட வொளிகூ
ரொருகை பின்செல் றவிர்ந்துநீண் டிடப்பயின் றுள்ளார். ௩௭

ஆரம் வாகுவ லயமதா ணிகள்பிற வனைத்தும்
பார வேல்வடுக் கணைவடு வாகமுன் பரப்பி
வீர நாடொறும் விளக்குவார் கூற்றமே வுறினு
மீர நேர்குவர் புண்ணிட்டு வேல்வலை வெடுப்பார். ௩௮

இன்ன வீரர்வா ழிருக்கையு மிவர்தொழி லியற்று
மன்னர் வாழ்தரு மிருக்கையு மடுகளி றிவுளி
வன்ன மாலிகைத் தேர்த்தொழி லினர்வள விருப்பு
நன்ன ராவயிற் றிருவொடு பொலிதரு நாளும். ௩௯

கிடுகு கூவிர மத்திகை கிம்புரி கலனை
கொடுவில் வாளயி லாதியாக் குநர்குடி துவன்றும்
வடுவி லாப்புற நகர்வள மெவன்வகுத் தனமே
னெடுவின் மாளிகை யிடைநகர் வளநிகழ்த் திடுவாம். ௪௰

## இடைநகர் வேறு.

மரகத வோங்க லென்று மாணிக்க விலங்க லென்றும்
விரவுபொற் குன்றமென்றும் வெள்ளியம் பொருப்பே யென்றும்
பரவுமிந் திரப்பேர் நீலப் பருப்பத மென்று மன்ப
ருரவுகொள் காம்கு விக்க வுள்ளன பற்பன் மாடம். ௪௧

அணிகிளர் மாடமெல்லா மங்கதிர் பரப்ப லாலே
மணிமுடி மதவே ளூரு மால்யானை புகாமை நோக்கித்
தணிதலின் மலையத் தோற்ற முற்றத னிரத மூர்ந்து
பணிகொள்சா லேகந் தோறும் படரறப் புகுவன் மாதோ. ௪௨

மேனிலை மாடத் துற்ற வெண்ணிலா முற்ற மேவி
மானின மருளுங் கண்ணார் மணமலர் பலப ரப்பி
வேனில்வேள் விழவு சீர்ப்ப விழைவொடு தொடுக்குங் காலை
வானிலைந் தருவு குக்கும் மலரும்வீழ்ந் தழுவாய் மல்கும். ௪௩

விரிகதிர் மாடமேலால் விளங்கிழை மடந்தை நல்லார்
கரிசறு நறுநீர் கொண்டு காமரு மேனி யப்பு
மரிசன மாதி மண்ணி யாடுநீர் முழுகிவந்த
வரியவெண் களிற்றை நோக்கி யதன்பிணா வூடு மாதோ. ௪௪

பொருவரு மாட மேலாற் பூவையர் கொழுந ரோடு
திருவரு மதவேள் சாறு சிறப்புற நடாத்தச் சேற
லொருவரு மிளைப்பு வான்யாற் றெண்டருக கிளைக டோய்ந்து
மருவருந் திவலைதூவி மாற்றுதல் குறித்துப் போலும். ௪௫

மருவுவள கத்தை யுற்ற மாதரைத் தழுவு மைந்தர்
வெருவரைக் கலைநெ கிழ்க்கும் வேலைநாண் மீக்கூ ரன்றா
றொருசுடர் விளக்க மாற்ற வோரா யிரஞ்சுடர் விளக்கம்
பொருவிறம் மணிப்பூண் செய்யக் கண்டுதங் கண்பு தைப்பார். ௪௬

கொடிமாமாய மூங்கிற் குழாம்பெருங் காடு செய்யக்
கடிகெழு மாடமூள்ளால் வரையெனக் கதிர்ப்ப வோர்பாற்
படிகரு முகின்முன் காழிப் பறம்புசூழ் வேய்வ னத்து
ளடிதொழு தவப்பே றுன்னியிந்திர னமர்தல் காட்டும். ௪௭

மதியெழ நறுநீர் காலும் வாணிலா முற்ற மெல்லாம்
துதிகெழு பட்ட மொக்குஞ் சுடர்ந்தெழு தீப மெல்லாம்
புதியசெங் கழுநீ ரொக்கும் பொன்னனார் பயிற்சி நாளு
மெதிரிலோ திமமொக் குங்கை பிடிசுவர் குலையை யேய்க்கும். ௪௮

மற்றதிற் றவழாநின்ற பிறைசிறு தோணி யானு
முற்றவச் சுவர்க்கீழ்த் தூம்பு குலையுறு மதகை யொக்குஞ்
செற்றமைந் தர்கணீ ராடச் செறிந்தமால் யானை போல்வா
ரற்றமில் கரிகண் டஞ்சு மனப்புறத் தொதுங்கு மாதர். ௪௯

அன்னதின் மிதவை யிட்ட பரியங்க மதற்கு நாப்பண்
மின்னவிர் குறட்டுமாட மிளிர்நடு மண்ட பஞ்சீர்
பன்னருங் கொடிம ரங்கள் படவலைப் புண்ட கற்ப
மன்னவாங் குகுத்தல் செய்யு மரும்புகண் முத்த மாதோ. ௫௰

பளகற வுயர்ந்த மாடம் படியுயர் விலங்க லேய்க்கும்
வளனமை யடியிற்கேணி வரையடிச் சுனையை மானுந்
தளர்வரு மதமால் யானை தடம்புய னமந்தர் சங்கக்
களமட வார்க ரேணு கயந்தலை மகார்க ளொக்கும். ௫௧

இன்னுமா மடவார் தங்கை காந்தளை யிருண்ட வோதி
மன்னுமா மயிற்க லாபம் வளம்பொலி திரடோண் மூங்கின்
முன்னுதே னினிய வார்த்தை முலைசிறு குன்றவற்றின்
மன்னுபூஞ் சுணங்கு வேங்கைப் பூமுத்த வடம்வார் நீத்தம் ௫௨

மற்றும்வெண் ணிலவு முற்றம் வட்டமாம் பளிக்குப்பாறை
சுற்றுமுய் யான மெல்லாஞ் சூழ்பல தருக்கள் வானும்
பற்றுபன் மணியும் பொன்னும் பற்பலவளனு மேன்மே
லுற்றுநீங் கரியதாய திருவமே யொக்கு மாதோ. ௫௩

ஊடிய மாதர் வீசு மொள்ளிய முத்த மாலை
நீடிய மறுகிற் போமோர் புருடன்றோ ணிறைய வீழக்
கூடிய மகிழ்ச்சி யுற்றான் குறிக்கொணாத் துயாமுற்றான்
பாடிய விற்கண் டாற்றன் முத்தமும் பாற்று மென்றே. ௫௪

கறுத்தகண் மடந்தை நல்லார் கணவரோ டுடுங் காலு
முறுத்தவுள் ளுவகை விம்ம வொசிதரு கொடியிற் புல்லிப்
பொறுத்தமிக் கின்பந் துய்த்தாங் கவசத்தைப் பொருந்துங் காலும்
வெறுத்தபல் கலனுந் தாரும் வீதியிற் குப்பை மாதோ. ௫௫

கருவிழிச் செவ்வாய் மாதர் கச்சிறப் புடைத்த கொங்கை
யுருவ வொண்புருடர் தோளி னுறமுன்னும் பின்னுந்தாக்க
வெருவரும் யானைப் போரி னிடைத்தரு விழையுமாறு
மருவலைப் புண்ணு மம்மா வளமலி நியம வீதி. ௫௬

மாடுபொன் மணிதே னுதி மருவலிற் குறிஞ்சி யாகும்
பாடுபைம் பயறு முன்னுப் பாவலின் முல்லை யாகும்
கூடுநெல் லெழுவாய் பல்ல குலவலின் மருத மாகு
நீடுமுப் பாதியாலே நெய்தலா நியம வீதி. ௫௭

சடையொரு தலைம ணக்குந் தளிமொரு கடைமணக்கு
மடையொரு புடைம ணக்கு மரும்பொரு திசைம ணக்கு
மிடைமல ரொருவாய் மல்கி மணக்குமிவ் விதஞுசா லொண்பூக்
கடையிடை நடக்க மாதர் கருங்குழற் கானம் பேர்லும். ௫௮

மாங்கனிக் குவைக ளோர்பால் வான்றவழ் வருக்கை நல்க
வாங்கனிக் குவைக ளோர்பா லரம்பையங் கனிக ளோர்பாற்
றேங்கனி யிளநீர் கன்னன் முதலிய செறிவ வோர்பாற்
பூங்கனி மொழியாள் பாகற் காட்டுவான் புணர்த்த தொக்கும்.

உடைதிரைக் கடல்சூழ் ஞாலமொருங் கொருதலையி னோர்சா
ரடைதரச் சுமக்கும் வல்லோ னுயிரம் வாயாற் சொற்றுங்
கடையுறு தோடல் கண்டு மெலியனுய்க் கழியத் தக்க
விடைநகர் வளமென் சொற்று மகநக ரியம்ப லுற்றும். ௬௰

அகநகர் வேறு.

ஒருகதி ரிருக்க மற்றொரு கதிர்வந் துதயமாம் படிவரங் கொடுத்த, மருமலர்க் கடுக்கைச் சொன்ன வாறறிவார் வாங்கொளக் கதிரியங் கிடுவா, னிருநிலத் திடையோ ரண்டம்வே றியற்ற வெண்ணிமுன் பித்திகை வகுத்தாங், குருவவொண் மதில்சூழ் தருமது சூழ்நீ ரொத்த தந்த நொச்சிசூழ் கிடங்கு. ௬௧

ஊழிநா ளுறுபோ தெழுபெருங் கடலுமொன் றுபட் டெழுந் துறப் பொங்கி, வாழிமேல் வரினும் புனற்பெருங் கிடங்கின் வாய் விழூஉம் வியாப்பிய மாமப், பாழிமா கிடங்கை நிறைத்துமே லெழி னும பட்டர்பெரு நொச்சியென் னுரைக்கு,மாழிமால் வரையின் வியாப் பிய மாகு மாதலா னகர்க்கழி வின்றே. ௬௨

மன்னிய காலாக் கினியுருத் திரர்வாழ் வயினமர்ந் திருப்பவ ரெவரு, முன்னிய வனையார் மேனிவெப்புற்று முருங்குறு துய்ந்தினி திருத்தல், பன்னிய வினைய கிடங்குநீர்ச் சீதம் பரவுறு தன்மையா லன்றோ, துன்னிய பிறிதொன் றுறுர்சிவ லோகந் துனன்மதில் வளைத்தலா னன்றோ. ௬௩

பொறிகளூ நூனைய படைகளூ மடைந்து புகலருங் கொடுமையே புரியு, நெறிமதி லெனினு மிந்நக ரன்றி நெடியவா னகாமும் புரக்குஞ், செறிகரா வடைந்து சொற்றதே யாற்றுந் திறத்ததா யினும்புனற் கிடங்கு, குறிமலர் பலவுந் தருமுப காரங் குயிற்றலின் பயனுணர்ந் தென்ன. சுச

ஆழிமால் வரையும் பெரும்புனற் கடலு மல்லவா மெனவுயர் மதிலும், பாழிமா கிடங்கு மினைய பொற்பகுதும் பாவையுந் தூங்கு நூம் வாயி, லூழிநா யகன்பாற் பெருவரங் கொண்டவுறு வலிச்சூர் முனமிளை யோன், வாழிபே ருருவங் கொண்டுயர்ந் தென்ன மதிப் பரி தாயுயர்ந் தனவே. சரு

## பரத்தையர் வீதி.

நிறைதரப் பூத்த பொற்பசுங் கொம்பி னின்றசைந் தாடுத லானு, முறைபடு திவவுக் கருவிகொண் டமுதி னெழுக்கெனப் பாடுத லானு, மூறையுறு பவரி னூடுதலானு முயங்குபு கூடுத லானு மிறைதபு புருடர் பொருள்கவர்ந் துண் பார் வீதிவா னுலகென விளங்கும். சுசா

தழைகணி கையர்தம் வார்முடிப் பவிழ்ப்போர் தங்கள்கை வார் முடிப் பவிழ்த்தோர், விழைதரு தனங்கைக் கொளப்பெறு வார்தம் மிகுதனங் கைக்கொளப்பெற்றோர், பிழைதப வணைத்து வாய்முத்தங் கொள்வார் பிறங்குற வாய்முத்தங் கொடுத்தார், குழைதரு மினைய வளங் கொள்வார் சேர்ந்து குலாமின்ப வளங் கொடுத்தவரே சுஎ

எண்ணிலார் வந்து குடைந்தினி தாட விடங்கொடுத் திடுநதி யுயரு, மெண்ணிலார் வந்து வசித்திட வுவப்பித் திடங்கொடுத் திடுதல முயரு, மெண்ணிலார் வந்து கலந்தின்பந் துய்க்க விடங்கொடுத் திடுசிவ முயரு, மெண்ணிலார் வந்து தழிஇமகிழ்ந்திளைக்க விடங் கொடுத் திடுமிவர்க் கிழிபென். சுஅ

உருவநோக் குறுதல் வார்த்தைகேட் டிடுத லுவந்துவா யூற லுண் டிடுதன், மருவமெய் விடத்து முயிர்த்திட லுறுதன் மற்றிவை யைந்துமின் பாதல், பருவமுற் றுளிரம் மாதர்பா லன்றிப்பகர் சிவா னந்தவின் பூட்டுந், திருவமெஞ் ஞான சாரிய ரிடத்துந் திருந் துமித் துணையில மாதோ. சுகூ

இத்தின மல்குற் குரியவ ரொருவ ரிருவர்மேற் பலரினி யெய்து
மத்தின மதனுக் குரியவ நவின்ற வத்தொகை யாளரென் றுணர்ந்து
மெத்தினங் களினு நவநவ மாக வெண்ணுபூ மைந்தர் வீழ் குவரோன்
முத்தின நகையார் தவஞ்சிறி தாமோ மொழியவர் தெருவளஞ்
[சிறிதோ. ௭௰

## சாலியத்தெரு.

ஈசனா ரடியார்க் குடைமுத லுதவி யிருங்கதி யுற்ற காம்பீலி, நேசனார் மரபி லுதித்தவர் தவாது நெய்தொழில் வளம்பெருக் கிடுவார், பேசனார் நீற்றுச் சாதனம் பெருக்கிப் பெருஞ்சிவ நேசரே யாகித், தேசனார் பாலென் றுரைசெய மடவார் திரளொடும் வாழ் தெருப் பலவால். ௭௧

## செங்குந்தர்வீதி.

கொடிகெழு தானைப்பகை முரண் டடுசெங் குந்தர்த மரபில் வந் துதித்தார், வடிகெழு பூதி சாதனம் போற்றி மன்னிய நெய்தொழி லாற்றிக், கடிகெழு மருமைப் பொருளுடன் னிம்மைக் கவின்றரு பொருளுமிக் குயர்ப்பார், படிகெழு புகழான் மிக்கவ ரனையர் பரவி வாழ் தெருக்களும் பலவால். ௭௨

இருதிறத்தவர்நூ லாடலின் மறையோ ரெண்ணருந் தானையா டலினற், பொருதிறன் மன்னர் வாணிபத் திறத்தாற் புகல்மிரு வணிகர் வேளாண்மை, யொருவருந் திறத்துச் சூத்திர ராவ ருற்றபா வாய்தலிற் புலவர், பருவரா வொவ்வோ ரேதுவா லின்னம் பற்பல ராகிவாழ் தருவார். ௭௩

சொற்றவித் திறத்தார் தருதுகில் கொண்டு தொறுவிய ருடுத்தனர் களைபோ, தற்றமி லொளிர்பொற் றுகிலினன் கவர்ந்த தப்பமூந் துகிற்சிறப் புணர்ந்தே, குற்றமில் கருபத் துகிலுடைப்பானுங் கொடுக்குமுன் மறுமலேற் றிடுமேன், மற்றிவர் பெருமை சொலப்படா தெவர்க்கு மானமோம் புநரிவ ரன்றே. ௭௪

## வேளாளர் வீதி.

தகவுடைப் பிரமன் முகமுத லுறுப்புந் தளர்வறக் கொடுநடத்திடுதா ளகமுறத் தோன்ற லான்முக மாதி யளித்தவர்க் கொடுநடத்திடுவார் மிகவொளிர் கங்கை மரபெனற்கேற்ப மேவிய புனிதமுன் மைந்தார் சுகமிகு மனையா தியரின் வேளாளர் தொக்குவாழ் வீதியும் பலவால்.

விருந்து கண்டெதிர்சென் றுபசரித் தழைக்கு மேதகு முழக்கு மிற் புகுத்தி, யருந்துமி னிதுசற் றருந்துமி னினுமென் றுதரித் தூட்டிடு முழக்கும், பொருந்துமற் றவர்க்குக் குறைவினைப் முடித் துப் புராணனைப் பூசிக்குந், திருந்துபஃ றுதிசெய் முழக்கு மோ வாது சிறந்தவே ளாளர்தம் வீதி. ௭௬

## வணிகர்வீதி.

எதுவின வுறினு மினம்புகன் றொழிக்க வெண்ணுறார் சுட்டியே யுரைப்பார், முதுபொருள் பலவு முகக்குங்கான் முகந்து மோகத்து விடுக்குங்கால் விடுப்பார், கதுமெனப் பலர்வந் தடையினு மேற்குங் கருமமில் வழியொன்று முரையார், மதுமலர்க் கடுக்கைப் பிரான் புக ழுரைக்கும் வணிகர்வாழ் தெருக்களும் பலவால். ௭௭

## அரசர்வீதி.

மாற்றலர் பரிதி வயங்குட றுளைக்க மற்றவ ருடறுளைத் திடுவார் போற்றலமை யவர்வின் கைக்கொள வவர்மண் பொருக்கெனக் கைக் கொளுந் திறத்தார், சாற்றரு மனுநூன் முதற்பல நூலுந் தடையற வுணர்ந்தவர் வலியா, னேற்றமிக் குடைய செய்யகோ லரச ரினி தமர் தெருக்களும் பலவால். ௭௮

## அந்தணர்வீதி.

தழனுருவுடையதிழல்விழிப் பிரானைத் தழலிடைக் கண்டு போற் றிடுவார், தொழிலமைமறையோ டங்கமு முணர்ந்தார் தூயவான் பதியுடம் படுவா, னுழலமைந் தியங்கு பசுவுடம் படுவா ரொரு பழி யேனு மில்லாதார், நிழலமை சிறப்பின் வாய்மையந் தணர்க ளிரம்பி வாழ் தெருக்களும் பலவால். ௭௯

## ஆதிசைவர் வீதி.

வரைகுழைத் தெடுத்த வரதனை முகத்தும் வந்தவர் நிகமமா கமமோர், புரையுமின் றுணர்ந்து பார்த்த மான் மார்த்த பூசனை கனிவொடும் புரிவார், கரையக லருளன் பொழுக்கமா சாரங் கைக் கொளுஞ் சீலமிக் குடையார், தரைபுகழ் பெருமை வாய்க்தவ ராதி சைவர்வாழ் தெருக்களும் பலவால். ௮௰

## கலைதேரி கழகம்.

பல்வகை நிகண்டுந் தெரித்துயர்ந் தவர்செய் பல்வகைப் பாக் களுந் தெரித்துச், சொல்வகை மதமேழ் தழீஇயழ கொருபான் றேழொரு பானறப் பொருத்தி, யொல்வகை யுத்தி முப்பதிற் றிரண் டேர டுறவியல் காண்டிகை விருத்தி, நல்வகை யுறமா ணுக்கருக் குரைக்கும் நயத்தகு கழகமும் பலவால். ௮௧

சாற்று முத்தேச மிலக்கணம் பரிசோ தனையொரு மூன்றினு லொன்றை, யேற்றுநன் கனுவாதித்தனர் நிறுத்தலிரித்தல் வல்லவர் கலைபலவும், போற்று நுண்ணுணர்விற் றெளிந்தவர் கவலில் புந்தியர் நந்தியப் புகழ்சா, னீற்று மெய் முதல்வன் றிருவடி குறிப்பார் நிரம்பிய கழகமும் பலவால். ௮௨

## சமயாசிரியர்

மறையினிற் சிறந்த வாகம மிலக்கம் வடித்துணர்ந் துத்தமம் வாய்ந்து, குறைபறத் தழுவு தொண்டரா தியர்தங் குறிக்கொளும் பக்குவந் தெரிந்து, கறைபறச்சமப மாதிகள் புரிந்து கைக்கொளத் தகுபணி நிறுவி, மிறைதபப் பாசங் கழுவியின் பளிக்கும் வித்தக ரிடங்களும் பலவால். ௮௩

## சித்தாந்த மடம்.

போதமென் றுரைக்குஞ் சூத்திர மிராறிற் பொதுவிபல் சிறப்பிய லாய, பேதமென் றிரண்டினபதி பசுபாசப் பெற்றிநன் குணர்ந் துறத் தெளிந்து, வாத மொன்றின்றி யொன்றி யொன்றுது மாமறைத் தலையொடும் விந்து, நாதமுங் கடந்து சிவக்கலப் புற்ற ஞானியர் மடங்களும் பலவால். ௮௪

## தண்ணீர்ப்பந்தர்.

புதுமணல் பரப்பி நிரனிறை வைத்துப் பொழுதெழ முனம்புன னிரப்பி, மதுமலர் நறுவே ரொடுதுடி யிட்டு மணங்கெழு மோருற விட்டு, முதுசுவை பயக்கு மிலிகுசச் சாறு முயங்குறக் கூட்டியுங் குளநீர், கதுமெனச் செய்துந் தனித்தனி வாக்குங் காமர் நீர்ப்பந் தரும்பலவால். ௮௫

## சத்திரம்.

தளவரும் பனையத் தண்டுலங் கொண்டு சமைத்தவின் சொன் றியும் பொன்னிற், கொளவரும் பருப்புங் கருனையும் பாகுங் குய் கமழ் வறையலும் பாலும், வளவருந் தயிரு நெய்யுமுன் னிடினும் வாய்ப்புன லூறுசிற் றுணவு, முளவரும் விரும்ப நாடொறும் படைத் தற் குள்ளசத் திரங்களும் பலவால். ௮௬

## திருக்கோயில்கள்.

கதிரவன் றளியும் பைந்துழாய்ப் படலைக் கரியவ னமர்சின கரமு முதிர்சின மடங்க லுகைத்தொரு மகிட முடிமிதித் தவணிகே தனமு மதிர்தரு கழற்கா லையன்வல் வடுக னறுமுக னமரு மந்திரமு, மெதிரி லங்கரத்துப் பண்ணவன் மருவி யிருந்தருள் கோட்டமும் பலவால்.

இதுவரை யுரைத்த பலவும் பல்லுடுவா விவைநடு முழுமதி பொருவ, முதுகட லுலக முழுதும்வந் தேத்தி முத்தியின் பெளி துற வமரு, மதுமலர்க் கூந்தற் பரையரும் பன்ன வனமுலைப் பிராட் டியோ டென்றுஞ், சதுமுகன் பாவச் சொன்னவா றறியும் தம்பிரா னினிதமர் கோயில். ௮௮

நாடுறு கையிலை நின்றுமா தேவனுறுசாந் திளமுலை யுமையைக் கூடுறும் பருவமுணர்ந் தடைபொழுது கூடமே ருவுமடைந் தெவரும், பாடுறு மணங்கண் டகலுதற் கஞ்சிப் பாங்குற வலைந்துநின் றென் னச், சேடுறு செம்பொனிஞ்சியுஞ் செம்பொற் சிகரியுஞ் சூழ்ந்துயர்ந் திலங்கும். ௮௯

மேருமால் வரைசார் மானத மடுவும் விழைந்தடைந் துள்ளமர்ந் தாங்குச், சாருமா தரங்கூர் சொன்னவா றறியுந் தம்பிரான் றிருமுனர் வலப்பா, லாருமா தரித்துக் குடைந்தினி துய்ய வமர்தரு மகிலமும் விசும்பு, மோருமா நாவ லூரார்க்கு முன்னை யுருவநல் கியபெருந் தீர்த்தம். கூ௰

வெள்ளிமால் வரையி னின்றும் விரிநிழல் செய்து வந்து
தள்ளிய வினையி னேனுப் தரித்திங்கு நிழல்செய் வேற்கு
வள்ளிய பிறதலத்து மட்டுமாந்தருவொப் போவென்
றுள்ளிய களிப்பி னாரு முத்தால மோங்கி நிற்கும். கூக

நமையுகைத் தருள்பி ரானே நம்முநக் கொள்வ னென்னி
லமையுநம் முருவொப் பில்ல தாயதென் றிறுமாப் புற்றுங்
கிமையவ ருலக மஞ்சத் தலையெடுத் திருக்கு மிஞ்சி
கமையுற வழுத்தி மேலாற் கலந்தம் ரிடபக் கூட்டம் கூஉ

நிழல்செயுந் தருவோர் பாங்கர் நிழல்செயாத் தருவொன் றம்மா
கழல்செய் பச்சிலையுந் தாங்கிக் கமழ்தரு பற்பல் பூவுங்
குழல்செய்வண் டினங்கண் மல்கக் கொண்டுபல் பலனு நல்கு
முழல்செய்வெம் பவநோய் தீர்ப்பா னுற்றடைந் தவர்க்கு நாளும்.

இருமல மென்னுமென்னோ டிருமலந் துமித்து நாத
னிருமல ரடிவாழ் வாமென் றெண்ணுபு முனமா றுற்ற
விருகதி ரவருமொன் றியிருந்தவ மிருந்து செய்தாங்
கிருமுது குரவர் மேவு மிருவிமா னமும்வாள் வீசும். கூச

சேந்தபொன் மேருமேய தேவா லயமஃ தோடு
போந்தவென் றுரையா நிற்பப் புதுமதி முடியார்கூத்து
வாய்ந்தகுஞ் சிதப்பொற் றுளார் வயிரவர் சோமாக் கந்த
ராய்ந்தவே னையரும் வாழு மால யம்பொலியுமாதோ. கூரு

கூறுமா வரண தேவர் கோயில்கள் புறக்குன் றாக
நாறுதே மலருத் தால நாவலந் தருவே யாக
வீறுபா லோடும் பொன்னி விழைசாம்பூ நதமே யாக
வாறுசேர் முடியார் கோயின் மேருவெ யாயிற் றன்றே கூசா

ஆயபொன் மதிலே கோடா மகமதில் வயிரம் வீசும்
பாயபே ரொளிரன் னீராம் பரவிய தேவர் கோயின்
மேயபன் மலராப் நாப்பண் விளங்கியமணிவி மானந்
தூயதா மரையா முள்ளாற் சொன்னவா றறிவார் செந்தேன். கூஎ

கொடியிரு கண்க ளூடுங் கோத்தவோர் மணியேபோல
வொடிவிலா லயமிரண்டி னூற்றவீ ருருவத் தூடு
முடிவிலா முதல்வி யாய வொருத்தியே முயங்கி நாளு
மடியவர் பெருமா னூற்றுந் தொழிற்றுணை யாகி மன்னும். கூஅ

மறையொலி நால்வர் வாக்கின் வளமொலி யேனை யன்ப
ரறையொலி வீணை யாதி யமையொலி பல்லி யத்துங்
குறையொலி யெனுது தோன்றிக்குலவொலி யனைத்து மொன்றி
நிறையொலி யாகி நாளு நிகழுவ காலந் தோறும் கூகூ

முடிவிலா முதல்வன் பாலு மூவுல கீன்றாள் பாலு
மடியவர் வணங்குங் காலை யடியுறை யாக வைக்கு
மொடிவில்பன் மணியும் பொன்னு முயர்ந்தநேத் திரமுமற்று
மடிவிலா வளங்கள் யாவும் வயங்குவ வாங்காங் கம்மா. க00

இன்னசெம் பொற்கோ யிற்க ணேழுலகீன்று ளோடு
சொன்னவா றறிவா ரம்பொற்சுடரித் தவிசின் மேவி
யன்னவா கனன்மா லாதி யமரரு மகிலத் துள்ள
வென்னரு மணைந்து போற்ற வெண்ணிய தளித்து வாழ்வார். க0க

துருத்திமா னகரின் வண்மை சொற்றிட வேண்டுமென்னு
மருத்திதூண் டுதலாற் சொற்ற தாயிரத் தொன்றுமன்று
வருத்தியைம் பொறியை நாளும் வருத்திமா தவநெஞ் சத்தைத்
திருத்திமா முனிவர் வாழ நைமிசச் சிறப்புஞ்சொல்வாம். க0உ

திருநகரப்படலம் முற்றியது.

ஆகப் படலம் ௩-க்குத் திருவிருத்தம் உ௧ச.

---

## ச-வது நைமிசப்படலம்

வெறுத்த போகபா ரிந்திர வுலகமும் விழைசீ
ருறுத்த மாமல ராளிவா ழுலகமு மொன்னார்ச்
செறுத்த சக்கரம் படைப்பிரா னுலகமுஞ் செறுத்துக்
கறுத்த மாதவர் விழைவது நைமிசக் காடு. க

பொற்ப மைந்ததன் பாலுளா ரிதிற்புகுந் தேற்க
வற்ப மைந்தது மிதினுளார் வின்வயி னடைந்து
தற்பயன்கொளா தொழிப்பது மெண்ணியுட் சாம்பிக்
கற்ப கந்தொழப் பொலிவது நைமிசக் காடு. உ

மாடு கொன்றையும் வில்வமும் பொலிதலால் வானத்
தோடு திங்கண்மே லுறுதலாற் கங்கையு முறலா
னூடு மாத்தியுஞ் செறிதலா னாயகன் சடிலக்
காடு போன்மெனப் பொலிவது நைமிசக் காடு. ங

உற்ற வெஞ்சின மளவிலர்க் செய்தினு முறைதே
மற்றதன்மைய தன்றுபல் லோர்முயன் றாலுஞ்
செற்ற வெம்மையிற் கவர்தரு திறத்தது மன்று
கற்ற மாதவர் குழுமிய நைமிசக் காடு. ச

திரைய மைந்தபாற் புணரியிற் செழுங் கலைமதியி
னுரைய மைந்தவண் காமதே னுவினொளிர் பிறிதிற்
புரைய மைந்தவா னவர்பசி முழுதறப் போக்கிக்
கரைய மைந்தவின் பளிப்பது நைமிசக் காடு. ரு

ஒன்று நீங்குற வாயிடு விளக்களு மொன்றோ
டொன்று நீங்குற நுகர்தரு தெங்குமோ ரிரண்டோ
டொன்று நீங்குற உணப்படு நரந்தமு முறழ்ந்தாங்
கொன்று முற்றனை மூன்றனை வுறுமுயி ரொக்கும். சா

பூத்தகொன்றைமு னத்தொழிற் பிடாப்பல பொலிதல்
சோத்த மென்னுநீற் றவரொடு பிரானிலை துணையு
மேத்த நாப்பணஞ் சோதிமா மாமிரண் டிலங்கல்
கோத்த தீபமோ ரிரண்டெதி ரெடுத்தது குலவும். எ

பொற்ற வஞ்சிமு னிற்குமோ ரிளங்கரும் புன்னை
யுற்ற சிற்றரைச் சுற்றிய கொடியொரு சுற்றி
சுற்ற லாய்ச்சிமுன் கண்ணனை யளையுறச் சூழ்ந்த
பற்றல் வாய்கையி றோருநாற் பற்றிய துணர்த்தும். அ

ஒருபு றக்கரும் புன்னையு மற்றொரு புறத்து
மருமலர்ச் செழுஞ் செருந்தியு மிணைந்துறு மாண்பு
திரும கட்கொரு மணாளனு முமைமுலை திளைக்கும்
பெருமை யாளனு மிணைந்துறு பெற்றியே கடுக்கும். கூ

கறைமி டற்றிறை யவன்வியா பகத்தினுட் கலந்து
மறையி யிர்த்திர ளெனவொரு மாத்தினுண் மறைந்து
குறைதி றத்தினி துறவமர்ந் தொருதருக் குலவு
மறைத ரற்கரும் பெருவளம் பொலிதரு மாங்கு. ய

பன்னு வாய்செவி யுடம்புநீ ணாசியொண் பார்வை
யென்னு மைந்தனுட் கண்களின் வியாபக மேற்ற
மன்னு மாறெனப் பற்பல தருவுளும் வானந்
துன்னு மாறெழுந் துயர்ந்துசிற் சிலதருத் தோன்றும். கக

அமரர் தம்பிரான் கேள்வியில் வேறுபட் டாலும்
விமரி சத்தினில் வேறுறா வாறென விரண்டு
பமர மார்தரு முளைத்தலில் வேறுபட் டாலுங்
கமவ ளர்ச்சியில் வேறுறா வணமொன்றாய்க் கதிக்கும். க௨

போத நீண்டவன் பாரைமேன் முக்கிளை பொருந்திச்
சீத வான்றொடச் சிறந்தொரு தருநிற்ற லேக
பாத நாயக னிற்றலு மவன்கையிற் பற்றுங்
கோத வான்படை காத்திட நிற்றலுங் குலவும். க௩

இளம ரக்கனைப் பெழுதலு மேதிக ளிரங்கி
வளமு லைச்சுரப் பொடும்புகு மாட்சியு மொருசா
ரளவ ருப்பசி யாளருந் திவலைபா லருந்திற்
றளர்வு மூவிரு மதிக்கறுந் தருவுமுண் டொருசார் க௪

வெட்டு கட்டையிற் றவாதுகை செய்துமே விவர்ந்தா
லொட்டு வானுல குறச்செயுந் தருவுமுண் டொருசார்
தொட்டு மேவிவர் தரின்மக வான்முதற் சுரரைக்
கிட்டு கட்புலன் செயுந்தருக் கெழுமலு மொருசார் கரு

அடுத்து ளாருடம் புகித்திட வடித்தொரு நம னூ
ரடுத்து வாழ்தர வாற்றிடு தருவுமுண் டொருசா
ரடுத்து ளார்தமை வருடிநோய் நரைதிரை யகற்றி
யடுந்து ஞாலத்து வாழ்விக்குந் தருவுமாங் கொருசார். கசு

அன்ன மொண்புன லாற்றிடு தருவும்வன் கரிய
சொன்ன நீறுசெய் தருவும்வெங் கொடுவிடந் தோயா
முன்ன மின்சுவை புரிதரு வும்புலான் முடையைப்
பின்ன மாற்றிடு தருவுமாங் காங்குறப் பிறங்கும். கஎ

வெட்டு வாயுடம் பிடைப்பொருத் திடுமிளிர் தருவு
மட்டு வீழ்த்திடு மிரும்பைப்பொன் னாக்குமொண் டருவு
விட்டு காற்றிசை யினுநிழல் விரித்திடாத் தருவு
மொட்டு தன்னுருத் தோற்றிடாத் தருவு மாங்குள்ள. கஅ

இங்கு வாழ்பவர் பரம்பரன் றிருவுரு வெய்தி
றங்கு வாமவர் காத்தெனத் தங்குவ குரங்கம்
பொங்கு போர்வையு முடுக்கையும் பொருத்துவா மென்றே
யங்குமேவுவ வமுவையு முழுவையு மம்மா. ககூ

புலவர் வாழிட மாகவும் நறியபல் பூவு
மலகி லாதுகொண் டவர்முடி யாதிசே ராது
திலக மாதவர் சேவடி யாதியிற் சேர்ந்துக்
குலவ மாரவே ளெற்றைக்கு மவாருள் கூடும். உ௰

வேறு.

இன்னபல் வளத்த நைமிச வனத்தி லிருப்பவ ருருப்பவ ரொத்து
மின்னவொண் சடில முடித்தவ ருடம்பு மிடித்தவ ரருள்வினை பூமி
யன்னவர் தவமிக் குற்றவர் மலமுன் றற்றவர்க் கற்றவ ரனைத்தும்
பன்னரும் விரத வரப்பின ரொழுக்கப் பரப்பினர் படிமையர் பலரும்.

எறிதிரைக் கடல்களேழுமொன் ருகியிரும்புறக் கடலொடுங் கோத்து
முறிதரப் புடவி மூடு மக்காலு முரண்மீகு மாருத மெழுந்து
செறிதரப் பறம்பு பலபறித் தெறிந்து திரியமக் காலமுட் டிரியா
ரறிவதற் கரிய பரசிவப் பெருமான் றிருவுரு வறிவமைத் திருப்பார்.

இடைகுடி யிருப்பின் றென்செய்கோ வினியென் றிரங்கிமா ழாந்தலேங் தொசியப், புடைபரந் தெழுந்து கச்சற வீங்கிப் பொருமிய சுணங்கிளங் கொங்கைக், கடைகுழன் றிருண்ட கருங்குழற் செவ்வாய்க் காரிகைமடநல்லா ரடைந்து, தடையற விழுந்து தழுவினு முழுவற் ருயெனக் கருதுதன் மனத்தார். ௨௩

வினைதரு பயனு மின்பமு மதனை வீத்திடு துன்பமு மெய்தி, நினைதரு முடலூ மென்றுள மதிப்பா ரிவறுதல் வெறுத்தலொன் றில்லார், புனைதரு மகவான் முதலிய புலவர் பொருந்திவாழ் பெரும் பதமனைத்து, நினைதரு தன்மை யில்லவை ருண்ட நெட்டிலே யென மதித் தொழிந்தோர். ௨௪

முற்றிய கருணைச் சிவபிரான் புகழே முகந்துகொண் டுணச் செவி விடுத்துச், சுற்றிய சடைமற் றவன்றிரு வுருவிற் சுடர்விழி யமைத்தவ னடியே, பற்றிய மனத்தை நிறுத்திநாள் கழிப்பார் பகர்பெரு மறைமுடி யனைத்துஞ், செற்றிய பூதி கண்மணி புனைவார் திருவெழுத் தைந்துநாப் பயில்வார். ௨௫

அத்திரி கருக்கன் கண்ணுவன் றதீசி யாணிமாண் டவியனுாதனே
சுத்தியன் சப்பு சந்திர சூடன் காத்தியா யனன்மிரு கண்டு
புத்திரன் பிருகு சுதீக்கணன் பிருங்கி புலத்தியன் பப்புரு விசுவா
மித்திர னிலகி தன்சுனப் புச்சன் விந்துபா ணினிபிர சண்டன். ௨௬

சுகன்கெள தமன்சாண் டில்லியன் வசிட்டன் றாம்ப னுரோமசன் வசுகுச், சகன்சனக் குமாரன் பார்க்கவ னுபத் தபனபோதாயனன் கிருத, னகமரு டணன்சா பாலிமா தேச னரிதகன் கலேச்சிருங்கனகெள, நகன்பரா சரன்று லப்பியன் புலக வகுசதா நந்தன்மா தேவன். ௨௭

ஒருபாரத் துவாச னாபத்தன் சனக னுவமையில் காசிபன் குசரு
வருதுரு வாசன் சூசுமாண் டன்சீர் வளர்சம தக்னி கற்கி
பொருவில் வான்மீகன் சரபங்கன் சனுதன் புகழுப மன்னிபன் பகவன்
திருதன னல்ல சுதேவலன் சங்கன் றிரணது மாக்கினி சிலாதன்

பருப்பதன் றௌமியன் றத்தாத்திரேயன் பாணனசிதன்சுனச்சேபன்
றிருப்பொலி சத்தி சரிச்சரன் சுனகன் சிவனன்சா தாபதன் கண்டு
விருப்புறு மட்ட வக்கிரன் வச்சன் மிளிர்சுன னிரப்பியன் கபில
னுருப்பமில் வாம தேவன்முற் கலன்சீ ருக்ர வீரியன் சுமந்து. உகூ

மேதகு சனந்தன் காலவன் சுவிலா சனன்வி பண்டகன் புகழி
னுதா மமைத்த சவுபரி பொறிசெற் றமைகவுண் டின்னிய னெவரு
மோதல்செய் திரண விந்துவீ சானனுளிர்பயி லவனகோ ரன்சீர்
காதல்செய் சுயம்பு நற்சிவப் பிரியன் கரிசறு சத்தியோ சாதன்.

இனையமா முனிவர் முதலிய முனிவ ரெண்ணில ரோருழிக் குழுமிக், கனையவாங் கடல்சூழ் புடவிமுற் பலவுங் கருணையி னளித் தினி தோம்பு, நனையவார் கூந்தற் றிதலையங் கொங்கை நங்கையோர் பங்குற வமைத்த. முனையசூற் படைக்கை யண்ணலார்க் குவப்பு மூகிழ்க்குமா மகமொன்று புரிவார். ௩௧

ஆற்றுமித் தகையமாமகங் காண்பா னயல்வனத் தருந்தவத் தமர்ந்து, காற்றுமும் மலத்த ராகிய முனிவர் கணக்கிலார் தத்தமக் குரிய, போற்று மாணுக்கர் குழாத்தொடு மினிது புகுந்தனர் புகுந் தவக் குழாத்துட், டோற்றுமா படிமத் திருந்தவத் துயர்ந்த சூதமா முனிவனும் வந்தான். ௩௨

களங்கமில் வெள்ளி கொடுசெய்துப் பாயங் கவினுறத் தரித் தென மெய்யில், விளங்குவெண் ணீறுஞ் சிவானந்தப் பெருந்தேன் விளையிட மெனக்கருஞ் சுரும்பர், வளங்கொளச் சூழ்ந்தா லனைய கண் மணிசெய் மாலையு மைந்தெழுத் தொலியுந், துலங்க மாணுக்கர் குழாம்புடைச் சூழத் தோன்றிய சூதமா முனியை. ௩௩

இருந்தமா முனிவர் சண்டெழுந் தெதிர்சென் றிறைஞ்சின ரினிதழைத் துவந்து, திருந்தவோர் புனித விட்டா மிட்டுத் திருமுக மலர்ந்ததி னிருத்திப், பொருந்தமா மலரா திகள்பல கொண்டு புக லருக்கிய முதற் கூட்டிக், கருந்தவா மலவோர் கழிதரப் போற்றிக் கைகுவித் திலறஞ்சுபு நின்றார். ௫௪

நிற்பது தெரிந்தாங் கிருக்கென வெவருநேர் தவிர்த் திருபுற மிருந்து
வெற்பது சிலையாக் கொண்டுமுப் புரமும் வென்றமா தேவனின்னரு
கற்பது வாத.ராயண முனிபாற் கற்றுயர்ந் தவசதா னந்த [ளாற்
சொற்பெரும் பதத்தோன் முதலியர் துணியாத் துணியுளா
[யெனப்பல துதித்து. ௫௫

பாசிவ னுக்கு மாமக மொன்று பண்ணிய தொடங்கினே மதுபோ
தூவிய லவனே யுற்றென நீவந் துற்றனை யிப்பெரும் பேற்றல்
வாமிகு மகமே யாயதிம் மகமோர் மறுவின்றி முற்றிய தின்னுந்
தாமலி யாமுஞ் சிறந்துளேஞ் சிறிது தாழ்வுமவந் தணு தரு தெமக்கே

உலைதரு பிறவி யறுத்திடத் தக்க வுபாயம்யா தெனவுளந் தேர்ந்தே, மலைதரு சிலையான் றிருவடிக் கமல மலர்த்தரி சனமெனத் தெளிந்தே, நிலைதரு மந்தத் தரிசன மெதனு னேருறு மென்றுளத் துணர்காற், றலைதரு துறவோ யாகமோ வரமோ தவங்கொலோ வென்றுனை நினைந்தேம். ௫௭

உனைநினை தருகா லிடையறுப் பத்தி யொன்றுதான் சிறந்த தென் றுணர்ந்தேம், புனையுமப் பத்திவிளைப்பது பெருமான் புராண நூற் கேள்வியே யென்றுங், கனைகட லுலகிற் பிறிதிலை யென்றுங் காதலா மலைமாத் தெளிந்தே, மனைபநா யகன்வாழ் தலம்பல வவற்று ளருந்தல மிதுவெனத் தெளியேம். ௫௮

இகபர முத்தி யெண்ணினுங் கொடுக்கு மியல்பதாய் மூர்த்தி மூன் மூன்று, மிகவுயர் சிறப்பு வாய்ந்ததா யெவருமி விழவதா யுள்ளதோர் தான, மகலிடத் துளதோ வில்லையோ வதுவு மறிந்திலே மத்தகுதான, நகவமைந் துளதே லதனுயர் புராண நவிற்றிட வேண்டு மென் றிரந்தார். ௫௯

முனிவ ரூரைத்த மொழிசெவி யேற்று முகமிக மலர்ந்தக னமர்ந்து, கனிதரு சிறப்பிற் சூதமா முனிவன் கருத்திடை நெடும் பொழு தாய்ந்து, தனிமறை பகரு மொருதலங் கண்டு தடங்கரஞ் சென்னிமேற் குவித்துப், பனிவரு கண்ணே டாகா வென்று பகர்ந் திது சொற்றிட லுற்றான். சய

உறுவர்கா ணீவிர் வினவிய படியே யொருதல மருமையிற் கண்டே, னிறுதிநாள் புகினு மழிதரா வதன்சீ ரியம்புத லெனக் கெளி தன்று, மறுவிலா வந்தத் தலத்தமர் சிவனே வல்லவன் சொற் றிடற் கதான்று முறுவலா மொருவ ரூரைத்திடத் துணிதன்மொழிந் தது மிலையிது காறும். சக

அடுத்துநோக் குறினுஞ் செய்மையே யிருந்துள் ளாயினும் புகலினும் பந்தம், விடுத்து மேலாய கதிகலப்புறுவர் மேதக வுற வெனினஞர்நோய். படுத்துமே வந்தத் தலம்வசித் திடன்முற் பண் ணுவோ ரடைபெரும் பேற்றை, யெடுத்துநா மியம்ப வேண்டுமோ வடைவ வெவைக்குங்கா ரணமஃ தொன்றே. சஉ

மழைதவழ் சையமால்வரை நின்று வருபுனற் காவிரி பாய,விழை தரு தூய்தாங் கடற்புகார்த் துறைக்கு மேற்றிசை யோசனை யிரண் டிற், றழை மயிலாடு துறையதன் மேற்குச் சாற்றிடும் யோசனை யரையிற், குழைநிதி படுமக் காவிரித் தெனது கோட்டிடைப் பொலிவ தத்தலமே. சங

அத்தல நாமந் திருத்திவா னேங்கி யவிருமுத் தாலக வனமென் றெத்தலங் களுநன் றியம்பிடு மின்று மியம்புபன் னுமமு முளவான் முத்தலங் களுமேத் தத்தலப் புராணமொ ழிதாக் குறித்துளே னின்று, கைத்தலத் தமரு நெல்லியங் கனியிற் கரிசற விளங்குமப் புராணம். சச

கண்ணிய தவத்து முனிவிர்கா ணீவிர் கரிசற நூலெலாந் தெளி வுற், றெண்ணிய மலமூன் றறுத்தநம் பெருமா னின்பவா ரிதியி டைப் படிந்து, நண்ணியா வொன்று மில்லவர் போல நாடுமோர் புராண நூல் கேட்ட, லண்ணிய வெனக்கும் புண்ணியம் பொருத்தற் காவதோ ருபாயமென் றுணர்ந்தேன். சரு

அன்றியு முலகுய் தரும்பொருட் டென்று மறிந்தன னனைத்
துநூ லுணர்ச்சி, யொன்றிய பெரியோர் கடன்மையே யிதுநீ
ருஞற்றிடு மாமகப் பயனும், வென்றிசேர் நுங்கட் கல்லவே யுலக
மேதக வாழ்தாற் பொருட்டே, துன்றிய புகழீ துறைத்தலா லியா
னுந் தொக்கபுண் ணியமுளே னன்றே. சசு

வெள்ளிய கிரணக் கற்றைகால் விரிந்து வீங்கியெவ் வுலகமும்
விரும்பி, யள்ளிய பாவுங் கயிலைமால் வரையி னங்கணன் பாற்கலை
யனைத்து, முள்ளிய வுணர்ந்த நந்திநா யகன்பா லுணர்ந்தனன்
றவச்சனக் குமாரன், றள்ளிய வினையா னவனடிக் கமலந் தலைமிசைச்
சூட்டிடப் பெற்று. சஎ

மாயவன் கூறென் றுரைத்திடும் வியாத மாமுனி வரனெலா
முணர்ந்து, தூயவென் றெவருங் கைக்கொள வமைத்த தோமின்மூ
வறுபுரா ணத்து, நேயமிக் கமைந்த வாக்கினை யத்து நிகழ்த்திடப்
பட்டுற விளங்கும், பாயசீ ருத்தா லகவன மென்னப் பகர்பெருந்
துருத்தி மான்மியமே. சஅ

என்றுரைத் தருளித் துருத்திமாத்தலத்தி னினிதமர் துணை
வந்த களிற்றைக், குன்றுவிற் குழைத்த சொன்னவா றறியுங்
குழகனை யுலகமுற் றீன்ற, நன்றரும் பன்ன வனமுலை யுமையை
நாறுசாந் திளமுலை யாளை, யன்றுளங் குறித்தரப் பாவசமிக்குற் றறை
சூதுங் கேண்மெனப் புகல்வான். சகூ

நாடரும் புலவீர் பன்முனிவரும்வாழ் நைமிசச் சிறப்பெடுத்
துரைத்தாம், பாடரும் புகழ்சால் சூதமாமுனிவன் பரிந்தருண்மொழி
வழி முறையே, வாடருங்கருணை யம்மைகோ வாக வானரு ளியதிற
முரைப்பாம், வீடரும் பிறவித் துயர்தபுத் தின்ப மேவுதற் குபாயமீ
தன்றே. ருய

ச-வது நைமிசப்படலம் முற்றியது.

ஆகப் படலம் ச-க்குத் திருவிருத்தம் உ௱ச.

---

## * ௪-வது நைமிசப்படலம்

இந் நைமிசக் காடானது பிரமன் முதலிய கடவுளருடைய உலகங்களை வெறுத்து முனிவர் பலரும் வாழத் தகுந்தது. கற்பக நாட்டில் உள்ளவர் எல்லோரும் தன்பால்வந்து,எதனையும் எற்றுஇன்புறவும், தன்பால் உள்ளார் ஒருவரேனும் அக்கற்பக நாட்டிலே ஒன்றும் விரும்பாமலொழிவதால் அக்கற்பகமே இதற்கு நாணி நாளும் நலமுற இறைஞ்சப் பெறுகின்றது. கொன்றை, வில்வம், வானத்திலுதித்துநின்ற பிறைத்திங்கள் ஆகிய இவைகள் தன்மேல்வர விளங்கலால் எல்லார்க்கு மிறைவனான ஈசனுக்கு இசைந்த சடைக்காடுபோன்று ஒளிரா நின்றது. வெம்மையால் கவரப்படாத தன்மைவாய்ந்தது தன்பாலுள்ள அவிபமுதத்தைக்கொண்டு பாற்கடல், திங்கள், கடவுட்பசு முதலிய எவற்றினும் மேலாக விண்ணவர்களை இன்புறுத்தும் மேண்மை வாய்ந்தது. விளா, தெங்கு, நாரத்தை, கொன்றை, பிடா,சோதிமரம்,வஞ்சி, புன்னை, செருந்தி முதலியன செறியப் பெற்றுள்ளது. இன்னும் இக்காட்டின்பால் சில அற்புதத் தருக்களும் உள்ளன. அவைகள் நரை திரை மாற்றுவன. இறப்பொடு பிறப்பெல்லாம் அறவே இகப்பன. இரும்பைப் பொன்னாக்குவன, இப்படிப்பட்ட பலமரச் செறிவோடு யானை, புலி, சிங்கம், மான் முதலிய விலங்குகளும் ஆங்கே மிகுந்துள்ளன.

இத்தகைய வளங்கள் பலசெறிந்த இனிய அந்நைமிசத்தில் முனிவர் பலரும் சடைமுடிதரித்து, உடலிளைத்து உண்மைத் தவமே மிகுந்து, மும்மல மற்று, இருவகைப் பற்றுமின்றி, நோன்பு பலபூண்டு ஒழுக்கம், ஒழியாது, தவப்படிவமே தாங்கி, எக்காலத்தும் அகந்திரியாது யாராலும் அறிதற்கரிய சிவபிரானையே அறிந்தின்புற நிற்பர். அவர் கவினுடைய மாதர் தாமே வந்து கலங்கத் தழுவினுந்தாங் கலங்காது தாயென நினைப்பவரும் இன்பமும், துன்பமும் ஒன்றென எண்ணிய எண்ண மிகுந்தவரும், "இருள்சேரிருவினையுஞ் சேரா இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு என்றவாறு" இறைவன் பொருள்சேர் புகழையே கேட்டு இருள்சேர் இருள்வினையும்

* நைமிசமாவது பிரமன், முனிவர்கள் தவஞ்செய்தற்கு நாணற்புல்லை எடுத்து வளைத்துச் சக்கரமாக்கி விடுத்து இடங்காட்டினமையால் அவ்விடம் அப்பேர் பெற்றது. இது கந்தபுராணத்திற் கண்டது.

போக்கா நிற்பவரும், இறைவன் திருப்பெயரையே எஞ்ஞான்றும் இயம்பும் இனிய நாவினரும், திருநீறு திருக்கண்மணி முதலிய சிவ வேடமே பொருளாக்கொண்ட சிந்தையரும் ஆவர். அவர்களே அத்திரி, கருக்கன், கண்ணுவன், ததீசி, ஆணிமாண்டவியர், நாரதர், அகத்தியர், சம்பு, சந்திரசூடர், காத்தியாயனர், மிருகண்டு முதலியவராவர். அம்முனிவர் யாவரும் ஒருகாலத்தில் எழிலுறத்திரண்டு உருத்திர யாகம் ஒன்று இயற்ற முயன்றனர். அது தெரிந்த அளவிலா முனிவர்கள் தத்தம் மாணவர்களுடன் ஆங்கு அடைந்தார்கள். அப்போதே அருந்தவத்திற் சிறந்த அறிஞர் பெருமானான சூதமாமுனிவர் அம்முனிவர் குழாத்துள்ளே அழகுறப் புகுந்து பொலிந்தனர். மாணாக்கர் பலர் செறிந்த அம்மாமுனியைக்கண்ணுற்றோர் பலரும்மகிழ்ந்து அடிபோற்றி அழைத்து நல்வரவு கூறிப் புனிதப்பீடிகையைப் பொற்புற இட்டுப் பூக்கள், பல பொலிவுறக்கொண்டு, வணங்கி அருக்கியம், பாத்தியம், ஆசமனம அழகுற வழங்கி, அழுக்கின் நீங்கி அறிவு பெறற்பொருட்டு அன்பினால் இன்புறக்கைகுவித்து இறைஞ்சி நின்றார்கள். அதுகண்ட அம்முனிவர் பெருந்தகையார் அவர்களை நோக்கி முனிவர்காள்! ஈங்கு இருக்கவென அருளிபபின்னர், அவர் திருமுன் இருபக்கமும் இனிதே அமர்ந்தனர். அதன் பின்னர் அம்முனிவர் குழாங்கள் அனைவரும் முனிவர் நெடுந்தகையான சூதமுனியைநோக்கி முனிப்பெருந்தகையீர்! கலையில் தெளிந்த வியாதன்பால் கற்பன அனைத்துங் கற்றீர் என்று பலவாறு துதித்து இப்போது இக்காட்டில் சிவபிரானுக்குரிய வேள்வி ஒன்று இயற்ற எண்ணினேம். இதற்கு அச்சிவபெருமானே வந்ததுபோன்று அடிகேள் ஈண்டு எழுந்தருளினீர். இப்பெரும் பயனால் அதுவும் மிகச் சிறந்ததோர் வேள்வியாயிற்று. இதனால் இவ்வேள்வியும் இனிது நிறைவெய்தி இன்புறப் பெற்றேம். அதுமட்டுமின்றி யாங்களும் சிறந்தோம். இனிச் சிறிதும் எங்களுக்கு இழிவு வந்தெய்தாது. இதுபோது எமது பிறவியைக் கழிக்கத்தக்க நன்னெறி யாதென அகத்தால் ஆராய்ந்து அந்நெறியுஞ் சிவபெருமான் திருவடிக் காட்சியே யெனத் தெளிந்தனம். அதுவும் எதனாலாகுமென்று உள்ளத்தால் உணரும்போதில் துறவு, வேள்வி, வரம், தவம், இவற்றுள் யாதாகுமோவென ஐயமுற்றனம். பின்னர் அருந்தீரத் தேவரீரை நினைந்தோம். உம்மை உன்னுகின்றபோதே இறைவன்பால் இடையறாப் பத்தி ஒன்றே அதற்குச் சிறந்ததாகுமெனத்

துணிந்துகொண்டோம். அதனைக் கொடுப்பது அப்பெருமான் புராணக் கேள்வியேயன்றிப் பிறிதில்லை என்பதையும், அங்கையின் நெல்லிக்கனிபோல் அறிந்துகொண்டனம். ஆனால் அப்பெருமான் வாழ்ந்தருளாநின்ற தலங்கள் பலவற்றுள்ளும் சிறந்த தலம் இதுதான் என்பதுமட்டும் தெளிந்திலேம். ஆதலால் இம்மை, மறுமை, வீடுகளை எண்ணவே எளிதில் எய்துவிக்கும் இயல்பானதும், மூர்த்தி தலம் தீர்த்தமுறையே சிறந்ததும், எவரும் விரும்பத்தக்கதுமான சிறந்ததோர் சிவன் திருப்பதி இவ்வுலகில் யாங்குளது? அங்ஙனம் உளதாயின் அவ்விடத்தையும், அதன் வரலாற்றையும் வான்முறையாக வழங்கியருள வேண்டுமென்று அச்சூத முனிவரை வேண்டினர். அம் முனிவர்பெருமான் நெடும்பொழுது சிந்தித்து வேதத்தாலும் விளம்புதற்கரிய முச்சிறப்புடைய முதன்மையான தலமொன்றுகண்டு இருகைகளும் சிரசின்மீது ஏறுநிற்க இரு கண்களினின்றும் கண்ணீர் பொழிய அரஅரவென்று சிவன்றிருப் பெயரையே இடையிடையே சொல்லிக்கொண்டு அதனை வான்முறைபாகச் சொல்லத்துணிந்தனர். முனிவர்காள்! நீவிர் கேட்ட தலம் மிக அருமையிற் கண்டோம். அது எவ்வூழியினும் அழியாப் பெரும்புகழுடையது. அதனை அறைதல் எனக்கு அரிது. அதனைக் கூறவல்லவன் சிவனேயல்லாது பிறர் வல்லவராகார். அங்ஙனமாக, இதை நான் கூறத் தொடங்கல் நகைப்புக் கிடமாம். இதுவரை யான் இதனைக் கூறியதுமில்லை. அதனைப் பார்த்தாலும், நினைத்தாலும், சொன்னாலும் அவர்கள் பந்தமறிந்து வீடுபெறுவரென்பது உண்மை. அதுதான் காவிரிப்பூம்பட்டினத்துக்கு இரண்டு யோசனை மேற்றிசையிலும் காவிரிக்குத் தென்கரையிலுமாக உள்ளது. அது உத்தாலகவனமெனப்படும். இன்னும் அதற்குப் பல பெயர்களுமுள்ளன.

யான் இம்மூவுலகங்களும் புகழத்தக்க இப்புராணம் சொல்லத் துணிந்துளேன். இப்பொழுது நீங்கள் பன்னாலும் நன்றாகத் தெளிந்து மலமற்றுச் சிவபெருமான் இன்பக்கடலில் மூழ்கினீர்கள்! அத்தகையீர்! ஒன்றுமறியாதவர்போல் இப்புராணத்தைக் கேட்டலானது எனக்குப் பெரும் புண்ணியத்தை அளித்தற்கு ஒரு உபாயமாக்கல் போலுமென்றே தெளிந்தனன். அன்றியும் அங்ஙனம் கேட்டது இவ்வுலக முழுதும் உய்யும்பொருட்டேயாகும். இது

தான் நூலுணர்ச்சி வாய்ந்த பெரியார் இயல்பாம். இன்னும் நீங்கள் வேள்விகளைச் செய்வதும் உங்கள்பொருட்டோ? அன்று அதுவும் உலக முய்யும்பொருட்டே யாகுமன்றோ? இதனால் இப்புராணத்தைக் கூறும் நானும் புண்ணிய முள்ளவனாவேன்.

கைலைக்கிறைவன் திருமுன் உணர்ந்தவர் நந்தி யெம்பெருமான். அவர்பாற் கற்றவர், சனற்குமார முனிவர் அவரிடத்தில் கற்றவர் வியாதமாமுனிவர். அவர்பால் அடியேன் பதினெண் புராணங்களையுங் கற்றனன். அப்பதினெண் புராணங்களுள் ஆக்கினேய புராணத்துள் உத்தாலகவன மெனப்படும் இத்திருத்துருத்தியின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. அதனை உங்களுக்குச் சொல்கின்றேன். கேட்பீர்களாக வென்று அச்சூதமாமுனிவர் இத்திருத்துருத்தியில் எழுந்தருளிய சொன்னவாறறிவாரையும், அருமபனை வளர்முலையாளும் நாறுசாந்திளமுலையாளுமாகிய இருபெருமாட்டியாரையும் மனதில் சிந்தித்துத்தன் செயலற்று இருந்துகொண்டு இத்துருத்திச் சிறப்பு முற்றும்மொழிவாராயினர்.

௪-வது, நைமிசப்படலம் முற்றியது.

---

## ௫வது அம்மை கோவுருவாகப் பரயனருளிய படலம்.

தமதியல் யாவ ராலுஞ் சாற்றொணப் பெருமா னருத்
தமதியா னத்தான் வேற்கட் டடமுலை மடந லார்நச்
சுமதிரூ பத்தா னென்னா சுடர்முடி யிடறுந் தாளான்
சுமதியென் றுரைக்கு நாமத் தோனறலிவ் வுலகங் காப்பான். ௧

கலைமதி யமைச்சர் போற்றக் கரிசில்வே தியர்கள் வாழ்த்த
வலைகட லுடுத்த வைப்போ ரலைவறப் புரக்கு நாளின
மலைவரு மவனைக் காண்பான் மாணவர் குழாந்தற் சூழத்
தலைமதி யமைந்த சீர்ச்சௌ தரிசன முனிவன் வந்தான். ௨

திருமுனி வர்வு நோக்கி யிருக்கையின் றெழுந்து சென்று
மருமலர்ப் பாதந் தாழ்ந்து மகிழ்ச்சியி னழைத்து வந்து
குருமணிப் பீடத் தேற்றிக் குணங்கெழு பூசை யாற்றிப்
பொருவரு மனுஞ்ஞை பெற்றுப் போற்றிசெய் திருந்த பின்னர். ௩

முனிவரன் வதன நோக்கி மூரிநீ ருலகங் காக்கும்
பனிமதிக் குடையான் முக்கட் பரமனார் சரித மெல்லா
நனியுணர்ந் தனையே தெய்வ நங்கையெம் பிராட்டி வெற்பின்
றனிமக ளாய வாறென் றவம்புரிந் திருந்த வாறென். ௪

சங்கரப் பிரானைப் போது தனிமணம் புரிந்தா னிந்தத்
துங்கமார் கதையெ னக்குச் சொற்றிட வேண்டு மென்ன
வங்கவ னுவகை விம்ம வதிக மந்தணமிக் காதை
பங்கமுற் றகற்று மென்று பகர்ந்துபின் னுரைக்க லுற்றான். ௫

பொருவருங் கருட கற்பம் புகவிரண் டாவ தென்ன
வருமனு வந்த ரத்தின் மதித்திடு முப்பத் தாறாந்
திருவியல் யுகமா ணத்திற் றிரேதத்தி னுதிநாளிற்
றருமசன் மாவென் றோர்பேர் தாங்கொரு மறையோ னுள்ளான். ௬

திரைபெறு தெய்வக் கங்கைச் செழும்புனல் யமுனை யென்ன
வுரையிரு நதிக்கு நாப்ப ணுயர்மகம் பல்ல செய்தான்
வரைகுழைத் தெடுத்த முக்கண் வள்ளலுக் கன்பு பூண்டோன்
விரைநறுங் கூந்தற் செவ்வாய் வினமமை யவன்ற னில்லாள். ௭

அன்னவ ளவன்பொற் பாத மன்புற வணங்கிப் போற்றி
மன்ன நீவினைப வெல்லாம் வினைப்விடை வழங்கு தென்னப்
பன்னலத் தரும சன்மன் பாவைதன்வதனநோக்கி
முன்னரு மீதுசொற்று முடியுமோ வென்னு லென்று ௮

பின்னரும் வேட்கை கூரப் பேசுத லுற்றான் முன்பு
துன்னருங் கயிலாயத்துத் தூமணித் தவிசின் மேலான்
முன்னருங் கணேசர் கந்தர் முதலியர் சூழ வைகி
யன்னது கண்டத் தெம்மா னம்பிகை வதனம் பார்த்தான். ௯

பார்த்தலு முலக மீன்ற பராபரை யடிவ ணங்கித்
தீர்த்தனே கதையொன் றெற்குச் செப்பிடு கென்னத் தோற்றேல்
போர்த்தநா யகனுஞ் செவ்வாய்ப் புல்லிய முறுவற் றோற்றி
வார்த்தடங் கொங்கை நங்காய் கேளென வகுக்க லுற்றான். ௰

# திருத்துருத்திப் புராணம்.

மரைமலர்க் கிழவன் மைந்தன் மாதவத் தக்க னென்பான்
விரைமலர்க் கரிய கூந்தல் வேதவல் லியினோ டாற்றும்
புரையறு தவத்தை நோக்கிப் புத்திரி யெனநீ போந்தா
யுரைசெயும் பருவத் துன்னை மணந்தன மவனிலுற்றே கக

ஆயபி னெமைவி ரோதித் தொருமக மாற்றப் புக்கான்
மேயவக் காலை நீயவ் வேள்வியஞ் சாலை யுற்றாய்
தீயவச் சிதம்புத் தக்கன் செயிர்த்தவ மதித்த னோக்கிப்
பாயவத் தழலி னூடு படர்ந்துரு மறைத்தா யன்றே. கஉ

உருமறைத் துடனே சென்று பருப்பதத் தரச னுற்ற
திருமனை மேனை யோடுஞ் செய்தவ முதிர்ச்சி நோக்கி
யொருமழப் புதல்வி யாகி யுவந்தவன் வளர்க்குஞ் சாலைப்
பொருவருந் தவமேற் கொண்டாய் புரிந்தெமை மனத்தி லுன்னி

அன்னது தெரிந்தி யாமோ ரந்தண னாகப் போந்து
முன்னரும் விளையாட் டாலே மொழிசில மொழிபச் சீற்ற
மன்னலு மறைந்து காட்சி மால்விடை யோடு நல்கக்
கன்னலங் குதலைச் சொல்லாய் கைதொழு தொதுங்கி நின்றாய். கச

செழுமலர்க் கோதை நல்லாய் திருமனை யகத்திற் போக்கி
யெழுமுனி வரரை யேவி யீன்றவ னிசைவு தேர்ந்து
முழுதல குவப்ப யாரு மொய்த்திட வாங்கு மேவிக்
கொழுமண நின்னைச் செய்து குலவியிக் குற்றம் யாமே. கரு

இதுநிகர் கதைவே றில்லை யென்றுரைத் தனனெங் கோமா
னதுதெரிந் தனையோ வென்ன வினமறை யகமகிழ்ந்தாள்
முதுபுகழ் மன்னு நீயு முணரென முனிவன் கூறிக்
கதுமெனப் பின்னுமீது கருணையி னுறைக்கலுற்றான். கசு

வினமறை யுமையா ளப்பால் விழைந்ததென் னுரைத்தி யென்ன
வனகவத் தரும சன்ம னறைகுவா னம்மை போற்றி
மனமகிழ் வுற்று நீமுன் மணந்தது மூகை கண்ட
கனவென்ப் பட்ட தைய காலநீட் டித்த தாலே கஎ

இன்னமு மொருக்கான் மன்ற லியற்றிடி லினிது தேர்வேன்
முன்னவ வென்று தாழ்ந்தான் முதல்வனுங் கருணை பூத்து
பின்னவி ரிடைம டந்தாய் மேலம லாம்பு யப்பேர்
மன்னவெய் திடுகற் பத்தின் மணஞ்செய்வா மென்றா னன்றே. ௧௮

மேல்வரு கற்பத் தென்று விளம்பின னிறையிப் போதே
சால்புற மணப்பா மென்று சாற்றில னெனுங்க ருத்தாற்
கோல்வளை யுவகைத் தோற்றாள் கூவின டோழி மாரைப்
பால்வளர் பொழிலா டற்குப் படருதும் வம்மினென்றாள். ௧௯

ஐயனு மதனை நோக்கி யவமதித் தனைஞாஞ் சொற்ற
செய்ய வின்மொழியை யென்று சிந்தையுட் டேர்ந்து கொண்டு
மையவிர் கருங்கட் செவ்வாய் வாணுதன் மடந்தா யென்றும்
பொய்யமை யாத நஞ்சொற் பெருமையைப் போற்ற னீத்தாய்.

பேதமை யுருவ மாய பிராகிரு தப்பெண் போன்றா
யாதலி னொருகோ வாகி யவனியிற் சரிக்க வென்றான்.
மாதரம் பிகையிவ் வார்த்தை கேட்டலு மதிமா ழாந்து
போதவிங் கென்னை வந்து புகுந்ததென் றலைவுற் றாளால். ௨௧

அருவியங் கண்ண ளாகி யரியொரு வராக ரூப
மருவியுங் காணாச் சொம்பொன் மலரடித் தலத்து வீழ்ந்து
வருவியோர் மகிழ்ச்சி யென்று மற்றது தேடிக் கொண்டேன்
பொருவி யாதானுமில் லாவபராதம் புரிந்தே னன்றோ. ௨௨

பொறுத்தல்செய் தருடி யென்று புந்திநைந் திரங்கிப் போற்றிக்
கறுத்தல்செய் கண்டத் தெண்டோட் கண்ணுதற் கருணை மூர்த்தி
மறுத்தல்செய் திடவல் லாரை மன்னுயிர் முழுது மீன்றான்
வெறுத்தல்செய் துபார நோக்கி விழைந்தது விளம்ப லுற்றான்.

அன்னமென் னடையாய் சற்று மஞ்சலை பசுநீ யாகு
முன்னமோர் விடைநா மாய்நின் முன்னரே பயில்வே ஞானந்
தன்னமுங் குறையா துன்பா றவமூநம் மேனி முற்று
பின்னமும் யாது வேண்டு மென்றுவப் பித்தா னன்றே. ௨௪

உலகெலா மீன்ற தங்கை யொருபசு வுருவ மாக
வலகிலாக் கருணை மூர்த்தி யருளிய வண்ணஞ் சொற்றாந்
திலகவா ணுதலும் மாது சேவடி பணிந்து வேண்ட
விலகயா தேவன் சாரு மிடமருளியது ரைப்பாம். ௨௫

௫-வது அம்மை கோவுருவாகப் பரமனருளிய படலம் முற்றியது.

ஆகப் படலம் ௫-க்குத் திருவிருத்தம் ௨௪௯

---

## ௫-வது அம்மை கோவுருவாகப் பரமனருளிய படலம்.

சுமதியென்பான் ஒருவன் இறைவனை இன்புறத்தியானம் செய்யத்தக்கவனுளன். எம்மங்கையரும் விரும்பத்தக்க திங்கள்வடிவினன். பகைவர் அனைவரும் வணங்கத்தக்கவன். அவன்றன் அமைச்சர்கள் சூழ மறையவர்கள் வாழ்த்த இவ்வுலகத்தைக் காக்குங் காலத்திலே அவ்வரசனைக் காணும்பொருட்டு மாணவர் கூட்டத்துடன் மதிமிக்க சௌதரிசன முனிவர் ஒருவர் வந்தனர். அதுகண்டு சுமதியென்பான் தன் இருக்கைவிட்டெழுந்துபோய் எதிர்கொண்டழைத்து வந்து ஆசனத்திருத்தி அமைதியாக இறைஞ்சி வழிபாடியற்றி அவரருள்மொழிகொண்டு அவர் திருமுன்னே இருந்தனன்.

இருந்தபின்னர் அவ்வரசன், முனிவர்பெருமானை நோக்கி முனிவரேறே! முக்கட் பெருமான் மாபெருந் திருவிளையாடல் முழுதும் நீர் தெரிந்தீர். ஆதலால் அப்பெருமானுடைய தேவியார் மலைமகளானவாறும் அவர் தவம்புரிந்தவாறும் அத்தவப்பயனால் அப்பெருமான் இக்காலத்தில் திருமணஞ்செய்தருளினரென்பதும், அடியேனுக்கு நன்குணர்த்தல் வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன். அது கேட்ட முனிவர் யான் அவை நன்கறிந்தனன். அவை முற்றும் மிக மறைவாயுள்ளன. அவற்றை உனக்குச் சொல்லுவேன் கேட்கவென்று சொல்லியருள்வாராயினர்.

கருடகற்பத்திலே இரண்டாவது மனுவந்திரத்திலே முப்பத்தாறுவது யுகயாணத்திலே கிரேதாயுகத்தில் முதல்நாளிலே தருமசன்மா என்னும் மறையவன் ஒருவன் உள்ளான். அவன் யமுனை கங்கையாகிய இருநதிகளுக்கு நடுவண் உயரிய யாகங்கள் பல செய்தனன். அவன் இறைவனாகிய சிவபிரானிடத்தில் சிறந்த அன்பு பூண்டவன். அவன் மனையாள் வினமையென்பாள் ஒருநாள் ஆசேட்ட

கேட்ட கேள்விகளெல்லாம் அவனைக்கேட்டு எனக்கு விடைதருவாயாகவென்றும்கேட்டனள். அதற்குத்தருமசர்மன் அவ்விளமறையை நோக்கி மாதே! இது சொல்லி முடியுமோ! ஆயினும் சொல்லுவேன் என்று சொல்லத்தொடங்கினன்.

முன்னொரு காலத்திலே கைலாயத்திலே மாணிக்கப்பீடத்திலே சிவபெருமான் மூத்தபிள்ளையார், இளையபிள்ளையார் முதலியவர்கள் சூழ்ந்திருக்க எழுந்தருளி இருந்து தனது வாழ்க்கைத் துணையாகிய உமை அம்மையின்றிருமுகமண்டலத்தை இனிது நோக்கியருளினன். அதுகண்ட உலகம்மையார் எம்பெருமான்றிருவடியில் விழுந்து இறைஞ்சு அடியேனுக்கு அரிய பெரிய கதையொன்று அருளவேண்டுமென்று அடங்கி விண்ணப்பஞ்செய்தனள். அஃது அறிந்தருளிய எம்பெருமான் உமைநங்காய்! ஒன்று உரைப்பன் அதைக்கேட்பாயாக! ஒருநாள் மலரவன் மகனான மாபெருந் தவத்தையுடைய தக்கன் என்பவன், நீ புத்திரியாகும்பொருட்டுத் தன் மனைவியாகிய வேதவல்லியோடு அரிய தவமியற்றினன்.

அதற்காக நீயும் அவனுக்குப் புதல்வியாய்ப் போந்தாய் உரிய பருவத்திலேவந்து உன்னை மணஞ்செய்துவந்தேன். அதன்பின்னர் என்னைப் பகைத்து ஒரு யாகஞ்செய்தனன் அது அமயத்தில் நீ அவ்வேள்விச்சாலை செல்ல அத்தக்கன் நின்னை வெறுத்து அவமதித்தலைக்கருதி அவ்வேள்விக்குண்டத்தில் விழுந்து மறைந்தனை. அதன்பின்னர் மலையரசன், அவன் மனைவியாகிய மேனையுடன் தவம்புரிய அவ்விருவர்க்கும் புதல்வியானாய். பின்னர் அவர்கள்வளர்க்க வளர்ந்து என்னை மனத்தில் வைத்து அரும் பெரும் தவம் இயற்றினாய். அக்காலத்தே உன்னை மணஞ்செய்யவிரும்பி நான் ஓர் அந்தணனாகிவந்து திருவிளையாடல் புரிந்தனன். அதுகண்ட நினக்கு வெகுளி உண்டாயிற்று. அதற்காக வெள்ளேற்றிலெழுந்து நினக்குக் காட்சி தந்தனன். அதனைக்கண்டு நாணி நின்றாய். அப்போதே நின்னை நினதகத்திற் செல்லவிட்டுப் பின்னர் முறைப்படி எழு முனிவர்களையும் நினதகத்திற்கனுப்பி நின்னைப் பெற்றோர் உடன்பாடுகொண்டு நின்னை யாமே மணஞ்செய்து இங்கு வந்தனம். இதைத் தவிர வேறுயர்ந்த கதை யாதுள்ளதென்று எம்பெருமான் கூறியருளினார்.

இதனை நீதெரிந்தாயோவென்று தருமசன்மன் கூறினான். அதுகேட்ட வினமரையென்பாள் தருமசன்மனை நோக்கி உமையானவள் அதன் பின் விரும்பிய தயாது? அதையும் கூறுகவென்னத் தருமசன்மன் கூறுவானாயினான்.

உமைமங்கை சிவபிரானை வணங்கித் தேவரீர் நீர் என்னைமணஞ் செய்துகொண்டது நெடுங்காலங் கடந்ததாதலால் அது ஊமையன் கண்ட கனவைப்போலாயிற்று. ஆதலால் இன்னும் ஒருமுறை அடியேனை மணஞ்செய்தால் யானும் அதனை யறிவனென்று விண்ணப்பஞ்செய்தனள். அதற்குச் சிவபிரான் கருணைமிகுந்து பெண்ணரசே! இனிமேல் வரும் பிர்மகற்பத்தில் உன்னை மணஞ்செய்திடுவோமென்றருளிச் செய்ய அம்மையார் இறைவனார் இப்போதே மணஞ்செய்வேனென்று கூறியருளாமல் அடுத்த கற்பத்தில் செய்வோமென்று கூறிவிட்டாரென்று வருத்தமுற்றுத் தம் தோழிமார்களைப் பொழில் விளையாட்டிற்கு வாருங்களென்று விளித்தனள்.

அஃதறிந்தருளிய எமபெருமான் எம்பிராட்டியோ நம்மை அவமதித்தனளென்று மனத்துள் நினைத்துக்கொண்டு பெண்ணே! என் வாக்கை இகழ்ந்துவிட்டமையால் நீ இப்பூமியில் ஒரு பசுவாகி வர்கவென்றருளிச்செய்தனர்.

அம்மையார் அதுகேட்டு மதிமயங்கி இங்கு என்னோ? தீங்கு வந்துற்றதே, என் செய்வாமென்று வருந்திக் கண்ணீர் விழ்த்தி இறைவன் அடியில் விழுந்து, அண்ணலே! எனக்கு மகிழ்ச்சிவேண்டி உம்மிடம் வந்து அதற்கு மாறாகக் கவற்சியைத்தேடிக்கொண்டேன் அன்றியும் தேவரீரிடத்துத் தீங்கும் இழைத்தனனுபினன். இதனைத் தேவரீரே பொறுத்தருள வேண்டுமென்று மனங்கவன்று எம்பெருமானைத் துதித்திடக் கருணைபங் கடவுளாகிய சிவபிரான் அம்மையார் வருத்தம் முழுதும் நோக்கியருளி, அன்ன நடையாய்! சிறிதும் நீ அஞ்சற்க! நீ ஓர் பசு அதற்கு முன் நாமும் ஒரு விடையாகி நின் முன்னரே வருவோம்.

நினக்கு அறிவும் சிறிதுங் குறையாது. உனதுபால் நம் மேனி முழுதும் தவழாநிற்கும் இன்னும் நினக்கு யாது வேண்டுமென்று கேட்டு அம்மையை மகிழ்வித்தருளினர்.

ரு-வது அம்மை கோவுருவாகப் பரமனருளிய படலம் முற்றியது.

---

## ௪-வது கோவிற்குப் பயிலிடங் கூறிய படலம்.

---

வனமனை மலர்ச மழ்க்கும் வாண்முகக் கருங்கட் செவ்வாய்
வினமனை கேட்டி யென்று விளம்புவான் றரும சன்மன்
றனமனை மிடிக்க வீங்குந் தையனு யகிக றுத்த
கனமனை யளவு மொவ்வாக் கரியகண் டனைவ ணங்கி ௧

ஆவுரு வாகி மண்மே லிபங்கென வருளிச் செய்தாய்
மூவுரு வுடையா யெந்தத் தலமுபன் றடையுந் தானங்
தேவுரு வுடையார் நாளுஞ் செறிவதெத் தான மோர்முக்
கோவுரு வேத்த நீவாழ் குறிச்செறி வுளதெத் தானம். ௨

கொடுவன மாக்க ளானுங் கொலைச்சிலை மறவ ரானும்
படுபகுப் பிருது வானும் பாவனர் சிறிது மின்றி
நெடுநதி வளத்தி னோங்கி நென்முதற் பொருள்க ணமல்கி
விடுவது செய்யாம லியாரு மேவுறு தலமெத்தானம். ௩

புண்ணிய மனுவு மேருப் போற்பணைத் திடலெத் தானங்
கண்ணிய நின்றூட் கன்பர் களித்தமர் தாமெத் தான
மெண்ணிய வினைக ளெல்லா மியைதருந் தான மொன்று
நண்ணிய வருடி யென்ன நம்பிரா னருளிச் செய்யும். ௪

குணகடல் குமரி வான்றோப் குடகம்வேங் கடமென் றுள்ள
மணமலி யெல்லை நான்குள்வண் டமிழ் நாடு முற்று
மணவிய விசேட மாகு மவற்றுளுஞ் சோழ நாடு
புணர்நனி விசேடத் தோடு பொலிதுவ தெந்த ஞான்றும். ௫

திரையெறி கங்கை யாற்றிற் சிறந்தகா விரியென் றோது
முரைகெழு நதியொன் றம்ம வுறுபல நதியாய் மல்குங்
கரையறும் வளஞ்சா றெய்வக் கற்பகப் பொழிலு நாணப்
புரைதவிர் பொழில்கள் பல்ல பொருந்துவ வெங்குமாங்கே. ௬

எண்ணரு மிலிங்க மாங்காங் கிலகு மவ்விலிங்க மெல்லாங்
கண்ணரு மொரு நாமென்றுங் கலந்து வாழ்ந் திருப்பே மின்னு
நண்ணரு நமக்கன் பான நல்லவர் குழாங்கண் மல்கிப்
பண்ணருஞ் செயல்கள் செய்து படர்தவிர்ந் திருப்பர்நாளும். ௭

ஒருகுணக் கடற்கு மேற்பால் யோசனை யிரண்டோ டொன்றிற்
பொருதிரைப் பொன்னித் தென்பாற் பொலிவடா ரணிய மென்றும்
பெருவள னமைந்து மேவும் பி..பிலா ரணிப மென்று
மிருவரும் பாவுந் தான மியைபுமெண் ணிலவுண்டின்னும். ௮

உரைத்தவித் தான மேநீ யுவகையிற் பயிலுந் தானம்
விரைத்த பூங்குழலாய் நீபா வுநக்கொடு மேவும்போது
வரைத்தநின் கூறு மாவும் வாணி.யு மற்று ளோரும்
புரைத்தவிந் திராணி முன்னுப் பொலிபா மகளிர் தாமும். ௯

எழுமுனி வர்முன் னுனோ ரில்லறக்கிழத்தி மாரு
நழுவலில் வனப்பு வாய்ந்த நாககன் னியருந் தீம்பாற்
கொழுவளப் பசுக்க ளாகிக் கூடவே பயில்வார் மாயோன்
பழுதக றமரொ டுங்கோ பாலனுய்ப் பயிலா நிற்பன். ௧௦

வெள்ளியங் கிரியு நாணும் விடையுரு வொன்று தாங்கி
யொள்ளிய யாமு நின்மு னுலவுவோம் பொழியா நிற்குந்
தெள்ளிய நின்பா லானந் திருமேனி குளிர்வோ நின்காற்
புள்ளிப குறியும் பூண்போம் போக்குவை பசுத்து வம்பின். ௧௧

செருத்தலா னுருவநீத்து மறையவ னொருவன் செய்யு
முருத்திர யாக குண்டத் துற்பத்தி யாவை யாமும்
வருத்தமொன் றின்றிக் கொண்ட மால்விடை யுருவ நீத்துப்
பொருத்தமா ரீங்கு நின்றும் போந்துற மணப்போ மென்றான். ௧௨

என்றலு முவகை விம்ம வெழுந்தடி பணிந்து போற்றிக்
குன்றவிற் குழைத்தா யாகங் குயிற்றிடு மறையோன் யாவ
னன்றவ துரைத்தி யென்ன நாரணன் முதலோ ரேத்த
மன்றநின் றுடல்செய்யும் வள்ளலோ திடலுற் றுரைன. ௧௩

முந்திய கிரேதந் தன்னின் முதுநிலத் தகடு கீண்டு
நந்திய பெருக்கு வாய்ந்த நருமதை தீரத் துள்ளா
னிந்திய மவித்த நீரா னெம்மடிக் கருவன் பேய்ந்தா
னுந்திய வினையின் மேலா மொழுக்கநூ லனைத்துந்தேர்ந்தான்.

நீடுபார் முழுது மேத்து நிரஞ்சன னென்னும் பேரா
னேடுசூழ் கூந்தற் கற்பி னிரஞ்சனை யென்பா ளோடு
கூடுமா மறையோ னேனோர் குயிற்றரும் யாகம் பல்ல
பாடுமா மறைநூல் சொற்ற படிமுடித் துவந்த மேலோன். ௧௫

அன்னவன் மகப்பே றின்றி யளப்பரு நிதியம் வீசிப்
பொன்னவிர் தருக ருப்ப கிரகமுற் பொலியா நிற்கு
மென்னமண் டபமும் வான்றோ யிஞ்சிகோ புரங்க ளாதி
சொன்னபற் பலவுஞ் சேரோ ராலயந் துலங்கச் செய்தான், ௧௬

அனையமா தளிக்கு வேண்டுந் திருவெலா மமைய வீட்டிப்
புனையவா நமதி லிங்கப் பிரதிட்டை பொலியச் செய்து
நினையவா வுறும்ப திட்டை நிரம்புறச் செய்பு முன்னர்
வினையவா முடல நீத்தான் விழைதரு கற்பி னோளும். ௧௭

உள்ளபல் பொருளு மந்தப் பெருந்தளிக் குதவி நாளு
மெள்ளருங் கொழுந னைச்சார்ந் திருப்பதில் விருப்ப முற்று
விள்ளரு முடம்பு நீத்தாள் விளம்பிரு வரையு நந்தக்
தள்ளருங் கணத்தோர் செம்பொன் விமானமேற் சாரவேற்றி. ௧௮

இக்கயி லாயத் துய்க்க விருந்தன ரிவர்க்கு நீயோர்
தக்கபுத் திரியாவாய்மே தகுமறை யவர்கு லத்திம்
மிக்கவர் தோன்றி யாகம் விழைந்தியற் றுவரோ ரென்றான்
முக்கணம் பெருமா னோகை முகிழ்த்திருந் தனண்மா தேவி. ௧௯

இறைவியா வுருவமாகி யெங்குநான் பயில்வே னென்ன
நிறைவியா பகமா யுள்ளா னிறுத்தமை நிரம்பச் சொற்றுங்
குறைவியா தென்ன நாளுங் குலவுறுங்கையிலா யச்சீ
ருறைவியா முரைக்க மாட்டே மாயினு முரைப்பாஞ் சில்ல, ௨௰

௯-வது கோவிற்குப் பயிலிடங்கூறிய படல முற்றியது.

ஆகப் படலம் ௯-க்குத் திருவிருத்தம் ௩௰௯.

---

## கூ-வது கோவிற்குப் பயிலிடங் கூறிய படலம்,

---

தருமசன்மன் வினமமரையைப் பார்த்துச் சொல்வானுயிரான். தையலே! பின்னர் இமயமங்கை, இறைவனை நோக்கிப் பெருந்தகை யே! என்னை இம்மண்ணுலகத்தில் ஓர் பசுவாகி வருகவென அருளி னீர். ஆனுல் அம்மண்ணுலகில் நான் யாங்குச் செல்வது? அதை அருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் அரு ளுவாராயினர். மங்கையர்க்கரசி! கீழ்கடல், குமரி, குடகு, திருவேங் கடம் என்னும் இந்நான்கு எல்லையையுடைய தமிழ்நாடு முற்றும் நமக் குச் சிறந்ததாகும். அதனுள் கங்கை முதலிய எந்நதியினும் சிறந்த காவிரி நதி ஒன்றே பல கால்களாகச் செல்லாநிற்கும். ஆங்குக் கற் பகச் சோலையினும் சிறந்த சோலைகள் சூழாநிற்கும். அவ்விடமெல் லாம் நமது குறிகளாகிய சிவலிங்கங்கள் எண்ணிலாதனவுள்ளன. அவைகளெல்லாவற்றுள்ளும் நாம் என்ஞான்றும் கலந்துவாழ்வோம். நமக்கு அன்பு மிகுந்த மெய்த்தொண்டர்கள் அவ்விடங்களிலேயே செய்தற்கரிய செயல்களைச் செய்து இன்புறுவார்.

அந்தக் கீழ்கடலுக்கு மேல்பால் மூன்று யோசனை அளவில் காவிரிக்குத் தென்பாகத்தில் திருவாலங்காடு, அரசங்காடு என்றுள் ளன. ஆங்கே இன்னும் பல தலங்கள் உள்ளன. இத்தானங்களே நீ மகிழ்ச்சியோடு உலாவுமிடங்களாம். நீ ஆவின் உருவத்தோடு வருகின்றபோது நின் கூறுகிய திருமகள், கலைமகள் இருவரும் பிற ரும், இந்திராணி முதலிய அமரமாதர் அனைவர்களும், எழுமுனி மனைவியர்களும், நாகமாதர்களும் வளமுள்ள பசுக்களாகி நின்னு டன் பயில்வார்கள். திருமாலும் தனது சுற்றங்களோடு பசுமேய்ப் பானய் வருவன். யாமும் இந்த வெள்ளிமலையும் நாணத்தகுந்த விடை வடிவமெடுத்து நின்முன்னே உலாவுவோம். பொழிகின்ற நின் பாலால் நம் திருமேனி குளிரப்பெறுவோம். நின்னுடைய காற் குளம்பின் தழும்பும்பெறுவோம். பின்னர் நின் பசுவடிவை மாற்று வோம். நீயும் ஆங்கு ஓர் பார்ப்பான் செய்யும் வேள்விக்குண்டத்தில் தோன்றுவாய். யாமும் அந்த விடை வடிவத்தை விடுத்து இவ் விடத்தினின்றும் ஆங்கு வந்து உன்னை மணஞ்செய்வோமென்று சிவபிரானர் அருளினர்.

அதுகேட்ட அம்மையார் அகமகிழ்ந்து எழுந்து இறைவனடியை இறைஞ்சி, எம்பெருமானே! வேள்விசெய்பவன்யாவன்? அதனை அடியேனுக்கு அருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச் சிவபிரான், மாதரசி! முதலான கிரேதா உகத்திலே நருமதை நதிக்கரையில் ஐம்பொறிகளையும் அடக்கிய அறிவுள்ளவனும், எம்பால் மிக்க அன்புள்ளவனும், வினையிற் சிறந்தவனும், ஒழுக்க நூல்கள் அனைத்தும் உணர்ந்தவனும் ஆனநிரஞ்சனனென்பான் ஒருவன் உளன். அவன் மனைவி நிரஞ்சனை என்பாளோடு பிறரால் செய்தற்கரிய வேள்வ மறைநூல் விதித்தபடியே மகிழ்ந்து செய்தனன். அவனும் மகப்பேறில்லாமல் அளவில்லாத பொருள்களை அளித்துக் கற்பகிருகம், மண்டபம், கோபுரம், மதில் முதலியவாக உடைய சிவப்பெருங்கோயில் ஒன்று உண்டாக்கினன். அக்கோயிலுக்கு வேண்டும் செல்வங்கள் அமையச்செய்து அதில் நமது குறியாகிய சிவலிங்கத்தையும் இருத்தி இன்னும் அதற்கு வேண்டுவன நிரம்பச்செய்யும் முன்னரே இறந்தனன். அப்போதே அவன் மனைவியும் எஞ்சிய பொருள்களை அக்கோயிலுக்கே விடுத்துத் தனது தலைவன் உடனுறை வாழ்க்கைக்கு விரும்பி உடலைத் துறந்தனள். அவ்விருவரையும் நமது தொண்டர்கள் பொன் (ஊர்தி) விமானத்தில் ஏற்றிக்கொண்டுவந்து இக்கைலையில் வைத்தனர். அவ்விருவருக்கும் நீ புதல்வியாவாய். அவர்கள் மறையவர் குலத்திற்பிறந்து வேள்வி ஒன்று செய்வார்கள். அதைத் தெரிந்துகொள்க என்று சிவபிரான் கூறினன். அதுகேட்டு அம்மையார் மகிழ்ந்தனர்.

௯-வது கோவிற்றுப் பயிலிடங்கூறிய படலம் முற்றியது.

---

## எ-வது கையிலாத்தியல் புரைத்த படலம்

ஆயவின மறைகொழுக னடிவணங்கி மனைவியொடு
மேயசிரஞ் சனனமரும் வெள்ளிமால் வரையாங்கு
நேயமுற விருப்பதத னளவையெவ னிறைந்துறையுந்
தூயரெவ ரிரித்தெனக்குச் சொலவேண்டு மெனச்சொல்வான். க

எவ்விடத்துப் பரமசிவ னிறைவியொடு மமர்கின்று
னவ்விடமே கயிலாய மாயினுமா தாரத்துட்
செவ்வியதா ரிருதயவா தாரமெனச் சிறந்தோங்கு
மௌவியமின் முனிவர்தொழற் காயபெருங் கைலாயம். உ

மருமலர்மா ளிகையாற்கு மாண்பமைசத் தியவுலகும்
பொருகிகிரிப் புடையாற்குப் பொற்பமைவை குந்தமும்போற்
கருமலவே ரறுத்தருளுங் கண்ணுதன்மா தேவனுக்கவ்
விருவர்தொழுங் கயிலாய மிகச்சிறந்த தென்றுரைப்பார். ௩

வாங்கியநுண் ணிடையுமையாள் மணவாளன் கயிலாயம்
வீங்கியமற் றவன்புகழே யிசைத்திரண்டு நின்றெனவு
மோங்கியசத் துவகுணமே யுருக்கொண்டு நின்றெனவுந்
தேங்கியவெள் ளொளிபரப்புந் திகழுமிர சதவுருவாய் ௪

திரைசெயுவர்க் கடன்முதலாச் செப்புவரு கடலேழு
முரைசெயுநா வலந்தீவ முதற்றீவ மோரேழும்
புரைசெய் தனதகங்கொண்டு பொலிபுடவி யளவுரைப்பின்
வரைசெயுமைம் பதுகோடி யோசனையே மற்றிதனுள். ரு

சொற்றவுவர்க் கடலிலக்கம் யோசனையா மதுசூழப்
பெற்றுயர்தீ வத்தளவு மத்துணையே பேசுங்கான்
மற்றமைவா ரிதிபாரும் வான்றீவ மோராறுங்
கற்றவர்க ளொன்றனுக்கொன் றிரட்டிப்பக் கணக்குயரும். சா

இத்தகைய புவிசூழ விருப்பதுசக் கிரவாள
மத்தகைய மலையகல மாயிரம்யோ சனையுயா
மொத்துயர்நூ றியோசனையே யதன்புறத்துத் துணங்கறலே
வித்தமா ரதனகத்தே வெய்யவன்றன் னொளிபரப்பும். எ

குணதிசைமு னெண்டிசையுங் கூறியவச் சிரப்படையா
ணிணர்மலிசெந் தழலியம னிகனிருதி புனற்காச
கணவியகா வியக்கர்குலத் ததிபனீ சானனிவர்
புணர்நகர மெட்டுமுறை பொருந்தினவம் மலையகத்தே. அ

அன்னமால் வரைசூழ மகலிடத்து நடுப்பொலியு
நன்னர்நா வலந்தீவ நாவலந்தீ விடைப்பொலியுஞ்
சொன்னமா மேருவிதன் பிரமாணஞ் சொல்லுங்கா
லென்னவா மிருபதினா றிலக்கமியல் யோசனையே. கூ

ஆயமக மேருவரைக் கமைதருமீ சானத்தின்
மேயகுபே ரன்பதிக்கும் விளங்கீசா னன்பதிக்குந்
தூயநடு விடத்துலகஞ் சூழ்தருசக் கரவாளப்
பாயவரைத் தெற்குளது பரம்பரன்வாழ் கயிலாயம். கO

அதன்பெருமை சதகோடி யோசனையே யறிஞர்புக
ழதனடிவண் பாதாளத்தப் பாலுமென வறிக
வதன்முடிசத் தியலோகத் தப்பாலுன் னதமாகு
மதன்மிசையொண் கொடுமுடிக ளாயிரமுண் டறிதருகால். கக

கொடுமுடியா யிரத்தினடு வுள்ளகொடு முடிமுப்பா
னடிமுடியி னுன்னதமே யவையவற்றி னடுவகத்துக்
கொடுமுடிமூன் றுண்டவற்று ணடுவாய கொடுமுடிதான்
புடைமுடியிற் பெரிதுயாஞ் சிவலோக புரமதன்மேல். கஉ

குடபாலிற் கொடுமுடியிற் கோவிந்தன் வைகுந்தம்
வடபாலிற் கொடுமுடியின் மலரயன்வாழ் மனோவதிகீ
ழிடமமைபு முப்பதினு மிந்திரன்மா லயன்போற்ற
வடல்விடையூர் விமலேச னுமையவளோ டமர்ந்திருப்பான். கங

அவற்றினுக்குக் கீழமரு மாயிரமா முடிகளினுந்
தவத்தினைமன் னுறப்புரிந்தார் சாரணர்சித் தரைமுதலோர்
நவப்பயனை யினிதருந்தி நடலையறுத் தினிதிருப்ப
ரவர்க்கரிய பொருள்யாதே யாயுங்கா லெளிதெல்லாம். கச

நிச்சயமார் பெருங்கயிலை யுச்சியிடை நிவந்தமுடிக்
கச்சமிலா வலிப்பெருமான் கணங்களொடு முமையோடு
மிச்சையுற வெழுந்தருளி யிருக்குமெழிற் சிவலோக
மெச்சமிலா வாவரண மே ழொடுகூ டியதம்மா. கரு

ஒருகோடி தனிற்பாதி யுயரமுதற் கனகமதி
லருகாமற் றுறனுக்கு மவ்வளவே யாமுயா
மருவாநின் றிடுவிரிவு மவ்வளவே வகுக்துங்காற்
பொருவாத விவற்றின்வளம் புகன்றிடப்புக் கால்விரியும். கசா

எழுவாயா வரணத்தி னீரிரண்டு வாய்தலுக்கு
மெழுநூறு யிரவுயா மகலந்தா னிதிற்குறையுங்
கொழுமணிவாய் தலின்மேலாற் கோபுரமா றிருகோடி
யொழுகியொழி தருநூறு யிரம்வாய்த றுறுமுபரம் கஎ

ஆதிவாய் நான்கினுக்கு மைங்கரர்தங் கணமிரண்டாஞ்
சோதிவாய் நான்கினுக்கு நந்திகணஞ் சொலுமூன்று
நீதிவாய் நான்கினுக்கும் வேதாள நிகழெட்டிற்
பாதிவாய் நான்கினுக்குஞ் சங்குட்டர் கணம்பரவும். கஅ

ஐந்தின்வாய் நான்கினும்வே லாளிகண மாறமைந்த
மைந்தின்வாய் நான்கினுட்கீழ் வாய்தலிடை யோம்ப
வைந்தினைத வில்லாமேல் வாய்தலிடை நகுகுமா
னுந்தியதெற் கோரேச னுத்தரவாய் வாமேசன். கசூ

அந்தியவா வரணத்துள் ளகலமோ ரெழுகோடி
யைந்துளவான் மதிலதனு ளவற்றினுக்கொவ் வொன்றேவாய்
முந்தியவா வரணத்தின் முழுதுயா மொருகோடி
சுந்தரிதன் காவலது சொலற்கரிய வலியுடைத்தே. உ௦

பிந்தியவா வரணந்தான் பெறுமுபா மொருகோடி
யிந்தவள மெண்ணரிய துக்கிரர்மற் றிருங்காவ
லந்தவழ்மண் டபத்துயர்ச்சி யைம்பதுநா றுயிரமே
சந்தமதற் குயர்வெள்ளி நிறமாகுஞ் சாற்றுங்கால். உக

மற்றையமூன் றுமெனாச்சி வளர்ச்சிபெறு மொருகோடி
வெற்றிமிகு சண்டேச ரதன்வாயில் வீற்றிருப்பர்
பெற்றிருப்பர் பெருவளமெம் பெருமானைத் தரிசிப்பர்.
பற்றியவ ரருகிருப்பர் பலரவரைப் பகர்வார்யார். ௨௨

சதமுறுமா யிரகோடி சதமுகா தரவெய்தி
யெதுகால மென்றிருப்ப ரிகலெறுகு லத்திருக்கைக்
கதமிகுவை ரவர்சாத்தர் காளியுந்துர்க் கையுமமர்வர்
குதுகலத்தைப் பெற்றமரு முனிவர்குழாம் பலகோடி. ௨௩

அதற்கப்பா லாவரணத் தளவிலாக் கணம்வசிக்கு
மதற்காவ னந்தீச ரவராணைப் போன்றிருப்ப
ரதற்கண்ணே பூருவத்தி னவிருக்கு மண்டபமுண்
டதற்குள்ள பெருவளங்க ளினையவென வளப்பவர்யார். ௨௪

அதற்கப்பான் மலரவனா லயமமைந்தா வதுதான
மதற்ககலம் யோசனைநாற் கோடியாம் பூருவதிக்
கதற்கண்ணே பொழிலாங்கே யாலயமு மிரண்டுபொழி
லதற்குள்ள வளமினைத்தென் றளப்பவரு முளரேயோ. ௨௫

ஆங்கதற்கு மேற்றிசையி னுறுறுவா யாலயத்து
ளோங்கியுறு மடிப்பீடத் துயர்பீட மொன்பதின்மேற்
றேங்கமழும் வெண்ணிறத்த தளங்களொரா யிரஞ்செறிந்த
பூங்கமலங் கேசரமும் பொகுட்டுமுறப் பொலிதருமே. ௨௬

அதனைவா னருமுணரா வமலமய மென்றுரைப்ப
ரதனையருந் தவர்நினைவா ரதன்பெருமை மதிப்பவரா
ரதனையுயிர்க் குயிரென்றே மறையுமரு மறைமுதனா
லதனையகத் துணர்வார்க ளனைத்துமுணர்ந் தவரன்றே. ௨௭

அதற்கப்பா லொப்பரிய தெனவவிரு மாலயத்திற்
குதர்க்கவிதங் களைக்குறைத்துக் குணமிக்க வடியார்க்கே
விதர்க்கவித மருள்புரிந்து விமலவரன் வீற்றிருப்பன்
மதர்த்த விழியுமைபாகு மகிழ்ந்திருப்ப னவ்விடத்தே. ௨௮

## வேறு.

ஒருவேலை நந்திக்கு முருகனுக்குங் கயமுதற்கு முரைக்கு மற்று
மொரு வேலை யுமையாட்குநந்திபிரான் றனக்குமகிழ்ந் துரைக்கு மற்று
மொருவேலை யுமையாட்கு முருகனுக்கு முளமுருக வுரைக்கு மற்று
மொருவேலை யுமையாட்கு மைங்கரற்கும் வேதமுத லுரைக்கு மன்றே

பொற்கொடிநே ருமையாட்கே போதிக்கு மொருவேலை புவனத்துள்ளார்
கற்றிவற்றை வல்வினைக ளைந்துளத்திற் கருதியபல் போக பேதம்
பெற்றிடவு மலமாயை தருமமெனும் பெயர்ப்பரிய பாச பேத
மற்றினியதன்னடியை யடைந்திடவுந் திருவுள்ளத் தடைத்து மாதோ

அதற்கணிய கனகமணி மண்டபமொன் றுண்டதனுக் ககலங் கோடி
யதற்குயா மிருமடங்கே யத்தகைய மண்டபத்தின் வாயி லுன்றுண்
டதற்கதற்குன் னதந்தானு மறுபதினு யிரமுண்டா லகலந் தானு
மதற்குநடு மணிப்பீடத் தகலமுமுன் வாயிலினுக் கறைந்த தாமே.

## வேறு.

இத்தகைய மணிப்பீடத் திறநோக்கி யிருக்குமெழில்
வித்தகன்றன் விக்கிரகத் தளவினையும் விளம்பிடுவா
முத்தமராய் வல்வினையை யொழிப்பதனுக் கொருப்பட்ட
சித்தமுளார் சிந்தித்துப் பராயின்பந் திளைப்பதற்கே ௫௨

யோசனையைம் பதுநூறு யிரவுயரந் திருவுருவம்
யோசனையொவ் வொருபதத்துக் கைஞ்ஞூறு யிரமுளவே
யோசனைதா னிருபதுநூ றுயிரமுண் டொவ்வொருதாள்
யோசனைகள் கடிதடத்துக்கைஞ்ஞூறு யிரமுளதே. ௫௩

யோசனையீ ரெழுநூறு யிரமாகு முரமுடிவு
யோசனைதா னிருநூறு யிரமென்ப ருயர்கண்டம்
யோசனைமற் றத்துணையே கொண்டொளிருந் திருமுகமும்
யோசனைமற் றுறுப்பினுக்குந் தக்கவா றுன்னுகவே. ௫௪

இந்தவுரு வினுக்கேற்ப வெம்பெருமாட் டியுமுருவஞ்
சந்தமுறக் கொண்டமர்வள் சயிலாதி திருவுருவு
மந்தவுரு வினுக்கொத்த தைங்கரனு தியருருவு
முந்தவெழு கணத்துருவுந் தக்கவா றெனமொழிவார் ௫௫

ஆயதிரு வுருப்பெருமா னகிலசரா சரமீன்ற
நேயமிகு பெருங்கருணை நின்மலத்தாய் கண்டுவப்பப்
பாயகணம் புடைசூழப் பல்லாண்டு பலரிசைக்கத்
தூயமணி மன்றேறித் தோலாத நடநவிலும் ௩௬

ஆங்குநட நவில்காலை யடல்வாணன் பாநுகம்பன்
றாங்கு பெருங்குடமுழவுஞ் சுரிமுகச்சங் கமுமியம்ப
வீங்குசுவை யமுதொழுக்கிற் றும்புருநா ரதர்விழைந்து
தேங்குநறுங் கானவிசை செவிகுளிர வொழுக்கிடுவார். ௩௭

போற்றுபெருங் கணத்தலைமை பூண்டாரு ளரிதென்று
சாற்றுமிரு காத்தாளந் தாங்குநருஞ் சிலரமுத
மூற்றுகழைக் குழல்வாய்வைத் தூதுநருஞ் சிலர்மற்று
மேற்றுபல வியங்களுநன் கியம்பிடுவா ருஞ்சிலரே. ௩௮

தந்திமுகத் தவனமுற்கண் டாவந்தோன் சண்முகத்தோன்
முந்தியெழு விறல்வடுகன் முதுசாத்த னிவர்கூற்றி
னந்தியவா னவர்மகவான் முதலாய நாவிருவ
ருந்திமலர் வந்தவன்மற் றுந்திமலர்ந் திடுகரியோன். ௩௯

சித்தர்சா ரணரியக்கத் திகழ்வித்தியா தரர்மற்
றொத்தநா காசனர்கிம் புருடருபர் கின்னரர்தாஞ்
சத்தவாம் பரித்தேரோன் முதற்சாற்று மொன்பதின்மர்
பத்தவா னவர்வசுக்கண் முதற்பலருங் காண்பவரே. ௪௰

அளப்பரிய தவப்புவியி னாற்றினரே யாங்கடைவா
ரளப்பரிய பெரும்போக மனுபவிப்பார் களுமவரே
யளப்பரிய வூழிகழிந் தாலுமவர்க் கறுதியில்லை
யளப்பரிய கயிலாயத் தியல்பறைய முற்றுவதோ. ௪௧

மருவுபெருங் கயிலாய மால்வரையி னியல்பனைத்து
மொருவுதலி லாதுரைத்த லருமையிற்சற் றேயுரைத்தாம்
பொருவுதவிர் நிரஞ்சனற்குப் புண்ணியநா யகன்கருணைத்
திருவமுற வருள்புரிந்த திறத்தையினிப் புகலுவாம். ௪௨

௭-வது கையிலாயத்தியல்புரைத்த படலம் முற்றியது.

ஆகப் படலம் ௭-க்குத் திருவிருத்தம் ௩௱௧

---

## ௪-வது கைலாயத்தியல்புரைத்த படலம்.

எவ்விடத்தில் சிவபெருமான் இறைவியுடன் எழுந்தருளியிருக்கிறாரோ அவ்விடமே கைலாயமெனப்படும். அப்படியாயினும் ஆதாரங்களுள் இருதய ஆகாரமென்பது மிகச்சிறந்ததாகும். அதுவே பெரியார் தொழுதற்குரிய கைலாயமாகும். அயனுக்குச் சத்தியலோகமும், மாலுக்கு வைகுந்தலோகமும்போல் அவ்விருவர்களாலும் வணங்கத்தக்க கைலாயம் இறைவனுகிய சிவபிரானுக்கே சிறந்ததாகும். உவர்க்கடல் முதலாய எழுகடல்களையும், நாவலந்தீவு முதலிய எழுவகைத்தீவுகளையும், உடைய இப்பூமியின் அளவு ஐம்பது கோடி யோசனைதூரமாகும். இதனுள் உவர்க்கடல் அளவு இலக்க யோசனை. அது சூழ்ந்த தீவமும் அவ்வளவே. மற்றைய கடல் ஆறும், தீவங்களாறும் அளவால் ஒன்றுக்கொன்று இரண்டுமடங்காகுமென்க. இத்தகைய பூமியைச் சுற்றியிருப்பது சக்கரவாளமலையென்று சொல்லப்படும். அத்தகைய மலையின் அகலம் ஆயிரம் யோசனை. உயரம் நூறுயோசனையாகும். அதன் புறத்திலே இருளாகும். கதிரவன் ஒளிவீசும் கீழ்த்திசை முதல் எட்டுத்திசையிலும் அம்மலையின்கண் இந்திரன் முதலிய எண்டிசையாளர்கள் நகரங்கள் எட்டும் முறையேயுள்ளன. அம்மலையால் சூழப்பட்ட இப்பூமியின் நடுவில் உள்ளது நாவலந்தீவு. அதன் நடுவேயுள்ளது பொன்மயமான மேருமலையாகும். அதன் அளவு இருபதினாயிர இலக்கயோசனையேயாம். அம்மேருமலைக்கு ஈசானபாகத்தில் குபேர நகருக்கும் ஈசான நகருக்கும் நடுவண் சக்கரவாளகிரியின் தென்பாகத்திலே சிவபிரான் திருக்கைலாயம் விளங்காநின்றது. அதன்பேரளவுதான் நூறுகோடி யோசனையாகும்.

அம்மலையின் அடிப்பாகம் பாதாளத்துக்கு அப்புறமேயாகும். அதன்முடி சத்தியலோகத்திற்கு அப்பாலுமுள்ளது. அம்மலையின் மேல் ஆயிரம் கொடுமுடிகள் உள்ளன. அவற்றுள் நடுவிலுள்ள கொடுமுடி முப்பது. அவைகள் அடிமுடியின் மேலாகும். அவற்றின் நடுவுள்ள கொடுமுடிகள் மூன்றுள்ளன. அவற்றுள் நடுவுள்ள கொடுமுடி, பக்கக்கொடுமுடியினும் உயரம் பெரிதாகும். அதன்மேல் சிவபுரமாகும். மேற்றிசையில் உள்ள கொடுமுடியில்

கோவிந்தனுறைய திருமால் வைகுந்தமாகும். வடதிசையின் கொடிமுடியில் பிரமனுர்வாழும் மனோவதிப்பட்டணமாகும் அதற்குக் கீழாக இந்திரன், மால், அயன் முதலியவர் புகழ்ந்து போற்ற விடையேறியான சிவபிரான் இறைவியுடன் இனிதே எழுந்தருளியிருப்பர். அவற்றிற்குக் கீழ் உள்ள ஆயிரமுடிகளினும் தவஞ்செய்தவர் சாரணர், சித்தர், முதலியோர் அகமகிழ்ந்து அமர்வார். அவர்க்கு அரியது ஒன்றுமில்லை கைலையில் உயர்ந்த முடியிலுள்ள சிவலோகம் எழுமதில்களையுடையது. அவற்றுள் முதல் மதிலினுடைய உயரம், அரைகோடியளவாகும், மற்றைய ஆறுமதில்களின் உயரம் அம்முறையே யுள்ளதாம். அகலமும் அவ்வளவே. முதல் மதிலின் நான்கு வாயில்களுக்கும் உயரம் எழுநூறுயிரமாம். அவ்வாயில்கள் தோறும் கோபுரங்கள் பன்னிரண்டு கோடியாகும். அவ்வாயில் தொறும், உயரம் நூறுயிரமாகும்

முதல் நான்கு வாயில்களுக்கும், விநாயகர் கணங்கள், இரண்டாவது நான்கு வாயில்களுக்கும் நந்திகணங்கள், மூன்ருவது நான்கு வாயில்களுக்கும் வேதாளங்கள், நாலாவது நான்கு வாயில்களுக்கும் சங்குட்டர் கணங்கள், ஐந்தாவது நான்கு வாயில்களுக்கும் முருகன் கணங்கள், ஆருவது நான்கு வாயில்களுக்குக் கிழக்குவாயிலில் மூத்த பிள்ளை, மேலைவாயிலில், இளையபிள்ளை, தெற்குவாயிலில் கோரேசன், வடக்குவாயிலில் வாமேசன். ஒருமதில் உள் அகலம் எழுகோடியாகும் அதனுள் மதில்கள் ஐந்துண்டு. அவற்றிற்கு வாய் ஒவ்வொன்றே. முதல் மதிற் சுற்றின் முழுதுயரம் ஒரு கோடியளவாகும். அது பெருவலிமையுடையது. அதற்குக்காவல் சுந்தரியாம். பின்னுள்ள பிரகாரம் ஒருகோடியுயரம். இதில் வளங்கள் எண்ணில்லன. இதற்கு உக்கிரர் காவல், அம்மண்டபத்தின் உயர்ச்சி ஐம்பது நூறுயிரமாகும் அதற்கு நிறம் வெள்ளி. மூன்ருவது மதில் ஒருகோடி உயரமாகும். அதன்வாயிலில் சண்டேசர் வாழ்வார். நூறுயிரகோடி சதமுகர்கள் ஆங்கு இறைவனைக்காண எதுசமயமென்று காத்திருப்பர். இன்னும் சூலமேந்திய வைரவர், ஐயனுர், காளி, துர்க்கை ஆகிய இவர்கள் ஆங்கு இருப்பர். முனிவர் குழாங்களும் பலகோடியிருக்கும்.

அதற்கப்பாலுள்ள மதிற்சுற்றில் அளவில்லாத கணங்கள், வசிக்கும். நந்தீசர் காவல்செய்வர். அவரும் சிவனைப் போன்றிருப்பர்.

அதன் கிழக்கில் அவருக்கு மண்டபம் ஒன்று உண்டு. அதற்கு அப்புறம், வைரவன் திருக்கோயில் ஐந்தாவது இடமாகும். அதற்கு அகலம் நான்கு கோடி யோசனையளவாம். அதற்குக் கிழக்கில் சோலையாம். ஆங்கே ஆலயம் இரண்டு அதற்கு மேல்பாகத்தில் ஆறுவாசலுடைய ஆலயத்துள்ளே அடிப்பீடத்திலே ஒன்பது பீடங்களின்மேலாக வெண்ணிறம் பொருந்திய ஆயிரம் இதழ்களையுடைய தாமரைபொன்று விளங்கா நிற்கும். அதுபூந்தாது, கொட்டை முதலிய வற்றால் விளங்கும். அது தேவரும் அறிய முடியாததாம், அழுக்கற்றதுமாம், அதைப் பெரியாரே உணரத்தக்கவர். அதை அகத்தில் அறிபவர் அனைத்தும் உணர்ந்தவரே. அதற்கு அப்பால் ஒப்பிலதாததாக விளங்கா நிற்கும் திருக்கோயிலில், அடியவர்களுக்கு அருள்புரிந்து ஆண்டவன் எழுந்தருளியிருப்பன். அவ்விடத்தே அம்மையாகிய உமையாளும் எழுந்தருளியிருப்பள்.

அப்பெருமான் ஒரு காலத்தில் வேத முதலியவற்றை நந்திக்கும், முருகப்பெருமானுக்கும், மூத்தபிள்ளையாருக்கும் மொழிந்தருள்வர். ஒரு அமயம் பெருமாட்டிக்கும், நந்திக்கும் நலமுற உரைத்தருள்வர். ஒருவேளை உமையாளுக்கும், மூத்த பிள்ளையாகிய யானைமுகனுக்கும் அருள்புரிவர். ஒருநேரம் உமையவளுக்கே உரைத்தருள்வர். ஆனால் புவனத்துள்ளவர்கள் இவற்றைக் கற்று வினையை நீக்கி இருவினையால் எழுகின்ற போகபேதங்களைப் பெறவும் மலமாயைகள் அற்று ஆண்டவர் அடித்தலத்தை அடையவும் திருவுளங்கொண்டு அவ்வாறு அருள்புரிவாரென்க.

அவ்விடத்துக்கு அணித்தாகப் பொன்னாலும் மணியாலும் செய்தமண்டபம் ஒன்றுண்டு. அதற்கு அகலம்கோடி யோசனையாம். அதற்கு உபரம் இருகோடி யோசனையாகும். அந்த மண்டபத்தில் வாயில்கள் நான்குண்டு. அவற்றுள் தனித்தனி உபரம் அறுபதினாயிரம். அதனகலம் அறுபதினாயிரம். அதன் நடுவிலுள்ள மாணிக்கப் பீடத்தின் அகலம் அறுபதினாயிரம்.

இந்த மாணிக்கப்பீடத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனது திருவுருவத்தினளவை இனிக்கூறுவோம். அத்திருவுருவத்தினுபரம் ஐம்பது நூறாயிரயோசனையாகும். அதில் ஒவ்வொருகாலுக்கும் ஐந்

நூறு நூறாயிரம்யோசனையாம். தாள் ஒன்றுக்கு இருபது நூறாயிர யோசனையாகும். கடிதடம் ஐந்நூறாயிரம் யோசனையாகும். மார்பு பதினான்கு நூறாயிரமாகும். கழுத்து இருநூறாயிரயோசனையாகும். திருமுகம் அவ்வளவேயுள்ளது. மற்றய உறுப்புக்களுக்கும் அவ்வாறே ஒத்த யோசனை யுடையதாகும்.

எம்பெருமாட்டியும் அவ்வுருவத்திற்கு ஏற்றபடியே திருவுருக் கொண்டு அமர்ந்தருள்வள். நந்தியடிகளும் அவ்வாறே யமர்வர். மூத்தபிள்ளையார், இளையபிள்ளையார் முதலியவர்கள் திருவுருவங் களும் அதற்குத்தக்கவாறே யமைந்துள்ளன. எழுகணங்களின் திருவுருவங்களும் அதற்குத்தக்கவாறு உள்ளன.

சிவகணங்கள் சூழ்ந்திடவும், பலர் பல்லாண்டுபாடவும், வாணன் குடா முழா முழக்கவும், பாநுகம்பன் சங்கம் இசைத்திடவும், தும்புருநாரதர் இசைபாடவும், சிலர் திருத்தாளம் ஒற்றவும், சிலர் குழ லிசைக்கவும், பலர் பல்லியங்கள் பண்புடன் இசைக்கவும் மணிமன்றில் திருக்கூத்து இயற்று நின்றருளும் பெருவாழ்வை ஆனைமுகன், ஆறுமுகன், வைரவன், சாத்தன், முதலியவர்களும், இந்திரன்முதலிய எண்டிசையாளர்களும், திருமான், அயன், சித்தர், சாரணர், இயக்கர், வித்தியாதரர், கின்னரர் ஞாயிறுமுதலிய அமரர் அனைவர்களும் கண்குளிரக்கண்டு மகிழ்வார்கள் என்று நிரஞ்சனன் அமர்ந்த கைலாயத்து இயல்பு கூறப்பட்டது.

எ-வது கைலாயத்தியல்புரைத்தபடலம்முற்றியது.

---

## அ-வது கைலாயமடைந்தநிரஞ்சனனுக்குப் பரமனருள்புரிபடலம்.

நனைமலர்க் கூந்தல் வினமமரை யென்பா ணாயகன் மலர்ப்பதம் வணங்கி, மனையொடுங் கயிலை மால்வரை யடைந்தான் மாண்புடை நிரஞ்சன னென்று, யனையவ னென்ன முகமனோ டடைந்தா னண்டவ னவற்கருள் புரிந்த, வினையெவ னுரைத்தி யென்னலுந் தரும சருமன்மேல் விளம்பிட லுற்றான்.

பொருகணஞ் செலுத்தக் கயிலைமால் வரையிற் றனிமுனை
யாளொடும் புகுந்தா, னருமறை பழிச்சு மாவயின் வளங்க ளனைத்
துங்கண் டுளங்களி கூர்ந்து, பருவருந் திறமற் றுங்குற வசிக்கும் பற்
பல்புண் ணியரையும் வணங்கி, யொருவரு மின்பப் பெருஞ்சிவ
லோகத் தொளிர்முத லுலகத்தை யடைந்தான். ௨

வினயகர் கணங்க ளாவயின் வினவி விடுத்திட வடுத்ததென்
றுரைக்கு, மினைதெறு மிரண்டா முலகத்திற் புக்கா னிருந்தசாந்
தானிகக்கணங்கண், மனுதா வோடும் வினவுபு விடுப்ப வசித்திடு பத்
தரைத் தொழுது, தனுத மவோடு நிரஞ்சனன் மூன்று முலகத்தைச்
சார்ந்தனன் மாதோ. ௩

ஆங்குவே தாள கணம்வினைய் விடுப்ப வருஞ்சிவா கமமினி
துணர்ந்த, பாங்குசேர் பெரியோர் பதமவண் பழிச்சிப் பாவுநா
லாமுல கத்திற், றேங்கு மாதரவோ டடைந்தன னங்குச் செறிக
ணைத் தமர்வினைய் விடுப்ப, வீங்கு சுரூபப் பெரியரை வணங்கி
விழைந்தைந் தாமுல கத்திற் புகுந்தான். ௪

நிறைதரு கந்தர் கணம்வினைய் விடுப்ப நிகழ்த்துமுற் றுப்பெருந்
திருவத், துறைநகா யாங்குப் பணிந்தன னாறுமுலகத்தையுற்றன
னங்குக், குறையில் பல்கோடித் தினகா ரொருங்கு குழீஇயமர்ந்
தாலென வமருங், கறையறு வலியோர் வினவுபுவிடுப்பக் கனிந்தவர்
பதமலர் பழிச்சி. ௫

ஒன்றுபல் வளங்கூர்ந் தொளிர்தரு மேழா முலகிடை விருப்
பொடு புகுந்து, குன்றுவிற் குழைத்த குழகனை யென்னக் குலாயமர்
நந்தியெம் பெருமா, னன்றுசெய், மலர்த்தாள் வணங்கின னேத்த
நகைமுகத் தவன்வரல் வினவிக், கன்று வெம்பிறவிப் பிணிதபுத்
துய்வாய் கருதுநீ மனையொடு மென்று. ௬

அருமறைச் சிரத்து நடநவில் பெருமா னற்புதச் சமயநன் குணர்
ந்து, திருமறை யவனை மனையொடும் புகுத்தக் தேசியுமாலயன்
காணாப், பெருமறை முதலைக் கண்டடி பணிந்து பெயர்தரா வின்ப
மூற் றெடுப்ப, விருமறைத் துதிகள் பாடின னனையற் கெய்திய
வுவகையா ரளப்பார். ௭

ஒள்ளிய மறையோ னன்பினை நோக்கி யும்பர்நா யகன்மிக மகிழ்
ந்து, தெள்ளிய நினக்கு வேண்டுவ தியாது செப்புதி யென்னலும்
வணங்கி, வெள்ளிய விடையூர் விமலமா தேவ விரிஞ்சன்மான் முதலி
யோர்க் கெண்ணந், தள்ளிய நினது தரிசன மெளிதாந் தவத்தினேற்
கின்னுமென் வேண்டும். அ

ஆயினு நினது குறிப்பிரதிட்டை யருநரு மதைப்பெருந்
தீரத், தாயினும் பழிபின் முனிவர்நாள் குறிப்ப வாற்றினே னின்
றொரு பாகத், தாயினு மினியாள் பதிட்டைசெய் முனமீங் கடைந்
தன னக்குறை யொன்றுள், ளாயினும் வருத்தா நின்றதா லைய
வஃதுதீர் பொருட்டரு ளென்றான். கூ

என்றலும் பெருமான் குறுநகை புரியா யாரைநீ பதிட்டைசெய்
திலமென், றென்ற வுட்குறித்தோ ரனுநூற்று யின்னே பொழிந்திடக்
கடவையவ் வஞ்ஞை, நன்றவ டானே நினக்கொரு மகளாய் நண்ணுவ
ளூறுபரு வத்து, வென்றநாம் வந்து மணஞ்செய்வோ மிதனின் மேற்
பெறும் பேறுநிற் குளதோ. ய

திரைவளை கொழிக்குந் தெண்புனற் பொன்னித் திருநதித் தீ
த்தி னொருநீ, புரையி லிம்மனையோ டந்தணர் குலத்துப் புக்கொரு
பிறவியுற் றெவரு, முரைசெய மணந்துநமைக்குறித் திட்டி யொன்று
செய் குலவயது போது, விரையமே கலைசூழ் யாககுண் டத்து விம
லையோர் மழுவுரு வாவள். கக

அதுவரை யிங் ஙனமருந்தி யொருநா மருளிய பவமலானினக்கு
முதுபெரும் புவியிற் பவமிலை மீண்டு முன்னியிங் கினிதமர்ந் திருப்
பாய் பதுமனு நிகராப் பனவபோ வென்று பரம ா னருள்விடை
கொடுத்தான், கதுமெனப் பணிந்து பணிந்துப் தேனென்று கை
குவித் தமர்ந்தனன் மறையோன். கஉ

மறைபவ னளவா வின்பத்துட் டிளைத்து மனையொடும் பெருஞ்
சிவ லோகத், தறையவன் புகனு ளன்றுறு மெனவு ளெண்ணின
னிருந்தன னிறைவன், முறைமை யின்றெனக் கருள்புரி திறத்தை
மொழிந்தனங் காவிரி யாற்றங், துறையி றேத்து மற்றவ னுதித்
துத் துரிசறப் புரிதிற முரைப்பாம். கங

**அவதுகைலாயமடைந்தநிரஞ்சனனுக்குப்பரமனருள்புரிபடலமுற்றிற்று**

**ஆகப் படலம் அக்குத் திருவிருத்தம் ருகூச.**

---

## அவது கைலாயமடைந்தநிரஞ்சனனுக்குப் பரமனருள்புரிபடலம்.

வினமரை யென்பாள் தன் நாயகன் தருமசன்மன் திருவடி பணிந்து, நிரஞ்சனன் கைலையை யடைந்தானென்றீர்; அதனை விளங்க உரைத்தல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அத்தரு மசன்மன் சாற்றுவானாயினன்.

சிவகணங்களால் செலுத்தப்பெற்ற நிரஞ்சனன் தன் மனைக்கிழத்தியோடு திருக்கைலாயத்திற்குச் சென்றனன். அதன் வளம் அனைத்துங் கண்டு களித்தனன். அவன் அங்குள்ள பற்பல தூய அறிஞர்களையுங் கண்டு வணங்கிச் சிவலோகத்திலே முதல் உலகத்தை யடைந்தனன். ஆங்குள்ள மூத்த பிள்ளையார் கணங்கள் முதலாயினர் தெரிந்து விடுக்க, இரண்டாவது உலகில் இன்புறச் சென்று அங்ஙனமுள்ள சாந்தானிகக் கணங்கள் அறிந்து விடுப்ப, அங்கு அன்பர்களைத் தொழுது மூன்றாமுலகில் மும்பன்று புகுந்தனன், அவண் வேதாள கணங்கள் வினவி விடுக்க, அவ்விடமுள்ள சிவாகம முணர்ந்த சிவஞானிகளிருந்த இடங்களைக் கண்டு இறைஞ்சினன். பின்னர் நாலாவது உலகில் நன்கு சென்றனன். ஆங்குக் கணேசத மர் கருதி விடுக்க, ஆண்டுச் சாரூப பெரியார்களைச் சார்ந்தனன். ஆண்டு வணங்கிக்கொண்டு முருகனான இளையபிள்ளையார் இனங்கள் அறிந்து விடுக்க, ஆண்டுள்ள பெருஞ் செல்வர்களை அன்புடன் தொழுது ஆறாமுலகில் அடைந்தனன். அவன் இறைவனை ஒத்துள்ள நந்திபெருமான் திருவடியைப் பணிந்தனன்.

அவர் நிரஞ்சனனை நல்வா வேற்று நிரஞ்சனா! "நின் மனையாளோடு நன்குய்ந்திடுக" வென்று எம்பெருமான் செவ்வி தெரிந்து அவனை யவன் மனையாளோடும் சிவபிரான் அணுக்கத்தில் அடைந்திடச் செய்தனர். அந்நிரஞ்சனன் தன்மனையோடும் அயன் முதலியோர்களால் அறியப் பெறாத அருட் கண்ணாகிய இறைவனைக் கண்ணுற்று இறைஞ்சிப் பேரின்பப் பெருங்கடலில் மூழ்கி அவ் விபக் களிப்பால் ஆடினன். அன்று அவன் எய்திய மகிழ்ச்சி யாராலும் அளந்துசொல்ல இயலாதாயிற்று. அத்தகைய மகிழ்ச்

சியை அடைந்த நிரஞ்சனனை நினைவிற் கரிய பெருமானனவர் கருணை நோக்கம் அளித்து "நினக்கு வேண்டுது யாது கூறுக" வென்றருளினன்.

அவன் மீட்டும் எம்பெருமானை வணங்கி, "அயன், மால் முதலிய யாராலும் எண்ணுதற்கரிய உமது பேரின்பக் காட்சியை எளிதாகப் பெற்ற எளியேனுக்கு யாது வேண்டும்? ஆனாலும் உமது திருவருட் குறியை நருமதை நதிக்கரையில் நல்லோர் பலர் தெரிந்த நன்னாளில் எழுந்தருளச் செய்தனன். உமது திருவுருவின் பாகத்தில் உமை அம்மையார் திருவுருவையும் எழுந்தருளச் செய்தற்கு முன்னாகவே இங்கு வந்தனன். இதுதான் என்குறைபாம் அதை எளியேனுக்கு அருளல் வேண்டு" மென்று விண்ணப்பஞ்செய்யச் சிவபிரான் திருப்புன் முறுவல் செய்து "இன்னே உன் கவலை முற்றும் ஒழிக. நீ கருதிய இறைவியே நினக்கு ஒரு மகளாய் எய்துவள். அங்ஙனம் எய்திய புதல்வி செவ்வியுற்ற போதே யாம் வந்து மணஞ் செய்து விடுவோம் நினக்கிதனினும் வேறு பேறு என்னுள்ளது. ஆதலால் நீயும் இம்மனையாளோடு காவிரிக் கரையில் அந்தணர் குலத்தில் தோன்றி அவளை மணந்து நம்மைக் குறித்து ஒரு யாகம் புரிவாய்; அதுபோது யாக குண்டத்திலே நமதருளுருவான இறைவி ஒருசிறுமியாகத் தோன்றி வருவாள். அதுவரை இவ்விடமே இருந்திடுக. யாம் கொடுத்த இப்பிறவியே யல்லாமல் வேறு பிறவி நினக்கொரு போதுமில்லை. நினக்கு மலரவனும் நிகராகா"னென்று விடை கொடுத்தருளினன்.

அது கேட்ட நிரஞ்சனன் மனைவியோடு அருள் விடைபெற்று உய்ந்தேன் உய்ந்தேனென்று, அஞ்சலித்து இறைஞ்சி ஆங்கே அமர்ந்து எம்பெருமான் அருளிய நாள் என்று வருமென்று, எண்ணிக் கொண்டிருந்தான்.

அ-வது கைலாயமடைந்தநிரஞ்சனனுக்குப்பரமனருள்புரிபடலம் முற்றியது.

---

## 9-வது நிரஞ்சனன் புவி வரு படலம்.

மறைபுணர்தருமசன்மன் மலரடி வணங்கிப் போற்றி
முறைதெரி நிரஞ்சனப் பேர்முனிவரன் மனைவி யோடு
குறைபற நிலத்து வந்து பிறந்தமை கூறு கென்று
பொறைவின மரைமான் கேட்கப் புகலுவ னனையன்மாதோ. க

கனிதரு மகிழ்ச்சி பொங்கக் காமரு சிவலோ கத்துத்
தனிவளம் பலவுந் துய்த்து ச்சாந்தனு நிரஞ்ச னப்பேர்
முனிவரன் மனைவியோடு வசிக்குநாண் முதல்வன் சொற்ற
புனிதநா ளென்று வந்து பொருந்து மென் றுய்ந்தி ருந்தான். உ

அன்னமா முனிவ னுள்ளக் கருத்தினை யமைய வோர்ந்த
முன்னவன் கருணைமூர்த்தி முழுதுல கீன்ற செல்வி
மன்னவ னொருநா ளந்த மாமுனி வரனைக் கூவி
நன்னர்நின் கருத்து முற்றப் புடவியை நண்ணு கென்றான். ந

குறையிரந் தடைந்த வானோர் கூற்றுல கடையா வண்ணங்
கறைவிட மமுதாக் கொண்ட கருணையெம் பெருமான் பாத
நறைமலர் தாழ்ந்து மண்மே னதிவள மருது வேதத்
துறையொழு குவதெந் நாடுசொற்றிட வேண்டு மின்னும். ச

தளிபல கொண்டு சார்ந்தார் தவாப்பய னன்கு மெய்த
வளிசுரந்தருளி நீவா ழுந்தனு டெதுசிந் நாளிற்
களியுற நினைத்த வெல்லாங் கவலற விருப்பிற் கூட்டு
மொளிவளர் திருநா டெந்நா டுரைத்தருள் செய்க வென்றான். ரு

பாரபர னதனைக் கேட்டுப் பனவநீ வினைய வாறே
திராவிட நாடுமுற்றுஞ் சிறந்தன வவற்றி னுள்ளுந்
தராதலம் புகழ்காவேரித் தண்புன னாடுமேலா
மாரவணி யெமக்கு மிக்க விருப்பமுண் டந்த நாட்டே. சு

அருமறை முழக்கம் விம்ம வரவமும் புலியும் போற்றத்
திருநட மொருநா மென்றுஞ் செய்தரு டலமுமுண்டா
லிருவரு மடங்க மேன்மே லெழுபெரு வெள்ளத் தாடு
பொருவருந் தோணி யுய்த்தியாம் போற்றிய தலமு முண்டால். எ

மலப்பிணி யொழித்த லோடு வாதமுற் பிணியு நீங்கச்
சலக்சமி றாணி யாய்நாங் கலந்தமர் பதியு முண்டால்
விலக்கருங் கோடுவேண்டி வெள்ளைமால்யானைபோற்ற
நலக்கநன் கருளியோர்நா நயந்தமர் பதியுமுண்டால். அ

வாரண முகத்தினானை மாட்டிவா ரணமு கத்தா
ஞாணம் புகன்று போற்ற நாமமர் தலமு முண்டாற்
காரணங் கடந்த நம்மைக் கனிந்துபன் மறையும் போற்றுந்
தோரண மாடவீதித் தூயயத் தலமு முண்டால். கூ

பொருமத கரியுரித்தும் புகைந்தெழு காலற் செற்றுந்
திருகயன் சென்னி கொய்துஞ் சிறுவிதி யுரன ழித்து
மொருசலந் தரனை மாய்த்து முறுமத னுடல்பொ டித்தும்
பெருகநாம் வீரங் கொண்டு பிறங்குபஃ றலமு முண்டால். ய

மாயவன் மார்ப நின்றும் வானுல கடைந்து பின்றைப்
பாயநாம் பலரும் போற்றப் பதிந்தமர் தலமு முண்டான்
மேயபல் லுயிரு மோர்ந்து வீடுற நம்மை நாமே
யாயபே ரருளி னர்ச்சித் தமர்தரு தலமமு முண்டால். கக

ஒன்பது கோடிசித்த ருவந்தன ரேத்த வின்று
மன்பது பூண்டோர் வாழ்த்த வமர்பெருந் தலமு முண்டா
னன்பது மத்தோன் காண நம்முடி வளைத்தல் செய்யத்
துன்பது கடிந்தொ ருத்தி தொழுதமாத் தலமு முண்டால். கஉ

நப்புற்றெவ் வுலகு முய்ய விடபத்து நயக்கு நாமோர்
கும்பத்துத் தோற்றஞ் செய்து குலவுறு தலமு முண்டால்
வெப்புற்ற பிறவி மாய்த்து மேதக வனைத்து மெய்த
வம்பொற்பி னந்தி நம்மை யருச்சித்த தலமு முண்டால். கங

ஒருமகள் பொருட்டு நாமோ ரன்னையா யுதயஞ் செய்து
பருவரலொழித்து மேவும் பண்புகூர் தலமு முண்டால்
வெருவருங் கரிசி லந்தி யொன்றுடென் றிகவி மேன்மேற்
பொருவரு மன்பி னெம்மைப் போற்றிய தலமு முண்டால். கச

எண்ணருந் தலங்க ளின்னு முள்ளன வென்று மாசு
நண்ணரு மடியார் பல்லோர் நயந்தனர் வசியா நிற்பர்
கண்ணரும் பெருநீர்ப் பொன்னி கால்பல கொண்டி யங்கு
மண்ணரு மந்நா டொப்ப தெங்குள தாயுங் காலே. கரு

அன்னநீர் நாட்டை நீங்கின் மனையொடு மடைதி யென்றான்
முன்னவ னுவகை பூத்து முளரியஞ் சரணந் தாழ்ந்து
பன்னுடு நந்தி யாதிக் கணங்களைப் பரிந்து போற்றி
யென்னரு முவப்புச் செய்ய விருஞ்சிவ லோக நீத்தான். கசு

நலமலி சோழ நாட்டிற் காவிரித் தீரநண்ணிக்
குலமலி யோரூர்க் கற்க கோத்திரத் தலைமை சான்ற
புலமலி யொருபார்ப் பானு மனைவியும் புரித வத்தா
னிலமலி புகழ வர்க்கு நிரஞ்சனன் புதல்வ னானான். கஎ

பாதனென் றொருபேர் பெற்றுப் பசும்பிறை போல்வ ளர்ந்து
விரதநன் னூலும் பூண்டு மிக்கநூ லனைத்துங் கற்றுச்
சாதமென் றெவரும் போற்றுந் தத்துவப் பொருளு மோர்ந்து
வாதநம் முதல்வன் பாதம் வழிபடு திறத்தின் வாழ்ந்தான். கஅ

மற்றவன் மனைவி யாய நிரஞ்சனை யென்னு மாதுங்
கற்றவர் புகழவ் வூருக் கணித்தொரு காம ரூரில்
கொற்றவே தியர்கு லத்திற் குலவொரு வன்பாற் றோன்றிச்
சுற்றமே முற்று வப்பச் சுபத்திரை யெனும்பேர் பூண்டு. க௯

தளிரிளங் கொடியோ தெய்வத் தருவிளங்கொம்போ வெந்த
மிளிர்மணிச் சுடரோ தூண்டா விளக்கமோ விளங்கி நாளுங்
குளிர்சுவை யமுதோ தோலாக்கோமளக் கொழுந்தோ வென்று
நளிர்கட லுலக மேத்தி நயப்புற வளர்ந்து வாழ்நாள். ௨௦

அத்தகு மடநல் லாளை யாய்புகழ்ப் பாத னென்னு
முத்தம மறையோன் முன்னை யூழ்வலிபொருத்த வேட்டு
வித்தக மகிழ்ச்சி யெய்தி மேவுநாள் வான நாடர்
சித்தமு ளுவப்ப யாகஞ் செய்தவர் கடன்றீர்ப் பானல். ௨க

அதிர்புனற் பொன்னி யாற்றி னகன்கரைப் பன்ன சாலை
யெதிரற வொன்று செய்தாங் கெழிற்சுபத் திரையினோடு
முதிர்புகழ்ப் பரத னென்பான் முனிவர வமர்ந்தோர் குட்டன்
பிதிரர்தங் கடன்றீர் பாக்குப் பெறமுயன் றிருந்தான் மாதோ. உஉ

சிவபுர முனியுங் கற்பிற் செல்வியுஞ் சென்னி நாட்டுத்
தவமறைப் பரதன் வண்ணஞ் சார்சுபத் திரையாய் வந்த
விவர்புகழ்க் காதை சொற்று மெறிதிரைப் பொன்னித்தென்பா
லவமிலோர் தானந் தான்றே ரழுந்தூரா கியது சொல்வாம். உங

க-வது நிரஞ்சனன்புவிவருபடலம் முற்றியது.

ஆகப் படலம் க-க்குத் திருவிருத்தம் கஅஎ.

---

## க வது நிரஞ்சனன் புவி வரு படலம்.

வினமறை நிரஞ்சனன் புவி வந்த வரலாற்றைக் கூறவேண்டு மென்று கேட்கத் தருமசன்மன் கூறுவானாயினன்.

சிவலோகத்திலே பேரின்பந்துய்த்து மனைவியோடு நிரஞ்சனன் வாழ்கின்ற காலத்திலே ஒருநாள் இறைவனருளிய போதையே நோக்கிக் கொண்டிருந்த நிரஞ்சனனைச் சிவபிரான் அழைத்து அருள் நோக்களித்து "நின் கருத்து முடிந்திட நிலத்தினை எய்துக" வென வருளினன். எம்பெருமான் அருளிப் பாட்டைப் பெற்று இறைவன் றிருவடியில் விழுந்து வணங்கிக் கண்ணுதற் கடவுளே! முறை நெறிகள் முற்றும் மாறாது வழங்கும் நாடு எந்நாடு? அன்றியும் தேவரீர் பல திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருந்து எய்தினோ ரெவர்க்கும் அருள் புரிவதும், நினைத்தனவற்றை நினைத்தபடியே கூட்டுவது மாகிய நாடு எந்நாடு? அதை அருளத் திருவுளம் பற்ற வேண்டு மென்றான். எப்பொருளிலும் மேலான சிவபிரான் அதனைக்கேட்டு அந்தணனே! "நீ வினவிய வெல்லாம் பொருந்தியது திராவிட நாடு முழுதுமே. அதனுள் சிறந்தது காவிரி சூழ்ந்த செழும்புனல் நாடே. எமக்கு விருப்ப மானதும் அந்நாடே. அதில் நாம் பாம்பனும், புலியனும் பரிந்து போற்றத் திருநடனம் என்னான்றும் செய்யத்தக்க திருக்கோயிற் றிருத்தலமும் சிறந்துளது. ஆங்கே அயனும், மாலும் அடங்க மேன்மேல் எழுகின்ற வெள்ளத்தில் தோணி செலு

த்திக் காக்கின்ற திருத்தோணி புரமுஞ் சிறந்துதோன்றும். மல நோய் மாற்றுவதோடு உடல் பிணிபோக்க உயர்ந்த மருத்துவனாத ஞகி எழுந்தருளிய தலமும் ஆங்குண்டு. யாம் வெள்ளை யானை போற்ற நின்ற திருவெண்காடும் உண்டு. மேலும் கணபதி பூசித்த திருச்செங்காட்டாங்குடி, வேதத்தால் போற்றப் பெற்ற திருமறைக் காடு, யானையை யுரித்த மா வழுவூர், காமனைக் கடந்த குறுக்கை, காலனைக் கடந்த திருக்கடவூர் முதலான நமது வீரங் காட்டிய பல தலங்களும், பற்பல அருட்டிறங்காட்டிய பலநூறுதலங்களு முள வாம். அந்நாட்டில் நமது தொண்டர்கள் பலர் நயந்து வாழ்வார். அந்நாட்டிற்கு ஒப்பதொரு நாடு ஓரிடத்து மில்லை. அந்நாட்டிலே நின் மனைவியோடு பிறந்து அமர்வாய்" என்று திருவாய் மலர்ந் தருளினர். அந்நிரஞ்சனன் அப்பெருமான் அடிக் கமலத்தில் அடி யற்ற மரம்போல் விழுந்து வணங்கி விடை பெற்றுக்கொண்டு நந்தி கணங்களைத் தொழுது அச்சிவலோகத்தை விடுத்து நீங்கினன்.

பின்னர்ச் சோழநாட்டிலே காவிரிக் கரையிலே கற்க கோத்தி ரத்திலே தலைமையுற்ற ஒரு அந்தணனும், அவன் மனைவியுஞ் செய்த அருந்தவத்தால் அவர்களுக்கு அருமைப் புதல்வனாகத் தோன்றிப் பாதனென்ற பேர் பெற்றுப் பசும் பிறை போல் வளர்ந்தனன்.

அப்பாதன் உரிய பருவத்திலே பூணூல் பூண்டு பலகலைகளையுங் கற்றுத்தத்துவமாகிய உண்மைப் பொருளையும் உணர்ந்து இறைவன் அடித் தொண்டிலேயே அமர்ந்தனன். அவன் மனைவி நிரஞ்சனை யென்பாளும் அந்நகர்க்கணித்தான ஒரு நகரில் சுபத்திரை யென் னுந் தூய பேர் பூண்டு, தொழுவாரெல்லாந் தொழுது போற்ற வளர்ந்தனள். அச் சுபத்திரையைப் பாதன் விதிப்படி மணஞ் செய்து விளங்கு நாளிலே ஒருநாள் வேள்விகள் விருப்பிச் செய் பவனாய் அக்காவிரிக்குத் தென்கரையில் பன்னசாலை யொன்று இயற் றிக் கொண்டு பிதிர்க்கடன் தீர்க்கப் புதல்வனைக் குறித்துப் பெரிதும் முயன்றிருந்தனன்.

நிரஞ்சனன் புவி வரு படலம் முற்றியது.

---

## க௦-வது தோழந்தூர்ப்படலம்.

ஏக நாயக னிறைவிபைப் பார்த்தொரு குடஞ்சூட்
டாக வென்றதை யேற்றன ளாயதென் னென்று
மேக வார்குழல் வினமமை கேட்டிட மிக்க
பாக மார்மனத் தருமசன் மன்பகர்ந் திடுவான். க

பரதன் மாதவச் சுபத்திரை மாதொடு பயிலும்
விரத மாதவப் பெருமையு மேதகு பொன்னி
வரத மார்திரு நாடுசெய் மாதவத் திறமுஞ்
சாத மாகமேம் படுதலே யுணர்ந்தனன் றலைவன். உ

வாள டுத்தகண் மடவால் கோவுரு வாகு
நாள டுத்தடுதன் றுணர்ந்தொரு நந்திபை நோக்கத்
தாள டுத்தமர்ந் திறைஞ்சுபு தம்பிரா னுள்ளக்
கோள டுத்தமை தெரிந்தொரு பரிபதேர் கொணர்ந்தான். ௩

பரவு தேர்வா வுமையவ டிருமுகம் பார்த்து
விரவு போரு ளாளனித் தேரிடை மேவி
யிரவு சேர்புன னாட்டகங் குறுகென வுரைத்தான்
கரவு தீர்தாப் பணிந்தெழுந் தனண்மலைக் கன்னி. ௪

பிரித ராவிடை பெற்றனள் பிரிவதற் கஞ்சி
யிரித ராவணிந் திதைமுத லோருட னெய்தப்
புரித ராமலர் மகளிர்முன் னோர்களும் பொருந்தச்
சரித ராவொரு தேர் மிசை யிவர்ந்தன டலைவி ௫

வளைந ரன்றன குடமுழவிசைத்தன வயிரின்
கிளைந ரன்றன நரப்பொலி யெழுந்தன கிளையின்
றுளைந ரன்றன பற்பல வியங்களுந் துவைக்கு
முளைந ரன்றன வெருகடன் முழங்கொலி பொதுங்க ௬

முத்த வெண்குடை நிழன்றன வொலியல்கண் மொய்த்த
வொத்த சாமரை துள்ளின தோரண முறந்த
நத்த மார்மணி யாலவட் டம்பல நடந்த
சுத்த வாசமென் காலெழு சிவிறிக டொடர்ந்து ௭

ஆடினார்சில ராடலோ டரகர வென்று
பாடி னார்சிலர் பாவி னார்சிலர் பருவரலற்
றோடி னார்சில ருரோமத்தின் சிலிப்பினோ டுடம்பு
மூடி னார்சிலர் மூழ்கி னார்சில ரின்ப முந்நீர் அ

வெம்மை தீர்த்துயிர்க் கினிதருள் விளங்கிழை வந்தாள்
செம்மை சேருநட் செல்விவந் தாளுல குயிர்த்த
வம்மையாகிய பிராட்டிவந் தாள்சர ணடைந்தார்
தம்மை யாளிவந் தாளெனச் சின்னங்கள் சாற்ற கூ

வான நாடர்கள் பொழிகுளிர் மலர்மழை மலிய
வான பல்சரா சரங்களுங் குதுகல மடையத்
தான மென்பன பலவுள நிலமிகத் தழையக்
கான வார்குழற் செல்விதேர் நடந்தது ககனம் ௰

எதி ரடைந்தவெற் பிறைக்குமே னைக்குமுன் னெய்து
மதிர்வ கன்றவ ருறையுளிற் புகும்படி யருளிப்
பிதிர்த லென்பதில் பல்வகைத் தானமும் பெயர்ந்து
கதிரி ளங்கொடி யடைந்தனள் கருதுநீர் நாட்டைத் கக

திரைவ ளம்பொலி காவிரித் திருநதித் தென்பா
லுரைவ ளம்பொலி தருமொரு தானநே ருறலும்
வரைவ ளம்பொலி யிரதங்கீ ழிழிந்தது வல்லே
விரைவ ளம்பொலி மண்ணினுட் கரந்தது வியப்பத் க௨

தன்னை யெண்ணுநர் பிறவிபோற் றரையகத் தொளியான்
மின்னை வென்றதே ரழுந்திய வியத்தரு தான
நன்ன யம்பொலி தோழுந் தூமொன நவில்வா
ரன்னை யங்ஙனே வியந்தொரு கோவுரு வானாள் கங

எண்ணி லாவறம் வளர்ப்பவள் கோவுரு வெய்த
வெண்ணி லாநகை யனிந்திதை முதலியோர் விழையும்
பண்ணிலா மொழித் திருமகண் முதலியோர் பலரு
மண்ணி லாவுறு கோவுறு வாயினர் மாதோ க௪

பிறையி ரண்டெதி ருற்றெனப் பிறங்குறு கோடுங்
குறைபி லாப்பெருங் குடம்புரை செருத்தலுங் கோல
நிறையும் வாண்முக முப்பிற வுறுப்புநே ரெய்தி
மறையு மோர்தரா வொருபசுப் பொலிந்தது மன்னே கரு

கருடர் வித்தியா தரர்சித்தர் சாரணர் கவின்கிம்
புருட ராதியர் மங்கைய ராவொடு போற்று
முருடர் பாற்கரந் தெண்ணுவா ரனாற முநக்கி
ய நடர் மாதியோ ரற்புதப் பசுப்பொலிந்தன்றே கசா

தொக்க தெய்வமங் கையரனும் பசுப்பல சூழப்
புக்க வாருயிர்க் கின்பருள் பசுநடுப் பொலிதன்
மிக்க தாரகைக் கணம்பல புரமெலா மிடைய
நக்க வொண்மதி நடுப்பொலி தருதிற நயக்கும் கஎ

பல்ல வாகிய வானவப் பசுவெலாம் பாவப்
பல்ல வாகிய வறந்தரு பசுப்பொலி தலினாற்
பல்ல வாயவப் பசுமுத லென்னப்பட் டொன்றாய்ப்
பல்ல வாகிய சத்தன்பேர் சத்தியும் பரித்தாள் கஅ

மாய னப்பொழு திறையவ னாணையை மதித்துத்
தூய னாயினே னென்றோர்கோ பாலனாய்த் தொழுதான்
றேய னாகியெந் நாளினு மிடைத்தொழில் செய்வோ
னய னாகிவந் தானென லதிசய மாமோ ககூ

பூத ரத்துமுன் வருபசுப் புரப்பது குறித்துச்
சீத ரப்பிரா னாபனாய் வருதலுஞ் செறிந்த
வாத ரத்தினிந் திரன்முத லளவில் வானவரு
மாத ரத்தகோ பாலரா யவன்பணி மகிழ்ந்தார் உ0

ஆணு ருக்கொண்ட தெய்வங்க ளாயராய்ப் பெண்மைப்
பேணு ருக்கொண்ட தெய்வங்கள் பசுக்களாய்ப் பிறங்கக்
கோணு ருக்கொண்ட வெண்பிறைச் செஞ்சடைக் கூத்த
னேணு ருக்கொண்ட சொன்னினைந் தேற்றுரு வியைந்தான் உக

சடையைய மான்மழு வைப்பிறி தைத்தவிர்த் தடைந்த
விடையை நோக்கி யவ்வலைப்பசு ஞானமே வுதலா
லுடையை வந்தனை யோவென வந்தனே யுனுற்ற
நடையை மேற்கொடு பயின்றுவப் பித்தது நம்மான் உஉ

விடையு கைத்தருள் விடையினைக் கண்டமே தினியோ
ரிடைவ ளத்துவெப் புவனத்து மிஃதொப்ப தின்று
மிடைதி றற்பெரும் பசுவென விள்ளுவ ரொப்புப்
புடைவ லிப்பர மான்மாவென் றுணர்ந்தனர் போலும் உந

புவிகை யாதவர் காண்டொறும் பசுவெனப் புகல்வார்
கவிகை வாய்ந்தெமர் பயந்தவிர்த் தருள்செயுங் கைக்கட்
செவிகை யாதவன் றிருவுருக் காண்டொறுஞ் சிதையா
வவிகை யாம்பசு ஞானமேலிடலதி சயமோ உச

அன்று சத்திதன் றுளுண ராண்கிடி யாக
நன்று பாறரும் பெண்கிடி நம்பிரானனு
னின்று சத்தியோர் பெண்பசு வாகநன் கியறுன்
வென்று மேம்படுமோண் பசுவாயினன் வியப்பே உரு

அந்த நாளொரு கன்றுக்காப் பெண்பசு வானு
னிந்த நாளொரு பசுவிற்காப் பெண்பசு விபைந்தா
னெந்தை யின்னதாய் வருசுவ னின்னனு யென்றும்
வந்தி டானென வழக்கொடு மாற்றமொன் றின்றே உசு

உலக மெங்கணு முளபசுப் பலபதி யொன்றென்
றிலக வுண்மைநூ லுணர்ந்தவர் கூறுத விளையபே
திலக வாணுத லுமைமுதற் பல்பசுச் செறிவுண்
ணலக மேற்றவ னொருவிடை யாய்நயந் தமையால் உஎ

தோமுழுந்திய விடமொரு தீர்த்தமா கியதந்
நீரமுழுந்திமே லெழுபவர் நிரயமென் றுரைக்கும்
பாரமுழுந்திடார் சிவபுரம் படர்ந்துபே ரின்பக்
கூரமுழுந்தியெஞ் ஞான்றும் வாழ்ந் திருப்பாற் குலவி உஅ

அந்தத் தீர்த்தத்தின் றெண்டிசை யடைந்ததுமாறுக்
கந்தப் பூங்குழ லுமை யெனுங் காமருபெற்ற
முந்தக் கண்டது முகுந்தனுதி யரினுங் காணு
நந்தக் கோன்பிரி யாதமர் நற்குறி யொன்று ௨௯

கண்ட போதினன் பூற்றெழூஉக் கரைபுரண் டோடக்
கொண்ட காதலின் மடிசுரந் தளவில்பால் கோப்ப
விண்ட தாமெனக் கனிவொடு முலைக்கணல் விடுத்தாங்
கண்டர் தம்பிரான் றிருமுடி யாட்டிய தம்மா ௩௰

அண்ணன் மாமுடிப் பொழிந்தபா லகிலத்தி னெல்லா
நண்ண லாலெலா மவனுரு வென்பது நயந்தாம்
விண்ண லார்புக ழிலிங்கமப் பானடு மேவல்
கண்ண லார்ந்தபாற் கடனடுப் புற்புதங் கடுக்கும் ௩௧

ஒழுகு வெள்ளிய பாற்பெருந் தாரையி னொருங்கு
முழுது மெம்பிரான் றேற்றமெண் ணரியநாண் முயன்று
புழுது வார்குழற் கங்கையாள் பெருந்தவம் புரிந்தாங்
செழுகு லாவின்மெய் புதைபடத் தழுவிய தேய்க்கும் ௩௨

இந்த வாறுபா லாட்டியாங் கியன்றதா னெழில்கூ
ரந்த மாதலம் வசித்தந்தத் தீர்த்தநன் காடிச்
சத்த மாரந்த விலிங்கத்தைத் தரிசிக்குந் தகையோர்
கந்த வார்பொழில் சூழ்சிவ லோகத்தைக் கலப்பார் ௩௩

இடைய ளூதுபால் பொழிந்துளத் துவகையுற் றேழு
விடையும் வென்றமால் விடையுகைத் தருளுமோர் விடையோர்
புடைவி ராமெழிற் பெற்றமாங் கமர்ந்தது போற்றி
யடையுங் காவல்செய் தமர்ந்தன ரரிமுத லமரர் ௩௪

நெடிய னூதிய தொறுவர்க ணிரையெலா மங்கோர்
படியி லால்பொலி சூழலே பகர்தொழு வமதாக்
கடிதுசேர்த் துக்காத் தனரந்தக் கண்டொழு வாலங்
குடியெனப் பெயர் பெற்றது கூறுவா ரின்னும் ௩௫

சிறந்த காவிரித் தென்றொரு தானத்திற் கிருஞ்சி
ருறந்த தேரழுந் தூரெனும் பெயர்வந்த துரைத்தா
மறந்த வாதமை மற்றொரு தானமா ரஞர்நோய்
பறந்த கோழம்ப மெனும்பெயர் பெற்றதும் பகர்வாம் ௩௯

௧௦-வது தேரழுந்தூர்ப்படலம் முற்றிப்பது.
ஆகப் படலம் எ-க்குத் திருவிருத்தம் ௩௫௪

---

## ௧௦-வது தேரழுந்தூர்ப்படலம்.

சிவபிரானே, பாதமா முனிவன் தன் மனைவியோடு செய்து வரும் அரிய பெரிய தவங்களுந், தமிழ்நாடு செய்த தவமும் உண்மையாக உயர்ந்து நிற்றலைத் திருவுளத்துக்கொண்டு இதுவே உமையாள் பசு ஆவதற்கு இசைந்த காலமென எண்ணித் தொண்டர் தலைவனாகிய நந்தியை நயந்து நோக்கி யருளினர். அதுகண்ட நந்தியம்பெருமான் திருவுளக் குறிப்பை உணர்ந்து ஒரு பெருந்தேர் கொண்டுவந்து நிறுத்தினன்.

அத்தேர் வர இறைவனார் இமையவளை நோக்கியருளி "இத் தேரில் ஏறிப்புனல்நாடாகிய தமிழ்நாடுபுகுவா" யென்றருளினன். மலைமகள் அப் பெருமானிடம் பிரியாவிடைபெற்று அணிந்திதை, திருமகள், கலைமகள் முதலிய தோழியர்கள் உடன்வர அத்தேரங்கை யேறினள். அப்போது குடமுழா, கொம்பு, வீணை, யாழ் முதலிய வாச்சியங்கள் முழங்கின முத்துக்குடைகள் முழுநிழலைச் செய்தன வெண்சாமரை பணிமாறின. தோரணம் ஒத்துநின்றன. ஆலவட்டம் பல நடந்தன. சிவிறிகள் செவ்வனே வீசப்பெற்றன. சிலர் ஆடினர் சிலர் பாடினர். சிலர் இன்பக்கடலில் இறங்கினர் சிலர் மெய்ப்புளகத்துடன் விளங்கினர். சிலர் துதித்தனர். சிலர் ஓடினர் "உயிர்க்கின்பம் விளைக்கும் விளங்கிழைவந்தாள், அருட்செல்விவந்தாள், அடைக்கலம் புகுந்தோரை அருளிக்காக்கும் அம்மை வந்தா" ளென்று திருச்சின்னம் செவ்வனே ஒலிக்க, வான்நாடு மலர்மழைபொழிய, நிற்பன நடப்பன வாகிய உயிர்கள் குதூகலித்திட, தமிழ்நாடு தழைத்திடப் பிராட்டியார் ஏறிய பெருந்தேர் நடந்தது.

அத்தேர் பலதலங்களையும் கடந்து காவிரிக்குத் தென்கரையில் ஓரிடப்வா அத்தேர் பூமியிலழுந்திடவும், அவ்விடம் தேரழுந்தூராயது. அன்னையும் அவ்விடத்திலேயே அருமைப் பசு ஆயினள். ஆகவே அம்மையாருடன் வந்த அனிந்திதை முதலியவர்களும், திருமகள், அவள மருமகள் முதலிய தேவமங்கையர்களும் பசுவாகிச் சூழ்ந்தனர். அப்பசுதான் இரண்டு பிறைச்சந்திரனைப்போன்ற கொம்புகளும், குறையில்லாக் குடம்போன்ற மடியும், அழகியமுகமும், பிற உறுப்புக்களுங் கொண்டு வேதத்தாலும் விளங்க அறிய வொண்ணாதத் ய் விளங்கிற்று. இன்னும் கருடன் முதலிய தேவர்மங்கையர்களும் அங்ஙனமே பசுவாகிச் சூழ்ந்தனர். வானமீன்களின் நடுவில் திங்கள் போல் அப் பசுக்களின் நடுவில் அம்மையாகிய பசு விளங்குவதைக் கண்டு யாவரும் அதிசயித்து மகிழ்ந்தனர். இதனால் அப்பசுக்களுக்கு அம்மை பதியாகி இறைவனைப்போல் பசுபதி என்னும் பெயரும் பெற்றுநின்றனள்.

அப்போது எம்பெருமானாகிய இறைவனுடைய கட்டளைப்படியே மாயனுங்கோவலனாய் 'நான் இன்று தூயவனானேன்' என்று வந்து தொழுதான். எந்நாளும் இடைத்தொழிலாகிய காத்தலைச் செய்கிற அம்மாயன் ஆயனானது ஒரு வியப்பாகுமா? இவ்வாறு திருமால் இடையனாய் வரவே இந்திரன் முதலானவர்கள் எல்லோரும் இடையர்களாகி அத்திருமாலுக்கு ஏவல் செய்ய வந்தனர்.

இவ்வாறு ஆண்வடிவுள்ள தேவர்கள் அனைவரும் பசுமேய்ப்பவர்களாகப் பெண்வடிவுள்ள தேவர்கள் அனைவரும் பசுக்களாயிட எம்பெருமானான சிவபெருமான் அம்மைக்கருளியபடியை நினைந்து விடை வடிவமெடுத்து விளங்கினன்.

அப்போது அம்மையான பசு அறிவு பெறலால் "விடையை நோக்கி உடையாய் வந்தனையோ" வென்று வந்தனை செய்து மகிழ்வித்தது. இதைக் கண்ட மேதினியோர் அனைவரும் "இதை ஒத்த விடைஎங்குமில்லை" யென வியந்தனர். தேரழுந்திய இடம் ஒருதிருக்குளமாயிற்று. அதில் மூழ்குவோர் எவரும் பாவத்தால் நரகிடை மூழ்கார். சிவநகரிற்சென்று எஞ்ஞான்றும் இன்புற்று வாழ்ந்திருப்பர். அந்தத்திருக்குளத்தின் தென்பாகத்தில் உமையம்மையாகிய

பசு சென்று நம் பெருமானாகிய சிவபிரான் பிரியாது அமர்ந்தருளும் சிவக்குறி (லிங்கம்) ஒன்று கண்டது அப்போது அப்பசு ஊற்றெழுந் தோடக்கொண்ட காதலால் மடி சுரந்து அளவில் பால் பொழிந்து அப்பெருமானை அருமையாக நீராட்டியது. இவ்வாறு எம்பெருமானை நீராட்டிப் பூசித்து உலவிய படியால் இத்தலத்தில் இத் திருக்குளத்தில் நீராடி, இங்கு எழுந்தருளிய சிவபெருமானைக் கண்ணுற்றவர் சிவலோகத்தைக் கலந்து மகிழ்வார்.

விடைவடிவு எடுத்து வந்த சிவபெருமான் ஒருபுடையே கலக்கப் பசுவடிவு எடுத்துள்ள எம்பெருமாட்டி அப் பெருமானைத் துதித்துக்கொண்டே ஆங்கு ஓர்புடையே அமர்ந்தனள். அப்பசுவைக்காக்க வந்த திருமால் முதலான அமரர் அனைவரும் காவல் செய்து அமர்ந்தனர். திருமால் முதலிய இடையர்கள் ஆங்கு ஆலமரஞ் சூழ்ந்துள்ள தான ஓரிடத்தை அப்பசுவினுக்குத் தொழுவமென்று சொல்லப்படும் கொட்டிலாகக்கொண்டு அப் பசுவைக்காத்தபடியால் அந்த இடத்தைத் தோழுவாலங்குடியென்று இன்றுங் கூறுவர்என்க.

கo-வது தேரழுந்தூர்ப்படலம் முற்றியது.

---

## கக-வது திருக்கோழம்பப் படலம்.

தெங்கு நீள்பொழிற் றேரழுந் தூர்நின்று
மெங்கு மேவிய தேமுல கீன்றவான்
பொங்கு மார்வம் புகலெனும் பன்னிச்சூத்
தங்கு காதற் றரும சன்மன் சொல்வான். க

கருதி யாரு மிறைஞ்சுங் கருணையான்
சுருதி யேத்தத் தொடரும்பல் லஃவொடு
மொருதி வாவைய முட்கொண்ட வூர்நின்று
நிருதி யாசை நினைந்து நடந்ததே.

தேங்கு சூதமுந் தித்திக்கும் பாகலு
மோங்கு தென்னையும் புன்னையு மொண்மலர்க்
கோங்கு மாதவி யுங்கொடி மௌவலும்
வீங்கு சாலென்று கண்டத்தின் மேவிற்றே.

ஆனைய கானத் தருமறை நாடொணு
முனைய சூற்படை முக்கணர் நீங்குறு
நினைய வாங்குறி யொன்று நிலாயது
துனைய நோக்கித் தொடர்ந்தது பச்சையான். ௪

கண்டு காதல் கரையிகந் தோங்கிட
டண்டு தீம்பான் மழைபொழிந் தாட்டிய
தண்டு கானத் தருக்களப் பாலடி
யுண்டு மேயின வொண்சிவ லோகமே. ௫

கொடியும் புல்லு மவ்வாறே குலவின
தடியு மாக்களு முண்டு சதுமறை
முடியுந் தோர முதலுல குற்றன
படியு முண்டுபர் பான்மை படைத்ததே. ௬

வான நீர்பொழிந் தாலென வண்சுவை
யான பால்பச்சை யான்பொழி காலையத்
தான மாடலொ னுன்னியத் தண்பசு
ஞான மாற்றின னெம்பெரு மானரோ. ௭

ஞான நீங்க விஞ்ஞாலப் பசுநிக
ரான வான்பய மாட்டிப் பெயர்பொழு
தான மேது மிலான்முடி யோர்பதந்
தான மூந்துபுதைத்திட வைத்ததே. ௮

நாலெடுத்து நாவலரும் பெற்றம்பின்
காலெ டுத்து முடிவைத்த காலையின்
மேலெ டுத்தது மிக்கசெய்ந் தோருள
மாலெ டுத்தது மாற்றின னெந்தையே. ௯

பண்டை ஞானம் பாவ முடிச்செந்நீர்
கண்டை யோவென வுள்ளங் கலங்கியே
தொண்டை யாதரிப் பாலெதிர் தோன்றுமா
னெண்டை யாபாற் குற்றதோ ஈதென்றும். ௰

என்ன காரியஞ் செய்தனம் யாமென்று
மென்ன வாற்றுறின் மாறு மிதுவென்று
மென்ன வேலையிங்கெய்தின மாலென்று
மென்ன சீர்படைத் தாமென்று மெண்ணுமே. கக

எங்கும் வீழு மெழுநெட் டுயிர்ப்புற
வீங்கு மாறு விடுங்கத றுற்றிடுந்
தாங்கு மாவி தளரு மிருவிழி
யோங்கு முத்த முகுக்கு முலருமே. கஉ

சுடுது யர்க்கடல் வீழ்ந்து சுழன்றநோய்
படும தற்கு மகிழ்ச்சி பாவுறக்
கடுமி டற்றுக் கடவுட் பிரான்வெளி
நெடுமு கட்டு மறைந்துநின் றோதுவான். கங

மாது கேட்டி நின் வண்குழம் புத்தழும்
போது நாமுடி யேற்பதை யுன்னியே
தீதுதீரு நின்ஞானமுன் றீர்த்தனம்
பேது தீர்தரப் பின்பு புகுத்திநும். கச

பரிக்கு மும்பின் றழுப்பும் பசுவொடு
சரிக்குங் கன்றின் குழம்பின் றழும்புமு
றரிக்கும் பூசைப்பல் லார்தழும் பும்பகை
யிரிக்குந் தண்டத் தழும்பு மிருக்குமே. கரு

வெட்டு வாள்செய் வடுவும் விரிசெருப்
பொட்டு தாள்செய் வடுவு மொருசிலை
கிட்டு தன்மைக் கிளர்வடுவும் பல்கற்
பட்டுமேய வடுவும் பரித்துளோம். கசா

முற்பு றத்துன் முலைச்சுவ டேற்றுளோம்
பிற்பு றத்துப் பிரப்புச்சுவடுளோம்
வற்பு றத்துநின் வண்குழம் புச்சுவ
டற்புறக் கொண்ட தன்றிவே றில்லையால். கஎ

மன்னு நின்குழம் புற்றமை மாட்சியான்
மின்னு மிந்த மிளிர்தலங் கோழம்ப
மென்னு நாமத்தி னென்றும் விளங்கிடுந்
துன்னு மீங்குற் றுளோர்க்குச் சுபமெலாம். ௧௮

என்று கூறிய வார்த்தை யிருஞ்செவி
சென்று சேரத் தெளிந்து திகழ்ந்தது
நன்று நன்று நம்மான்விளை யாட்டென
வன்று கொண்ட வுவப்பிற் களவின்றே. ௧௯

பின்னு நம்பெரு மான் பிறைச் சென்னிமேன்
மன்னுந் தீம்பான் மழைபொழிந் தாட்டியே
பன்னு தெய்வப் பசுக்கள் பலவொடு
முன்னு மங்கு முனிவின் றமர்ந்ததே. ௨௰

குணநி ரம்பிய கோழம்பத் தீசனை
மணநி ரம்பிய மாமலர்த் தூய்த்தொழுங்
குணநி ரம்பிய கொள்கையர் தாஞ்சிவ
மணநி ரம்பிய வாழ்வுற் றிருப்பரே. ௨௧

நம்பன் மேவொரு தால நயக்குங்கோ
ழம்ப மாய தறைந்தன மோர்வன
மும்ப ரேத்துங்கோ முத்தியென் றோர்பெய
ரிம்ப ரேத்த வியைந்தது கூறுவாம். ௨௨

௧௧-வது திருக்கோழம்பப்படலம் முற்றியது.

ஆகப் படலம் ௧௧-க்குத் திருவிருத்தம் ௪௪௫.

---

## ௧௧-வது திருக்கோழம்பப்படலம்.

அப் பசுவானது தோழூந்தூரினின்றும், எங்குச் சென்றது என்று வினமுனை கேட்க, தருமசன்மன் சொல்லுவானாயினன். அப் பசுவானது ஒருநாள் தேரழூந்தூரினின்றும் நிருதி திசை நினைந்து கொண்டுபோயிற்று. ஆங்கும் மாங்கள் செறிந்தகாடு ஒன்று கண்டு அதில் தங்கியது. அங்கே சிவலிங்கம் ஒன்று கண்டு அன்பு பெருக

மழைபோல் பாலைப் பொழிந்து எம்பெருமான் திருமேனி குளிர ஆட்டியது. அதுபோது சிவபிரான் ஆடல் ஒன்று நிகழ்த்தத்திருவுளங்கொண்டு அப் பசுவுக்கு உள்ள ஞானத்தை மாற்றியருளினன். அப் பசுவும் இவ்வுலகப் பசுவைப்போல் பாலைப்பொழிந்து செல்லும்போது அப் பெருமான் திருமுடியில் அழுந்தக்கால் ஒன்றைவைத்து நடந்தது. எம்பெருமான் அதன் அறியாமையை மாற்றியிட அது பழய ஞானம் பெற்று அருள்வடிவான எம் இறைவனுக்கு "இத்தகைய ஊறுஉண்டாயது" "என்ன வெளியில் வந்தனம்" "என்ன செய்தால் தீரும்" என்று வருந்தியது. அது நோக்கியருளிய கருணையங்கடலாகிய சிவபிரான் விண்ணில் மறைந்து பசுப்பெண்ணே! நின் குளப்பு நமது முடியில் ஏற்பது கருதியே நினது அறிவை அகற்றினோம். பின்னர் அதனைப்பெற்று முன்னுள்ள அறிவையும் தந்தனம். "நின் குளப்பின் தழும்பேற்றமையால் இத்தலம் திருக்கோழம்ப மாகுக" என்று அருளிச்செய்தனர். அவ்வருமைத் திருவாக்கை இருசெவியிற் கேட்ட அப்பசு "இதுவும் எம்பெருமான் திருவிளையாட்டுப் போலும்" என்று அகமிகமகிழ்ந்து மீட்டும் எம்பெருமானைப் பால்மிகப் பொழிந்து ஆட்டி ஆங்கு அமர்ந்தது. இத்தலத்தில் எழுந்தருளிய இறைவனைக்கண்ணுற்று மலர் கொண்டு வழிபாடு செய்பவர், சிவமாம் பெருவாழ்வு பெற்று இன்புறுவர்.

கக-வது திருக்கோழம்பப்படலம் முற்றியது.

---

## கஉ-வது கோமுத்திப்படலம்.

சந்து சூழ்தடஞ் சாரலம் பனிவரைத் தையலா கியபெற்ற
மிந்து சூழ்முடித் தழும்புறீஇக் கோழம்பத் தினிதமர்ந் ததுபின்ன
ரெந்துசூழ்ந்தெதுசெய்ததுபுகலுதி யெனவின மரைகேட்பத்
தந்து சூழ்திரு நீற்றொளி மார்புடைத் தருமசன் மன்சொல்வான். க

இந்து சேகர னமர்திருக் கோழம்பத் திருந்ததன் வடக்கெல்லை
வந்து பிப்பிலா ரணியத்துட் புகுந்துற வளைந்தபல் குழுவோடு
முந்து பற்பல வளங்களு முளங்களி முகிழ்த்திட வவட்கண்டு
நந்து மான்மியத் தலமிது வெனப்பராய் நயந்ததுபசும் பெற்றம். உ

ஆங்கு மேவிய சிவலிங்கப் பிரானெதி ரணைந்தடி யுறத்தாழ்ந்து
வீங்கு மென்முலை சுரந்துற வொழுகுபால் விட்டது முடிமீது
தேங்கு மற்றது வழிந்துநாற் புறத்தினுஞ் சென்றது பலகாதம்
பாங்கு சேர்சரா சரக்குழாம் பாற்கடற் படிந்தெனப் படிந்தன்றே ௩

பொற்ற நால்வர்வாய் வெளிப்படு தன்பெரும் புகழென வுலகீன்ற
டெற்ற நான்முலை வெளிப்படு பாலெலாம் பிறைமுடி மிசையேற்று
னுற்ற காதலி னெவ்வள வுதவினு மொருவெறுப் புறானையன்
கொற்ற வாரழ விந்தனமிடவிடக் கொளாதொழிப் பதுமுண்டோ. ௪

அளவி லூழிகள் பெய்யினும் பால்சுரந் தாட்டவல் லதுபெற்ற
மளவி லன்பினாற் சாலுமென் றொழிதரா தாடவல் லவனைய
னளவில் வேதமும் புகழுமிவ் விருவர்பா லாயதித் திறமானு
லளவி னுள்பல செல்லினு மிருவர்க்கு மமைதிதான் பிறவாதே. ௫

உண்மை யான்மனத் துத்தமர் பரசிவ னொருமகன் பரைக்கென்று
வுண்மை யாகம மோதுவர் மற்றது வாய்மையென் றுறத்தேர்ந்தா
மண்மையே யன்றிச்சேய்மையே சிவலிங்கத் தண்ணலைக் கண்டாலுங்
கண்மை நீத்தபைங் கோமுலை சுரந்துபால் கனிந்துகுத் திடலானே. ௬

## வேறு.

இறைவன்பா லுவந்தா ளிறைவியென் றெவரு மெடுத்தியம் பிடுவதி ருக்க விறைவிபா லுவந்தா, னிறைவனென் றெவரு மெடுத்தியம் பிடுவது மெழுந்த, திறைவனன் றூடப் பால்பொழி வதினே ரிணையிலா தமைகுறித் தன்றே, யிறைவியை யின்னு மொப்பிலா முலையா ளென்றிசைத் துய்யுமா லுலகம். ௭

அந்தநா ளீன்ற புனற்பெருங் கங்கை யண்ணறன் றிருமுடி யடங்கிற், றிந்தநா ளீன்ற பாற்பெருங் கங்கை யிசைத்தவம் முடிய டங்காம, லெந்தநா ளினுமே லோடுவ தாயிற் றிதுவரு வழியொரு நான்கே, வந்தவா யதற்குப் பத்தினி யெடுத்து வகுப்பதெ னற்புத மன்றே ௮

நான்முலைப் பாலு நான்முடி யேற்க நடுவமர் தருமொரு முடியப், பான்முடி யேற்கும் பொழுதுறத் தெறிக்கப் படுபல திவலையா லாடன், மீன்முகப் புணரி மண்புக லஃது விசேடமாய் நடுப்பொலி தலின், லான்முலைப் பாலந் நான்குமேற் றதனுக் காட்டிடு மற்புதங் காட்டும். ௯

நறியபா லாட்ட லொன்றனு ளளவா நற்பயனெய்துமென் றுலக, மறியவா கமமுன் விரித்தவாய்ச் சென்னி யங்நடுச் சென் னியா தலினல், வறியதா காம ணுற்றிசை முடியு மற்றதற் காட்டு தன் மானும், வெறியதா ருறுதா மேற்றிடு காலே விரிபல திவலையா வீழ்த்தல். ௧௦

இந்தவா றின்பால் பிப்பிலா ரணியத் திறைபவன் றிருமுடி யாட்டி, யந்தவான் றலத்தி சானதிக் கண்மை யமர்வடா ரணியங் கண் டடைந்த, தெந்தநா ளினுமாங் குள்ளதோ ரிலிங்க மெதிர்கண்டு மடித்தலஞ் சுரந்து, முந்தநான் மேகம் பொழிந்தென வொருநான் முலைவழிப் பொழிந்ததாட்டியதே. ௧௧

ஆலடி யமருந் தம்பிரான் றனக்கு மாசடித் தம்பிரான் றனக்குஞ் சாலவிவ் வாறு பால்பொழிந் தாட்டிச் சரித்தது தவாப்பசும் பெற் றங், கோலிய மற்றைப் பசுக்களு மாட்டிக் குறையொழிந் தனமெ னக் களித்த, வாலிப வன்பி னரிமுதற் பலரும் வழாதுகாத் திருந் தன ரன்றே ௧௨

தழைபல பொதுளித் தரையகம் படிந்து தவாதொளிர் பிப்பில வனத்திற், குழைதரு பலவான் சூழவொடு நல்லான் கோதறப் பயின் றிடு நாளில், விழைதரு மாண்டுமூன்றொழிந் தனவெள் விடையுமைத் தருளுமோர் விடையு, முழைவிழி நோக்கப் பயின்றது தீர வொள் ளிய வுருக்காரங் தன்றே ௧௩

விடையுருக் காப்பத் துணைபிரி யன்றில் விதமெனக் கவன்றுமா ழாந்தே, யடைதரப் புவன மொருங்குபெற் றெடுத்த வானுழி தந் திடு காலேச், சடையுடைப் பிரானர் தந்துணை வருந்தச் சகித்திருப் பவர்கொலோ விசும்பி, னிடையுருக் காந்து நனிமகிழ் பூப்ப வியப்புத லுற்றனர் மாதோ. ௧௪

நம்மைநீங் காத நங்கைகே ளந்த ணருகயி லாயநின் றிந்தச், செம்மைசேர் புனனு டைந்துகோ வுருவாய்ச் செருத்தனின் றொழு க்கிய பாலால், வெம்மைதீர்ந் தனமாண் டொழிந்தன மூன்று மேய பல் லாவொடு முலக, மும்மையேத் திணைய தீர்த்தத்தி லின்னே முழுகென வருள்புரிந் தனரே. ௧௫

அண்ணலார் மறைந்து கூறிய வார்த்தை யஞ்செவி யேற்றுள மகிழ்ந்து, சண்ணலார் பல்லாக் குழுவொடும் பலபூக் கமழுமத் தீர்த் தத்தி னிழிந்து, நண்ணலார் புரமுன் றெரித்தவப் பரமர் நகைமலர்ப் பதமுளங் கருதி, விண்ணலார் பரவ முழுகிப தம்மா விட்டது கொ வுரு வுடனே. ௧௬

கோவுரு வொழிந்து பண்டைய வுருவங் கொண்டெழு கோம ளக் கொழுந்தை, யாவுரு வொழிந்த தம்பிரா னெதிர்வந் தணைத்த னன் மிக்குள மகிழ்ந்தான், றேவுரு வமைந்த மற்றையா னெல்லாந் தீர்த்தத்து முறைமுறை படிந்தே, யோவுரு வினவாய் முன்னுருப் பெற்ற வும்பர்கள் பூமழை பொழிந்தார். ௧௭

கொற்றவின் பரவக் கோவுரு வொழித்துக் கோமுத்தி தீர்த்த மென் றொருபேர், பெற்ற தத்தீர்த்தங் கோமுத்தி யெனும்பேர் பெற்றது பிப்பிலா ரணிய, மற்றவர்க் கருளுந் தம்பிரா னாரங் கணைத்தெழுந் தாரெனு மொருபே, ரூற்றன ரரிமுற் பற்பல்வா னவரு மொழிந்தன ரிம்பர்தங் கோலம். ௧௮

முந்துரு வெடுத்தா ரணைத்தெழுந் தவரை முறுகிய காதலி னணைக்கப், பந்தமுற் றவளைப் பணிந்தனர் நின்றார் பைந்துழாய்க் குரி சிலை நோக்கி, யிந்துசே கரனார் தோழுந்துரி லெர்முடைப் பெருந் திருமுன்னர், நந்துகோக் காத்த குறிதெரித் திருத்தி நாளுமென் றினிதருள் புரிந்து. ௧௯

மற்றைவா னவரை யனையர் மங்கையரை வள்ளலார் கருணையி னோக்கிப், பற்றை யாதரித்தீர் நீவிர்தும் முலகம் படர்ந்துவாழ்ந் திருமினும் பாகக், கற்றைவார் குழலை மணஞ்செய்நாள் வந்துகண்டு கொண் டேகலா மென்று, மற்றைநா ளவர்க ளேற்றபே ருவகை யளவிட வல்லவர் யாரே. ௨௦

வண்டுளர் நறும்பூந் தண்டுழாய்க் குரிசில் வள்ளலா ரருளிய படியே, தண்டுகைத் தாங்கு மாயனு கியதெத் தலமந்தத் தலம்பு குந் தடிமை, கொண்டு வீடருளிய யெமையுமாள் பெருமான் கேயினை ராலயங் கொண்டு, கண்டுநேர் மொழிமா முதலியர் சூழக் காதலித் திருந்தனன் மகிழ்ந்தே. ௨௧

மேகவா கனன்மூற் பற்பல்வா னவநம் விருப்பொடு தத்தம்வா ழூலக, மோகமார் மடவா ரொடுமடைந் திருந்தார் மொழிதரு மூல கமூ ன்றனுக்கு, மேகநாயகனெம் பிராட்டியை யணைத்தே யிருந்தன ளுவடு துறையிற், சோகமே வாம லளவில்பல் லுயிருந் தோற்புறு மகிழ்ச்சியெய் தினவே. உ௨

நாயனு ருவக்கும் பிப்பிலா ரணிய நலமிகு கோமுத்தி யெனும் பேர், மேய காரணத்தை விரித்தன மந்த வித்தகத் தலத்திறை யவர்மு, ளுயமா முத்தி தீர்த்தங் கோமுத்தி யம்புன லானதுந் தெரிந் தீர், பாயசீர் பெறுமத் தீர்த்தமான் மியங்கள் பலவுள சிலதொகுத் தறைவாம். உ௩

கஉ-வது கோமுத்திப்படலம் முற்றியது.

ஆகப் படலம் கஉ-க்குத் திருவிருத்தம் சஎஅ.

---

## கஉ-வது கோமுத்திப்படலம்.

அக் கோழம்பத்திருந்த பசு தனது கூட்டத்தொடு வடக்கே சென்று அரசங்காட்டினிற் புகுந்து, ஆங்குள்ள பல வளங்கள் முற் றுங்கண்டு, ஆங்கு எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானை மனம் நெக் குருக மகிழ்ந்தடிபோற்றி, அப் பெருமான் றிருமுடியில் முலை சுரந்து பெருகிய பாலைப்பொழிந்தது அப்பால் பலகாதம் பரவ அதில் சராசரங்கள் அனைத்தும் பாற்கடல் படிந்தாற்போலப் படிந்தன

அந்நாள் அரசங்காடாகிய அந்நகரில் அம்மையான அப்பசு இறைவனுக்கு நிறைபப்பால் பொழிதலால் அம்மைபாருக்கு ஒப்பி லா முலையாள் என்னும் திருப்பெயர் இன்னும் வழங்காநின்றது. இவ்வாறு நிறைப எம்பெருமானுக்குப் பால் பொழிந்து ஆட்டி அந் நகர்க்கு அடுத்துள்ள ஆலங்காடு சென்று ஆங்கெழுந்தருளிய இறை வனுக்கும் அன்பால் இன்பால் பொழிந்து ஆட்டியது. அப்பசுவினு டன் வந்த மற்றப்பசுக்களும் அவ்வாறே பால் பொழிந்து இறை வனை அன்பால் ஆட்டி இன்புற்றன. திருமால் முதலியவர்களும் அம்முறையே அவற்றைக் காவல் செய்திருந்தனர்.

இப்படியே பலபசுக்களோடு அம்மையானபசு அவ்விடங்களில் பழகிபிட ஆண்டுகள் மூன்று சென்றன. இப்பசுவுடன் நின்ற எம் பெருமானாகிய எருது, தனது விடை உருக்கழித்தது. கழித்திடக் கண்ட பசு, பிரிவாற்றாமையால் மிகக் கலங்கியது. அது கண்டு எம் பெருமானாகிய இறைவன் விண்ணில் மறைந்து நங்காய்! "கைலையை விட்டு விடையுருவெடுத்து உன்னை விடாது மூவாண்டு தொடர்ந்து இந்நாட்டில் வந்தனம்" "நின்பாலால் மெய் குளிர்ந்தோம்" இன்னே பல பசுக்களோடும் இங்கே தோன்றுகின்ற இத்திருக்குளத்தில் மூழ்குக" வென்றருளினர். அதனைக் கேட்ட அப்பசு மனமகிழ்ந்து பல பசுக்களோடும் அத்திருக்குளத்தில் எம்பெருமான் திருவடியை நினைந்து கொண்டே மூழ்கியது. அப்பசுவுருவும் அப்போதே ஒழிந்தது அப்போதே பழய உருவம் பெற்று எழுகின்ற ஒப்பிலாமுலையாளை அவ் விடைவடிவைமாற்றிய சிவபெருமான், எதிர்வந்து அணைத்தருளினன். எம்பெருமாட்டியும் அதற்கு மனமகிழ்ந்தனள். தேவராகிய மற்றபசுக்களும், அதில் மூழ்கி முன்னுருவம் பெற்றன. அது கண்ட தேவர் அனைவரும் பூமழை பொழிந்தனர். அதுமுதல் அக்குளமும் கோவடிவத்தை மாற்றினமையால் கோமுத்திதீர்த்தமென்று ஒரு பெரும் பேரும் பெற்றது. அந்த அரசங்காடு கோமுத்தி யென்னும் பேரால் வழங்கப்பெற்றது அதில் எழுந்தருள்புரிந்த எம்பெருமானும் எம் பெருமாட்டியை அணைத்தெழுந்தமையால் "அணைந்தெழுந்தார்" என்னும் திருப்பேர் வழங்கப்பெற்றனர். தமது உருவம் மாற்றிய திருமால் முதலியவர், அணைத்தெழுந்த பெருமானை அணைக்க ஆசையுற்று அடிபணிந்து இன்புற்று நின்றனர் அங்ஙனம் நின்ற திருமாலை எம்பெருமானாகிய சிவபிரான் திருக்கடைக்கண்நோக்களித்துத் தேசமூன்றாரில் " நமது திருமுன்னர் ஆனவக்காத்தருறி காட்டி நிற்க", வென்றும், மற்றய கடவுளரையும், அவர்கள் மனைவியரையும் கருணையால் கடைக்கணித்து அமரர்காள்! "நீவிர் அனைவீரும் நுமது உலகஞ்சென்று இருப்பீர்களாக." "நாம் ஒப்பிலாமுலையம்மையை மணஞ்செய்கின்ற காலத்தில் வந்து கண்டு களித்துப் போவீர்களாக" என்றருளினர். அதுபோது அவர்கள் அனைவரும் அளவிலா இன்பமுற்று அப்பெருமான் அருளியபடியே அகன்றனர். திருமாலும் எம்பெருமானிடத்தில் பிரியாவிடைபெற்று

அப்பெருமான் அருளியபடியே தேரழுந்தூரிற் சென்று திருமகள் முதலியோர் சூழத்திருமுன் இன்புற்றிருந்தனர். அவ்வாறு அருள் புரிந்த ஆணைத்தெழுந்த பெருமான் அத் திருவாவடுதுறையிலேயே எம்பெருமாட்டியை அணைத்துக்கொண்டே அமர்ந்தருளினர்.

கஉ-வது கோழுத்திப்படலம் முற்றியது.

---

## கங-வது கோமுத்தித்தீர்த்தச்சிறப்புரைத்தபடலம்.

மும்மையுல கினுமுவகை முகிழ்ப்பவுயி ரொருங்கீன்ற
வம்மைதிரு வுருவணைத்தா ராவடுதண் டுறைப்பதியிற்
செம்மைபெறு கோமுத்தித் தீர்த்தமான் மியஞ்சொலென
வெம்மைதவிர் தருமசன்மன் வினமறையைப் பார்த்துரைக்கும். க

முந்தைநாட் சுதபசுவென் றுரைக்குமொரு முனியிருந்தா
னரந்தைதீ ரவற்குமகா ராயினவ ரொருமூவர்
சிந்தைகூ ரவருண்முதற் சேய்பிரதர்த் தனப்பெயரோன்
றந்தைதா டொழுதறிவு தலைக்கொள்ள விதுபுகல்வான். உ

முத்திசா தனமென்று மொழிதன்மக மோதவமோ
சித்திசால் பெருந்துறவோ செப்புமே தருகொடையோ
புத்திகூர் மந்திரமோ யந்திரமோ புகல்பிறிதோ
சுத்தியா யுரைத்தியென வவனுவந்து சொல்லுவான். ங

அறியாத பருவத்தே யறிவுனக்குத் தோன்றியதான்
முறியாத ஞானத்தோன் முதுதவத்தோ னுயினைதோஞ்
செறியாத நம்பரம சிவனமருந் தலத்தொன்று
குறியாத தவஞ்செயலே குளிர்முத்தி சாதனமாம். ச

மிக்கசில தலங்களுளும் விசேடதல மதுசார்ந்து
தக்கதவம் புரிவதுயர் சாதனமா மத்தலமுந்
தொக்கபல முனிவர்குழாஞ் சூழ்திருவா வடுதுறையே
நக்கவதி னுளதுமுத்தி தீர்த்தமென நவிலொன்று. ரு

அத்தகைய புனன்மூழ்கி யத்தலத்து வீற்றிருக்கு
முத்தமனை யணைத்தெழுந்த வும்பனைம் பணைப்போற்றி
வித்தகநற் றவம்புரிதி வெம்பிறவி யொழிவையெனச்
சித்தமுவந் துரைத்துமனு வைந்தெழுத்துஞ் செப்பினனால். சு

தழைதிருவா வடுதுறைவாழ் சுயம்புலிங்க தரிசனத்தாற்
குழைபிரமக் கொலையாதிக் கொலைபலவுங் குலைந்தோடுந்
தழைசெருத்தற் பசுக்கோடி தானபல னுண் டாகும்
விழைவனைத்துங் கைகூடும் விசேடமஃ தென்றுணர்தி எ

குற்றமற முன்புசனற் குமாரமா முனிவானுங்
கற்றமிலப் புனலாடி யத்தீர்த்தக் கரையமருங்
கற்றவர்சூழ் சுயம்புலிங்கங் கைதொழுது தவஞ்செய்தப்
பெற்றமுயர்த் தவாருளாற் பெருமுத்த னுயமர்ந்தான் அ

ஆதலினத் தலத்தடையென் றறைந்து சுதபசு விடுத்தான்
மேதகைய குணப்பிரதர்த் தனன்றொழுது விடைகொண்டு
சீதாரு தியர்பரவுந் தென்றிருவா வடுதுறைபுக்
காதரங்கூ ரத்தீர்த்த மகனமர்ந்து படிந்தாடி. கூ

மறைமுடியின் சாரமென வயங்குறுவெண் ணீறணிந்து
கறைபகல்கண் மணிபூண்டு கருத்துறவைந் தெழுத்திருத்தி
நிறைவுறவங் கினிதமரு நின்மலகா யகற்சூழ்ந்து
முறைமையுறப் பணிந்துதவம் முயல்வானோ ரிடத்தமர்ந்தான். கo

பொறியைந்து மறத்தடிந்து பொய்யின்மனப் பொற்றகட்டி
னெறியொன்று மாசிலா மணியமைசிரம் புறப்பதித்துத்
தறியென்று சொலவளியைத் தடுத்திடைகா டியிற்செலுத்திக்
குறியொன்ற வமர்ந்திருந்தான் கோதில்பிர தர்த்தனனே. கக

மூலவுணாச் சின்னாளு முதிர்கனியூண் சின்னாளுஞ்
சாலவமை காயுணவு சின்னாளுஞ் சருகுணவு
காலமுறிற் சின்னாளுங் காலுணவு சின்னாளு
மேலநுகர்ந் தடங்கடிந்து மிருந்துமா தவம்புரிந்தான். கஉ

கடுவெயிலி னழற்குளித்துங் கடுங்குளிரிற் புனற்குளித்துந்
தடுவரிய திறத்தாற்றுந் தவமாற்ற வரம்பயரைக்
கொடுவயிரப் படையாளி கூயேவ வவர்வந்து
படுமயல்செய் தானமட்டும் பார்த்தொழிந்து போயினரால். ௧௩

கொடியதவ மியற்றுமொரு குழமுனிவன் றலையோரி
படியவிரு சிறைப்பறவை பற்பலகட் சிகடெற்று
நெடியமா வித்துவிழுந் துறழுளைத்து நேரோங்குந்
தடியமுடி யாவினைய தவங்கண்டார் வானாடர். ௧௪

அஞ்சியிருங் கயிலாய மடைந்தபிரா னடிபணிந்து
வஞ்சியொரு பாலுடையாய் மாதவஞ்செய் வானொருவன்
விஞ்சியெழு கனலடங்க வேண்டுமருள் புரியென்றார்
மஞ்சிவருஞ் சடையானு மற்றதுமாற் றிடநினைந்து. ௧௫

சணங்களொடு மனையதவன் மூன்றென்றக் கடிதுணர்ந்து
மணங்கமழ்பன் மலர்தூவி மலரடிமேல் வீழ்ந்தெழுந்தா
னிணங்கவருந் தவஞ்செய்தா யெமைக்கலந் தின்புறு வாயுன்
சுணங்கமழுங் குலமுநமைக் குறித்துயுமென் றுரைத்தகன்றான். ௧௬

இன்னுமள வரும்பெருமை யெய்தியவப் பெருந்தீர்த்த
மன்னுநெடுங் கரையமர்ந்து மாமுனிவ ரளவில்லோ
ருன்னுமருந் தவம்புரியா வுமாபதியா ரருள்பெற்றுத்
துன்னுமவ னடிக்கலப்பிற் றுணைந்துபுகுந் தின்புற்றார். ௧௭

வாசவனு ரழலியமன் மறநிருதி வருணன்கா
லீசனொரு தோழமையோ னீசனிவ ரெண்மர்களு
மாசகல்செங் கதிர்முதற்கோள் வசுக்கண்முதற் பற்பலரும்
பேசருமப் புனல்குடைந்தே பெற்றனர் பற்பலதிருவும். ௧௮

தக்கவறம்புரி திறத்தான் சாவனனென் றொருசோழன்
றெக்கவொரு நாற்பரிபூண் சுடர்மணிப்பொற் றேரேறி
மிக்கபெருங் கானகத்து வேட்டைவினை யுறப்புரிந்து
நக்ககதிர் வெயின்முதிர்ச்சி நண்ணிடநண் ணினனிளைப்பு. ௧௯

வேட்டைவினை புரிந்திளைத்தோன் மேவிரதநாற்பரியு
மேட்டையுற லுணர்ந்தவற்றிற் கின்புனலூட் டுதல்குறித்தே
யோட்டைமனத் தவரென்று முறுதநலப் பெருந்தீர்த்தக்
கோட்டையடைந் திரத நிறீஇக் குதிரைகளுன் கையுமவிழ்த்தான்.

பாசமகல் பரிபிணித்த பாசமிரு கையும்பற்றி
நேசமிகு தடப்புகுத்த நீருண்டப் பரிநான்குந்
தேசமைய விளைப்பொழிந்து தேவர்களு மடைவரிய
வாசமலி ஞானமரீஇ வண்கரையே றுபுநின்ற. உக

நின்றபரி களையரசன் முன்போல நெடுந்தேர்பூட்
டொன்றவிழுத் திடுகாலை யொள்ளியவப் பரிநான்கு
நன்றமைவேந் தனைநோக்கி நாதிபகே ளிந்நாங்கள்
வென்றமைநின் றேரிழுக்கமேவோமென் னெனவினவில் உஉ

மாடுபொலி வளமோங்கும் வங்கதே சம்புரப்பான்
றேடுபுகழ் மிகுவீர சேனனெனும் பெயர்மன்னன்
கூடுமனை வியர்நாங்கள் சூரியமற் றவன்விருத்தன்
பாடுநரை திரையடைந்து பல்விலனு கித்தளர்வான் உந

பாவுபுக ழுவன்மங்கைப் பருவமிக வரவெம்மை
விரவுமுவ ளகக்கட்டின் மெல்லணையின் மிசைக்கிடத்தி
யுரவுமுலை வருடுமித மூறச்சுவைக்கு நிறத்தணைக்கு
மரவுநிக ரல்குலிற்கை யமைத்துறங்கு மிவையன்றி உச

வேறுசெய லறியாது மெலிதருவா னெனைநோக்கிக்
கூறுமதி நிகர்நுதலீர் குறிப்புணர்ந்துங் களைக்கலப்புற்
றேறுசுகம் விளைக்கும்வலி யிலனுனே னென்றிசைத்தா
னுறுமவ மதிப்பேற நாங்களுல் வருநகைத்தேம். உரு

பழுத்தநரைத் தவன்சினந்து பழிநோக்கா தவமதித்துக்
கொழுத்த திறத்தொடுபயிலுங் குதிரைகளைப் பதுபோல
விழுத்தநலத் தொடுநகைத்தீர் குதிரையாய் வியன்றேர்பூண்
டிழுத்தலையக் கடவீரென் றிட்டனனோர் கொடுஞ்சாபம். உசா

ஆர்த்தகொடுஞ் சாபவலிக் கஞ்சியவ னடிவீழ்ந்து
பேர்த்தருள வேண்டுமெனப் பெரிதுமிரந் திடுகாலை
யோர்த்தபுகழ்ச் சாவனன்றே ரீர்த்தேகி யொருமுத்தித்
தீர்த்தநுகர்ந் தறிந்தாடித் தீர்ந்துய்மி னென்றுரைத்தான். உஎ

உரைசெய்த படிநாங்கள் குதிரையா யுன்பாலுற்
றிரைசெய்த நெடுமணித்தே ரீர்த்துழன்றோ மிதுகாறும்
வரைசெய்த மணித்தோளாய் வளவாச வனத்தமரித்
திரைசெய்த புனன்மூழ்கிச் சிவலோக மடைவோம்யாம். உஅ

நின்மகனுக் காசுதவி நீயுமிதின் மூழ்குவையேற்
கன்மமறுத் தெங்களொடு கலந்தமர்வாய் சிவலோக
முன்மனத்துக் கோடியென வொன்றகிரு பனுக்குரைத்து
நன்மனத்த புரவியொரு நான்குமுழு கியவந்நீர். உகூ

முழுகுதலும் பரியுருப்போய் முழுத்தெய்வ வுருவாய்ப்பச்
செழுமலர்வான் பொழிதாவத் தீர்த்தத்தின் கரையேறி
வுழுவலொடு மாசிலா மணிமலர்த்தா ளுறப்பணிந்து
பழுதமையாச் சிவலோகம் படர்ந்திருந்த வந்நான்கும். க௦

சென்னிபரி யொழிந்தமையுந் தீர்த்தநீர் படிந்தமையு
மின்னியொளிர் தெய்வவுருப் பெற்றமையு மிகத்தேர்ந்து
மன்னியொளி ராசரிமை மகற்களித்தப் புனன்மூழ்கித்
துன்னியிறை யருள்பெற்றுத் தொழுமுலகுற்றனன்றானும் கக

மற்றவன்றன் மனையாளு மண்ணுதி யாசையெலாம்
வெற்றமய லெனவொழித்து மேதகுமாவடு துறையை
யுற்றமல நற்றீர்த்த மூழ்காடி யாசடிவாழ்
பெற்றமுயர்த் தவற்போற்றிக் கொழுநனொடு பெட்டமர்ந்தாள் கஉ

ஆடுவாம் பரிநான்கு மன்னனுமற் றவன்மனையு
நாடுவான் சிவலோக நண்ணுறப்புண் ணியமுதவி
நீடுவார் பேரின்ப நிரப்புமெனி லெம்மனோர்
பாடுவான் புகினறுமோ பாவுறு மப்புனற் பெருஞ்சீர் கங

குடமாதம் வளர்பக்கங் குலவிவரு சத்தமியிற்
றிடமாரு நவமிதனிற் றிகழுமுத்தி தீர்த்தமெனுந்
தடமாரும் புனல்படிந்து சுயம்புலிங்கப் பிரானையவ
னிடமாரு முமையையினி தேத்துநரின் பெய்துவரே. ௯௪

### வேறு.

திருவா வடுதுறை மேவுபு திகழ்கோ முத்திநன்னீ
ரொருவா வளம்பல வுள்ளன வுரைப்பா ரெவருலகின்
மருவா வொளிர்பொன் னிக்கரைமன்னும் புகழ்ப்பரதன்
பெருவாழ் வுறவட மாவனப்பெற்றித் திறஞ்சொல்வாம். ௯௫

**௧௯-வது கோமுத்தித்தீர்த்தச்சிறப்புரைத்தபடலம் முற்றியது.**

**ஆகப் படலம் ௧௯-க்குத் திருவிருத்தம் ௫௧௯.**

---

## ௧௯-வது கோமுத்தித்தீர்த்தச்சிறப்புரைத்தபடலம்.

முன்னொரு காலத்தில் சுதபசு என்னும் ஒரு முனிவர் இருந்தனர். அவருக்குப் புதல்வர்கள் மூவர் ஆவர். அவருள் முதல்மகன் பிரதர்த்தனன் என்பான். அவன் தந்தையின் திருவடிதொழுது முத்திக்குச் சாதனமாவது எது? "அதை அடியேனுக்கு உரைத்தல் வேண்டு"மென்று விண்ணப்பஞ்செய்யக்கேட்ட அம்முனிவன் புதல்வா! அறியாத பருவத்திலேயெ அறிவு உனக்குத் தோன்றியது. இதனால் தவமுடையன் ஆயினாய். இனிச்சிவதலங்களுள் சிறந்த தலஞ்சென்று அதில் ஒன்றையும் கருதாது தவத்தைச்செய்வையேல் அதுவே முத்திக்குச்சாதனமாகும். அத்தலந்தான் திருவாவடுதுறை யெனப்படும். அதில் கோமுத்தித்தீர்த்தமென்னும் திருக்குளமொன்று உள்ளது. அதில்மூழ்கி ஆங்கு எழுந்தருளிய அணைத்தெழுந்த பெருமானை அடைந்து வணங்கித் துதித்துத் தவஞ்செய்திடுவையேல் நினது பிறவி நீங்கிவிடும்" என்று அதற்கின்றியமையாத ஐந்தெழுத்தையும் அருளினன். அப்பெருமானது காட்சியால் எவ்வகைப் பட்ட பெரும் பாவங்களும் இகந்தொழியும். அப்படியே சனற்குமார முனிவர் அத்தலத்தில் அக்குளத்தில்மூழ்கி அக் குளக்கரையில் அமர்ந்தருளிய சிவபிரானைவழிபட்டு வீடுபேறு எய்தினர். ஆத

லால்அத்தலத்தில் செல்லுக வென்று சொல்லி விடைகொடுத்தனுப் பினன். பிரதர்த்தனன் தந்தைபால் வணங்கி விடைபெற்றுக் கொண்டு திருவாவடுதுறை சென்று ஆங்குள்ள திருக்குளத்தில் மூழ்கி அக் குளக்கரையில் எழுந்தருளிய இறைவனைவணங்கித்தவஞ்செய் யும் பொருட்டு ஓரிடத்தமர்ந்தனன். ஐம்பொறிகளையும் அடக்கி மன மாகிய பொன் தகட்டில் மாசிலாமணியான சிவபெருமானைப் பதித் துப் பிராணவாயுவைச் சுழுமுனையிற் செலுத்திக் குறிக்கொண்டு இருந்தனன். இவ்வாறே உணவின்றியும் சிறிதுணவு உண்டும் அருந் தவம் புரிந்த பிரதர்த்தனனை இந்திரன் ஏவலால் அரம்பையர் பலர் வந்து மயக்கவும், அவன் மயங்காமையைக்கண்டு அவனை விட்டொ ழிந்தனர். பின்னர்க்கொடிய தவமியற்றுகின்ற முனிமகன் தலையில் மாவித்து விழுந்து முளைத்து வளராநிற்க, அதைக்கண்ட வானவர், கைலையிற்சென்று வணங்கி எம்பெருமானை நோக்கி "ஒரு முனிமகன் கொடியமாதவம் செய்கின்றனன். அடங்காத அந்த அழல் அடங்க அருள் புரிக" என்று விண்ணப்பஞ்செய்தனர். சிவபெருமான் அதை மாற்றிடத் திருவுளங்கண்டு அம்முனிவன்முன் காட்சி கொடுத்து முனிவரேறே! "நம்மைக் குறித்து அரிய தவம் இயற்றியபடியால் எம்மோடு கலந்து இன்புறுவாயாக." "நின்குலமும் நம்மை நினைந்து உய்ந்திடு" மென்று உரைத்து மறைந்தருளினர். இப்படியே இன் னும் அளவில்லாத முனிவர் பெருமக்கள் இத் திருக்குளத்தில் மூழ்கி இதன் கரையில் எழுந்தருளிய ஈசனை வணங்கி இறைவனருள் பெற்று இறைவனடியில் இரண்டறக்கலந் தின்புற்றனர். இன்னும் அக்கினி, நிருதி, இயமன், வருணன், ஈசானன், குபேரன் ஆகிய எண்மர்களும், ஞாயிறு முதலிய கோள்களும், எட்டு வசுக்களும் அக் குளத்தில் மூழ்கி அளவில்லாத செல்வங்களை அடைந்தனர்.

சாவணனென்னும் சோழன் ஒருவன் தேரேறிக் காட்டிற்சென்று வேட்டையாடி வெயில் முதிர்ச்சியால் களைப்புற்று அக்குளக்கரை அணுகித்தேரை நிறுத்திக் குதிரை நான்கையும் அவிழ்த்து அவற்றின் கயிற்றை இருகையாலும் பிடித்து அக்குளத்தில் செலுத்த அக்குதிரைகள் அந்நீருண்டு ஒளிமிகுந்து இளைப்பொழிந்து அமரர்களாலும் அடைதற்கரிய அறிவு பெற்று அரசன் தம்மைத் தேரில் பூட்டுங் காலத்தில் அக்குதிரைகள் அவனை நோக்கி அரசே "இனி

நின்தேர் இழுக்க மாட்டோம். நாங்கள் வங்கதேசத்து அரசனாகிய வீரசேனன் மனைவியர்கள். அவ்வரசன் முதுமைப்பருவத்தில் நரை திரையடைந்து பல்லில்லாதவனாகித் தளர்ந்து மங்கைப்பருவமடைந்த எங்களை மெத்தையிற் கிடத்தி இதழ்சுவைத்து மார்பிலணைத்து அல்குலில் கை வைத்துக் கொண்டு உறங்குவதல்லால் வேறொன்றும் செய்யாது எங்களைநோக்கி யான் உங்களைக்கலந்து இன்புறத்தகுந்த வலியில்லாதவனாயினேனென்று கூறினன். அது கண்டு நாங்கள் அவமதித்துச் சிரித்தோம். அதற்கு அவ்வரசன் "குதிரைபோல் கனைத்துச் சிரித்தமையால் குதிரைகளாகக் கடவீர்" என்று கொடுஞ் சாபமிட்டான். அதற்கஞ்சி நாங்கள் அவனடியில் வீழ்ந்து, அண்ணல்! இதை மாற்றியருளவேண்டுமென்று இரந்து கேட்டோம். அதற்கு, அவ்வரசன், "சாவனனென்னும் அரசனது தேரை நீங்கள் இழுத்து அலையுங்காலத்தில் கோமுத்தித் தீர்த்தங்கண்டு அதன் நீரை உண்டு பிறவிநீங்கிப் பிழைப்பீராக" என்று உரைத்தனன்.

அவன் கட்டளைப்படியே நாங்கள் குதிரைகளாகி நின்பால் வந்து தேரிழுத்து இதுவரை அலைந்தோம். இனி இந்நீரில் மூழ்கிச் சிவனுலகைச்சேர்வோம். நீயும் நின் புதல்வனுக்கு அரசியலை அளித்து இதில் மூழ்கினால் வினையினை விடுத்து எம்மொடு அவ்வுலகத்தை அடைந்து வாழலாமென்று அவ்வரசனுக்கு அமைய உரைக்க, அவனும் அவ்வாறாக, அக்குதிரைகள் அக்குளத்தில் மூழ்கிக் கடவுள் வடிவு பெற்றுப் பூமழை பொழியக் கரையேறிச் சிவபிரான் அடி பணிந்து சிவனுலகு சேர்ந்து இருந்தன.

கங-வது கோமுத்தித்தீர்த்தச்சிறப்புரைத்தபடலம் முற்றியது.

---

## கச-வது திருவாலங்காட்டுப்படலம்.

எறிதிரைப் பொன்னி யாற்றி னிருங்கரைப் பன்னசாலை
யறிதா வியற்றி யன்பிற் சுபத்திரை யொடுமமர்ந்த
செறிபுகழ்ப் பாதன்பின்ன ரென்செய்தான் செப்பு கென்னக்
குறியுடைத் தருமசன்மன் கூறுவான் வினம ரைக்கு, க

அருந்தவம் புரியி னன்றி மகப்பெற லாமோவென்று
திருந்தவுட்பரத னெண்ணிச் செறிதரு மனைவி யோடுங்
கிருந்தெது செய்வே னென்னு விறுத்தன னனைய காலைப்
பொருந்தவான் வாக்கொன் றம்மா வெழுந்தது புவனங் கேட்ப. ௨

மறைக்குலப் பரத கேண்மோ மாண்டநின் மனைவி யோடும்
பிறைச்சடைப் பெருமான் மேய பெருவடா ரணியஞ் சார்ந்தவ்
விறைக்கெதிர் வலப்பான் மேய விகப்பருந்தீர்த்த மூழ்கி
நறைக்குல மலர்கொண் டந்த நாதனைப் போற்று வாயேல். ௩

எண்ணிய தெய்து வாயென் றெழுந்தசொற் செவியேற் றீது
புண்ணிய நாய கன்பே ரருளென்றே புந்தி செய்து
கண்ணிய பன்னசாலை நின்றெழூஉக் காத லாளோ
டண்ணிய வாலங்காட்டை யடைந்தனன் பரத னென்பான். ௪

திருவாலங் காட்டுண் மேவிச் சிவபிரான் றிருமுன்னவகு
மொருவாத தீர்த்த மில்லா ளுடன்புகூஉப் படிந்தெ ழுந்து
பொருவாத நீறு பூசிக் கண்மணித் தொடையும் பூண்டு
வெருவாவைந் தெழுத்து முள்ளத் தெண்ணினன் விருப்பம் பொங்க

அந்தமா தீர்த்த மேன்மை யறையவல் லவரும் யாரே
முந்தவா சவன் வந்தாடி விருத்திரா சுரன்சேர் முற்று
நந்தமாட் டியதாற் றோன்றும் பழியினை நாசஞ் செய்து
சந்தமார் வலியின் மிக்க சயந்தனைப் பெற்று வாழ்ந்தான். ௬

மரைமலர்க் கிழவன் முன்னோர் கற்பத்தின் வந்து மூழ்கிப்
புரைதபு குணஞ்சா லோர்பான் புத்திரப் பெற்று வாழ்ந்தான்
விரைமலர்க் கூந்தற் செவ்வா யுமையவள் விருப்பி னூடி
யுரையள விறந்த பற்ப லுயிரெலா மொருங்கீன் றுளாள். ௭

தொழுகுலத் துதித்த மேன்மைத் தூமொழி யதிதியென்பாண்
முழுகின ளொருமுப் பத்து முக்கோடி சுரரைப் பெற்றாள்
பழுதற வினுமத் தீர்த்தம் படிந்தொவ்வோர் பயன்பெற் றோரெண்
ணெழுதவல் லவரு முண்டோ விசைக்கவல் லவரில் லென்னில். ௮

பேற்றுமத் தீர்த்த நாமம் புத்திர தீர்த்தமென்ப
ராற்றுமொவ் வோரேதுக்க ளாலினும் பலபேர் சொல்வார்
சாற்றுநன் மீனமாதந் தலையுவா நாளின் மூழ்கின்
மாற்றுவன் மலடி யேனு மகப்பெறற் கையமில்லை. ௯

அத்தகு தீர்த்தக் கோட்டினமர்ந்தெழுத் தைந்து மெண்ணும்
வித்தகப் பாதன் பன்னி யுடன்வா விருப்பிற் சென்று
பத்தருக் கெளிய முக்கட் பராபர விலிங்கங் கண்டு
சித்தமுள் ளுருகத் தாழ்ந்து திரவியங் கொடுபூ சித்து. ௧௦

துதிபல புரிந்து பின்னுந் தொழுதுசின் னாளிவ்வாறு
மதிதவம் புரிந்தா னாக வள்ளல்வெள் விடைமேற் கொண்டு
கதிபருள் காட்சி தந்தான் கைகுவித் தெழுந்து சூழ்ந்து
புதியதா மரைப்பொற் பாதம் போற்றுபு பாத னின்றான். ௧௧

நிற்பவன் வதன நோக்கி நின்கருத் துரைத்தி யென்று
கற்பனை கடந்த வெங்கள் கண்ணுதற் பெருமான் கூற
வற்புத வடியே னேர்சேய்க் காசைப்பட் டேனு மின்னும்
பற்பல திருவும் வேண்டும் பண்ணவர் நட்பும் வேண்டும். ௧௨

ஈற்றுநின் பாதப் போதி னெய்தவும் வேண்டுமென்று
னாற்றுமோர் மகத்தி னோர்பெ ணற்புதத் தடைந்து வாழ்வாய்
சாற்றுமற் றனைத்துந் தந்தோந் தந்தோமென் றருக்க ரந்தான்
கீற்றுவெண் மதியஞ் சூடுங் கேழ்கிளர் சடிலத் தோன்றல். ௧௩

மறைமுடி வாகி யுள்ளான் மறைதலுந் திருவ மெல்லா
நிறைதரப் பெற்றான் வானோர் நேயமுஞ் சிறப்பப் பெற்றான்
குறையறு முத்தியின்பங் கூடுறப் பெற்றா னாகி
முறைகெழு மனைவி யோடு முடிவிலா னந்த முற்றான். ௧௪

மீட்டுமத் தீர்த்த மூழ்கி விரிவட நீழல் வைகுங்
காட்டுமா வுரித்த பெம்மா னருட்குறி கசிந்து போற்றிப்
பாட்டுமா மறையும் பாடி விடைபெற்றுப் பன்னி யோடுந்
தோட்டுவா ரிசப்பூந் தாரான் றனைந்துதன் னிருக்கை யுற்றான். ௧௫

தூயதன் பன்ன சாலைத் துதிமனை யோடும் வைகிப்
போயதெங் கென்னோ பெற்றாப் புதுமையென் புகறி யென்று
மேயவந்த ணருக்காலங் காட்டுமான் மியபழ மேனு
மாயமால் வளமுங் கூறி யிருந்தனன் பாத னமம. ௧௬

வேட்டுமா மறையோன் மேவ விருப்பெலாங்கொடுத்த வாலங்
காட்டுமான் மியமென் சொல்வாங் கரைகுவதொன் றுண் டின்னுங்
கோட்டுமா வுரித்தான் பாகக் குமரியா யாங் குவைதஞ்
சூட்டுவார் கதுப்பிற் கோலத் தோகைதன் றிருமுன் னாக. ௧௭

பறையுதிர் சேனமொன்று பறந்தெழ வலியில் லாது
நிறைதரு விசும்பி னின்று நெடுநிலத் துறவீழ்ந் தன்று
மறைகத றியுங்கா ணாத மங்கையங் கிருந்தா ளைக்கக்
குறைவின் மெய்ஞ்ஞானம் வன்மை கொண்டெழுந் தன்றச் சேனம்.

அம்மை பொற்பாதம் போற்றி யடியனே னுய்யு மாறோர்
செம்மை தந்தருடி யென்று திருந்திய பருந்து கேட்ப
வெம்மையும் பிறவி தீர்க்கு மேழுலகீன்ற செல்வி
வெம்மையில் பருந்தே நீயென் வேட்டனை புகறி யென்றாள். ௧௯

புள்ளுவந் தடியிற் றாழ்ந்து பூரணா னந்தச் செல்வி
யுள்ளுநின் பணிக்கெப் போது முரிமைசெய் யெனவவ் வாறே
கொள்ளுகென் றுரைத்தா ளன்னாள் கூறலுமுருவ மாறித்
தெள்ளுவிண் ணவர்தஞ் செல்வத் திருமக ளெனநின் றன்றே. ௨௦

ஒருமக ளாகி யம்மை யுறலரு முருவம் பெற்றுத்
திருமக ளாதியோரிற் சிறந்தடிப் பணிபூண் டன்று
கருமகள் கழிந்து போகக் கண்டிடும் வலிசான் ஞானப்
பெருமக ளாலங்காட்டுப் பெருமைசொற் றிடவல் லார்யார். ௨௧

முதுபுகழ்ப் பாதன் வந்து முழுகுபு தரிசித்தேத்திக்
கதுமென வணைத்து மெய்தக் கருணைசெ யாலங் காட்டின்
புதுமைசெய் பழமை சற்றே புகன்றன மெழுவாய் நீண்ட
நிதுதவிர்த் தருளு மம்மை திருவவ தாரஞ் சொல்வாம். ௨௨

௧௪ - வது திருவாலங்காட்டுப்படலம் முற்றியது.

ஆகப் படலம் ௧௪-க்குத் திருவிருத்தம் ௫௱௫.

---

## கச-வது, திருவாலங்காட்டுப்படலம்.

காவிரியாற்றின் கரையில் (பன்னசாலை) இலை வீட்டில் சுபத்திரையான தன் மனையாளோடு பரதன் வாழுநாளில் ஒருநாள் அப்பரதன், அரியதவஞ் செய்தாலன்றி அருமகவைப்பெறலாகுமா? ஆதலால், இங்கிருந்து யான் என்செய்வேனென்று தன் மனையாளோடு கூறினன். அதுபோது அதற்குப் பொருத்தமாக உலகமெல்லாங் கேட்டிட ஓர் வானவாக்கு எழுந்தது. "பரதனே நின் இல்லாளோடு திருவாலங்காடு அடைந்து ஆங்குக் கோயில்கொண்டு எழுந்தருளிய சிவபிரான் திருமுன் வலது பாகத்தில் உள்ள திருக்குளத்தில் மூழ்கிப் பூக்கள் கொண்டு புண்ணியன் பொன்னடியைப் போற்றுவாயானால், நீ எண்ணிய முற்றும் எய்துவாய்" என்ற அந்தவாக்கைப் பரதன் கேட்டு "இது இறைவன்றிருவரு"ளென்று துணிந்து மகிழ்ந்து சுபத்திரையோடு திருவாலங்காடு அடைந்தனன்.

ஆங்குள்ள அத்திருக்குளத்தைக் கண்டு தன்மனையோடு மூழ்கி திருநீறு, திருக்கண்மணி பூண்டு அன்போடு ஐந்தெழுத் தோதினன். ஆனால் அக்குளத்தின் பெருமை அறிதற்கரிது. ஒருநாள் இந்திரன் வந்து மூழ்கி விருத்திராசுரனைக்கொன்ற பழியின் நீங்கிச் சயந்தனைப்பெற்று மகிழ்ந்தனன். முன்னொரு கற்பத்திலே மலாவன் வந்து மூழ்கிப் பத்துப் புதல்வர்களைப் பெற்றனன். உமை அம்மையார் மூழ்கி உலகனைத்தையும் ஈன்றனர். மறைபவர் குலத்தில் தோன்றிய அதிதி என்பாள், மூழ்கி முப்பத்து முக்கோடி கடவுளர்களையும் பெற்றனள். இன்னும் அதில் மூழ்கி ஒவ்வொரு டயனையும் அடைந்தவர்களை அளவிட்டு அறிய இயலுமோ? இதனால் இத்திருக்குளம் "புத்திரதீர்த்த"மென்று சொல்லப்பெறும். இன்னும் ஆங்கு அது செய்துவரும் நன்மையால் பலபேர்கள் எய்துமென்பர். பங்குனித்திங்களில் பூரணையில் மூழ்கினால் மலடியும் மகப்பேறு பெற்று வாழ்வள். இதற்கு ஐயமில்லை. இதில் மூழ்கிய பரதன் இதன் கரையில் இருந்து ஐந்தெழுத்தெண்ணித் தன் இல்லாளோடு எழுந்து சென்று ஆலடிப்பெருமானை வணங்கி வழிபாடு இயற்றி ஆங்கே தவம் புரிந்தனன்.

அங்ஙனந் தவம் புரிந்த பரதனுக்கு முன் சிவபெருமான் காட்சி கொடுத்தருள, அப்பெருமான் திருமுன்னர்ப் பரதன் கைகுவித்து இறைஞ்சி வலஞ்செய்து பாவுவானுயினன். இறைவன் அவன் பாவ

லுக்கு உவந்து பரத! 'நினக்கு வேண்டுவது யாது கூறுக" வென்றருளினன். அப்பரதனும் எந்தாய்! "எனக்கொரு மகவுவேண்டும்! இன்னும் பலதிருவும் வேண்டும்! கடவுளர் நட்பும் கைவரல் வேண்டும்! இறுதியில் நின்திருவடித் தாமரையைப் பெற்றின்புறலும் வேண்டு"மென்று விண்ணப்பஞ் செய்து வணங்கினன். மறையோய்! "ஒரு பெண்மகவை வியப்புறப் பெற்றுவாழ்க. இன்னும் சேட்டனையாவும் ஈந்தனம் பெறுக" வென்றருளி அமரர் பெருமான் அன்றே மறைந்தனர். இறைவனர் மறைந்தருளிய போதே பரதன் எண்ணிய திருவெலாம் இனிதே நிறைவுறக்கடவுளர் நட்பைப்பெற்று வீட்டின்பம் பெற்றவன்போல் தன் மனையாளோடு இன்புற்றான். மீட்டும் பரதன் அத் திருக்குளத்தில் மூழ்கித் திருவாலங்காட்டு இறைவனர் திருவடியிற்பணிந்து வாழ்த்தி இல்லாளோடு தனது இருக்கையை அடைந்திருந்தனன்.

அப்போது அங்குவந்த அந்தணர்களுக்குத் திருவாலங்காட்டின் சிறப்பு முற்றும் கூறி மகிழ்வுற்று வாழ்வானயினன். இம்முனிவன் விரும்பிய பொருளெல்லாந் தந்த திருவாலங்காடு என்னுந் திருநகரில் எம்பெருமாட்டியாகிய உமையம்மையின் திருமுன்னே சிறகிழந்த ஒரு பருந்து பறக்க வலியின்றி விண்ணினின்றும் மண்ணில் விழுந்தது. அறச் செல்வியாகிய அம்மையார் திருக்கடைக்கண் நோக்கஞ் செய்தருள அப்பறவை அறிவும் ஆற்றலும்பெற்று எழுந்தது அங்ஙனம் எழுந்த அப்பருந்து அனைத்துலகும் ஈன்ற அன்னையை நோக்கி அன்னப்! 'அடியேன் உய்யும்படியாக ஒரு நன்மை தந்தருள்க"வென்று விண்ணப்பஞ் செய்தது. அதற்கு அம்மையார் இரக்கமுற்றுப் பருந்தே! "நீ எண்ணியது எது எனக்கு நன்கு கூறுக" வென்றருள, அப்பருந்து மீட்டும் பணிந்து நிறைந்த இன்பச் செல்வியே! "என்னை எப்போதும் நின்பணிக்கே உரிமையாக்கியருள்க"வென்று பணிந்து விண்ணப்பஞ்செய்தது அதற்கு அம்மையார் "அவ்வாறே கொள்க வெனப்"பணித்திட்டனர். அப்போதே பருந்து அவ்வுருவம் மாறி, இறைவியின் வடிவம் பெற்றுத்திருமகள் முதலிய மங்கையரிற் சிறந்து, அம்மையாரின் திருவடித்தொண்டு பூண்டு நின்றது இவ்வாறு பெறலரும் பேற்றை அளித்த ஞானப்பெருமகள் எழுந்தருளிய திருவாலங்காட்டின் பெருமையைச் சொல்லவல்லவர் யாரே?

௧௪ வது திருவாலங்காட்டுப்படலம் முற்றியது.

---

# கரு-வது அம்பிகை திருவவதாரப்படலம்

சாதலின் வானவர் தொழுதிரு வாலங் காட்டினுட் புகுந்தொரு தீர்த்தத்து முழுகி, யோதலின் முடிவு பெருப்புகழ்ப் பெருமா னென்குறிப் பூசனை யுவப்புற வாற்றிச், சூதலி னெளிர்முலை குழலு டைக் கற்பிற் றனைமகிழ் தாவுளத் தெண்ணிய வெய்தி, யாதலி னுறையுள்சென் றவனெவன் செய்தா னறையென வினமரைக் கவ டவ னுரைக்கும். க

பாதனென் றுரைசெயு மறையவன் பெற்ற பாக்கிய மாம் வரப் பேற்றினை யுணர்ந்து, காதலத் தொருசத கோடியன் முதலாங் கட வுளர் தழீஇனர் காவிரி வடபாற், றிரமுற விச்சுவ கன்மனைக் கூவிச் சேணுயர் மாளிகை யொன்றுசெய் வித்துப், புரவுசெய் பல்வளங் களுமதிற் பொருத்திப் புண்ணிய மனையொடப் பாதனைப் புகுத்தி உ

மன்னிய விப்பெரு மாளிகை யகத்தே வசித்திட வேண்டுமென் றிரந் துபசரிப்ப, மின்னிய பெருந்தவத் தவனதற் கியைந்து மேவின னட்டிலுட் புகுந்துபல் சுவையி, னன்னிய மில்லவ ளமுதமைத் தூட்ட வதிதிமுற் பலரொடு மகனமர்ந் துண்டு, பன்னிய மகிழ்ச்சி யிற் றிளைப்பவ னொருநாட் பாம்பா னருளிய மகஞ்செய நினைந்தான்.

தவலருந் தன்றிரு மனைக்குத்தென் மேல்பாற் றகுதியின் மகம் புரி சாலையொன் றமைத்துக், கவலரும் வில்லியல் வடிவத்தின் மணி மே கலைபடுகுண்ட மும் வேதியுஞ் சமைத்து, நுவலரு முபகா ணம் பல தேடி நூலணி மார்புடை முனிவரர் மலரொப், பவலரு முகமு ளராய்ப்பலர் கூடப் பண்ணினன் ஞளுபக் கிரமஞ்செய் தானே. ச

உரைசெயு மிருத்துவிக் குகள்பலர் குழும வுதாத்தமுன் ஞ வொரு மூவகை கொண்டு, புரைசெயும் பெருமறை முழங்கிடச் சிருக்குப்பொழிநெயுண் டுறுதழல் வலஞ்சுழித் தோங்கத், திரை செயுங் கருங்கடன் முழக்கினும் பற்பலதேவரு முழங்கிவந் தடை தரச் சடங்கு, கரைசெயு நூல்வழி முடித்தபி னெவருங் கைக்கொ ளும் படிபுரோ டாசநல் கினனே. ரு

## வேறு.

இறையவன் முதலா யுள்ள விமையவர் பலரு முண்டு
நிறைதரக் களித்த பின்றை நெடுஞ்சிலை வடிவக்குண்டத்
துறைபிளங் கதிரோர் கோடி யொருங்குசேர்ந் துதித்த தென்னக்
கறைபகல் சோதி யொன்று காண்டக வெழுந்த தன்றே ௬

இந்தவோர் சோதி தோன்றுங் காரண மென்னே யென்று
சந்தமார் முனிவர் வானோர் தம்முளத் தாயா நிற்ப
மந்தமா ருதமு லாவும்பிப்பிலா ரணிய வள்ள
லந்தநா ளணைத்த செங்கை நெகிழ்ந்தது தனிமை யாக. ௭

பூதல மொன்றை மற்றை யிருதலம் போற்ற நாவற்
காதலந் தீவை மற்றைத் தீவெலாங் கசிந்து போற்ற
வாதலங் கமையீ ரொன்பான் பாடைக ளனைத்துங்கூடி
யோதவன் பமைந்த தெய்வத் தமிழினை யுவந்து போற்ற. ௮

தேயங்கள் பலவுஞ் சோழ தேசத்தைப் புகழ்ந்து போற்ற
நேயங்கொள் கங்கை யாதி நிகழ்தரு நதிக ளெல்லா
மீயங்கொள் பொன்னி யாற்றை விருப்பொடு புகழ்ந்து போற்றத்
தாயங்கொள் கரும மெல்லாம் யாகத்தைச் சார்ந்து போற்ற. ௯

கற்றவன் மாந்தர் யாரும் பரதனைக் கலந்து போற்றச்
சொற்றபன் மடவா ரெல்லாஞ் சுபத்திரை மாதைப் போற்றக்
கொற்றவில் வடிவ யாக குண்டச்செந் தழலி னுப்ப
ணுற்றபல் லுலக மீன்றா ளொருமழ வாகி நின்றாள். ௧௦

மனையொடு பரதன் கேட்ப மன்னுயி ரனைத்து மீன்ற
வனைமக ளாணு ளின்றென் றசரீரி வாக்கெ ழுந்த
தினைதலி லாமல் வானோ ரினமலர் மாரி பெய்தார்
துனைதா வெங்குந் தேவ துந்துமி முழங்கிற் றன்றே. ௧௧

உலர்மரந் தளிர்த்துப் பூத்துப் பழுத்தன வொழித ராது
மலர்படு மணங் கவர்ந்து மந்தமா ருதம் பரந்த
திலருளுங் கவற லற்ற விருவிசும் பழுக்கற் றன்று
நலமென வலரு மானூர் நாயகி யுதித்த ஞான்று. ௧௨

இன்னண நன்னிமித்த மெங்கணு மெழுந்து மல்கக்
கன்னலங் குதலைச் செவ்வாய்க் காமருபொற்கொம் பண்ணுண்
மின்னது குண்ட நின்று மென்மெல நடந்து சென்று
சொன்னல மமைந்த கற்பிற் சுபத்திரை மடியி ருந்தாள். கங

ஓங்குபல் வுலகத் துள்ள வுயிரெலா மொருங்கு பெற்றுத்
தேங்குதன் கருணை யாட்டிச் சிறப்புறத் தாங்கு வாளைத்
தூங்குமன் பெழுந்து பொங்கச் சுபத்திரை மடிமேல் வைத்துத்
தாங்குந ளானா ளன்றோ தவத்தினிற் சிறந்த துண்டோ. கச

அருமறை கடந்து சென்னிபா யதுவுங் கடந்து மேலாம்
பொருளொடு தான்வே றின்றிப் பூரணா னந்தச் செல்வ
மருவிநின் றொளிர்மா தேவி சுபத்திரைமார்பிற் சேர்த்துப்
பொருவற வணைப்ப வுற்றா ளெனிலன்பு போல்வ துண்டோ. கரு

மடியமர் கருங்கட் செவ்வாய் வாணுதற் கொழுந்தை மார்பிற்
படிதர வெடுத்த ணைத்துப் பண்புற வுச்சிமோந்து
கடிதுவாய் முத்தங் கொண்டு கையெடுத் தெழுந்து தேம்பக்
கொடியிடை யருகிருந்த கொழுநன்கை கொடுத்தா ளன்றே. கசு

அனையனும் விருப்பின் வாங்கி யணைத்துமார் புச்சி மோந்து
துனைபவாய் முத்தங் கொண்டு சொலற்கரு முவகை நீடிப்
புனையிழை கையி னல்கப் போற்றுபு வாங்கிக் கொங்கை
கனைசுரந் தூட்ட வுண்டாண் ஞாலத்தை யூட்டுஞ் செல்வி கஎ

எத்தவஞ் செய்தார் கொல்லிவ் விருவரு முலக மீன்ற
வுத்தம வன்னை தன்னை யொருமக ளாக வென்று
தத்தமுள் ளுவந்தெ டுத்துச் சாற்றினர் பலரு மிந்த
வித்தகங் காண நாமும் வினைதவஞ் செய்தோ மென்றார். கஅ

ஒளிர்புகழ் பலரு மிவ்வா றுவந்தன ரெடுத்துக் கூற
நளிர்கட லுலகம் போற்ற நாடியாங் காற்ற லாற்றி
மிளிர்பயில் விரதநாணம் விதிப்படி முடித்து நன்மாந்
தளிர்புரை மேனி யோடு பாதன்றன் னுழையுள் சார்ந்தான். க௯

தூயநற் றவத்தான் மிக்க சுபத்திரை பெறுது பெற்ற
மேயதன் மகட்கு நன்னீர் விரைகலந் தாட்டி யொற்றி
யாயவெண் ணீறு சாத்தி யணிநுதற் பொட்டுமிட்டுப்
பாயசூ ழியமென் கொண்டை முடித்ததன் பசும்பூண் சேர்த்து.

அணிமணிச் சுட்டி கட்டி யைம்படைச் சதங்கை பூண்டு
பிணிகெழு குதம்பை மாட்டிப் பெருவில்லக் கொப்பு மிட்டுத்
தணிவரு வொளிருங் காப்புக் தண்டையு மரைப்பொன் ஞாணுங்
கணிதமில் பிறவுஞ் சேர்த்துக் கண்ணுக்கு மையுந் தீட்டி. உக

சிறுகலை யரையிற் சூழ்ந்து திட்டியுச் சிட்ட நீங்க
மறுவறு சோறு நீரும் வளாய்ப் புறம் போகப் போக்கிக்
கறுவிலம் பிகையெ னும்பேர் கரைந்தமை தரவ ளர்க்க
வுறுதியின் வளரா நின்று ளொருங்கற மெலாம்வ ளர்ப்பாள். உஉ

அகவையிற் றன்னை யொத்த வந்தண ரிளம்பி ணுக்க
டகவையுட் குறித்துச் சூழத் தாதியர் பலரும் போற்ற
விகவையின் முன்றி லாடி யிருந்தெருப் புறத்து மாடி
முகவையின் முத்த மல்க மொய்மணி யுறையுண் மேவும். உங

பராபரை யாதி யிச்சை பாஞானங் கிரியை யென்ன
விராவுமைஞ் சத்தி யாகிச் சிருட்டிமுன் விளம்பு மைந்து
மாவணி சடையா னுற்ற வுபகரித் தாடல் செய்யும்
புராதனி யினைய வாடல் புரிவதோ ரிறும்பூ தாமோ. உச

மறைக்குலப் பிணுக்க ளோடு வாவியாட் டயர்ந்தும் பொன்னித்
துறைத்தலைப் படிந்து மாங்குச் சூழ்பொழின் மலர்கள் குற்றுங்
குறைத்தபன் மலருங் கொண்டு கோத்துபாத் தணியல் செய்து
முறைத்தவின் சுவைய வாஞ்சிற்று ணுப்பல பாத்த யின்றும். உரு

கந்துக மாடி வென்றுங் கழங்குதொட் டாடி வென்று
முந்துமம் மனைகள் வீசி முயற்சியிற் பற்றிவென்று
நந்துகண் பொத்து யாட னயந்துமின் வாநீன் றோருள்
வந்துவப் பெய்த மேன்மேல் வயக்கின ளாடல் பல்ல. உசா

புறமயி லன்னங் கிள்ளை பூவைகள் பலவ ளர்த்து
மறுமணிப் பலபூண் பாவை யழகுற வலங்க ரித்தும்
பெறுவியற் செம்பொற் பொய்தற் கலம்பல பெருகச் சேர்த்து
நறுமலர்க் கோதை யெங்க ளுபகி யுவப்புக் கூரும். உஎ

மதியிளம் பிறையோ தெய்வ மானிளம் பிணையோ வின்சொற்
பொதியிளங் கிளியோ வாசப் பூவிளங் கொடியோ மென்பூந்
துதியிளங் கொம்போ நாளுந் தூண்டருஞ் சுடரோ வென்னப்
பதியிளங் கோதை யம்மா பாரெலா முயவ ளர்ந்தாள். உஅ

மேதகு பாத னென்பான் வில்லிபல் குண்ட மிட்ட
பூதலம் விசேட மான பூதல மென்று மங்கண்
மாதரம் பிகையு தித்த மண்ணின் மாவிசேட மென்றுந்
தீதற வுள்ளத் துள்ளே சிந்தித்தீ தாற்றி னானே. உகூ

ஒளிவளா ரணைய குண்டத் துத்தரத் தணிமைக் கண்ணே
தெளிவளர் ஞான நல்குஞ் சிவலிங்க மொன்று தாபித்
தளிவளர் சிறப்பிற் பூசை யாற்றின னவ்வி லிங்கங்
களிவளர் போக மோக்க கார்ண மாகி மன்னும். ௩௦

பவக்கடல் யாம்வீ ழாது பரிந்தெடுத் தருளி யாண்ட
தவக்கொழுந் தெங்க ளம்மை யுதித்தமை சமைப்ச் சொற்ற
மவத்துறை யுயிர்மூழ் காம லன்னவம் பிகை விரும்பிச்
சிவத்தினைப் பூசை செய்த திறமினி யெடுத்துச் சொல்வாம். ௩௧

கடு-வது அம்பிகை திருவவதாரப் படலம் முற்றியது.

ஆகத் திருவிருத்தம் ருகூகூ.

---

## கரு-வது, அம்பிகைதிருவவதாரப் படலம்.

திருவாலங்காட்டில் பாதன் அடைந்த பேற்றை அறிந்த இந்திரன் முதலிய கடவுளர்கள் அம்முனிவனிருக்கின்ற காவிரிக்கு வடகரையில்வந்து குழுமி விச்சுவகன்மனை அழைத்து விண்ணுயர்ந்த அற்புத மாளிகை ஒன்று அமைத்திடச்செய்து அதில் பற்பல வளங்கள் காட்டி அம்முனிவனைக் குடியேற்றினர். அம்மாளிகையில்

குடியேறிய முனிவன், இல்லாளாகிய சுபத்திரை ஆங்கே இன்னடிசில் அட்டு ஊட்ட விருந்தினர் பலரோடும் உண்டு மனமகிழ வாழ்வா ருயினன்.

ஒருநாள் அப்பாதனென அந்தணன் இறைவனுர் அருளிய வேள் வியை இயற்றக்கருதி அத்திருமனைக்குத் தென்மேற்கே வேள்விச் சாலை ஒன்று அமைத்து அதில் வில்வடிவக் குண்டமும், மணிமேக லைக் குண்டமும், வேதிகையும் வியக்கச்செய்து அதற்கு வேண்டும் பல பொருள்களையும், அந்தணர்களையுங் கூட்டி நன்னுளில் அவ்வேள் வியைத் தொடங்கினன். எடுத்தல், படுத்தல், நலிதல் என்று சொல்லப்பட்டமுப்முறையாக மறைமுழங்கவும்,சிருக்குபொழி நெய் யுண்ட அழல்வலஞ்சுழித்தோங்கிடவும், கடல் முழக்கைப்போல் கட வுளர் பலரும் முழக்கத்துடன் வரவும், வேள்விச்சடங்கை விதிப்படி முடித்து ஆங்குள்ள எல்லோரும் ஏற்கும்படிப் புரோடாசம் ஈந்த னன். அதனைப்பெற்று இறைவன் முதலாகிய கடவுளரெல்லோ ரும் உண்டு களித்த பின்னர் அவ்வேள்வி விற்குண்டத்தில் கோடி, கதிரவர் ஒன்றுகூடி உதித்தாற்போல ஒளி ஒன்று தோன்றியது. இது தோன்றுதற்குக் காரணம் என்னென்று முனிவர், கடவுளர் யாரும் உன்னிநிற்ப, அரசங்காடாகிய திருவாவடுதுறையில் அணைத் தெழுந்தவள்ளலார் தனிமையாகும்படி அவர் திருக்கை நெகிழ்ந்தது.

எவ்வுலகினும் பூமியும், தீவில் நாவலந்தீவும், மொழியில் தமிழும் நாட்டிற் சோழநாடும், நதியிற் காவிரியும், அறத்தில் வேள்வியும் சிறப்புற்றோங்கவும், பாதர்கள் சுபத்திரையை வணங்கவும், அந்த வேள்விக்குண்டத்தின் நடுவில் எவ்வுலகு மீன்றுளாகிய அன்னை ஒரு பெண் பிள்ளையாய் நின்றருளினள். அதுகண்ட பாதனும் சுபத்திரையுங் கேட்கும்படி "உலகன்னையே ஈங்கொரு பெண்மகவா யினு"ளென்று ஒரு 'வான் வாக்கு' உயர்ந்து எழுந்தது. வானோரெல் லாம் மலர்மாரி பொழிந்தனர். தேவ வாச்சியங்கள் முழங்கின. அக் காலத்தில் உலர்ந்த மரங்களெல்லாம் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்தன. மலர்மணந் தாங்கிய தென்றல் இனிதே உலாவியது. இல்லாதவரெல்லாம் உள்ளவராய் மகிழ்ந்தனர். விண்ணோ மாசற்று விளங்கியது. தீயவர் நல்லவரானர். இவ்வாறே நல் நிமித்தங்கள்

எங்கணும் உண்டாயின அக்குண்டத்தில் தோன்றிய அன்னையாகிய கன்னி யைப்பைய நடந்துசென்று சுபத்திரையின் மடியில் எழுந் தருளி இருந்தனள்.

உலகமெல்லாம்பெற்று அவற்றைத் தாங்குவாளை இச் சுபத் திரை தாங்கலானது, அவள் பெற்ற தவத்தாலன்றோ? தவத்தால் பெற்ற அப்பெண்மகவைச் சுபத்திரை அன்பால் மார்பிலணைத்து உச்சிமோந்து வாய்முத்தங்கொண்டு மகிழ்ந்து தன்னருகில் இருந்த பரதன் கையில்கொடுக்க, அப்பரதன் வாங்கி "இம்மகவைப் பெறு தற்கு நம் மனையாள் எத்தவஞ்செய்தன" ளென்று புகழ்ந்து மகிழ்ந் தனன். இந்த அரிய பெரிய செய்கையைக் கண்ணுற்ற அனைவரும் "இது காண எத்தவஞ்செய்தன"மென்று களித்தனர்.

இவ்வாறாகப் பரதன் அடவிருதஸ்நாநத்தைச் செய்துமுடித்து இல்லாளோடு அக்குழந்தையைக்கொண்டு தன் இருப்பிடம் சென்ற னன். ஆங்குச் சுபத்திரைமாது அக்குழந்தைக்கு மணங்கலந்த நன்னீ ராட்டி ஆடையொற்றித் திருவெண்ணீறு சாத்திப் பொட்டிட்டுச் சூழியக்கொண்டை முடித்துச் சுட்டிமுதல் அணிகள் அணிந்து கண் மை தீட்டிக் கண்ணூறு நீங்கச் சோறும் நீரும் வளாவி அம்பிகை யென்னும் பெயர் அமைய வளர்க்க, அறம் வளர்ப்பாளான எம்பெரு மாட்டி வளரும் நாளில், தன்னை யொத்த இளம்பெண்களுடன் சிற்றி லிழைத்துச் சிறு சோறு உண்டு, அம்மனை, கழங்கு, ஊசல், நீராடல் முதலிய எல்லா விளையாடல்களும் இனிதே இயற்றுவாளாயினாள்.

இன்னும் அன்னம், கிளி, நாகணவாய்ப்புள் முதலியன வளர்த் தும், பாவைகள் அணிசெய்து வைத்தும், விளையாட்டுக் கலங்கள் பலகூட்டியும் மகிழ்வாள். இவ்வாறு எம்பிராட்டி இவ்வுலகமுய்ய வளர்வாள் ஆயினளென்க.

**கரு-வது அம்பிகை திருவவதாரப்படலம் முற்றியது.**

---

## கசா-வது அம்பிகை பூசைப் படலம்.

போதுசெய் நறுங்குழற் பொற்பி னம்பிகை
யாதுசெய் தனள்பின ரியப்பு வாயெனுஞ்
சூதுசெம் முலைவின மரைக்குச் சொல்லுவான்
றூதுசெய் மறைத்தொடைத் தரும சன்மனே. க

கரும்பினு மினியசொற் காம ரம்பிகை
பெரும்பரன் றனைமனம் பேணிச் செய்திட
விரும்பவன் பூசனை விழைந்து செய்துமென்
றரும்பிய காதலி னமைத்தெ ழுந்தனள். உ

பாங்கியர் பற்பலர் பண்பிற் சூழ்தரத்
தேங்கிய காவிரித் தீர்த்த மாடின
ணீங்கிய தீவினை நீறு பூசின
ளோங்கிய வைந்தெழுத் துளங்க ளித்தனள். ௩

பெருகிய காதலிற் பிடகை கொண்டுதோங்
கருகிய நந்தன வனங்க லந்தன
டிருகிய மறப்பகை வளர்த்த செங்கையாள்
முருகியன் மலர்தளிர் முதல கொய்தனள். ௪

நந்தியா வட்டம்புன் னாகஞா ழல்செவ்
வந்தியா மலகமா வகுளங் கூவிளஞ்
சிந்துவா ரங்கா வீரத்தேங் கொன்றை
முந்துமந் தாரநீர் முள்ளி பாடலம். ௫

கன்னிகா ரங்குராக் கடுக்கை மாதளை
வன்னிசெவ் வகத்திபொன் மத்தங் காஞ்சியார்
பொன்னி னவிரை மாப்புரசு சந்தனத்
தன்னிகர் கொக்குமந் தாரைவேங் கையெண். ௬

செருந்திகூ தாளஞ்செவ் வரத்தநீர் மிட்டான்
குருந்துவெட் பாலை கூத்தன்கு தம்பையோர்
திருந்தசோ கம்வழை திகழ்பன் னீர்தும்பை
பொருந்துவெள் ளிலோத்தமொண் பட்டிபூ ளைப்பூ ௭

பருத்திமா விலிங்கநா யுருவி பங்கய
மருத்திகூர் மருமருக் கொழுந்த ருக்கமோ
பொருத்துகோட் டஞ்சத குப்பை பூந்துழாய்
திருத்துவெண் காக்கணஞ் செய்ய கீரையே. ௮

கருவிளம் வழுதுணை கண்டம் கத்திரி
மருமலர் வெட்சியொண் வாகை கேதகை
குருமலி யோரிதழ்க் கமலம் குச்சிபுல்
பெருவிலா மிச்ச வேர் பிறங்கு வெட்டிவேர். கூ

தோன்றிவெற் றிலைகருஞ் செம்பை தூக்கடம்
பூன்றிய வழிஞ்சின்மால் காந்தி யொள்ளறு
கேன்றநற் றுளிமஞ் சணத்தி யோர்விளாத்
தான்றிநல் வதரிபைஞ் சாலி மல்லிகை. ‌ய

கிழுவைகா யாகுசை கிளர்ந ரந்தமே
பழுதிலா நாவலே பாரி சாதமே
பொழுதறு விலிகுசம் புலிதொ டக்கியே
தழுவிரு வேலிமார்த் தாண்டன் காந்தியே. கக

காரைபச் சைகருங் காவி நாணனன்
னீரையேய் குவளையே நெறிக்கு மாம்பலே
சீரையார் மயிலையே செழுங்க ரந்தையே
பாரையார் குளவிமுற் பலவுந் தெவ்வினுள். கஉ

எடுத்தநன் மலர்முத லெவையுங் காவிரி
யடுத்தநல் லிடத்துற வமைத்துப் பூசனை
மடுத்தவன் புறச்செயு மிடம தித்தனள்
படுத்தவைம் பொறிவலிப் பாதன் கன்னிகை. கந

இருபுறந் தெளிபுன லெய்த நாப்பணே
மருவிய வாலுக மணிப் பாப்பெனப்
பொருவற விளங்குதல் புரிந்து நோக்கினு
டருபெரும் பூசனைத் தானமா மென்றே. கச

புண்ணியக் காவிரி யிடையிற் பூரண
னண்ணிய கருப்பவி லத்த மண்டப
நண்ணிய பெரியமண் டபந யப்புறு
திண்ணிய மாமதில் செம்பொற் கோபுரம் கரு

மன்னுமொண் சிறப்பினா வரண வானவர்
துன்னுபஃ றளிபுன ரேற்றும் வாவினால்
பன்னும்வன் கூபமேற் பகர்ம டைப்பள்ளி
யுன்னுமற் றவுமவ னுவப்பி னாக்கினாள். கசு

புரிதரு மருக்கிய மாதி போற்றுதற்
குரியபல் வட்டகை கலச மொண்குடந்
துரிசறு கொப்பரி தூபதீ பக்கால்
பரியபொற் படலிகை பலவு மீட்டினாள். கஎ

தேர்தரு நிவேதனந் திருந்தச் செய்தற்கா
மோர்தரு தண்டுல மினிய பால் குளஞ்
சார்தரு கறிபுளி தகுநெ யிந்தன
மார்தரு பல்லவு மமையச் சேர்த்தனள். கஅ

இறைபவன் றிருமுடி யாட்டற் கேய்தரு
நறைமது வயிர்கனி நறியபா றயிர்
குறைபடு கழைவிரைத் தயிலங் கோதில்சாந்
தறைதரு பிறவுமாங்கறத் தொகுத்தனள். க௯

இன்னமும் வேண்டுவ யாவு மீட்டுபு
பன்னிய வவைகளைப் பாக மாக்கிய
பின்னரும் பூசனை பேணு வாமெனக்
கன்னலங் குதலைமங் கலையெ ழுந்தனள். உ௰

தோழியர் சூழ்தரத் தூப காவிரி
யாழிய நறும்புனல் வாவி யாடுபு
வாழிய பூதிமெய் வயங்கப் பூசியொண்
வீழியங் கனிபுரை வாயின் மெல்லியல். உக

இதயிரு கண்மணி யிலங்கப் பூண்டொளிர்
பதமொ ரைந்துந் தகவுளம்ப தித்தபின்
சுதமிலா லயம்வலஞ் சூழ்ந்து சன்னிதி
யதனெதி ரடைந்தன ளன்பு பொங்கவே. உஉ

மானவன் போடுதான் வகுத்த வானுக
மானபொற் சினகாத் தகம்பு குந்திறை
யூனமி லனுஞைபெற் றுயர்ந்த வத்தகு
தானபுண் ணியாகவா சனஞ்செய் திட்டபின் உ௩

புரிதரு கௌவியம் பூசித் தாரஞு
ரரிதரு மமிர்தமோ ரைந்தும் போற்றுபு
பரிதரு கும்பமொன் பானி பீஇத்தொழு
தெரிதரு காரிய மியல்பி ஞற்றியே உச

தூயவைங் கரன் முதற் றுவார வானவ
ராயவர் பூசனை யன்பி ஞற்றுபு
காயவக் கருக்கிர கம்பு குந்தொரு
நாயகன் குறிமணல் கொடுந வின்றுபின் உரு

வே று.

புரைதவிர வரநதியைப் பூசித்துப் பூதசுத்தி
யுரைநிறவு தானசுத்தி யோவாமந் திரசுத்தி
வரைவிறிர வியசுத்தி யிலிங்கசுத்தி யெனமாண்டோர்
கரைதருமைஞ் சுத்தியையுங் கரிசினூற் படியியற்றி உசு

தழியவிதி பாத்தியமா சமனமருக் கியம்பண்ணி
மொழிதருமா தாரசத்தி முதற்சத்தி மண்டலமீ
றொழிவறப்பூ சனையாற்றி யுரைக்குமா வாகனமும்
பழிதவிருந் தாபனமும் பண்புமரு வுறப்புரிந்து உஎ

எண்ணியவை யாறதன்மே லெட்டங்க நியாசமெனும்
புண்ணியபூ சனையாற்றிப் பொருவில்சந் நிதானமொடு
கண்ணியசந் நிரோதமுங் காணுமவ குண்டன்மு
நண்ணியவாற் றுபுதேனு முத்திரைமுன் பலநல்கி. உஅ

தக்கவகை பாத்தியா சமனவருக் கியங்கொடுத்து
மிக்கவிம் பலமுழங்க விரைத்தயில மாநெல்லி
நக்கவரி சனமானங் தைந்தமிர்த நறுநெய்பா
றொக்கதயிர் தேனயிரொண் சுவைக்கதலிபலாச்சூதம் உகூ

கழைநலிலி குசநரந்தங் காமர்மாது லைதமரம்
விழையிவற்றிற் கொளுஞ்சாறு விருப்பிளநீர் பதஞ்சந்து
குழைதபனங் கங்கைவில்வங் குழம்புசகத் திரதாரை
யுழையமருஞ் சிருங்கம்வலம் புரியுரைத்த முறையாட்டி ௩௦

ஆட்டுதொறு மிடையிடையே யவாய்ச்சுத்த நீராட்ட
லூட்டுநிவே தனமாதி நயக்கமுறை யாற்றியபி
னீட்டுதிரு வொற்றாடை யிட்டுயர்பொற் பரிவட்ட
மூட்டுமணங் கொளச்சாத்தி யுபவீத மெடுத்தணிந்து ௩௧

மணிமுடிபொற் குழைவாகு வலயம்வயி ரக்கடக
மணிகிளர்ம தாணிமணி யாழியரை நாணுதிக்
கணிதமில்பல் கலஞ்சாத்திக் கமழ்நீறு சாந்தணிந்து
பிணிசெய்நறு மலர்மாலை பிணையலொருடை முதற்புனைந்து ௩௨

வளமருவு நறுந்தூப மொளிர்தீப முறவயக்கித்
தளவரும்பிற் பொலிசுத்தோ தனம்பருப்புச் சார்பொங்கல்
குளம்விரவு சொன்றிகொழும் பாலடிசில் புளியன்னங்
களமில்செழுந் திலமூரல் கைக்கொள்ளு மரிசயினி ௩௩

ஒழுகுறுநெய் யயிர்மிதவை யுற்றததி மடைநறுங்குய்ச்
செழுவியபற் பலகருனை தீம்பாக ரிலட்டுகநல்
விழுமியமோ தகந்தோசை மென்பிட்டு மாடவடை
கொழுவிய வபூபமிள நீர்குளநீர் குலாங்கனிநீர் ௩௪

இலிகுசச்சா றளாய்த்தெளிமோ ரின்சுத்தோ தகமுதலா
நலிவருபற் பலவுமோவ் வொன்றுநபந்து நல்கியபின்
மலியுமருக் கியங்கொடுத்துத் தாம்பூல முகவாசம்
பொலிதரநல் கியபின்னர்ப் போற்றுதூ பங்கொடுத்து ௩௫

தெளியடுக்குத் தீபமுதற் றீபவா ராதனைக
ளொளிகுலவும் படியாற்றி யுற்றநறும் பூத்தூவிக்
களிசெய்நி ராஞ் சனஞ்செய் துகருப்பூர விளக்கெடுத்து
வெளியபருத் தியின்வித்தும் வேப்பிலையுஞ் சூழ்ந்தெறிந்து ௩௬

வெள்ளியநன் னீறணிந்து விளங்குதருப் பணங்கவிகை
வள்ளியசா மரையால வட்டம்வளி யெழுவிசிறி
தெள்ளியமற் றிவைவயக்கிச் செழுமலரக் கதைசாத்தி
யொள்ளியநல் லருக்கியமு முவப்பூற நல்கியபின் ௬எ

ஆயுமலர் பலவெடுத்தாங் கைந்தெழுத்து முறக்கணித்துத்
தோயும்வள முறச்சாத்தித் தொழுதெழுந்து வெளிவந்தாங்
கேயுமொரு தலத்திருந்தே யிதயத்துக் குறித்திருந்தா
டேயுவெழு குண்டத்திற் சிறுகுழவி யாய்நின்றாள் ௬அ

உள்ளத்துக் குறித்திருந்த வொள்ளிழைபாள் பின்னெழுந்து
கள்ளத்துத் தோயாத கண்ணுதறன் பிரசாதம்
வள்ளத்து முலைப்பாங்கி மார்முதலி யோர்க்குதவி
நள்ளத்து விதயோக நபத்தொடுந்தன் மனைப்புகுந்தாள் ௬௯

மருவுபெருந் தவம்புரிந்து மறைப்பரதன் பெற்றெடுத்த
பொருவுதவி ரிளங்கன்னி பூசைபுரிந் ததுபுகன்றும்
வெருவுதலி லிவள்பூசை மேதகவிற் செய்தவிட
மொருவுதலி றருத்தியென வொருபெயர்பெற் றதுபுகல்வாம் ௭0.

**அம்பிகை பூசைப்படல முற்றியது.**

ஆகப் - படலம் க௬ க்குச் செய்யுள் — ௬0௬.



## க௬-வது அம்பிகை பூசைப்படலம்.

எம்பெருமாட்டியாகிய அம்பிகை, எம்பெருமானை மணம் வாய்த்திடும் பொருட்டுப் பூசித்திடவேண்டுமென்று எண்ணங்கொண்டனள். அப்போது பாங்கியர் பற்பலர் சூழக் காவிரிஆடித்திருநீறுபூசி ஐந்தெழுத்தும் ஓதி அன்புடன் பூக்கூடைகொண்டு பூத்தோட்டஞ் சென்று பூக்கள் தளிர் முதலிய எல்லாங்கொண்டு காவிரியைக்கிட்டி, நல்லிடத்து வைத்தனள். ஆங்கே காவிரி நடுவில் மணல்மேடு விளங்குவது கண்டனள். அதில் கருக்கிருகம், மண்டபம், மதில், கோபுரம், மடைப்பள்ளி, திருக்குளம், கிணறு முதலிய எல்லாம் பொருந்துற அமைத்து அருக்கிய வட்டில் முதலிய கூட்டி அடிசிற் பாகங்கள்

அமையப் பலவுஞ் சேர்த்தனள். நீராட்டற்குரிய பொருள்கள் பலவும் அமைத்தனள். எல்லாம் நிறைந்த பின்னர் அம்பிகை பின்னரும் நீராடித் திருநீறிட்டு, ஐந்தெழுத்தோதி அத்திருக்கோயிலை வலம் வந்து திருமுன்னர் வந்தனள். ஆங்கே புண்ணியாகவாசனஞ் செய்து பஞ்ச கௌவியம் பூசித்து ஒன்பது நிறைகுடங்கள் நிறுத்தித் தீவளர்த்து அதற்குரிய செயல் முற்றுஞ் செய்து பிள்ளையார் முதலியோரைப் பூசித்துக் கருக்கிரகத்துள் புகுந்து தமது இறைவன் திருவுருவமாகிய சிவக்குறியாகிய இலிங்கத்தை மணல் கொண்டியற்றினள். அதன்பின்னர்க்காவிரியை வழிபாடுசெய்து, ஐவகைச் சுத்தியுஞ்செய்து அருக்கியம், பாத்தியம், ஆசமனஞ்செய்து ஆதாரசக்திமுதல் சத்திமண்டலம் முடியப் பூசித்து ஆவாகனம், தாபனம், அவகுண்டனம் செய்து தேனு முத்திரை முதலியன கொடுத்துப் பாத்திய ஆசமனம் அருக்கியங் கொடுத்து இயங்கள் பல ஒலிக்க மணங்கமழெண்ணெய், நெல்லி, மஞ்சள், ஆனைந்து, ஐந்தமுது, நெய், பால், தயிர், தேன், சர்க்கரை, கருப்பஞ்சாறு, எலுமிச்சை, நாரத்தை மாதுளை முதலியவற்றின் சாறு, இளநீர், சந்தனக்குழம்பு, வில்வக்குழம்பு கங்கையாகிய இவற்றைக் கொண்டு சகத்திரதாரை, கொம்பு, வலம்புரிச்சங்கு, முதலியவற்றால் ஆட்டினள், ஆட்டுந்தொறும் இடையிடையே நன்னீரும் ஆட்டினள். அதனோடு அமுது அறிக்கைசெய்து பின்னர் ஒற்றுடை, பரிவட்டம், முப்புரிநூல் முதலியன அணிந்து அணிகள், பூமாலைகள் இட்டு நறும்புகை, விளக்கு எடுத்து அன்னமுதலிய உண்டி வகைகளெல்லாமும் அமைவுற வைத்து அறிக்கைசெய்து அருக்கியங் கொடுத்து முகமணமாகத் தாம்பூலம் வைத்துத் தூபங்கொடுத்து அடுக்கு விளக்கு முதலியனவாக ஆராதனைகள் செய்தனள். பின்னர்ப் பூக்கள் தூவிச் செந்நீராஞ்சனஞ் சிறப்புறச் செய்து கர்ப்பூர விளக்குங் காட்டினள். பருத்தியின் விதையும், வேப்பிலையுஞ் சுற்றி யெறிந்து திருநீறிட்டுக் கண்ணாடி, குடை, வெண்சாமரம், ஆலவட்டம், விசிறி முதலியன காட்டி, வெள்ளரிசி சாத்தி அருக்கியங்கொடுத்து, மலரெடுத்து அதை ஐந்தெழுத்தோதிச் சாத்தி வணங்கித் துதித்து வழிபாடு முடித்தனள். முடித்தபின்னர் அம்பிகை ஓரிடத்திருந்து இறைவனை உள்ளத்தே நினைத்து எழுந்து எம்பிரான் பிரசாதத்தை அங்கெல்லோர்க்கும் வழங்கித் தன்னிருப்பிடஞ் சேர்ந்திருந்தனள்.

கசு-வது அம்பிகை பூசைப்படலம் முற்றியது.

---

## கஎ-வது திருத்துருத்திப் படலம்.

ஈசனை நெற்றி நாட்டத் திறைவனை யிஞ்சி சுட்ட
வாசனைப் பரதன் கன்னி யம்பிகை யென்பா ளன்பிற்
பூசனை புரிந்த தோர்ந்தேன் புகலுதி யப்பா லென்று
வாசனைக் குழலாள் கேட்க வகுத்திடுந் தரும சன்மன். க

அதிர்கடன் ஞால மேத்து மம்பிகை வழிநா ளிற்செங்
கதிர்விழித் தெழுதன் முன்னங் கண்விழித் தெழுந்து பைந்தோள்
வெதிர்புரை யிகுளை மாதர் விரைந்தனர் சூழச் சென்று
முதிர்புகழ்ப் பொன்னி யாடி முருகல ராதி யீட்டி உ

முன்னைநா ளென்ன வாங்கே முதல்வனைப் பூசை யாற்றித்
தன்னையீன் றவர்வா ழில்லந் தனையடைந் தனளிவ் வாறவ்
வன்னையோ ரெழுநாட் பூசை யாற்றினளெட்டா நாளிற்
கொன்னையா தரத்தி லிங்கந் தாபிக்கக் குறித்தா ளன்றே ங

மங்கையா ருளந்தேர்ந் திஞ்சி மங்கையார் மழுமா னேந்துஞ்
செங்கையார் நடனஞ் செய்யுஞ் செங்கையார் சடில மோலிக்
கங்கையார் மலைரான் றந்த கங்கையார் கடன்முன் னல்கு
பங்கையார் மிடற்று ரொன்று பன்னிரு ரதிச யிப்ப ச

மதிநுதல் வகுத்த வாறே மதில்பொற்கோ புரநீர் வாவி
துதிகருக் கிரக மானஞ் சூழுறை தேவர் கோயில்
பதியுமற் றெவையுஞ் சிற்பப் படிகருஞ் சிலையா னுக்கி
யெதிரறு தான்மு னங்கோ ரிலிங்கமா யமர்ந்தா னன்றே ரு

மின்படு சடில மோலி வித்தக னென்றுந் தீரா
வென்பவ முழுது மாய்த்திட் டின்பவீ டளிக்கு மைய
னன்பர்கள் குறித்த தேத்தே யாலயம் விடாது கொள்ளிற்
றன்பரை குறித்ததேத்துத் தளிகொளா தொழிவான் கொல்லோ சு

விடியலி னெழுந்து போதும் வேதியன் புதல்வி வாமத்
தொடிகெழு தோளுங் கண்ணுந் துடித்தன வதனை யோர்ந்து
முடிவரு மிகுளை மார்க்கு மொழிந்தன ளவர்கை கூப்பிப்
படியினம் பெருமா னின்றே பண்ணுவ னருள்கா ணென்றார். எ

மாக்கடற் பிறந்த கோதை வாணியிந் திராணி யாதிப்
பூக்கமழ் குழலார் யாரும் பூரணன் பூசை யாற்றி
யேக்கடி விழியுந் தோளு மிடந்துடித் திடப்பெற் றன்றோ
பாக்கிய மனைத்தும் பெற்றா ரெனப்பகர்ந் தனராற் பின்னும் ௮

வாங்கியன் மருங்கிற் சீர்க்கும் மயிலிளஞ் சாயற்கன்னி
பாங்கியர் வார்த்தை கேட்டுப் பகருதற் கரிய வோகை
தாங்கிய மனத்த ளாகித் தம்பிரா னருளே யுன்னி
வீங்கிய புனற்கா வேரி வியனதி குறுக வந்தாள் ௯

இளங்கதி ருதய மென்ன வெறிசுடர்க் கனகமானம்
வளங்களுண் மணிபொன் னுய மணிசெய் கோ புரமுன் னுன
விளங்குபல் லுறுப்புந் தாங்கி மேயவா லயநேர் கண்டா
டுளங்கலி லுவகைபொங்க விம்மிதந் துளும்ப நின்றாள் ௧0

அதிசய மிதுவா மென்றே யடைந்தனள் குறுகி நோக்கி
மதிமுடிப் பெருமான் மேய விலிங்கத்தின் வடிவுங் கண்டாள்
பொதிகளி யுததி மூழ்கிப் பொற்றொடிச் செங்கை கூப்பிக்
கதிமுத திருமுன் றாழ்ந்து கண்கணீர் பெருக்கி னளே ௧௧

அன்றொரு கம்பை யாற்றி னருச்சிக்க வச்சஞ் செய்த
குன்றொரு சிலையெங் கோமான் குறித்தமை கருத்திற்றேரே
மின்றொரு பொன்னி யாற்றி னருச்சிக்க விரும்பூ தோடு
துன்றொரு மகிழ்ச்சி செய்தா னவன்றொழில் சொலவல் லார்யார் ௧௨

கெண்டையங் கருங்கட் செவ்வாய்க் கேழ்கிளர் மறையோன் கன்னி
பண்டையிற் பொன்னி யாடிப் பஃறிர வியமுங் கொண்டு
கண்டைவெள் விடையான் மேய காமரு குறிபூ சித்துத்
தொண்டையங் கனிவா யாரத் துதித்தன ணிற்குங் காலை ௧௩

பிரிவினை யஞ்சி வல்லே பெயர்ந்தெழுந் தருளு வான் போற்
புரிவினைப் பிரம்பொன் றேந்திப் பொலியிலிங் கத்து நின்று
மரிவினை செய்யு மைய னருளினுல் வெளியே வந்து
திரிவினை யடையா ன்மைகசங்கையைப் பிடித்தா னன்றே ௧௪

அறங்குடி கொள்ளு மங்கை யடியரேம் பாசம் போக்கு
மறங்குடி கொள்ளு மங்கை பற்றலு மங்கை தாழ்ந்து
நிறங்குடி கொள்ளுங் கோல நிலாமருப் புடையாய் நூலின்
றிறங்குடி கொள்ளு மாமுற் செப்பிய தியற்றல் வேண்டும் கடு

என்றவ ரனுஞை நல்கி யிரிதரா மகிழ்ச்சி யெய்தச்
சான்றவர் துவன்றி யேத்தத் தரைமுத லுலகின் பெய்த
வான்றவர் புகழ்ந்து பாட வருமணம் புரிந்த பின்றை
வான்றவர் சிலையா யென்கை பிடித்திடல் வழக்கே யென்றாள் கசு

விதிவிலக் கில்லா மேனும் வியனுல குயிர்க ளுய்வான்
விதிவிலக் குரைத்து ளேம்பாம் விரித்தமை காட்டே மேலவ்
விதிவிலக் குறழ்ந்து மாறு மாதலால் விதித்த வாறே
விதிவிலக் கொருமெய் தாங்கிவேட்பதே துணிந்தே மின்னும் கஎ

சொன்னவா றறியு மாற்றாற் சொன்னவா றறிவா ரென்றோர்
பன்னவா நாமம் பூண்டேம் பாரிலிந் நாமஞ் சொல்வோ
ரென்னவாழ் வேனுமோரு றிலாதடைந் தின்பந் துய்ப்பார்
முன்னவாம் பாவமெல்லா முருக்குமிந் நாம மொன்றே கஅ

எறிதிரைப் பொன்னி யாற்றி னிடைக்குறை யாமித் தேத்து
முறிவறக் கோயில் கொண்டு முனிவினின் பூசை யேற்றே
மறிவுறு வொருநா மற்றாற் றுருத்தியென் றறைய விந்தச்
செறிதல மொருபேர் பூண்டு செழித்திடு மெந்த ஞான்றும் கக

துருத்தியென் றொருகாற் சொல்வோர் தூயகம் முலகஞ் சேர்வார்
துருத்தியைக் காணப் பெற்றார் தூயநஞ் சமீபத் தேய்வார்
துருத்தியை யுள்ளத் துள்வோர் துலங்குநம் முருவங் கொள்வார்
துருத்தியுள் வசிப்போ ரெல்லாந் துணிந்துநம் மொடுநே லப்பார் உய

வில்லிய னுதலாய் நீயோர் மென்மழ வுருவிற் றோன்ற
வில்லியல் குண்ட மிட்டு மகஞ்செய்த மேன்மைத் தானம்
வில்லிய னல்லூ ரென்றோர் பெயர்பெறீஇ விளங்கு மேரு
வில்லிய னுமு மாங்கு விடாதமர்ந் திருப்போ மென்றாம் உக

வில்லியல் குண்டந்தா ேனார் மேதகு தீர்த்த மாகி
நல்லிய னனிவாய்ந் தோமக் குளமென நாமம் பூண்டு
மெல்லிய லதனுண் மூழ்கி யுத்தர மேய நந்த
மெல்லியல் குறிபூ சிப்பா ரெய்துவர் நினைத்த வெல்லாம் உஉ

என்றினி தருளி யந்த விலிங்கத்துட் புக்கானை
னன்றினி தாயிற் றென்று நங்கையுண் மகிழ்ச்சி யெய்தித்
தோன்றினி தாற்றும் பூசை போன்மற்றுந் துணைந்து செய்து
கன்றினி தொலிக்கச் செங்கை குவித்தனள் கசிவு தோன்ற உங

ஆயதோர் காலந் தன்னி லம்பிகை பூசை செய்த
நேயமார் தானந் தானே நிலவு பொற் கோயி லாக
மேயதோ ரிலிங்க மாங்கு வெளிப்பட வென்றல் கேட்டுப்
பாயநா னிலத்துளாரும் பரதனோ டடைந்து பார்த்தார் உச

பார்த்தனர் பேரா னந்தம் படைத்தனர் புளகப் போர்வை
போர்த்தன ரிறும்பூ துற்றார் புண்ணிய மிருந்த தென்னென்
றார்த்தன ரங்கை கொட்டி யாடினர் பிறவிப் பாசந்
தீர்த்தனர் பரதன் செல்வி சேவடி பணிந்தார் யாரும் உரு

பராவருட் பரதன் றானுஞ் சுபத்திரை யென்னு மாதும்
பிரானருள் வலியா லுன்னைப் பெறுதுபெற் றெடுத்தார் நீயுந்
தராதலம் வியக்கு மாறு சமையாது சமைத்தா யந்த
வராவணி சடையான் கோயி லற்புத மென்றார் பின்னும் உசா

யாவரு மிவ்வா றோதித் தத்தமி லெய்தி வாழ்ந்தார்
மூவரும் புகழ மேய மூவரும் பெருமான் பாங்கர்த்
தாவரும் விடைபெற் றில்லஞ் சார்ந்தனண் மறையோன் செல்வி
தேவரும் பரிற்பூ மாரி சிந்தினர் புடவி போர்ப்ப உஎ

மறையவர் குலத்துத் தோற்ற மருவிய செல்வி பூசைத்
துறைபெறப் புரிந்த தானந் துருத்தியென் றொருபேர் பெற்ற
முறையினி துரைத்தா மந்த முற்றிழைப் பசுங்கொ ழுந்தை
இறையவன் வதுவை செய்யுந் திறமினி யெடுத்துச் சொல்வாம் உஅ

திருத்துருந்திப்படலம் முற்றியது.

ஆகப்படலம் கள க்குச்செய்யுள் கூஙஉ

## கஎ-வது திருத்துருத்திப் படலம்.

முதல் நாள் பூசித்த அம்பிகை மறுநாள் காலையில் எழுந்து தனது தோழியர்களுடன் சென்று பொன்னியென்னும் காவிரியில் மூழ்கிப் பூக்கள் முதலியன கொண்டுவந்து முதனாட்படியே இறைவனைப் பூசித்துத் தன்னைப்பெற்ற பரதன் மனையிற் சென்றனள்.

இப்படியே அந்த அம்பிகை ஒரு நாளைப்போல் ஏழுநாட்களும் முறையே பூசித்தனள். எட்டாநாளில் அம்முறையே எம்பெருமானுடைய குறியாகிய சிவலிங்கமொன்று நாட்டத் துணிந்தனள். அந்த அம்மையின் உளத்தை உணர்ந்த சிவபெருமானர் வியப்புற ஒரு திருவிளையாடல் புரிந்தனர். முன்னர் எம்பெருமாட்டி வகுத்த திருக்கோயில் போலவே கருங்கல்லால் மதில், கோபுரம், திருக்குளம், கருக்கிருகம் முதலிய எல்லாந் தோன்ற அதில் எம்பெருமானர் இலிங்கவடிவமாய் அமர்ந்தருளினர். ஆனல் அன்பர் விரும்பிய இடத்தில் எழுந்தருளுகின்றவர். தன் சத்தியான இறைவி, விரும்பிய இடத்து இடங்கொள்ளா திருப்பரோ? இவ்வாறு எழுந்தருளினமையால் எம் பெருமாட்டி விடியற்காலையில் எழுந்திடும்போது தோளும் கண்களும் இடந்துடித்தன. இதனைக்கருதி எம்பெருமாட்டி தன் தோழிமார்களுக்குச் சொல்ல அவர் இன்று இறைவன் அருள்புரி வானென்றார்

அதுகேட்டு எம்பெருமாட்டி மிகமகிழ்ந்து எம்பெருமான் அருளையே நினைத்துக் காவிரிக்கரையில் வந்தனள். அதுசமயம் கோபுர முதலான உறுப்புக்கள் அமைந்த கல்லாலயம் தோன்றக்கண்டு வியந்து நின்றாள்.

அதன்பக்கலின் அணுகச் சிவக் குறியையுங் கண்டுகளிப் பெனுங்கடலில் ஆழ்ந்திக்கண்கள் நீர்சொரியக் கைகுவித்துக் கடவுளின் திருமுன் விழுந்து வணங்கி நின்று அன்று கம்பை யாற்றில் அடியனேன் அருச்சனை இயற்ற அச்சத்தை உண்டாக்கிய எம் இறைவன் இன்று இக்காவிரியாற்றில் அடியேன் வழி படுதற்கு அளவில்லாத மகிழ்ச்சி அடைய அருள் செய்தனன். இதனல் எம் இறைவன் திருவுளத்தை எளியேன் எங்ஙனம் அறிவேனென்று முன்போல் காவிரியிற் படிந்து பற்பல பொருள்கள் கொண்டு அச்சிவலிங்கப் பெருமானை முறைப்படி வழி பாடு இயற்றி வாயார வாழ்த்தி நின்றாள்.

அவ்வாறு துதித்து நிற்குங் காலையில் சிவபிரான் உமையாள் பிரிவுக்கு அஞ்சி விரைந்து வருவான்போல் பிரம்பு ஒன்றேந்தி அச்சிவக் குறியினின்றும் வெளியே வந்து, அம்பிகையின் செங்கையைத் தமது திருக்கரத்தால் தீண்டியருளவே, அம்மையார் விழுந்து வணங்கி 'ஐயனே! நூல்களின் விதிநிலைபெற ஆதியில் திருவாய்மலர்ந்தருளியதே இயற்றுதல் வேண்டும்.

பெற்ற தாய் தந்தையர்கள் எனக்கு விடைதந்து அவர்கள் பெரு மகிழ்ச்சி எய்தவும், பெரியாரெவரும் புகழ்ந்திடவும், மண்ணுலகத்தி லுள்ளவரும் விண்ணுலகத்திலுள்ளவரும், இன்புறவும், என்னை மணம் புரிந்த பின்னரே என்கையைப் பிடித்தல் வழக்காகுமென்றனள். எம் பெருமானும் பெண்ணே! விதிவிலக்கில்லாத யாம் இவ்வுலகில் விதி விலக்கை விதித்தேம். யாமே விதித்தவற்றைக் காட்டாவிட்டால் விதி விலக்குகள் மாறுபாடு அடையும். ஆதலால் விதிவிலக்கை உன்னி மணஞ் செய்வதைத் துணிந்துள்ளேம். சொன்னதன்மையை அறிந்த படியால் நாமும் "சொன்னவாறறிவா" ரென்னும் பெயரும் பூண்டுளோம் இப்பெயரைச் சொன்னவர் எந்தச் செல்வத்தையும் பெற்று இடையூறு சிறிதுமின்றி இன்பம் நுகர்வார். முன்னுள்ள பாவங்கள் அனைத்தையும் இப்பெயரொன்றே இகந்திடும். இந்தக் காவிரியாற்றின் நடுவில் திருக் கோயில்கொண்டு பூசையேற்றபடியால் இத்தலங் "திருத்துருத்தி" யென் னுந் திருப்பேர் எக்காலத்தும் எய்தா நிற்கும், அதனை ஒருமுறை சொல்லுவோர் நமது உலகத்தை அடைவர், இதனில் வாழ்வார் நம்மைக் கலந்தின்புறுவர். பெண்ணே! நீ தோன்ற விற்குண்டமிட்டு வேள்விசெய்த இடம் வில்லிய நல்லூரென்று விளங்கும். அத்தலத்தில் யாம் விடாதென்று மிருப்போம். அக்குண்டமும் ஓமக்குளமென வழங்கும். அதில் மூழ்கி ஆங்கே நம்மைப் பூசிப்பவர் நினைத்த எவையுமெய்தி இன்புறுவரென்றருளிச்செய்து எம்பெருமான் அந்தச் சிவக்குறியிலேயே அடங்கி நின்றருளினர்.

அதுகண்ட எப்பெருமாட்டியும் முன்போல் வழிபாடு முடித்துத் திருக்கைகூப்பி வணங்கினள். அப்போது அம்பிகை பூசித்த தலம்திருக்கோயிலாகவும், ஆங்கே ஓர் சிவக்குறி தோன்றிடவுங்கேட்ட பரதர் முதலாயினவர் வந்து பார்த்து வியந்து மயிர் சிலிர்க்கப் புண்ணியம் புகழ்ந்து புகலவொண்ணாத இன்பத்தை எய்தினர். அதன் பின்னர் யாவரும் எப்பெருமாட்டியை நோக்கி அன்னாய்! நின்னைப்பெறத்

தவஞ்செய்த இப்பரதன் சுபத்திரை இருவருஞ் சிவனருளால் நின்னைப் பெருது பெற்றனர். நீயும் இவ்வுலகம் வியக்குமாறு இத்திருக்கோயிலைச்செய்யாது செய்தனை! இதுவே வியப்பாமென்று வணங்கித் தமதில்லிடஞ் சென்றிருந்தனர். அம்பிகையும் எம்பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு தேவர் பூமாரி பொழியத்தாய் தந்தையருடன் தனது இருப்பிட மெய்தி இருந்தனள்.

## கள—வது திருத்துருத்திப்படலம் முற்றியது.

---

## கஅ-வது திருமணப் படலம்

அருமறை முடிக்கு மெட்டா வண்ணலார் பூசை யாற்றி
யிருமுது குரவ ரோடு மில்லத்திற் புக்க கன்னிப்
பருவவொண் கொடிக்கு மேலானடந்ததென் பகர்தி யென்று
பொருவரு மனைவி கேட்கப் புகன்றிடுந் தரும சன்மன் க

சொற்றவா முடித்த லெண்ணிச் சுருதியா யிரமும் போற்றும்
விற்றவாக் கயிலை மேய வித்தகன் கருணை மூர்த்தி
கற்றவான வர்சூழ் நந்தி காமரு வதன நோக்கி
யுற்றவா தரமீக் கூர வுரைத்திட லுற்றான் மன்னோ உ

நந்திகேள் சென்னி நாட்டு நற்றவப் பரதன் பாற்போ
யந்திவா னிறத்தேங் கன்னி மணஞ்செய வடைவா மென்று
முந்தியாதரத் திற்கூறி மொழியவன் மனைமுன் னோர்தம்
புந்திதேர்ந் தடைதி யென்றான் புத்தியென் றிறைஞ்சிப் போனான் ங

மறைக்குலப் பரதன் மாட வாயின்முன் னடைந்தா னாக
விறைக்கிரண் டாவ தென்னு மெம்பிரான் வந்தா னென்று
நறைக்குழன் மனைவி யோடு நல்வர வேற்றுத் தாழ்ந்து
முறைக்கியை முகம னெல்லா முனிவறச் செய்து போற்றி ச

வந்தகா ரியமென் னென்று மாதவத் தவன் வினவச்
சந்தமார் கயிலை மேய தம்பிரா னினது கன்னி
யந்தண்மா மணஞ்செ யும்பாக் கணைகின்றா னதுதெரிக்க
முந்தநான் வந்தே னென்று மொழிந்தன னெங்க ளையன் ரு

மொழிதலு முவகை விம்ம முகமலர்ந் தெழுந்து போற்றிப்
பழிதபு கூத்து மாடிப் பாக்கியம் யான்பெற் றேனென்
றெழிவரும் பேரானந்த முற்றனன் பரத னொள்வேல்
விழியவன் மனைவி போற்றி விளம்புத லுற்று னீது ௬

அடிகளென் பெண்ணை வேட்பா னவாயெழுந் தருளுங் காலை
முடிபல சேர்த்துக் கோத்த முடைத்தொடை கேசப் பூணூல்
கொடியவெவ் வராக் கலங்கள் கோலக்கொம் பாமை யோடு
வடியவெஞ் சூலந் தண்ண முதலிய வனைத்து மாற்றி எ

மணிமுடி குழை கேயூர மதாணி முற்பல்ல தாங்கி
யணியிளங் கதிரின் றேற்ற மாமெனக் கோடி காமர்
துணிபினே ருருக்கொண் டென்னத் துலங்கொரு வடிவங் கொண்டு
தணிவற வருதல் வேண்டுஞ் சாற்றுவ துண்டா லின்னும் அ

இத்தகு வடிவந் தாங்கி யிங்கெழுந் தருளாநிற்கு
முத்தமங் கண்டா லன்றி யுவப்புறு தென்னெஞ் சென்னச்
சுத்தமெய்ஞ் ஞானனந்தச் சுயம்பிர காசத்தைய
னத்தக வாகு மென்றே யருளின னெழுந்து போனன் ௯

வெள்ளியங் கயிலை மேவி விமலனு ரடியிற் றாழ்ந்து
வள்ளிய மறையோ னேகை வண்ணமு மவனில் லாடன்
றெள்ளிய கருத்துங் கூறித் திகழ்தர வவ்வாறேக
லொள்ளிய தாகு மென்றே யுரைத்தினி தமர்ந்தான் மன்னே ௧0

செவ்விய வுமையை வேட்பான் றிருவுளத் தெண்ணங் கொண்டு
கெளவிய மாடு மையன் கணங்களுட் டலைமை பூண்ட
வவ்விய மவித்த நந்தி யண்ணலை நோக்கி யின்னே
தெவ்விய மகிழ்ச்சி யாரும் வருவியென் றருளிச் செய்தான் ௧௧

தேவர்தம் பெருமான் வார்த்தை சென்னியிற் சுமந்து போற்றி
யாவரும் புகழநிற்கு மெங்குரு மரபிற் கெல்லா
மேவருந் தலைமை வாய்ந்து மிளிர்முதற் குருவா யுள்ளோன்
மூவருஞ் சிலரை யார்க்கு மொழிதர வேவி னனே ௧௨

க்ணங்களுட் சில்லோர் சென்று கண்ணுதன் மணஞ்செய் மாற்ற
மிணங்குற வுரைத்த லோடு மிகலரு மூவகை கொண்டு
வணங்கின ராடிப் பாடி வாழ்த்தின ரூர்தி மேற்கொண்
டுணங்கரு மெழின்மின் ஞரோ டொய்யென வருவா ராஞர் கங

கேடரும் வலிசால் காலாக் கினியுருத் திரர்கூர் மாண்ட
ராடக ரண்டத் துச்சி யமர்பவர் சிருட்டி தேற்றத்
தோடவிழ் மலரோ னெற்றித் தோற்றமுற் றவரன் ஞராற்
பாடமை தரவெ ழுந்து பரவுருத் திரர்கள் பல்லோர் கச

சிறுவிதி மகஞ் சிதைத்த திறலின ரறங்காப் பாளர்
மறுவறு வலிசால் பல்ல வயிரவர் மாற்று ரென்னிற்
கொறுகொறுத் தெழுகூர் நேமிக் குடங்கையார் கொழுந்தேன் பில்கு
நறுமலர் மிசையார் செங்கை நகுசத கோடி யுள்ளார் கரு

ஏழுநா வுடையா ஞதியெழுவர்கிம் புருடர் சித்தர்
தாழுமா மோலி விச்சா தரர்வலி யுரகர் நாகம்
போழுமா கருட ரோர்காற் பொலஞ்செய்கூ விரத்திண் டேரார்
வாழுமா மதியோன் மற்றும் வானவர் கணத்தி னுள்ளார் கசு

மேருமந் தரமுன் ஞன வெற்புக ளுவரி யாதிச்
சாருமேழ் கடல்க டிக்கு விதிக்கடல் சாலெண் வேழ
மோருமெண் ணுகங் காலம் யுகங் கணங் கடிகை யெங்கு
மீருமா மறைநூ லோங்கு மாகம புராண மங்கம் கஎ

நதிநதம் வருண மாச்சி ரமநகு முனிக ணத்தர்
திதிமகார் நிருத ரேனைத் தீவம்பல் புவனத் துள்ளார்
பொதிதரு களிப்பின் வந்து புகுந்தனர் போற்ற லோடு
மதியவ ரவர்க்குத் தக்க வகையருள் புரிந்தா னையன் கஅ

துண்ணென வெழுந்து போந்து சுபத்திரை கருத்து வாய்ப்ப
விண்ணவர் குடைதற் கொல்லா வெள்ளியங் கிரிவடாது
புண்ணிய தீர்த்த மூழ்கிப் பொருசிலை காமர் கோடி
எண்ணியொருருக்கொண் டென்னவுருவங்கொண்டெழுந்தானண்ணல்

கட்டழ குடைய னுய காமனை யெரித்த காலை
யுட்டவ ழுவகை யின்றி யுலகர்கண் ணெடுத்துக் கூறப்
பட்டவெம் பழியை மாற்றப் படியாமொன் றெடுத்த தேய்க்குஞ்
சிட்டர்கள் புகழு மையன் றிருவுருக் கொண்ட காட்சி உ0

பனவர்தங் குலத்து மாதர் பயன்படா வுருவங் கொண்டா
னனகனென் றுரைக்கு மைய னுவதென் னெனலொ ழிந்து
பனவர்தங் குலத்து மாதர் பயன்படு முருவங் கொண்டா
னனகனே யினைய னென்றற் கமைந்த தவ்வுருவத் தோற்றம் உக

பண்டைநா ளொவ்வொ ரேதுப் பற்றியே ரொழுகக் கொண்ட
வொண்டையா வுருவ மெல்லா மித்திரு வுருவ நோக்கி
யிண்டையா தரிக்குஞ் செங்கே ழிளங்கதிர் வட்ட முன்னர்த்
தொண்டையா ளுதற்குங் கூடா வுடுவெனத் தோற்ற வன்றே உஉ

குலவுதன் கருணை யாலே கொண்டலங் கண்டத் தைய
னுலவுநன் மாமை சொட்டு மோருருக் கொண்ட தோர்ந்து
கலவுமா லயன்முன் னோரும் பெண்ணுருக் காமுற் றூரே
னிலவுவெண் ணகைமின் னார்தாம் படும்பாடு நிகழ்த்தற் பாற்றே உஙு

விதியவன் படைத்தன் மாயோன் காத்திடல் வேண்டா னுய
பதிசுவேச் சையினுற் கொண்ட திருவுருப் பண்பு கொண்டவ்
விதிமுத லமர ரெல்லாம் விருப்பொடு தாழ்ந்தெ ழுந்து
பதியுளத் துவகை பூப்பப் பரவரு ளேற்று நின்றார். உச

வடவயிற் றீர்த்த மூழ்கி வயங்குமோ ருருவந் தாங்கித்
தடநெடுங் கோட்டு நின்ற தம்பிரான் மேனி முற்று
மிடமலி திருவொற் றாடை யிட்டீரஞ் சில்லோர் போக்க
மடனகல் சுந்த ரப்பேர் வள்ளல்வட் டசைநீ றிட்டு உரு

மணிகெழு செம்பொன் செய்த மண்டப மொன்றுட் புக்கான்
கணிதமின் மணிப்பொற் பூணுங் கனகமென் றுகிலும் வாசத்
தணிகெழு கலவைச் சாந்து மலங்கலும் பிறவுங் கொண்டு
பணியணை மிசைப்ப டுக்கும் பகவனுங் குற்று னன்றே உசு

பொர்துவமர் புலியும் பாம்பு மல்லவாம் புலியும் பாம்பு
முதுபிணக் கடைந்து தேம்ப முதிரொளி விரித்தல் செய்யும்
புதுமணிக் கலைபு னைந்து பொன் செய்து மணியி ழைத்த
வுதுகிக ராமென் றோது முதரபந் தழுமி யைத்து உஎ

மறையவன் பயந்த தெய்வ மங்கைகைப் பற்றுங் காலைக்
குறைபெறு கங்கை வந்து குருமுடி யேறு வண்ண
நிறைதரு காப்புச் செய்ய நீர்மையிற் செம்பொன் செய்து
கறையறு மணிகால் யாத்த கவின் முடி முடியிற் சேர்த்து உஅ

தள்ளிய வழற்கண் வாழுந் தானத்தை விடுவ லோவென்
றுள்ளியங் கடையு மேன்மற் றெண்முக நாட்டம் போலத்
தெள்ளிய மணச்சீர் நோக்குந் திறமவா மதுசே ராம
லொள்ளிய காப்புச் செய்தாங் கொண் ணுதற் பட்டம் வீக்கி உகூ

திருமுக வட்டங் கண்டு செழுங்கலா வட்ட மென்று
பொருவரு முடுக்க ளெண்ணிப் போய்த்தெளிந் தெய்தத் தம்மு
ளிருவரை யேவப் பாங்க ரிருந்தினி தாய்த லென்ன
வொருவற விருசெ விக்கு மொளிகெழு வயிரங் கோத்து ௩0

கொடுவிடங் கொடுத்த தென்று கூறுமோர் பழிச்சொ னீங்க
வடுகதிர் மணிகட் கெல்லா மாகர மாயவாரி
படுபுகழ் நாளி தென்று படர்ந்தளித் திடப்பூண் டாங்கு
வடுவறு வயிரக்கட்டு வடந்திருக் கண்டஞ் சேர்த்து ௩க

தன்வலி யடக்கா நின்ற வீக்கத்தைத் தடைசெய் பாக்குப்
பொன்மலை கருத்துட் கொண்டு போற்றுந்தன் குலத்தை யேவ
முன்வரு மஃதெண் ணில்லா மணியொடு முற்றி யாங்குத்
தென்வளர் மணிக்கே யூரந் திருநெடுந் தோளிற் சேர்த்து ௩உ

இளங்கதி ருதய நாண வெறிசுடர் மார்ப நோக்கின்
வளங்கெழு கண்கூ சாமன் மான்மதக் கலவை சாத்தித்
துளங்கலி றிண்டோ ளென்னுஞ் சுடர்ப்பெரு வரையின் வீழுங்
களங்கமி லருவி யென்னக் கதிர்முத்த மாலை சாத்தி ௩௩

கோலத்தின் வெளிய கோடுங் கூர்மத்தின் கரியவோடுஞ்
சாலத்தின் பெருமை யெய்தித் தாங்கரும் வருத்தமெய்தி
ஞாலத்தி னுவமை யில்லா நகுகதிர் மணிம தாணி
யேலத்தின் ணியதாம் பல்ல வெடுத்தெடுத் தொழுங்கிற் சேர்த்து ருசு

மரைமலர்ப் புறத்தென் ஞேபல் வண்டுகள் மொய்த்த வென்று
திரையுல கதிசயிப்பச் செறிமணி யாழி கோத்திட்
டுரைகதிர் தசனங் காப்பா னுறவுகொண் டிடுதல் போலப்
புரைமணிக் கடக மாமை பொலியமுன் கையிற் சேர்த்து ருரு

நாறுசாந் தணிந்த கொங்கை நங்கையார் நயக்கு மாறு
வேறுவே றுயபல்பூத் தொடையெலா மிதப்பச் சாத்திக்
கூறுபூ ணூ லுஞ் சாத்திக் கொழுங்கதி ருத்தரீய
மாறுதீர் வண்ணஞ் சாத்தி மலர்க்கரங் குவித்து நின்றான் ருசு

வெள்ளியங் கிரியுங் கூட விரைந்தெழுந் தருளு மாபோ
லொள்ளிய விடைமுன் போத வோகையி னதன்மேற் கொண்டான்
றுள்ளிய முனிவ ரார்ப்புஞ் சுரர்முத லியர்தம் மார்ப்புந்
தெள்ளிய மறையி னார்ப்பு மெழுந்தன திசைக ளெல்லாம் ருஎ

ஒருமருப் பிருதாண் முக்க ணும்பன்மா முகத்தை நோக்கித்
திருமணஞ் செயநா மின்று செல்கையா னமக்கு முன்னீ
மருவொரு துணையாய்ச் சேறீ யென்றலும் வள்ளல் சொற்ற
வருடலைக் கொண்டவ் வைய னருகுமுன் னடத்திச் சென்றான் ருஅ

திருமலைப் புறம்போர் பாங்கர்ச் செய்தவப் பெருமை யெய்தி
யொருமலை யென்ன நின்ற வுத்தால தருவை நோக்கி
நிருமலை மணம்பொ ருட்டு நிலவு நாஞ் செல்லு மாற்றாற்
கருமலை தருநீ நம்பின் கவினிழல் செய்து வம்மோ ருகூ

வந்துநம் மெதிரி டப்பான் மன்னியெக் காலு நிற்றி
சந்துமென் மலர்கொண் டெம்மைத் தவாதுறத் தொழுவார் யாரு
முந்துநிற் றொழுவார் நீயு முன்னிய வணைத்து மீவா
யுந்துமிப் பணியே யென்று னுரைத்தவா றேற்ற தன்றே சுo

நன்றுநம் பெருமான் சொற்ற நற்பணி தலைமேற் கொண்டே
மின்றுநந் தவப்பே றென்னு யிருந்ததென் றுவகை யெய்திக்
கன்றுவெம் பிறவிப் பாசங் கழிந்துளே மென்று பின்னின்
றொன்றுபல் கிளையும் பூத்த வுத்தால நிழல்செய் தன்றே சக

முண்டக மலர்மே லானை முகுந்தனை வானங் காக்கு
மண்டனை மற்று முள்ள வமரரை நோக்கி யையன்
விண்டலம் புகழு நந்த மூர்திமேல் கொண்டு நந்தங்
கண்டையான் முன்னும் பின்னுங் கடவுமென் றருளிச் செய்தான் சஉ

அன்னரவ் வாறே தந்த மூர்திமே லமர்ந்து செல்ல
முன்னவ னொரு கோட் டும்பன் முன்னமா கூர்ந்து செல்லச்
சொன்னவுத் தாலம் பின்பு நிழல் செய்து தொடர்ந்து செல்ல
மின்னகு சடையெம் மையன் வெள்விடை நடாத்தி னானே. சந

முழங்கின முரசம் பம்பை முழங்கின தடாரி பேரி
முழங்கின முருடு தக்கை முழங்கின தகுணிச் சங்கண்
முழங்கின மொந்தை கல்ல வடமுழங் கினவு டுக்கை
முழங்கின வொருவாய்க் கோதை முழங்கின குடமு ழாவும் சச

கண்ணுதற் பெருமான் வந்தான் கயிலைமால் வரையான் வந்தா
னெண்ணுதன் மணாளன் வந்தா னொப்பிலா மூர்த்தி வந்தான்
விண்ணுதல் காளகண்ட வித்தகப் பிரான்வந் தானென்
றண்ணுதல் புரிபொற் சின்ன மற்புதத் தூதாநிற்க சரு

மறைமுடி யுணரான் வாழ்க மன்னுமா தேவன் வாழ்க
நிறைபரஞ் சோதி வாழ்க நின்மலப் பெருமான் வாழ்க
முறையினெவ் வுலகும் போற்று முழுமுதற் கடவுள் வாழ்க
விறையவன் வாழ்க வாழ்க வென்றுபன் முனிவ ரார்ப்ப சசா

திரிபுர மெரித்தா னென்றுஞ் சிலைமதற் காய்ந்தா னென்றுங்
கரியுரி போர்த்தா னென்றுங் காலனை யுதைத்தா னென்று
மரியுரு வடர்த்தா னென்று மந்தகற் கொன்று னென்றும்
வரிகழல் புனைந்தா னென்று மாகதர் வீரம் பாட சஎ

மதிமுடி யெடுத்து வைத்து மரணத்தை யொழித்த வாறுங்
கொதிவிட நுகர்ந்து வானோர் குழாத்தினைப் புரந்த வாறுந்
திதியொரு பசுவாய்க் கன்றின் றேம்புத லொழித்த வாறும்
பதிதரு கருணை மற்றும் பராய்ச்சில சூதர் பாட ௪௮

சுத்தமெய்ஞ் ஞான னந்த சுயம்பிர காசவீச
நித்த வாகாச தேச நிராலம்ப நிருவி கார
பத்தவற் சலவ தீத பாரபர வரவ னாதி
முத்தவென் றுரியந்தேர் முதுமொழிப் புலவர்பாட ௪௯

எவனிறை யெவனை வேத மெடுத்தியம் பிடுமெத் தேவா
லவனியா திகளுண் டாம்பல் லுயிரும்பார்க் கடிமை யாரிற்
றிவள்விதி வெளியாம் யார துடைமைபஃ றிருவும் யார்கண்
ணவமில யவனே நீயென் றருந்தமிழ்ப் புலவர்பாட ௫௦

புடைக்கொடி பல்ல சூழ்ந்து போற்றிட நாப்ப ணுகை
விடைக்கொடி பொலிந்து செல்ல விதந்திடு மேதி யெல்லா
மடைக்கல மென்று போற்றி யடிதொழு தேத்திச் சூழ
விடைக்கலங் காத வெற்றி யெய்துசூற் படைமுன் செல்ல ௫௧

தண்ணுமை முழங்கத் தாளந் தழங்கவேய்ங் குழ லிசைக்க
வெண்ணு மற் றையவு மாங்காங் கேற்புற முழங்கா நிற்கக்
கண்ணமை கையோ டேகக் கருத்துமக் கண்ணோ டேகப்
பண்ணமை யஞ்சொ னல்லார் பதம்பெயர்த் தெதிர்நின் றாட ௫௨

முழுமதி பொலிந்தா லன்ன முத்தவெண் குடையு மந்தச்
செழுமதிக் கதிர்க ளெல்லாந் திரட்டிவெவ் வேறு செய்தாங்
கொழுகொளிக் கவரிக் காடு முயர்கணத் தலைமை பூண்ட
வழுவறு தவத்தார் சில்லோர் தனித்தனி வயக்கா நிற்க ௫௩

வெள்ளிய முத்த மெல்லாம் விளிம்புறப் பொருத்தி மேன்மேற்
றெள்ளிய வினையிற் செய்த சிவிறிபே ராலவட்ட
மொள்ளிய கோணற் றண்ட மொலியல்கோ ணுத தண்டம்
வள்ளிய பிறவு மெங்கு மலிந்தன காடு செய்ய ௫௪

மகரதோ ரணங்கள் பிச்சம் வானவா றடைத்துச் செல்லப்
புகாருஞ் சங்கந் தாரை பொலிவயிர் பீலி மற்று
நிகரற முழங்கிச் செல்ல நெடுங்கடன் முகின்மு ழங்கந்
தகரவெம் முழக்கும் விஞ்சித் தவாதெழுந் தெங்கு மாக ருரு

இடையற லரிய வன்பி னிருந்தொண்ட ரிருகண் ணுங்
கடையுற லரியமுத்தங் கான்றுகை கொட்டி யாடப்
புடையுறு மமர ரெல்லாம் பொன்மலர் மாரி தூர்ப்ப
விடையெனுங் கடவு டென்பான் மென்மெல நடந்த தன்றே ருசு

கண்டவ ரிறும்பூ தெய்திக் கண்ணுதன் மலர்தோ றுற்ற
வண்டருத் தாலத் தோடு வரற்கருத் தென்னே வென்பார்
தொண்டமை தவப்பே றெண்ணிச் சூழ்ந்ததே யாம தன்றி
யண்டர்தம் பெருமா னுட லறிந்தவர் யாவ ரென்பார் ருள

மதுமலர் பல்ல தூய்நாம் வருகுவ தமையா தென்றே
புதுமலர் பல்ல தூய்ப்பின் பொலிந்துவா வென்றான் போலு
முதுமல ரவனுந் தேரு முதல்வ னென்பா ரன்னு
னெதுமலர் தரச்செய் தாலு மிடையூறென் றின்றே யென்பார் ருஅ

இணையவுத் தாலகந்தா னிருந்துணர் பரப்பித் தோன்றல்
புணையமே லிட்டு வைத்த பூம்பந்தர் போலு மென்பார்
நணையவாஞ் சுரும்பர்மொய்ப்ப நண்ணுத லுருத்தி ராக்கத்
தணையவாம் பந்தர் நீழ லடைவதுங் கடுக்கு மென்பார் ருகூ

இன்னண மெவருங் கூறி யெய்தரு மகிழ்ச்சி யெய்தப்
பன்னரும் விசும்பாருகப் பல்லிடங் களுங்க டந்து
சென்னிநாட் டகம் புகுந்து திருநதித் தென்பா லெய்திச்
சொன்னவா றறிபெம் மான்றன் றருத்தியா லயத்துட் புக்கான் கூ0

வேறு.

ஒருதுணை யாகி முன்படை ரைங்கை யுத்தமர் சொன்னவா றறியு, நிருமல ரமருங் குறிசின கரத்து நேரபி முகத்திடங் கொண்டு, பொரு வற வமர்ந்து துணைவந்தா ரெனும்பேர் பூண்டன ரவர்திருவடிக்கண், மருமல ரிடுவா ரூறெலாந் தபுத்து மனங்குறித் தவையெலாம் பெறுவார். கூக

மோதக மாட வடையிலட் டுகநெய் முழுகிய வபூபமின் பிட்டு,
காதல்செய் நோலை பலாச்சுளை சூதக் கனியரம் பைக்கனி கரும்பு, கோ
தக லிளநீ ரவலொடு கடலை குலாவுபல் பயற்றினுஞ் சுண்டன், மேதகு
துணைவந் தவர்க்கினி தூட்டின் வீடுபே றுறலெளி தாமே ௬௨

விளங்கனி நாவற் கனிபுனற் பசுங்காய் விழையிலாங் கலியின்
முப்புடைக்காய், வளங்கெழுபருப்புப் பொங்கலக் காரமடைபுளி விரா
வியமிதவை, களங்கமி லிவைமுன் யாவையு மூட்டிக் காமரு தூர்வை
யுஞ் சூட்டிற், றுளங்குபல்போக முளவெலாந் துய்த்துத் துரிசறுத்தின்
பவீடடைவார். ௬௩

தளியகம் புகுந்த சொன்ன வாறறியுந்தம்பிரான் விடையினின்றி
ழிந்தாங், கொளியகங் குலவு திருவடி மறையென் றுரைசெய்பா
துகைமுடிச்சேர்த்துக், களியகம் பொலியுத் தாலக தருவைக் கரிசிறன்
குறியெதி ரிடப்பால், வெளியக மறைய நிறுத்திமற் றதன்கீழ் விளங்
கொரு பீடத்து நின்றான். ௬௪

பாதலங் கிழியச் சடைபல போக்கிப் பரவுமெண் டிசையெனப்ப
கரு, மாதலங் கிழியக்கிளைபல போக்கி வானவர் பலர்குடி யிருக்கு, மீத
லங் கிழிய நெடுமுடி போக்கி மென்மல ரளவறப் பூத்துப், பூதலம்வியப்
ப நின்றுநம் பிராற்குப் பொலிநிழல் செய்தது த் தாலம். ௬௫

மன்னுமுத் தாலந் தன்னிழற் குறட்டின் வயங்குபா துகைமிசை
நின்று, மின்னுநம் பெருமான் மெய்குளிர் பாக்கு விரிமலர் மதுப்புன
லாட்டி, மூன்னுபொற் குதம்பை பொருமலர் சூட்டி முதிர்சுவைக்
கனியுணு வூட்டிப், பன்னுவண் டொலியாந் துதியெழூஉப் போற்றிப்
பயன்மிகப் பெற்றுநின் றன்றே. ௬௬

ஆய்பைந் தருவை நோக்கியெம் பெருமா னவிர்நமக் கென்று
நீ நிழல் செய், தேயவித் தலத்தே நிற்றிவெம் பாச மிகந்தனை யின்னு
மென் வேண்டும்; பாயவிப் பதியுத் தாலமென் றன்பேர் பரிக்குங் குத்
தாலமாம் பின்னர்ச், சேயகுற் றால மாய்நிலைத் தோங்குந் திகழ்மருஉ மொ
ழியெனத் திரிந்தே. ௬௭

இன்னுநின் குலத்தோன் றெய்துபு பொதியத் தெழிற்பெருஞ் சாரலி னொருசார், மன்னு மவ்விடத்து நாமுங்வீற் றிருப்போம் வயங் குனைப் பிரிதராவருளா, லுன்னுமப் பதிக்குத் தெனுதுத்தாலப்பேருறக் கொடுத் துரைப்பர்பல் லோருங், கொன்னு மிப்பதிக்கு வடாதுத் தாலப்பேர் கொடுத்தெடுத் திசைக்குமூ வுலகும் கூஅ

தனியுறப் பொலியு நீபழுத்திடின்யா தானுமோ ரதிசயந் தோன்று, மனிதருட் கசிந்து நினை வலஞ்செய்வார் வையத்து வானவ ராவார், பனி மதிநுதலார் மண்டலம் யாமாப் பாவித்து நின்னைச்சூழ் வாரேற், புனித மிக்கமைந்த நன்மகப் பெற்றுப் போக்கருஞ் செல்வத்து வாழ்வார் கூகூ

என்றுமைபங் தருவிற் கின்னருள் புரிந்தாங் கெம்பிரா னந்திமை நோக்கச், சென்றமுற் பணிந்து நோக்கிய குறிப்புத் தெரிந்தொரு சுபத்திரைக் குரைத்த, லன்றுநிச் சயித்தா னப்பொழு தென்று மடை தல்போ லம்பிகை யடைய, வொன்றுபெட் புறப்பைங் கொடிசுபத் திரையு முடன்வந்தாள் பரதனும் வந்தான் எ0

பூசைசெய் பொருட்டுச் சினகரம் புகுந்து பொற்கொடி யம்பிகை யென்றம்பே, ரீசையெம் பெருமா னெழிற்றிரு வுருவ மிருகடைக் கண்ணிணு லுணர்ந்தம், மாசையின் மூர்த்தி மாணையுட் கொண்டு மன் னிய மூர்த்திபாலடைந்தா, ளாசையி னுங்கு முன்புபோற் பூசித் தஞ் சலி செய்துநின் றனளால். எக

பின்னருத் தரப்போய்த் தக்கணம் வந்து பிறங்கொரு தானத்து நின்று, நன்ன ருத்தாலத் தருவடி நிற்கு நாயக னுருவநேர் நோக்கிப், பன்னரு மகிழ்ச்சி யுற்றன ளந்தப் பரம்பரன் ஞானநேர் நோக்கி யுன் னருமகிழ்ச்சி யுற்றன னிணைய ருவத்தலா லுயிரெலா முவந்த எஉ

பரதனே டடைந்த சுபத்திரை யெவரும் பராவுதன் மருகனை நோக்கி,விரதமா தவமென்செய்தன மிந்த மேனிகாண் பதற்கெனக் கசிந்து, சரதநம் மகட்குத் தக்கநா யகனித் தடம்புயக் காளையென் றுவந்து, வரதமிக் கவனைப் பதியொடும் பணிந்து மருக்களிப் பொடும் வெளி வந்தாள் எஙு

நந்தியை நோக்கி யம்பிகை யனைபா னம்முரு வழகிற்றே வென்று, முந்தியங் கறிந்து மணஞ்செய நாளே முனிவற வடைதுமென் றுரைத்தி, சந்தியிப் பொழுதே யென்றலு மனையான் முழ்ந்தெழுந் தவண்முன மேகிப், புந்தியுண் மகிழ்ச்சி பூத்ததோ வென்றான் புகல்வதொன் றிலை யெனப் பணிந்தாள் எச

மணஞ்செய்நா ளுளே யென்றுரைத் திறைமுன் வந்துவிண் ணப் பஞ்செய் தமர்ந்தான்,குணஞ்செய் மெய்ஞ்ஞானக்குரவுடைநந்தி கோற் றொடி யம்மை யப்போது, கணஞ்செய்பாங் கியரோடடைந்துதாய் தந்தை கண்ணுறச் சிவிகையி னேற்றி, வணஞ்செய் தன்மாடம் புக்க னன் பரதன் மனையொடு மற்றைய ரோடும் எரு

கடிமணம் புரிநா ளுளேயென் றுரைத்த கவின்மொழி செவியுறக் கேட்டு, வடிநெடுங் குலிசப் படையுடைப் புனிதன் வல்விரைந் தெழுந் துடன் போந்து, படிபுகழ் பரதன்மனையகம் புகுந்து பரவுதன் றச்சனைக் கூவிக், கொடிநெடு மணமண் டபமுதற் பிறவுங் குயிற்றுக வென் றருள் புரிந்தான் எசா

இந்திர நீல மணிகள்கொண் டொருசா ணெனுமுய ரத்தொரு குறடு, தந்திர விதியி னியற்றி மற் றதன்மேற் றவழ்சுட ராயிரம் வயிரச், சுந்தரத் தூண நிறுவுபு மேலாற் சுடர்ந்தபொற் போதிகை பொருத்தி, யந்தர மிளிர்செய் மணிசெய்யுத் தரஞ்சேர்த் தாக்கினன் மண்டப மொன்று எஎ

உற்றநாற் புறத்து மரகதக் கொடுங்கை யொள்ளிதி னிடையறச் செறித்துப், பொற்றபை ரொளிசெய் முத்தம்வித் துருமம் புருடராகங் குருவிந்தஞ், செற்றவாள் வயிர மேதகும் பச்சை செப்பிவை முதற் பல மணியுங், கொற்றவான் றொடையாப் பற்பல புரிந்தக் கொடுங்கை யின் விளிம்புறத் தூக்கி எஅ

உள்ளிட மிட்ட வுத்தரக் கிடைதீர்த் தொதுங்கிய மற்றிட மனைத் துந், தள்ளிட லரிய மாற்றுயர் பொன்செய் தகடுகளெடுத்தெடுத் தேற் றித், துள்ளிட வொளிபன் மணிகளும் பதித்துத் தூண்டொறுஞ் செம்பொன்செய் பதுமை, நள்ளிடை யாத்திட் டிடையிடை மேவ நவமணிக் குஞ்சங்க டூக்கி எகூ

அந்தமண் டபத்தின் மும்முழ வுயரத்தாகிய குறடுநாற் புறத்துஞ், சந்தநற் படியுஞ் செம்பொனா லொன்பான் றபங்கொளி மணிகளாற் சமைத்து, நந்தமற் றதன்மேன் மரகதக் குடமோர் நான்குவைத் ததன்முடி யூன்றச், சுந்தரச் செப்ப மணிமுழு திழைத்த தூணமோர் நான்குறநிறுவி ௮௰

மிசையொளிர் பவளப் போதிகை பொருத்தி மிளிர்மணி யுத்தரங் கிடத்தி, வசையற மேலாற் றிப்பிய விமான மாண்டசெம் பொன்னினான்மணியா, லசையற வியற்றி யதன்மிசைக் குடமூன் றமைத்தன னக்குடத் தொளியாற், றிசைமுழு தளாயு மிருளெலாங் குடிபோய்ச் செறியிரு ளுலகம்புக் கன்றே ௮௧

அன்னமண் டபத்தைச் சூழநாற் றிசையு மளவரு நெடியகா னிறுவிச், சொன்னவிண் ணுலக மறைந்ததே யென்று சொலப்படுங் காவண மிட்டு, பன்னருங் கரும்புங் கதலிகந் திகளின் பழக்குலை களுநெடுந் தெங்கின், மின்னவி ரிளநீர்க் குலைகளும் பிறவும் விரிதரக் காறெருறம் யாத்து ௮௨

பற்பல வன்ன நேத்திரங் கொண்டு பந்தருள் ளிடம்விதா னித்து, விற்பட வடியின் வெண்மணல் பரப்பி விளங்கொளிக் கம்பலம் விரித்துச், சொற்படு மேன்மண் டபத்து மவ்வாறு துலங்குற வாசன மிட்டுப் பொற்பமை நறும்பூ மாலையும் பிறவும் பொலிதரப் பொருத்திய பின்னர் ௮௩

மறைமுடி பொருவு மடங்கலா சனமேன் மணிகொடு செய்துநன் கெடுத்து, நிறைதரு நாற்கான் மண்டப நாப்ப ணிலவுறப் பதித்துமே கலையோ, டறைதரும் யாககுண்ட மொண்வேதி யாதிமற் றியாவையு மமைத்துக், குறையறத் தமரர் மயனடி பணிந்து குரிசில்பாற் றெரித்தன னனைத்தும் ௮௪

கண்டுகண் டனைத்து முளங்களி பூத்துக் கற்பகத் தரசுசெய் பெருமான், வண்டுகிண் டிளம்பூஞ் சோலைசூழ் துருத்தி வளச்சின கரத்தகம் புகுந்து, தொண்டுகொண் டுயிருக் கின்பவீ டளிக்குஞ் சுந்தர னொருபுடை நின்றக், கண்டுசெய் மொழிமா மணாளனுங் கனைத்துங் கரிசறத் தெரித்துநின் றனனே ௮௫

ஆயிடைப் பரதன் குறுமுளை படுவித் தனைத்தும்வித் துகள்பல பரப்பி, மேயபல் லுபகர ணங்களு மளவா விதநனி மிதப்புற வீட்டித், தூயகற் பகமுற் கொடைத்தொழி லெவையுஞ் சொன்முன மளிக்குமா றமைத்துப், பாயமங் கலமங் கையர்கலை யுணர்ந்த பனவரோ டாறு பார்த்திருந்தான். அசு

மகபதி மொழியுட் கொண்டவண் டுழாயோன் மற்றை நா ளிறை திரு முகம்பார்த், துகலரு மொழுக்கப் பெருந்தவப் பரத னெளிர் மனைக் கினிதெழுந் தருட, றகவெனப் பரவி விண்ணப்பஞ் செய்யத் தயங்குழத் தாலக நிழற்கீழ், நகவொளிர் மறைப்பா துகைதனை நிறுவி நயந்தன னிடபமே லிவர்ந்தான். அஎ

விடைமிசை யிவர்ந்து முனிவரர் வாழ்த்த விண்ணவர் பூமழை பொழிய, வுடைகடன் முழக்கினி யம்பல முழங்க வுற்றபல் கணங் களுஞ் செறியக், கடைகுழன் றிருண்ட கருங்குழற் செவ்வாய்க் காரிகை யாரெதிர் நடிப்பத், தொடைகொடு விருது மாகதர் பாடத் துருத்தியா லயநின் றுசென்றான். அஅ

பண்முழு துவப்ப பொலிமொழி மடந்தை பங்கயக் கரந் தொடச் செல்வான், மண்முழு துவப்ப வான்முழு துவப்ப மகிழ்ந்து நோக் கிடுபவர் யார்க்குங், கண்முழு துவப்பக் கைகுவித் திறைஞ்சிக் கருத்திடைக் கருதுவார் பலர்க்கு, மெண்முழு துவப்ப மறையவ னுறையு ளெல்லைமேல் பாலடைந் தனனே. அகூ

வந்தனன் மேல்பா லண்ணலென் றறிந்து மறைக்குலப் பெரியவர் குழாமுஞ், சந்தவக் குலத்து மகளிர்தங் குழாமுந் தழைந்தன தற்புடை சூழச், சுந்தர மிகுந்த பூரண கும்பந் தொகுமது வருக்கங்கை யேந்தி, நந்தலி லுவகை மிகவிய மியம்ப நயந்தெதிர் கொண்டனன் பரதன். கூ0

வேறு

எதிர்கொளும் பரதன் றுன்கொண் டெய்திய மதுவ ருக்க
முதிர்சுவை யனைத்து மையன் முன்வைத்துப் பணிந்து வீழ்ந்தான்
கதிர்மதி மறையோர் யாருங் கைகுவித் திறைஞ்சி வீழ்ந்தா
ருதிர்தலி றவத்தீர் யாரு மெழுமினென் றுரைத்தா னையன் கூக

வாழ்ந்தநம் பிறவி வேலை வடிந்துபே ரின்ப வெள்ளத்
தாழ்ந்தன நினது காட்சி யடைதலா லைய வென்று
சூழ்ந்தன ராடிப் பாடித் துள்ளினர் வினைக ளெல்லாம்
போழ்ந்தனர் பரத னாதிப் புண்ணிய மறையோ ரெல்லாம் கூஉ

ஒன்றும்போ தாத நாயே னொருபொரு ளாகக் கொண்டு
மன்றும்போ திடுவார் நெஞ்சு மருது நின் னுடல் வல்லோய்
துன்றும்பே ரறிவி னேரிற் சூழ்ந்தெழுந் தருளப் பெற்றே
னென்றும்போ தாது கொல்லோ விதுவெனப் பரதன் சொற்றான். கூங

பொறைமிகு பரதனென்னும் புண்ணிய மறையோ னாலே
யிறையவ நினது காட்சி யெண்மைப தாயிற் றெங்கட்
கறைகுவ தினியொன் றில்லை யருந்தவத் துபர்ந்தே மென்று
குறையறு மறையோ ரெல்லாங் கூறுபு பழிச்சி நின்றார். கூச

புனைபுகழ்ப் பரதன் பின்னும் போற்றிநின் றடியே னண்ணு
னிணையெதிர் கொண்டு வந்த நீர்மையா லித்தேத் தென்று
மனையது விளங்க நீயோ ரருட்குறி யாதி யென்று
கனைகழற் சரணந் தாழ்ந்து கனிந்துவிண் ணப்பஞ் செய்தான். கூரு

அந்தவிண் ணப்பஞ் செய்ய வயன்முதற் பலரும் போற்றிக்
கந்தமென் கடுக்கைத் தாராய் கருதினேம் யாமு மவ்வா
றுந்தமுந் துரைத்தா னன்பி னுத்தமப் பரத னென்று
சந்தமென் மலர்க டூவித்தாழ்ந்தெழுந் தெதிர்நின் றாரால் கூசு

காமனு ருடம்பு சுட்ட கண்ணுதற் பரம யோகி
யாமனுர் பெருமான் பூமே லயனரி முதலோ ரோடு
மாமனுர் செயும்விண் ணப்ப மறப்பனே முறுவல் பூத்து
நாமனு ரவ்வா றுவே மெனநயந் தருள்செய் தானே. கூஎ

பிழைத்தனம் பிழைத்தோ மென்று தொழுதனர் திருமுன் பேணி
யிழைத்தட முலையார் வைத்த வினியவை திருக்கை தொட்டுக்
கழைத்தடஞ் சிலையாற் செற்ற காளைபல் கணங்க ளோடும்
வழைத்தட மலர்ப்பெ ருங்கா வணத்தூடு நடந்தா னன்றே கூஅ

மங்கல வியங்கண் மல்க மறையவர் துழனி பொங்கக்
கொங்கலர் கதுப்பிற் செவ்வாய்க் கோற்றொடி யவர்வாழ்த் தோங்க
வங்கல ரமரர் தூற்ற வருந்தவப் பரதன் மேய
வெங்கல ரணுகா மாட வீதியுட் புக்கா னன்றே கூகூ

வீதியோ நான்குஞ் சூழ்ந்து விளங்குமா ளிகைமுன் னாகக்
காதியா ரிருளை யோட்டுங் கடிமணி மண்ட பஞ்சார்
போதிவர் பந்தர் வாயிற் பூவிடை யிழிந்து நின்று
னாதியாய் நடுவா யீறா யனைத்துமாய் நிறைந்த வையன் க00

நிறைகுடந் தீப மாதி நிகழுமங் கலங்க ளேந்தித்
துறைகெழு மடவா ரோடு சுபத்திரை நேரே வந்து
முறைமையின் முகமன் செய்ய முனிவரு முவகை பூத்தே
யறைபல வியமு மார்ப்ப வணைந்தன னுள்ளா லையன் க0க

காவணங் கடந்து சென்று கதிர் செய்மண் டபமுந் தீர்ந்து
மாவணம் பொலியு நாற்கான் மணவறை மண்ட பத்திற்
றாவணத் தவிசி லேறி யிருந்தனன் சுரர்கள் யாரும்
பூவணம் பொலியத் தூவிப் பூசித்துப் போற்றி நின்றார் க0உ

நின்றவர் பலரு மாங்காங் கிருக்குமா நிமலன் கூற
நன்றமை மகிழ்ச்சி பூப்பத் தகுதியி னயந்தி ருந்தா
ரொன்றவொண் கொடிபெ யர்ந்தா லொப்பநேர் நடந்து வந்து
கன்றலி லரம்பை யாதி கன்னியர் நடனஞ் செய்வார் க0ங

புனைமலர்க் கொம்போ வாசம் பொலிதளிர்க் கொடியோ வென்னத்
தனைநிகர் நாதத் தாளந் தண்ணுமை யாதிசேர
நினைதரு சதிதப் பாது நிரம்புநூல் வழி வழாமை
யனையவர் நடித்தல் செய்தா ரண்ணலேக் கினனி ருந்தான் க0ச

பெண்மகிழ் பூப்ப நாளும் பெருநடஞ் செய்ய வல்லோ
னுண்மகிழ் பூப்ப மாதர் நடனங்கண் டுவப்பா னென்னி
லெண்மகி ழனையா னுடை வியம்பவல் லுநர்யா ரெங்கள்
கண்மகிழ் கருணைச் செல்வி மணவணி காய லுற்றும் க0ரு

செம்மகண் மலரோ னாவிற் செழுமக டிருநீ ராடைக்
கும்மக டருவி னீழற் கொழுமகண் முதலோர் கூடி
யம்மகண் மலர்பூ ணாடை யாதியகொண்டு பார்ப்பார்
தம்மகண் மேனி முற்றுந் தவாதலங் கரிக்கப் புக்கார் ௧௦௬

அலருயிர் மலமா சோப்பி யானந்த மாட்டு வானை
யலர்மணித் தவிசி னேற்றி யலங்குபல் லியமு மார்ப்ப
வலர்விரை துவரென் றோது மவையெலா மெய்யிற் பூசி
யலர்நறும் புனல்கொண் டம்ம வாட்டியொற் றாடை யிட்டு ௧௦௭

சடையுடைப் பெருமான் மேவுந் தையலென் றறிவிப் பார்போற்
கடைகுழன் றிருண்ட கூந்தற் கைபுனை பின்னல் செய்து
மிடைகருங் கடலிற் றோற்றம் மேவிளங் கதிரே மான
வடைமணித் தகட்டுப் பூண்முற் சடையணி யனைத்துஞ் சேர்த்து ௧௦௮

தெளிதரு மடவார்க் கெல்லாந் திலகமென் றறிவிப் பார்போ
லொளிதரு நீற்று நெற்றி யொள்ளிய திலக மிட்டுக்
களிதரு முகிற்கீழ் மின்னல் விளங்குறு காட்சித் தென்ன
வளிதரு கதுப்பின் கீழா லிலம்பக மமையச் சேர்த்து ௧௦௯

அளிகிளர் கருங்க ணென்ப தியற்கையே யமைந்த தேனுந்
தெளிகிளர் செயற்கை யானுந் தேர்தரும் படிமை தீட்டி
யொளிகிளர் வனப்பாங் கானத் தொருகுமி ழுலர வஃதை
நளிகிளர் கடன்முத் துற்ற நவமெனப் பலபூண் சேர்த்து ௧௧௦

கண்ணருள் பெறுவான் வந்து கதிரடைந் தாங்குக் காதின்
வண்ணவொண் குழையுந் தோடு மாட்டிமேல் வாளி யிட்டுப்
பண்ணமை சுறவு மேகம் பற்றுபு பொலிந்தா லென்ன
வண்ணமை வாளி சேர்பூ ணங்குழற் கதுவ மாட்டி ௧௧௧

நிலவிய தன்னைச் சங்க நிதியெனற் கேற்கு மாறு
குலவிய மணியும் பொன்னுங் குறுஉக்கொள வெளிசெய் தாங்கு
நலமணிச் செம்பொற் காரை நகுகட்டு வடமண் முற்று
மலகுறு விலைப்ப தக்க மாதிய வெடுத்துச் சேர்த்து ௧௧௨

நந்தவித் துரும மாலை நகுகதிர் முத்த மாலை
யந்தவழ் கனக மாலை யவிர்மர கதப்பொன் மாலை
முந்தநன் கெடுத்த ணிந்து முருகுநா றப்பல் கூட்டுச்
சந்தமட் டித்து நாறு சாந்திள முலையா ளென்றூர் ககங

அறமெனப் பட்ட வெல்லா மலங்குதம் முருவ மாறி
நிறமொளிர் பலபூ ணுகி நிரந்தரம் பொருந்தி யாங்குப்
பெறலரு மணிகால் யாத்துப் பிறங்குபொற் கடக மார்நன்
னிறவளை தொடிபொன் னுழி நிகழ்கர விரலிற் சேர்த்து ககச

பொருவருங் கோபநாணப் பொலிதரு மொருசெம் பட்டு
வெருவரு மறைப்பின் போக்கி கோவண விதத்திற் சூழ்ந்து
குருவருங் காஞ்சி வாளிற் கூர்த்தமே கலைக லாப
மருவரு மொட்டி யாண மேனவும் வயங்கச் சேர்த்து ககரு

அரிக்குரற் சிலம்பு தண்டை யமைந்தபா டகஞ்ச தங்கை
பரிக்குமொண் டொடர்முன் னுனபாதசா லங்க ளெல்லாந்
தெரிக்கு மெம்மறைக்கு மெட்டாச் சிற்றடி நிரம்பச் சேர்த்துத்
தரிக்கும்வெண் முல்லை யாதித் தொடையலுஞ் சமையச் சூட்டி ககசு

அணிபல புனைவார் போல வழகினை மறைத்த மாதர்
மணிகெழு சுடரோ வானின் வழுவிய தடித்தோ வெல்லாம்
பணிமலர்க் கொடியோ தெய்வப் பவனமென் கொழுந்தோ வென்று
கணிதமில் வனப்பு நோக்கிக் கைகுவித் திறைஞ்சி நின்றூர் ககஎ

அத்தகு காலை யோரை யடுத்த தென் றறிஞர் கூடி
மத்தகண் மடநல் லாளை மாமணித் தவிசி னேற்றி
யொத்தபல் லியங்க ளார்ப்ப வோங்குமங் கலங்கண் மல்கச்
சித்தமிக் குவக்கு மாறேூர் திருக்கைநாண் காப்புச் சேர்த்தார் ககஅ

மறையொடு வாழ்த்து மல்க மங்கல வியங்க ளார்ப்ப
நறைமல ரகத்து மேய நங்கையர் முன்கை பற்றி
யறையுமெல் லாடை மேலா லம்பிகை வழுத்து வாங்குக்
குறையறு போக மோக்கங் கொடுக்குஞ்சிற் றடிபெ யர்த்தாள் ககக

அடிபெயர்த் தினங்கால் வீச வசைகொடி யெனந டந்து
கடிமண மண்ட பத்திற் கலந்திருந் தார்க ளெல்லாம்
படியற வெழுந்து செங்கைப் பங்கயங் குவியச் சென்று
முடிவிலா வின்பரூப முதல்வன்மாட் டிருந்தா னன்றே கஉ0

மணியொளி யனந்த மூதை மலர்மணம் பாணி யுப்புத்
தணிவரு முளரி வெம்மை சந்திரன் கலைபண் ணோசை
யணிகெழு வேறுவேறா முருவங் கொண் டமர்ந்தா லொக்குங்
கணிதமீல் சத்தன் சத்திவேறுபட் டிருந்த காட்சி கஉக

கற்பகப் பசுங்கொம் பொன்றைக் காமரோர்கொடி சேர்ந்தண்மிப்
பொற்புற விருந்த காட்சி போன்றதெம் பெருமான் றானும்
வெற்பக முயிர்த்த மாதும் விழைந்தமர் காட்சி யென்று
பற்பல முனிவர் வானோர் பழிச்சினர் பரவி வாழ்ந்தார் கஉஉ

மாமகண் மணாள னேக்க வாசத்தா மரைப்பூ வாழு
நாமகண் மணாள னேர்பு நடந்துசென் றிமய வோங்கற்
கோமகண் மணாளன் செய்யுங் குலவரு ளொருங்கு கொள்வான்
பூமகள் வெரிந்மேற் றூங்கிப் பொலிதரு குண்டஞ் சேர்ந்தான் கஉங

விதிவழி யங்கி சேர்த்து மேதகு சமிதை யிட்டுத்
துதிமறை முழக்கெடுத்துச் சிருக்குநெய் துழாவி வாக்கப்
பதிதர வாங்கி வாங்கிப் பருகுபு வயிறு வீங்கி
மதிசெய வலஞ்சு ழித்து வளர்ந் தெழுந் ததுசெந் தீயே கஉச

தகவுற நாற்புறத்துந் தருப்பையா திகள் பரப்பி
யிகவரும் விதியி னோம்ப வலஞ்சுழித் தெழுநாச் செல்வன்
மிகவொளிர் திறங்கண் டோகை மிக்குயர் பரத னென்பா
னகமகிழ் மனைவி யோடு மையனம் பிகைமுன் வந்தான் கஉரு

வந்துமா மறைக ளெல்லாம் வாய்மலர்ந் தருளிச் செய்து
முந்துதீ யங்கை வைத்து முதுமல மொழிந்தான் மாக்க
ணந்துவெம் பவந் தீர்ந் துய்ய நாடியா ரழல்வளர்த்தும்
பிந்துறு தோது வித்தும் பிறங்குறும் படிவேட் பித்தும் கஉசு

எதுவிழைந் தாலு மீந்து மெதுகொடுத் தாலு மேற்று
முதுபுகழ் மறையோர்க் கெல்லா முதற்பெருந் தெய்வ மாகி
மதுமலர்ப் பொழில்சூழ் தெய்வ வான்கை லாய நின்று
புதுவறத் துருத்தி மேவிப் பொலிந்தினி தோங்கா நிற்கும் கஉஎ

சொன்னவா றறிவா ரென்றுந் தூயவந் தணர்க்கியான் பெற்ற
பன்னருங் குணத்தா ளுளும் பதியினைப் பிரியா ளாகி
யென்னநல் லறமு மோம்பு மியல்பின ளாய வெங்க
ளன்னமென் னடைப்பொற் பூங்கொம் பம்பிகை யென்பா டன்னை

கொடுத்தனன் கொடுத்தே னென்று கூறுபு மனைவி யங்கை
யெடுத்தபொற் சிரக நன்னீ ரொழுக்கின னைய னேற்று
னுடுத்தபல் கடலு நாண வோங்கிய மெல்லா மார்த்த
மடுத்தபே ருவகை விம்ம வாழ்த்தினர் பலரு மாதோ கஉகூ

செறிபல புவன மீன்றுந் திகழொரு கன்னி யாகி
யறிதர மருங்கி ருந்த வம்பிகை திருக்கண் டத்து
முறிதலி லாது நாளு முயங்குமங் கலநாண் சேர்த்து
மறிதலி திருமுன் காட்டு மதுவருக் கமுங்கை தொட்டான் கஙா௦

அடியருக் கடியே மென்று வெளிப்படு மருள்சா லைய
னெடிவிறன் னுருவாஞ் செந்தீ வலஞ்செயற் குன்று வானை
படிமுழு தீன்று ளங்கை பற்றியத் தீயைச் சூழ்ந்து
கடிதலி லாக்குண் டத்துக் கைப்பொரி யட்டி னனல் கஙாக

ஆன்றமங் கலம்புனைந்த வம்மிமேன் மனட்டி பாதந்
தோன்றவங் கையாற் பற்றி யேற்றினோர் தொழுது நிற்குஞ்
சான்றவண் சாலி காட்டச் சாத்தின டிருக்கண் யாங்கண்
மான்றவெவ் வினையி னீங்கக் கடைக்கணித் தருள வல்லாள் கஙாஉ

குறையற வாங்குச் செய்யக் கடவன வெலாங்கு யிற்றி
முறைமையி னருள்கூர் நாறு சாந்திள முலையா ளோடு
நறைமல ரமளி வாய்ந்த நல்லுவ ளகத்தை யுற்றான்
கறைமதிக் குடையி னனைக் கட்டழற் குணவு செய்தோன் கஙாஙா

மலரவன் முதலோர் யாரு மலர்க்கரங் குவித்துச் சென்று
நலர்புக ழிறையோ யிந்த நங்கையோ டுலாப்பு றம்போ
மலர்திறங் காண யாங்க ளாசைப்பட் டனமா லென்று
குலவுவிண் ணப்பஞ் செய்ய வதற்கிசைந் தனனெங் கோமான் ௧௩௪

சலசல வொழுகா நிற்குந் தானவன் களிற்றெ ருத்தத்
திலகடஞ் செம்பொன் செய்த தேற்றியெம் பிராட்டி யோடு
மலகறு மறைக்கு மெட்டா னமர்ந்தெழுந் தருளினானங்
குலவில்பல் லியமு மூழிக் கடலினு மொலித்த வன்றே ௧௩௫

முனிவர்பல் லாண்டு கூற மொய்த்த பல் விருது மோங்கக்
கனிமொழி மடவார் பல்லோர் காமரு நடனஞ் செய்ய
நனிபெருந் தீபங் கோத்த நகுகழி யளவின் றோங்க
வனிதைய ரெதிர்சு ழற்றி யாக்குநீர் கவிழ்த்து மல்க ௧௩௬

இராயிர மருப்பு வேழ மிகந்ததென் கருதி யென்றும்
பராவது பிணங்கி யென்ன பாடுதான் படுமோ வென்றுந்
தராதலக் களிறோ மிக்க தவத்தினிற் சிறந்த தென்று
மொராவருட் டிறனென் னென்று முவந்துபற் பலரும் பேச ௧௩௭

அங்குசபாச மேந்தி யம்மைமுன் பழக்கஞ் செய்த
திங்குமால் யானை தாண்டற் கேற்றதா யிருந்த தென்றுந்
தங்குசெங் கரும்பு தாங்குந் தன்மையா னட்பா மென்றும்
பொங்குதங் களிப்பிற் பல்லோர் புகன்றனர் பரவா நிற்க ௧௩௮

கன்னிதன் வனப்புக் கேற்ற காளையிக் காளை யென்று
மன்னிய வழகற் கேற்ற வழகியிம் மடந்தை யென்று
மன்னிப மில்லா வின்னர் காட்சியற் புதமா மென்றுந்
துன்னிய மகிழ்ச்சி பொங்கச் சூழ்ந்தனர் பலர்கொண் டாட ௧௩௯

இன்னணம் யானை மேலா லெழிலுலாப் புறம்போந் தெங்கண்
முன்னவன் வதுவை மாட முன்றில்வா யணைந்து தோகை
யன்னவ ளொடுமி ழிந்து நடந்தரி யணைவைகுற்று
னென்னரும் கண்டு போற்றி யின்பமிக் குற்றானன்றே ௧௪௦

பெருந்தவப் பரத னென்பான் பெருமணத் தடைந்தோர் யாரு
மருந்த மிக்கினிய வாய வறு சுவையடி சிலூட்டிப்
பொருந்தநற் சாந்தும் பூவும் போற்றுவெள் ளிலையும் பாகுந்
திருந்தநன் குதவி யெல்லா முகமனுஞ் செய்த பின்னர் கசுக

தூயநற் றவத்து மிக்க சுபத்திரை யென்பா ளெங்க
ளையக னடியிற் றாழ்ந்திக் கிரகநற் கோயி லாக
வாயநீ வதுவைக் கோலந் தெரித்தினி தமர்தி யென்றான்
மேயபல் சுரரு மவ்வா றுதலே விழைந்தோ மென்றார் கசுஉ

என்றலு மதற்கி யைந்தா னினிதுசெய் வேள்வி முற்றி
மன்றலங் குழலா ளோடு மணமனைத் தென்பா லெய்தி
யொன்றவங் கொருதீர்த் தங்கண் டுவந்தபை யிரத நான
நன்றமை தருமா செய்தா னுவந்தது ஞால முற்றும் கசுங

ஆயவக் காலை யைய னடிமல ரம்மை போற்றி
மேயவித் தேத்து நன்கு வேள்விமுற் றியதிறத்தாற்
றாயபொற் கோயில் கொண்டு தொன்மைமா ஞாலந் தேற
நாயனீ யென்றும் வைக வேண்டுநன் கருடி யென்றாள் கசுச

மாமனார் மொழிந்த வாறு மாமியார் மொழிந்த வாறுங்
காமனார் அவியச் செற்றார் கருத்துற விசைந்தார் கற்பிற்
பூமனார் குழலார் வேண்ட மறுப்பரோ புரிந்து போற்றுந்
தாமனார் மொழிந்த வாறே சம்மதித் தனர்மண் ணுய்ய கசுரு

எண்ணிய மூவர் செய்யும் விண்ணப்ப மேற்ற லாலே
புண்ணிய தலமூன் றாய புகலுது மவற்றின் சீர்பின்
கண்ணிய மணுட்டி யோடுங் கடிமணக் கிரகம் புக்கா
னண்ணிய பல்லு யிர்க்கு மாரருள் சுரந்து காப்போன் கசுசா

மூவருந் தானே யாகி மூன்றுநா ளின்பந் துய்த்து
யாவருந் புகழ நின்ற வெம்மிறை யவனு யுள்ளான்
றூவரு மப்பா ளுளிற் றன்னுரு வெடுத்துத் துய்த்தான்
பூவரு மழகு வாய்ந்த புண்ணியக் கொம்பைமாதோ கசுஎ

கரிசற வடைந்தா ரோடு கடிமணக் கிரகத் துள்ளாற்
பரிபுரஞ் சிலம்பும் பாத பங்கயச் செல்வி யோடு
மரியயற் கரிய நாத னற்புதத் தமர்ந்து பின்னுட்
டுரிசற விளங்குந் தெய்வத் துருத்தியுட் புக்கா னன்றே கசஅ

விரவுதண் டுருத்தி புக்க மேதகு கருணை யாளன்
பரவுமுத் தால நீழற் பாதுகை மீது நின்று
னுரவுகொள் காதல் பொங்க வுவந்தவ னெதிரே நின்றான்
பரவுநல் வளங்கொண் டெங்கள் குடியெலாம் புரக்குஞ்செல்வி கசகூ

பராபரை திருக்கல் யாணப் பண்பினிற் சிறிது சொற்று
மராவணி சடில மோலி யம்பலத் தாடு மையன்
விராவு தன் மணச்சீர் கண்ட விண்ணவர் பலர்க்கு மேன்மேற்
றராதலம் புகழ்வ ரங்கள் கொடுத்ததுஞ் சமையச் சொல்வாம்

திருமணப்படலம் முற்றியது.

ஆகப்படலம் கஅக்கு திருவிருத்த எஅச.

---

கஅ. வது திருமணப்படலம்.

கைலைக்கு இறைவனாகிய சிவபிரானார் நந்தியினுடைய முகமண்டலத்தை நோக்கியருளி நந்தியே! சோழ நாட்டிலே நல்தவத் தோனாகிய பரதனிடம் போய் நினது கன்னியை, "யாம் மணஞ் செய்தற் பொருட்டு அவ்விடம் வருகின்றோ" மென்று அறிவித்து, "அவன் மனையாள் முதலியவர்கள் நோக்கத்தை அறிந்து கொண்டு இவ்விடம் வருக" வென்றருளிச் செய்தனர். அதுகேட்ட நந்தி, "இதுவே அறிவு" என்று அடிவணங்கி அகன்று போயினன்.

அவ்வாறு சென்ற நந்தி, பரதன் முன்னாக அணுக, அதைக் கண்ட பரதன், "நமது சிவபிரானுக்கு இரண்டாவதான தலைவன் வந்தன" னென்று தன் மனையாளோடு நல்வர வேற்று முகமன் கூறி, வணங்கித் துதித்து, 'அடியேன் பால் வந்தது என்?' அதை அடியேனுக்குச் சொல்லி யருள வேண்டு" மென்று விண்ணப்பஞ்செய்ய, நந்தி, 'ஐயனே! கைலைக் கடவுளாகிய சிவபிரான் நினது செல்வியைத் திருமணஞ் செய்ய இவ்விடம் எழுந்தருளி வருவதை உனக்கு அறி

வித்திட யான் முன்னர் வந்தன” னென்று மொழிந்தனன். பரத முனிவன் அதனைக் கேட்டு முக மலர்ந்து எழுந்தனன். கூத்தாடினன், “யானே செல்வம் பெற்றன” னென்று பேரின்ப முற்றனன். அப்போது அவன் மனைவியும் மகிழ்ந்து வணங்கித்துதித்து நந்தியை நோக்கி ஒன்று சொல்லத் தொடங்கினன். ஐயனே! “என்னுடைய மகளைத் திருமணஞ் செய்ய, எம்பெருமானார் விரும்பி எழுந்தருளுகின்ற காலத்தில் தலைமாலைகள், மயிராகிய பூணூல், பாம்பணிகள், சூலம், தலையோடு, மான் முதலியன அனைத்தும் மாற்றி மாணிக்கமுடி, குண்டலம், தோளணி, பதக்கம் முதலிய வனப்புடைய அணிகலங்க ளெல்லாம் முறையே அணிந்தருளிக் கோடிகாமர் அழகெல்லாந் திரண்டாலொத்த திருவடிவங் கொண்டு வந்தருள வேண்டும். இன்னும் ஒன்று அடியேன் சொல்லத் தக்கது. இந்த அரியதிருவுருவத்தைத் தாங்கி வந்தாலன்றி எனது உள்ளம் உவப்புறு” தென்று விண்ணப்பஞ் செய்தனள். நந்தியம் பெருமானும் “அங்ஙனமே ஆகுக” வென்று அவ்விடம் விட்டு அகன்று போயினன்.

அவ்வாறு போயின நந்தியானவர் கைலையிற் சென்று சிவபெருமானார் திருவடியில் அடியற்றமரம்போல விழுந்து வணங்கி அஞ்சலித்து நின்று பரதமுனிவர் மகிழ்ச்சியையும், அவர் மனையாள் மனக்கருத்தையும் தெரிவித்து அவ்வாறே எழுந்தருளிப் போதல் சிறந்தாகு மென்றும், விண்ணப்பஞ் செய்தனர். அவ்வாறு மொழிந்த அன்பர் தலைவனாகிய நந்தியை எம்பெருமானார், இனிது நோக்கி, ‘எல்லோரையும் அழைப்பா’ யென்று அருளியிட நந்தி பெருமான் விரைந்து சென்று தொண்டர் சிலர்களைத் தூண்டி எங்கும் திருமணஞ் சொல்லச் செய்தனன். சிவகணங்களிற் சிலர் திருமணத்தை எங்குஞ் சென்று தெரிவித்திட அறிந்த அனைவர்களும் அகமலர்ச்சி கொண்டு அஞ்சலித்து வணங்கினர். வாழ்த்தினர். ஆடினர். பாடினர். அவரவர் மனைவியர்களோடும் அவரவர்கள் ஊர்திகளில் ஊர்ந்து ஒய்யென வருவாராயினர்.

காலாக்கினி, உருத்திரர், கூர் மாண்டர், ஆடகர், அண்டத்துச்சியர், உருத்திரர் பதினொருவர், அவர்களாலுண்டான பலகோடி உருத்திரர், அறங்காப்போர், வைரவர், சக்கரப் படையாளர், நூறுகோடி பிரமர்கள், அக்கினி முதலிய அறுவர்கள், கிம்புருடர், சித்தர், விச்சாதரர் உரகர், கருடர், கதிரவர், திங்களானோர், பிறதேவர், எட்டுமலைகள்,

ஏழுகடல்கள், திசைகாப்பாளர், திசையானைகள், எட்டுநாகங்கள், யுகம், நாழிகை, கணம், முதலிய காலம், வேதங்கள், அங்கங்கள், புராணங்கள், நதி, நதமுதலிய ஆறுகள், வருணாச்சிரமம், முனிவர், அசுரர், தீவுகள், பலபுவனங்கள், அவற்றிலுள்ளவர்கள், எல்லாம் களிப்புடன் வந்து காண எம்பெருமானார் அவரவர்களுக்குத் தகுந்த வாறே இன்னருள் செய்து எழுந்து சுபத்திரையின் கருத்திற் கேற்பக் கைலைமலையின் வடபாலிலுள்ள பொய்கையில் முழுகிக்கோடி முருகர் கூடி ஒரு வடிவமெடுத்தாற் போன்ற ஒளியுடைய உருவங் கொண்டு எழுந்தருளினர். இப்பெருமானார் அழகிய வடிவத்தைக் கண்ணுற்ற திருமால் முதலியோர் பெண்வடிவத்தை விரும்பின ரென்றால், பெண்கள் படும்பாட்டை என்னென்று சொல்லுவன். அலரவன் ஆக்குவதையும் திருமால் காப்பதையும் விரும்பாத கடவுளே தனது இச்சையில் எடுத்துக்கொண்ட அழகிய வடிவத்தின் இயல்பைப் பிரமன் முதலியவர்கள் அனைவருங்கண்டு களித்து விருப்பத்துடனே வணங்கி அப்பெருமானார் அருளைப் பெற்றனர்.

அவ்வாறு அழகிய திருவுருவத்துடன் எழுந்தருளிய இறைவர் திரு வொற்றாடையால் ஈரத்தைச் சிலர் மாற்றச் சுந்தரர் வைத்தவட்டகையிலுள்ள திருநீறு இட்டுக் கொண்டு பொன் மண்டபத்துள்ளே புகுந்தருளினர். அது கண்ட திருமாலானவர் பொற்பூணூல், பொன்னாடை, கலவைச் சந்தனம், மாலைகள், பிறவுங் கொண்டு வந்து புனைந்து உதர பந்தனம், திருப் பொன்முடி, நெற்றிப் பட்டம், வைரக்காதணி, வைரமாலை, மாணிக்கத்தோளணி, முத்துமாலை, மதாணி, மணி யாழி, திருத் தோளுடை, முதலிய எல்லாம் திருமேனியில் ஆங்காங்கு அணிந்து அழகு கண்டு அஞ்சலித்து நின்றார். எம்பெருமானார் வெள்ளிமலையுடன் எழுவது போல எழுந்த விடையில் எழுந்தருள் வாராயினர். நாற்றிசையும் முனிவர், அமரர், ஆரவாரித்தனர். மறைகள் ஒலித் தெழுந்தன. அப்போதே ஆனைமுகப் பிள்ளையை அழைத்து "நமக்குத் துணையாக முன் செல்லுக" என்றருள, அப்பிள்ளையார், துணைவருவாராய் வள்ளலார் அருள்தலை மேற் கொண்டு தமது ஆகு ஊர்தியில் ஊர்ந்து முன் சென்றனர். இன்னும் உத்தால மரம் ஒன்றை எம்பெருமானர் கடைக்கணித்து நாம் உமையாளை மணஞ் செய்யப் போகிற படியால் "நீ நமக்கு நிழல் செய்து உடன் வந்து திருத்துருத்தியில் நமது இடது பாகத்தில் எந்நாளும் நிற்கக்கடவாய்! ஆங்கு மணமலர் கொண்டு எம்மை வணங்குகின்றவர்கள் அனைவரும் முன்

ளுக உன்னை வணங்குவார். நீயும் அவர்களுக்கு வேண்டு வன விரைந்து கொடுப்பாயாக! அதனால் இப்பணியை ஏற்றிடுக'' வென்றருள, அது கேட்ட உத்தாலமரம் அப்பெரு மானார் கட்டளையிட் டருளிய படியே அப்பணியை ஏற்று நமக்கு "நம்பெருமானார் திருவருள், நம்பக்கல் இருந்தவாறு என்னே''? "நமது பிறவிப் பிணியும் இரிந் தொழியு''மென்று, மகிழ்ந்து பின்னின்று நிழல் செய்தது. சிவபிரானார் திருமால், பிரமன், இந்திரன்: முதலிய அமரர்களை நோக்கி அமரர்காள்! "நீவிர் அனைவரும் நும் நும் ஊர்திமேல் கொண்டு நமது எருது ஊர் திக்கு முன்னும் பின்னும் உய்த்துச் செல்லுக'' வென்றருளினர். அப்படியே அமரர்கள் எல்லோரும் தத்தம் வாகனமேறிச் சென்றனர். துணைவந்தார் முன்வர உத்தாலமரம் பின்நிழல் செய்துவரச் சிவபிரா னார் வெள்ளி விடையை நடத்திவந்தருளினர். முரசம், பம்பை. கல்லவடம் முதலிய அளவில்லாத வாச்சியங்கள் ஒலித்தெழுந்தன. சின்னம் அற்புதம் தோன்ற ஊதாநின்றன. முனிவர் பலர் வாழ்த்து கூற மாகதர் வீரம்பாட, சூதர் புகழ்பாட, ஆரியப் புலவர் அனைவரும் ஆரிய மொழிகளால் புகழ்ந்திடத் தமிழ்ப் புலவர் செந்தமிழ் மொழி களால் செவ்வனே துதிக்கக் கொடிகள் பலவும் சுற்றி வர, இறைவ னுடைய விடைக் கொடி நடுவண்வர ஆயுதமெல்லாம் அடி புகழ்ந்து சூழ்ந்திட வெற்றி பெற்ற பிரப்பம் படை முன்னாகச் செல்ல, மத்த ளம் வேய்ங்குழல் முழங்க, நாடக மகளிர் திருமுன் நடித்து வரச் சிவ கணத்தலைவர் குடைபிடித்து வெண்சாமரம், விசிறி பணிமாற ஆல வட்டம், கோணத்தண்டு, கோணாததண்டு முதலியன காடு போல் காண மகர தோரணம் குஞ்சரம் முன்வரச் சங்கம், தாள்ர, கொம்பு, முன் ஒலித்திட அன்பரான தொண்டர்கள் இரு கண்ணாலும் இன்பக் கண்ணீர் சொரிந்து கைகொட்டிக் கூத்தாட, அமரர்கள் பூ மழை பொழிய, எம்பெருமான் எழுந்தருளிய இடபமும் தெற்கு நோக்கி நடந்தது.

கையிலையங் கடவுள் உத்தால மரம் நிழல் செய்யவருதலை நோக்கு வார் யாவரும் வியப்புற்றுத் தத்தமக்குத் தோன்றியவா றெல்லாஞ்- நயம்படச் சொல்லி மகிழ்ச்சி யடைய இடைப்பட்ட பலநாடு களையுங் கடந்து சோழநாட்டை அடைந்து காவிரிக்குத் தென்பால் வந்து "சொன்னவாறு அறிவார்'' ஆலயத்துள் புகுந்தருளினர். அவர்க்குத் துசணையாக முன் வந்த மூத்தபிள்ளையாரும் "துணைவந்தா'' ரென்னும் பெயர் பூண்டு "சொன்னவாறறிவார்'' திருமுன் எழுந்தருளி வழிபடு

வார் அனைவர்க்கும் இடையூறு அனைத்தும் அகற்றி நினைத்தனவற்றை எளிதில் பெற அருளுவார். இத்துணைவந்தாரை வழிபடுவோர், மோதகம், மாடவாடை, இலட்டுகம், அப்பவருக்கம் பிட்டு, பலாச்சுளை மாம் பழம், வாழைப்பழம், கரும்பு, இளநீர், அவல்கடலை, பயற்றஞ்சுண்டல், விளாங்கனி, நாவற்கனி, பாக்கு, வெற்றிலை, தேங்காய், பருப்புப் பொங்கல், சர்க்கரைப்பொங்கல், புளிச்சாதம், முதலிய எல்லாமும் படைத்து அறுகுசூட்டி வழிபட்டால், இம்மைப்போக முற்றும் துய்த்து மறுமையில் வீடுபேறும் அடைபவராவர். அதுநிற்க.

அத்துருத்தி ஆலயத்துள் புகுந்தருளிய பெருமானுர், வெள்ளி விடையினின்றும் இறங்கித் தமது இடதுபாகத்தில் வெளிமறைய உத்தாலமரத்தை நிறுத்தி அதற்குக் கீழ்பாகத்தில் ஒரு பீடத்தில் வேதமாகிய "பாதுகை" யில் எழுந்தருளி நின்றனர். அம்மரமும் பாதாளத்தில் ஆழ்ந்து, விண்ணில் உயர்ந்து நாற்றிசையும் சூழ்ந்து அப்பெருமானுர்க்கு மலர் சொரிந்து வணங்கிப் பழம் ஊட்டி அது துதித்தல்போல் வண்டு மூச நின்றது. எங்கள் பொருமானுர் அத்தருவை நோக்கி 'நீ! எப்போதும் இந்நகரிலேயே இருப்பாயாக. இறுதியில் நின துமலமகலப்பிறவி ஒழிக! இந்நகர் நின்பேர் எய்துக. அது "குத்தால" மெனமரீஇ நிற்கும்.

"நின்குலத்தில் இன்னெருதருவானது பொதிய மலையின் பக்கத்தில் நிற்கின்றது. இதுபோல் அவ்விடத்தே நாமும் வீற்றிருப்போம். அந்நகர்க்கும் நினது பெயரே உண்டு. நீ பழுத்தால் இவ்வுலகில் ஏதேனும் அதிசயம் ஒன்று உண்டாகும். உன்னை மனமுருகி வலஞ் செய்கின்றவர் பூமியில் தேவராவார்! ஒருமண்டலம் நின்னை யாமாக நினைந்து வலம் வருகின்றவர், நல்ல புதல்வனைப் பெற்று மிகுந்த செல்வத்தில் வாழ்வா" ரென்று உத்தால மரத்திற்கு அருள் புரிந்தனர். அதன் பின்னர்ச் சொன்னவாறறிவாராகிய சிவபிரானுர் நந்தியை நோக்கியருள அக்குறிப்பறிந்த நந்தியானவர் சுபத்திரைக்கு அறிவித்தனர். அஃது அறிந்த சுபத்திரையும் பரதனும் தன்பின்வர அம்பிகை எப்போதும் பூசைக்கு வருதல் போல வந்து திருத்துருத்தியில் புகுந்து எம்பெருமா னுடைய திருவடிவத்தைக் கண்குளிரக் கண்டு முன்போல் வழிபாடு முடித்து எம்பெருமானுர் திருமுன் கைகுவித்து நின்றனள். அதன் பின்னர்,

உத்தால மரத்தின் நிழலில் நிற்கும் அப்பெருமானர் அழகிய உருவத்தையும் அன்புடன் நோக்கி அகம் மகிழ்ந்தனள். எம்பெருமானரும் அம்பிகையாருடைய அழகிய வடிவத்தை நோக்கித் திருவுளமகிழ்ந்தருளினர். இதனல் எல்லா உயிர்களும் மகிழ்ந்தன. சுபத்திரையும் தன் மருமகனர் வடிவழகை நோக்கி இவரே நம்மகளுக்குத் தக்க மணமகனுவா ரென்று மகிழ்ந்து தன் நாயகனுடன் அப்பெருமானரைப் பணிந்து வெளிவந்தனள்.

எம்பெருமானர் நந்தியை நோக்கி நீ சுபத்திரைபால் "நமது வடிவம் அழகியதோ" என்று கேட்டு "நாளையே மணஞ் செய்தற்கு வருகின்றோ" மென்று கூறுக வென்றனர். "நந்தியானவர் சுபத்திரை முன் அணுகி "மனமகிழ்ச்சிதானே" யென்றனர். அதைக் கேட்ட சுபத்திரையானவள் "அடியேன் என் சொல்லக் கடவேன்" என்று நந்தியை வணங்கி நின்ருள். அஃது அறிந்த நந்தியானவர் "நாளையே திருமண நாள்" என ஆங்குச் சொல்லி எம்பெருமானர் திருவடிபணிந்து விண்ணப்பஞ் சொய்து இருந்தனர். அம்பிகையார் தோழிமார்களோடு சென்று தாய் தந்தையரைப் பார்க்கப் பரதமுனிவன் அவ் அம்மையைச் சிவிகையில் ஏற்றிக் கொண்டு கிளைஞர்களுடன் தன் வீட்டை அடைந்தனன்.

நாளைத் திருமண மென்று கேட்ட இந்திரன் தன் தச்சனை அழைத்து மணமண்டப முதலிய இயற்றியிடக் கட்டளை யிட்டான். அவனும் ஒன்பதுமணி இழைத்தமண்டபம், காவணம் முதலியன இயற்றி இன்னும் திருமணத்திற்குரிய அணிகள் அனைத்தும் செய்து தனது அரசன்பால் வந்து வணங்கினன். இதனை இந்திரனனவன் எம்பெருமானர்க்கு விண்ணப்பஞ் செய்து நின்ருன். பரதன் அது தெரிந்து குறுமுளைப்பாலிகை வைத்து இன்னும் வேண்டுவன சொல்லு முன்னர்த் தரும்படியாக அழைத்து மங்கலமங்கையர், மறையவர் முதலிய வர்களோடு எம்பெருமானர் நல்வரவை எதிர் நோக்கி நின்றனன்.

'இந்திரன் சொற் கொண்டு திருமாலானவர் சொன்னவாறறிவார் திருமுகத்தைப்பார்த்து,' எம்பெருமானே! (இதுவே பரதன் திருமனைக்கு எழுந்தருளும் அமயம்) என்று விண்ணப்பஞ்செய்ய எம்பெருமானர் தமது மறைப்பாதுகையை அப்பீடத்தில் நிறுத்தி வெள்ளி

இடபத்தில் ஏறியருளினர். முன்வந்த சிறப்புடன், பரதன்திருமனைக்கு மேல்பாகமாகத் திருமணக் கோலத்துடன் எம்பெருமான் எழுந்தருளி வருதலை நோக்கிய பரதன், பெரியார், மங்கையர் முதலியவர்களுடன் நிறைகுடங் கொண்டு "மதுவருக்கங்" கைக்கொண்டு பல்லியம் முழங்க எதிர் கொண்டனன். ஆங்கு அவரெல்லோரும் எம்பெருமானார் எழுந்தருளும் காட்சியைக் கண்டு களித்தனர். ஆடினர். பாடினர். அன்று அம்மறையோர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. "இப்பரதனால் இவ்வரிய காட்சியைப் பெற்றன" மென்று எல்லாரும் பரதனைப் புகழ்ந்தனர். அதுகண்ட பரதன் எம்பெருமானை நோக்கி, 'அடிகேள்! நும்மை எதிர் கொண்ட தன்மையால் ஈங்கு ஒரு அருட் சிவக்குறியாக ஆதல் வேண்டு, என்று அடிபணிந்து விண்ணப்பஞ் செய்தனன். ஆங்கே அயன் முதலியவர்களும், அவ்வாறே வேண்டினர். அப்போதே சிவபெருமானார் மாமனார் விண்ணப்பம் மறுக்காமல் அவ்வாறே எழுந்தருளினர். அவ்விடத்தில் மங்கையர் வைத்த இனியவற்றைக் கைதொட்டுச் சிவகணங்களோடும் காவணத்தின் வழியாக வந்து திருமாளிகை வீதியில் புகுந்து அவ்வீதிநான்கும் வலம் வந்து மலர்கள் பரப்பிய திருமணமண்டபத்துள் இறங்கிச் சுபத்திரை அணிகளுடன் முகமன் கூற அதனுள்ளே சென்றருளினர். அம்மண மண்டபத்துள் இடப்பட்ட ஆசனத்தில் எம்பெருமானார் இருந்தருள அயன்முதலிய அனைவரும் பூக்கள் தூவிப் போற்றினர். ஆங்கே பலதிருமண அணிகளும் நிகழாநின்றன.

அம்மையான அம்பிகையும், நீராடித் திருமகள் முதலியோர் ஆடை, அணிகள், பூமாலை சாந்து முதலியன எல்லாங் கொண்டு. அணி செய்யத் திருமண அழகு பெற்றனள். அதுகண்ட அம் மாதர்கள் "நாறுசாந்திளமுலையா" ளென்று திருப்பேர் இட்டனர். இன்னும் வேண்டும் அணிகளெல்லாம் பார்த்தணிந்து கைகுவித்து வணங்கிநின்றனர். அவ்வாறு அணிசெய்த அம்மையாரை அழைத்து மாணிக்க ஆசனத்தில் ஏற்றி அறிஞர்கூடித் திருக்கையில் காப்பு நாணைக் கட்டினர். அதுபெற்றுக் கொண்டு எவ்வுயிர்க்கும் இம்மை மறுமை வீடுகளை இனிது அளிக்கும் எம்பெருமாட்டி அதினின்றுமெழுந்து திருமணமண்டபத்துள் புகுந்து இருந்தாரெல்லாரும் இருகைகளும் தலையில் குவித்து இறைஞ்ச இன்ப உருவான இறைவன் மாட்டு இருந்தருளினள். அதுபோது முனிவர், வானோர் யாவரும் வாழ்த்தி

வாழ்ந்தனர். பிரமனார் எம்பெருமான் அருள் பெற்றுய்ய வேள்விக் குண்டம் இயற்றி அழல்வளர்க்க அவ்வழல் வலஞ்சுழித்து ஓங்கியது. அதனைக் கண்டு மகிழ்ந்த பரதன் தன்மனையாளோடு அம்பிகைக்கு முன்வந்து மணச்சடங்கு இயற்றியாம் பெற்ற அம்பிகை யென்பாளை, இவ் 'ஐயனுக்குக்கொடுத்தே னென்று நீரை வார்த்தான். எம்பெருமானார் அதனைஏற்றருளினர். பேருவகை உண்டாக எல்லாரும் வாழ்த்திட அப்பெருமானார் மணமகள் திருக்கழுத்தில் மங்கள நாணைப் பூட்டி மதுவருக்கத்தில் கைவைத்தருளினர். அதன்பின்னர் எம்பெருமாட்டியைக் கைப்பிடித்து அக்கினியை வலம் வந்து பொரிஇட்டு அம்பிகையின் காலைத் தூக்கி அம்மியில் வைத்து "அருந்ததி" காட்டி ஆண்டுச் செய்யும் சடங்கு முற்றும் முடித்து "அந்நாறுசாந்திளமுலையாளோடு" அந்தப்புரஞ் சென்றருளினர்.

பின்னர் மலரவன் முதலியவர்கள் சென்று எம்பெருமானைத் திருமணக் கோலத்துடன் திருவுலாப்புறம் போந்தருள வேண்ட அதற்கிசைந்து யானைமீது எழுந்தருளி அவ் அழகும் யாவருக்குங்காட்டி ஆசனத்திருந்தருளினர்.

பரதன் அங்குவந்தார்க்கெல்லாம் அறுசுவை அமுதை அன்புடன் ஊட்டி மகிழ்ந்தனன். பரதன் மனையாகிய சுபத்திரையானவள் எம்பெருமானார்பால் அணுகி "அடிகேள் இந்த நல்வீடு திருக்கோயிலாகத் திருமணக் கோலத்துடன் எப்போதும் தேவரீர் அமர்ந்தருள வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனள். ஆங்கு வந்த தேவரும் அவ்வாறே வேண்டினர். அதற்கு எம்பெருமானார் இசைந்தருளி அவ்வீட்டிற்குத்தென்பாகத்தில் "திருக்குளம்" ஒன்று கண்டு அதில்விரத முழுக்கு முழுகி திருமண அறையுள் அமர்ந்தருளினர். மாமனார், மாமியார், அவர்கள் மகள், மூவரும் வேண்டிய படியே மூன்று தலங்களாயின. அவற்றின் சிறப்பும் பின்னர்ச் சொல்லப்படும். எம்பெருமாட்டியாகிய நாறுசாந்திளமுலையாளோடு ஆங்கே திருமணக் கோலங் காட்டி அமர்ந்தருளி அதினின்றும் "திருத்துருத்தி" ஆலயத்துள் புகுந்து "நாறுசாந்திளமுலையாள்" தமது எதிர்நிற்க "உத்தால" நிழலில்மறைப்பாதுகையின் மீது நின்றருளினர்.

கஅ வது திருமணப் படலம் முற்றியது.

---

## கசு வது, அக்கினிலிங்கப்படலம்

பண்பூத்த நறுங்குதலைப் பணிமொழிச்செவ் வாய்க்கருங்க
ணெண்பூத்த விநமரைமற் றெவரெவர்க்கு விழைந்தவரங்
கண்பூத்த திருநுதலார் கனிந்தளித்தார் சொற்றியெனத்
தண்பூத்த குணத்தரும சருமன்விளம் புதலுற்றான் க

துருத்திநகர்த் தளிமேய சொன்னவா றறிபவரை
விருத்திசெயு மரும்பன்ன வனமுலைமெல் லியற்கொடியை
யருத்திகெழு மணவாளக் கோலங்கொண் டமர்வாரை
யுருத்திகழு மம்பிகையை யொருங்குபணிந் துவந்தேத்தி உ

மணமலிகற் பகநறுந்தார் வாசவன்முற் றேவரெலாங்
குணமலியத் தலத்தமர்ந்து குறைவில்களிப் புறு நாளிற்
கணமலியச் சுரர்பலர்க்குங் காமர்திரு முகமாகி
வணமலியப் பொலியு மழற் கடவுளிஃ துளமதிப்பான் ஙு

பூதமெனு மோரைந்துண் டப்பூத மாய்ப்பொலிவோஞ்
சாதமிகு புனிதமொடு விளக்கமுஞ்சார் தரப்பெற்றேஞ்
சீதமிகு சுரர்க்கெல்லாந் திருமுகமு மாய்ப்பொலிவோ
மோதவமை குணம்பலவு மோவாமை யுறப்பெற்றும் சு

தொட்டவனைத் துஞ்சுட்டாற் றேடமெழுந் தொருபழிச்சொல்
பட்டதத னாற்கொடிய பாதகமு மிகப்படுமா
லிட்டமிக வித்தலத்தெம் மிறைவனைப்பூ சித்தந்தக்
கட்டமொழித் துய்வனெனக் கருதியெழுந் தனனன்றே ரு

தூயசின கரம்புகுந்து துணருத்தா லகஞ்சூழ்ந்து
மேயபரற் கெதிர்வலப்பால் விளங்குமொரு பெருந்தீர்த்த
மாயபது மம்பலபூத் தருளின்விளங் குதறெரிந்து
பாயவித்தீர்த் தம்பதும தீர்த்தமெனப் பெயர்பகர்ந்து சா

அந்தநறும் புனலாட்டி யப்பதும மலர்சூட்டி
முந்தவெழு முணவூட்டி முழங்குதழல் பணிந்தெழலுஞ்
சந்தமலி நம்பெருமான் சமையவவ னெதிர்தோன்றிப்
பந்தமறுத் தெண்ணியது கைகூடப் படருதியேல் எ

ஒருநமக்குத் தென்கிழக்குத் திசையொருகோ ட்டம்புரிந்து
பொருவருநங் குறிப்பதிட்டை நின்பெயர்பூண் டிடவாற்றிக்
கருவருநன் புனற்றடமுங் கண்டுறப்போற் றிடுவையெனிற்
பருவருநின் மனக்கருத்து முற்றுமெனப் பகர்ந்தொளித்தான் அ

ஐயனரு ளியமொழியை யகங்கொண்டு தழலெழுந்து
செய்யவொரு தென்கிழக்குத் திசையடைந்து தலங்குறித்து
வையமகிழ் விச்சுவகன் மணிக்கூவி யாலயமொன்
றுய்யவிவ ணுற்றுகென வுவந்தவனு மஃதேற்றுன் கூ

மன்னுகருக் கிரகமத்த மண்டபமா மண்டபமுற்
பன்னுபல மண்டபமும் படர்மதிலுங் கோபுரமு
முன்னுபல வானவர்கண் மொய்த்திருக்கு மாலயமு
மின்னுமிசைப் பனபலவு மிரும்பொன்மணி யாற்சமைத்தான் க0

ஆலயத்தி னெதிரிடப்பா லலங்கவொரு தடந்தொட்டுச்
சாலவொளிர் கங்கைமுதற் றீர்த்தமெலாந் தாபித்து
ஞாலமதித் திடுதன்பேர் நாட்டியதிற் றோய்ந்தெழுந்து
சீலமிகப் புரிநீறுந் திகழ்கண்மணி யும்புனைந்து கக

எழுத்தைந்து முளங்கருதி யிரும்பொனா லயம்புகுந்து
வழுத்தொன்றத் தன்பெயரான் மகாலிங்கந் தாபித்துச்
செழுத்தொண்டர் குழாம்பரவத் திகழுத்தா லகத்தளிபோற்
பழுத்தொன்று மருட்சத்தி யிரண்டுருவும் பதிட்டைசெய்து கஉ

தழையுமெழி லுறநெறிந்து சவுந்தரநா யகியெனும்பேர்
விழையும்வித மெடுத்தோதி விருப்புறமற் றொருசத்தி
யுழைவிழியம் பிகையெனும்பே ருரைத்தாவ ரணதேவர்
பிழையிலுரு வத்தினையும் பேணிவிளங் குறநிறுவி கங

மன்னியவா வாகனதா பனமாதி வயக்குவித்துத்
துன்னியபல் லியமுழங்கத் தூய்தமையப் புனன்முகந்து
பன்னியமா மனுக்கூறிப் பரிந்தாட்டி மலர்சூட்டி
யுன்னியப ணிவேதனமு மொருங்குகொளும் படியூட்டி கச

இன்னுமியற் றிடுமுகம னெலாமியற்றித் தொழுதெழுந்து
பன்னுமிருந் துதிமுழக்கிப் பரவியுளங் குறித்தமர்ந்து
மின்னுமகிழ்ச் சியனாகி யொழுகுவான் வேண்டுவவாய்த்
துன்னுமளப் பிலதிருவுந் தொகுத்துவளர்த் தன்னழலோன் கரு

தரைபுகழ்சித் திரைமதியச் சாறுமுதற் பலசாறு
முறைதிகழும் படிநடத்தி யொழுகுவா னொருநாளில்
வரைதிகழ்வெஞ் சிலையழற்பேர் வள்ளலுக்கு விசேடமுறப்
புரைகெழுபூ சனைபுரிந்து போற்றியிருந் துதிபுரிவான் கசு

அருவாகி யுருவாகி யறைந்தவுப யமுமாகி
மருவாகி மலராகி வானாதி யைந்தென்னுங்
கருவாகிக் கண்ணாகிக் கண்ணுண்மிளிர் மணியாகித்
திருவாகிப் பொலிவோய்நின் சேவடிக டொழுதெழுவேன் கஎ

ஒன்றாகிப் பலவாகி யுரைசெய்நவ விதமாகி
யென்றாகி மதியாகி யெண்ணிலா ருயிராகி
நன்றாகித் தீதாகி நான்மறைக்கு மெட்டாத
தொன்றாகி நின்றாய்நின் றாணையடிக டொழுதெழுவேன் கஅ

மதிதவழு மொண்சடையாய் வைபமுழு தணும்விடையாய்
கொதிகெழுமுசூற்படையாய் கொன்றைநறும் பூந்தொடையாய்
பதிதரலின் மனத்தடையாய் பாய்புலியின் றோலுடையாய்
துதிசெய்சவுந் தரம்புடையாய் தொழுதேனின் னடிமலரே ககூ

திருத்தியெனுந் தலத்தமருந் தொண்டர்நா யகபோற்றி
வருத்தியுட லறநோற்பார் மனத்தொளிருஞ் சுடர்போற்றி
யொருத்திசவுந் தரமடமா தொடுமிளிர்பூ ரணபோற்றி
யருத்தியுற வெனக்கருளு மக்கினியீச் சுரபோற்றி உ0

என்றுதுதி புரிந்துகனிந் திறைஞ்சினா னப்பொழுது
குன்றுவரி சிலைகொண்ட கோமானச் சிவலிங்க
நின்றுவெளி வந்துதழன் முகநோக்கி நின்பூசை
நன்றுமகிழ்ந் தனம்வேட்ட வரம்பாது நவிறியென உக

அத்தவொரு நின்னடிக்கன் பருதடியேற் குறல்வேண்டு
மித்தலத்தக் கினிதீர்த்த மியைந்தாடி நினைப்போற்று
முத்தமர்க ளிட்டமெலா முறல்வேண்டு மிக்குறியு
ணித்தபிர சனத்தொடுநீ நெடுநாளு முறல்வேண்டும் ௨௨

நலத்தோடு நினைப்போற்று நல்லவர் வெம்பாதகசஞ்
சலத்தோடு பிழைமாற்றித் தவாதின்ப முறல்வேண்டும்
வலத்தோடு நின்பொருளை வௌவிநுகர் கொடியவர்தங்
குலத்தோடு கொடுநரகங் குளித்தழுரே யுறல்வேண்டும் ௨௩

நீண்டுபொருள் பல வினையுஞ் சுடுதலாற் செறிதோட
மாண்டுபவித் திரனுகி யான்வயங்கும் வரம்வேண்டு
மீண்டுநினைப் போற்றுமல் வேறுகுறித் தெய்திடுவார்
வேண்டுவமுற் றுதொழிய வேண்டுமருள் புரியென்றான் ௨௪

எழுநாவோ னுரைத்தபடி யெவ்வரமுங் கொடுத்தருளிப்
பழுதாராவழலீசன் கருணையிற்பின் னும்பகர்வான்
முழுஞாலத் தெவரேனு முடிவுநாள் வரலுணர்ந்து
வழுவாவித் தலம்புகுந்து மரணமடைகு வரென்னில் ௨௫

மிக்கதவ முயன்றேருரு மேவருநந் தாளடைவர்
நக்கமகத் துவதலமற் றிதுபோலு நாடரிது
தொக்கவுல கிடத்தெனத்தே ரென்றருளச் சுடர்த்தழலோன்
பக்கவிறு நாளுணரும் பான்மையெவ னெனப்பகர்வான் ௨௬

தெளிபடிமக் கலங்காணிற் சென்னியிலா திருந்தாலு
மொளியொருவி யதுகோண லுருவாகக் கண்டாலுங்
களிவிரவு கருங்கோட்டுக் கடாவெரிங்வெங் கடுங்கால
னளியறவந் தடைந்துடனின் றுனென்றே யறிந்திடுக ௨௭

விழியிமைக டிறவாது மிகமூடப் பட்டிருந்தும்
பழியகல்கண் டெரிவது போற் பற்பலவுங் கண்டாலுந்
தழியகாஞ் செவிபொத்தத் தாமுழங்கா தொழிந்தாலுங்
கழிசினவெங் கூற்றணித்தே கடுகியதென் றுணர்ந்திடுக ௨௮

கடுந்தழலை நோக்கமயிற் கண்டமெனத் தெரிந்தாலுஞ்
சுடுந்தகையின் முகிலின்றி மின்றோன்றக் கண்டாலு
நெடுங்கடறேய் கருமுகின்மின் னேர்தெரியா தொழிந்தாலு
மொடுங்கிடுத லொருபக்கத் துள்ளேயென் றுணர்ந்திடுக ௨௯

ஈரமற நெஞ்சுபுலர்ந் திருந்தாலு முரோமவழிச்
சாரமிகு தூமமெழச் சமைந்தாலு முடனடுக்க
மாரவமைந் திடுமெனினு மையிரண்டு நாளளவுள்
வீரமிகு கொடுங்கூற்ற மேவுலகம் புகலுண்மை ௩0

மதியொளிகண் மறைந்தாலுந் துருவனென வளர்விண்மீன்
றதியொளிகண் மறைந்தாலுந் தூயவருந் ததியென்று
பதியொளிகண் மறைந்தாலும் பன்னிரண்டு திங்களுக்குட்
பொதியொளியிவ் வுலகமொரீஇப் போவானென் றுணர்ந்திடுக ௩௧

கதிரொளியு நின்னொளியுங் கண்காணு தொழிதருமே
லதிர்கடன்மண் பதினொருமா தத்தளவி னகன்றொழியு
மெதிரில்லகா ரணத்தொருவ னிளைத்தாலும் பெருத்தாலு
முதிர்தலுறக் கறுத்தாலு மொழிகுவனெண் மதியளவில் ௩௨

கொடிகழுகு புறவிவற்றுட் குறியொன்று தலையேறின்
முடிவுவரு மதிபணித்தே மூவிருதிங் களுளென்பர்
படிபுனலிந் திரதனுவைப் பார்க்குமெனிற் பாரொழிந்
லொடிவிலிரு மதிமூன்று மதியென்ப ருணர்ந்தவரே ௩௩

தன்னுடம்பிற் பிணநாற்ற மெழுந்தாலுந் தழைவேம்பிற்
றன்னுடைய நெய்நாற்ற மெழுந்தாலுந் தொல்புவிவிட்
டென்னுடைய பெருநகர மெய்துகெனக் கொடுபோவான்
கொன்னுடைய கடாவுகைக்குங் கூற்றமொரு மதியளவில் ௩௪

கதிமிகுந்து பிராணவளி யுயிர்த்தானங் கலந்தாலு
மதியில்பகற் பொழுதுடுக்கள் வான்றோன்றக் கண்டாலும்
பொதியிருளிலிந் திரவிற் பொலிவெதிரே கண்டாலு
முதிகதிரை மதிபைவே றெருநிறமாக் கண்டாலும் ௩௫

பதுமமுகை முறுக்குடையப் பரிதியுதித் தெழுகால
முதுநரிதற் கெதிரூளை முழங்கியிடக் கண்டாலுங்
கதுமெனமண் ணுலகமொரீஇக் கருங்கடாப்போத் துகைக்குஞ்
செதுவலித்திண் டோட்காலன் செல்லுவான் கொண்டுடனே ௩௬

தாலநீர் வறந்தாலுந் தாரைநோக் கொழிந்தாலு
ஞாலமேன் மணங்கவர்த ஞுசிவிடுத் திருந்தாலுங்
கோலமா ரகன்மார்பு குளிர்ந்தாலு மவனுடனே
நீலவா னெனத்தோன்று நெடுமறலிக் காளாவன் ௩௭

முனிநடுக்கம் பயங்சோக மோகமடிக் கடியுறினுங்
கனிதரநாக் கறுத்தாலுங் கபோலநிறங் கறுத்தாலும்
பனிமுகத்து விகர்ரமிகப் படர்ந்தாலு மெய்குளிர்ச்சி
நனிமருவி யெழுந்தாலு நாசமடை தருமுடனே ௩௮

கனவினகை கறுத்திடமெய் கறுத்திடக் கண்டானெனினுஞ்
சினவிவரா கந்தாக்கச் சிரங்கொளக்கண் டானெனினும்
வனசமல ராற்பொன்னால் வனைதரக்கண் டானெனினுந்
தனதெனக்கூற் றுவனுலகஞ் சாருமுட னையமிலை ௩௯

கழுதைவரா கங்கள்பல கட்டுசக டத்திவர்ந்தும்
விழுமியதல் லாவெருமை வெம்போத்தின் மீதிவர்ந்தும்
பழுதில்விலா மிச்சவேர் படலையா லலங்கரித்துந்
தழுவியதென் றிசைநோக்கிச் செலக்காணிற் சாமுடனே ௪0

தன்னுடை கறுத்திடவுந் தலைமயிரி லாக்கரியோன்
முன்னுவந் தடித்திடவு முதுகல்லா லடிபடவுந்
துன்னுது தலைவிரித்துத் தொகநகைத்துக் கூத்தாடித்
தென்னுசை சென்றிடவுங் கண்டிடிற்றீர் தருமுடனே ௪௧

திருமெழுக்கின் பான்மயமாந் தீர்த்தமுமு குறக்காணி
னுருமுழுகத் தயிலநிறை கொப்பரியுள் ளுறக்காணில்
வெருவகற்று மிவைமுதலா விளம்பெவைகண் ணுற்றாலு
மருவருப்பிவ் வுலகடையா வகற்றுமுட னெனத்தெளிக ௪௨

இயம்புபல குறிகளுளு மியாதொன்று நிகழ்ந்தாலு
மூயங்குதல்வந் தற்றதென வுணர்ந்துடனே வெளிப்பட்டுச்
சயங்குலவப் பொலிதருமித் தலஞ்சார்ந்து வசித்திறப்பி
னயம்பரவு முத்தியினை நண்ணுதல்சத் தியமுணர்மோ சங

என்றுதழ லவற்கருளு யெம்மானக் கினியீச
னன்றுமுத லிதன்குறியி னயந்துபுகுந் தினிதமர்ந்தா
னன்றுமகிழ் தழலவனு மாவயிற்சின் னாள்வசித்துப்
பொன்றுதலில் விடைபெற்றுப் பொலிதேசோ வதியடைந்தான் சச

அந்தநாண் முழுதாகச் சுடுதலா லடைபாவஞ்
சிந்தநா யகமாகித் திகழ்ந்திருந்தா னழற்கடவு
ளெந்தநாள் களினுமவ னியற்றியதீர்த் தம்படிவோர்
சந்தமார் தரநினைத்த வெலாமடைந்து தழைதருவார் சரு

அக்கினியீச் சுரமென்றோர் பெயர்பெற்ற தக்கோயி
லக்கினியீச் சுரனென்றோர் பெயர்பெற்று னங்கணனு
மக்கினிமா தீர்த்தமென்றோர் பெயர்பெற்ற தத்தீர்த்த
மக்கினிய தெனப்புனைவார்க் கதிவிருப்ப மத்தலமே சசு

அக்கினிகா ரியமோம்ப லயர்த்துவயி ரோம்புதலே
மிக்கினிய தாக்கொண்ட வெள்ளறிவின் வேதியரும்
புக்கினிது மூழ்குவரேற் போக்கிடுமப் பெருந்தோட
நக்கினிய மலர்செறிய நலம்பொலியக் கினிதீர்த்தம் சஎ

பேயவிருச் சிகமாத மதிவாரம் விழைந்தாடல்
பாயகுட மதிமகநாட் பூரணையிற் படிந்தாட
றாயவிமி லேற்றுமதிப் பூரணையிற் றோய்ந்தாட
லாயவிவை யொன்றற்கொன் றதிகமாய்ப் பயன்படுமே சஅ

உடையவர்கண் முழுகிவறி தொழியாம லையனடி
யடையுமறி வுடையாருக் கமைதரப்பொன் னுதிபளித்
துடையபிரா னழலிச னுற்றசவுந் தரமடமான்
புடையணைந்து பணிந்தேத்திற் புகர்முழுதுந் துமித்தமர்வார் சகூ

ஆன்றபுகழ்ச் சொன்னவா றறிபவர்வா னவரிறைஞ்சுஞ்
சான்றவரக் கினியீச ராய்த்தழற்குக் கொடுத்தவரந்
தோன்றவுரைத் தனமவரே சோழீச ரெனுநாம
மூன்றவடைந் துலகளிக்கு மொப்பில்கரு ணையைப்புகல்வாம் ருo

கக வது, அக்கினிலிங்கப்பட்லம் முற்றியது.

ஆகப்படலம் கக-க்கு திருவிருத்தம் அஙச.

---

## கக, வது அக்கினிலிங்கப்படலம்

இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் திருத்துருத்தி யென்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய சொன்னவாறறிவாராகிய சிவபிரானை யும், அப்பெருமான் சத்தியான "அரும்பன்ன வனமுலையாளையும்" "மணவாளநாதரையும், அவர் திருமுன் எழுந்தருளிய நாறுசாந்தி ளமுலையாளையும், வணங்கித் துதித்து அத்தலத்திலேயே இருந்து களிப்புறுங் காலத்திலே அத்தேவர்களுக்கு முகம் போல் விளங்கா நின்ற அழற் கடவுளானவன், 'நாமோ பஞ்ச பூதங்களில் ஒன்று வோம். கடவுளர்க் கெல்லாம் முகமாக விளங்குவோம். இன்னும் பல குணங்கள் அமைந்தோம். நம்மால் தொடப்பட்ட பொருள்க ளெல்லா வற்றையும், எரித்து விடுகின்றபடியால் நமக்கு எல்லாராலும் சொல்ல ப்படும் குற்றமோ ஒன்று உண்டு. அதனால் பழிச்சொல் உண்டு. அதுபற்றி ப்பாவமும் மிக உண்டாகின்றது. இதனால் இந்தத்தலத்தில் எழுந்தருளிய இறைவனை வழிபட்டு அந்தத்தீங்கை ஒழியப்பெறுவேம் என்று எழுந்து திருக் கோயிலுள்ளே புகுந்து, உத்தாலமரத்தை வலம் வந்து "சொன்னவாறறிவார்" திருமுன்னுக்கு வடபாகத்து உள்ள தடாகத்தில் மூழ்கி அது தாமரை பலபூத்து இருத்தலால் அதற்கு அப்பெயர் வைத்து அப்புனிதநீர் கொண்டு எம்பெருமானுக்கு ஆட்டித்தாமரை ப்பூக்களையும் எடுத்துச் சூட்டி நல் உணவும்படைத்துத் துதித்தனன்.

அப்போதே அந்த அழலவனுக்கு முன் எம்பெருமான் தோன்றி யருளி, அழலவனே ! நீ எண்ணியதை எய்தவேண்டுமானால், "நமக்குத் தென்கிழக்கில் ஒரு கோயில் அமைத்து நமது குறியை நிறுத்தி உன் பெயரே அதற்கு இட்டு ஒரு திருக்குளமும் செய்து நம்மை வழிபடு வாயாக! அப்போதே நினது எண்ணம் இனிது கைகூடும் என்று

அருளிச் செய்தனன். அந்நெருப்புக் கடவுளும், எங்கள் பெருமானார் அருண் மொழியைக் கேட்டு அவ்வாறே அத்திசையிற் சென்று விச்சு வகன்மனை அழைத்துக் கற்பகிருக முதலாக அழகு படச்சமைப் பித்து, அத்திருக் கோயிலுக்கு எதிராக ஒரு திருக்குளமும் தோண்டி, அதில் கங்கை முதலிய புனிதநீர்களெல்லாம் கொண்டு வந்து அதில் நிலைபெறச் செய்து அதற்குத் தன் பெயரை நாட்டி, உத்தால ஆலயம் போல் அக்கோயிலில் இரண்டு அருட் சத்திகளையும் எழுந்தருளச் செய்து, இருவருக்கும் சௌந்தர நாயகி எனவும், அம்பிகை யென வும், திருப்பேர்தரித்துச் சுற்றுக் கடவுளர்களும் நிலையுறச் செய்து, முறைப்படி வழிபாடு செய்து, மகிழ்ச்சியுற்றுச் சித்திரைத் திருநாள் முதலிய திருநாட்கள் பல செய்து வேண்டும் செல்வங்கள் பலவும் தொகுத்து வைத்து, அவ்விடத்தில் தங்கி அப்பெருமானைத் தவறாமல் வழிபட்டு வருகையில் ஒருநாள் எம்பெருமானும் அவன் துதிக்குத் திரு வுளமகிழ்ந்து அவனால் நிறுத்தப்பட்ட சிவலிங்கத்தினின்றும் வெளி வந்து "நினது வழிபாடு முற்றும் நன்றே! நினக்கு வேண்டும்'வரம் யாது? சொல்லுவாயாக" வென்றருளினன். அப்போது அழலவன், எங்கள் சிவபிரானை நோக்கி 'ஐயனே! அடியேனுக்கு நினது அன்பே வேண்டும். இத்தலத்தில் இப்புனித நீரில் மூழ்கி நின்னைவழிபாடு செய்வார் எண் ணங்களை எளிதில் முடித்தருளவேண்டும். இன்னும் அவர்கள் பாவங்கள் எல்லாவற்றையும் அகற்றி அவர்கள் பேரின்பமுறச் செய்தல் வேண்டும். நினது பொருள்களை வவ்வின கொடியவர்கள் தங்குலத்தோடு நாசம் அடைந்து நரகிற் செல்லுதல்வேண்டும். என்னால் தீண்டப்பட்ட பொருள் பலவகைகளையும் யான் சுடுதலால் உண்டான பாவம் என்னை விட்டு விலகத் தூயனாக வேண்டும். நின்னை நினையாமல் எது செய் தாலும் அது முற்றுப்பெறாது ஒழிதல்வேண்டும்" என்று வரங்கேட்க அவ்வரங்கள் அனைத்தும் எம்பெருமானார் அளித்தருளிப் பின்னும் கருணையால் 'இவ்வுலகத்தில் உள்ளவர் யாவராயினும் இத்தலத்தில் வந்து இறப்பாரானால் அவர்கள் நமது அடிஅடைந்து இன்புறுவர்" என்று அருளினர். அழலவன் அது கேட்டு எம்பெருமானை நோக்கி ஐயனே,! "இறக்குநாள் தெரிந்து கொள்வது எப்படி" என்று விண் ணப்பஞ் செய்தனன். அதற்குச் சிவபிரானார் இறத்தற்குமுன் நிகழா நின்ற குறிகளை முறையே கூறியருளினர். அது கேட்டு அழலவன் சில நாட்கள் அத்தலத்திலேயே தங்கி எம்பெருமானார்பால் விடை பெற்றுக்கொண்டு தங்நகரை அடைந்தனன். அதுமுதல் அவன் சேர்ந்த வற்றை அழித்தலால் வரும் பாவம் அனைத்தும் தன்னை அடையாமல்

இருந்தனன். அன்றுமுதல் அத்தலம் அக்கினீச்சுரமெனவும் அத்தலத்தில் எழுந்தருளிய இறைவன் அக்கினீச்சுரனெனவும், அத்திருக்குளம் அக்கினிக்குளமெனவும் பெயர்கள் வாய்ந்தன. அக்கினிகாரியம் ஒன்றுஞ் செய்யாமல் வயிறுவளர்த்தலே காரியமெனக் கொண்டு திரிகின்ற மறையவரும் அதில்மூழ்கினல் அவர்கள் குற்றமுழுதும் நீங்கப் பெறுவார்கள். கார்த்திகைத் திங்கள் ஞாயிற்றுக்கிழமையிலும், மாசித்திங்கள் மகநாளிலும், வைகாசித்திங்கள் பௌர்ணமையிலும் மூழ்கினல் அவற்றுள் ஒன்றற்கு ஒன்று சிறந்த பயனைத் தரும். இன்னும் அதில் மூழ்கிச் சிவனடியார்களுக்குச் சிறிது பொன் முதலியன ஈந்து அப்பெருமான் பெருமாட்டியார் திருவடிகளைத் துதித்தவர்கள் குற்றமெல்லாம் அகன்றொழிந்து இன்புறுவார்.

கக-வது, அக்கினிலிங்கப் படலம் முற்றியது.

## உ௦-வது, சோழீசப் படலம்.

புக்கினி தழற்கடவுள் பூசனை புரிந்த
வக்கினி யிறைக்கெவ ரடிப்பணி புரிந்தார்
மிக்கவ ரைச்சொல்லென விநமரை வினவத்
தக்கருணை மார்தரும சருமனுரை செய்வான் க

நக்கபுகழ் நீர்வளநன் ஞடினி தளிப்போன்
முக்கணிறை பத்தியின் முழுத்தவறி வுய்ப்போன்
றிக்கவை யனைத்தினுமோர் செறுநரையு மில்லான்
விக்கிரம சோழனென விள்ளுமொரு பேரான் உ

அந்தவிகன் மன்னன்மனை யாய்ப்பொலி குணத்தாள்
சந்தமிகு கோமளை யெனும்பெயர் தரித்தாள்
பந்தமுறு தண்பதி யொடுங்குலவி வாழ்நாள்
வந்ததொரு தீவினையம் மங்கையுயிர் தேம்ப ந

முற்பிறவி யிற்புரி முருக்குவினை மேவப்
பொற்பமை யுருப்பொலிவு போயொளி மழுங்கச்
சொற்பரவு குட்டமெனு நோய்தொடர்த லோடுங்
கற்புமலி கோமளை கலங்கிநிலம் வீழ்ந்தாள் ச

வீழ்ந்தவ ளருந்துயர நோக்கியொரு வேந்தன்
சூழ்ந்தவினை யாதுபுரி யிற்றொலையு மென்று
வாழ்ந்தபல நூலுணர்வின் வல்லவரொ டாய்ந்தே
யாழ்ந்தமணி மந்திர மருந்தமைய வுய்த்தான் ரு

சான்றவர்கள் சொற்றபல தானமு மளித்தான்
றேன்றவிர தம்பல தொடங்கினன் முடித்தா
ளூன்றவறி வாளர்க ளறைந்தன வனைத்து
மேன்றதென வாற்றியு மிரிந்தில தந்நோயே சு

காசிமுத லாயதலம் யாவையுங் கலந்து
வீசிமிகு செம்பொன்மிளிர் தீர்த்தமும் படிந்து
வாசிமறை யாக்கியநம் வள்ளலையும் போற்றிப்
பேசியவன் மாபுகழ் பெயர்ந்திடுது மென்னு எ

எண்ணின னெழுந்தன னிருஞ்சிவிகை யுள்ளா
னண்ணிய மனைக்குரிய நங்கைவர வங்கே
மூண்ணியவோர் தேர்மிசை மிவர்ந்தன னடைந்தான்
கண்ணிய வளம்பரவு கங்கைகெழு காசி அ

ஆங்குமணி கன்னிகைமுன் னையபல தானத்
தோங்குபுனல் பன்னியொடு முற்றினிது மூழ்கித்
தேங்குமறை யந்தமொளிர் செல்வனை வணங்கி
வீங்குபொருள் யாவரும்விழைந்து கொளவீசி கூ

உண்டிவினை வல்லமறை யோருள முவப்ப
மண்டிய சுவைத்திறம் வயங்குமடை யூட்டிக்
கொண்டியலு மிவ்வகைசின் னாளமர்தல் கொண்டு
விண்டுமலர் செற்றபொழில் வேறுதலஞ் செல்வான் க0

வேறு

ஆங்குமிவ் வாறே நான மாதிய வனைத்து மாற்றி
யோங்குதம் பிரானை போற்றி யொழுகுவா னிந்த வாறே
தேங்குபஃறலங்க ளெல்லாஞ் சென்றுசென் றிறைஞ்சல் செய்து
வீங்குவெங் குட்டநோய்க்கு விருத்தியே யாயிற் றன்றே கக

மேதகு தலங்க ளெல்லாந் தரிசித்தும் விடப டாது
காதரஞ் செய்யுங் குட்டங் கழிவதெவ் விதத்தா லென்று
பூதரம் பொருவுந் தோளான் புழுங்கிவே தனைக்கோட் பட்டு
மாதவர் செறியுத்தால வனத்தினைக் குறுகி னானே கஉ

பதுமநற் றீர்த்த மாடிப் பரவுமுத் தால நீழல்
விதுவணி சடைப்பி ரானை விளங்குமம் பிகையைப் போற்றிக்
கதுமென விலிங்க முன்போய்க் கைதொழு திறைஞ்சிப் பின்னர்
மதுவமை யரும்பு நேரும் வனமுலை யுமையைத் தாழ்ந்து கங

பொன்செய்த சிகரி வாயிற் புகுந்தன னனையகாலை
மின்செய்த மௌலி வேந்தே விளங்குமித் தளிக்குத் தென்கீழ்க்
கொன்செய்த தளியொன் றுண்டாற் குறுகியங் குறுநீர் மூழ்கின்
முன்செய்த வினைநோய்தீரு முகம்புலர்ந் தழுங்கே லென்று கச

காயவாக் கெழுந்த தொன்று கேட்டுளங் கசிந்து போற்றி
நேயமா மனைவி யோடு நிமலனைப் பணிந்து தாழ்ந்து
தூயசீ ரழலோன் றிக்கிற் றுணைதரப் படர்ந்து கண்டா
னயனு ரருளிற் கூறுநலமலி தீர்த்த மொன்று கரு

காண்டலு முவகைபொங்கக் கவினிறை மேனி முற்று
மாண்டசெம் மலரே யென்ன வளாயசெம் புண்வி ராவி
யாண்டசெந் தேனே யென்னவரக்குநீ ரொழுக்கி மொய்த்தல்
பூண்டபன் னுமிறே யென்னப் பொருந்துபல் லீய வாகி கசு

வருத்தங்கூர் மேனி யானை மற்றதி னனைத்த லோடும்
பொருத்தங்கூர் தரக்காய்ந் தன்று பொலிவுமுற் பலவும் பூத்த
திருத்தங்கூர் பெருமை நோக்கித் தேவர்பூ மாரி பெய்தா
ருருத்தங்கூர் வனப்பு மங்கை யுவகையங் கடலு ளாழ்ந்தாள் கஎ

கொழுநனைத் தழுவிக் கொண்டாள் கோற்றொடி யோடு மீட்டுஞ்
செழுமலர்த் தீர்த்தமூழ்கிச் சென்னிவிக் கிரம னென்பான்
றொழுமழ லீசன்முன்போய்ச் சூழ்ந்துவண் பூசை யாற்றி
யொழுகுபன் னுளோர்நா ளும்பர்தம் பெருமான் றேன்றி கஅ

வேண்டுவ தென்னை யென்ன விளங்கவென் பெயர்பூண் டென்னை
யாண்டநீ பொலிதல் வேண்டு மடியனேற் குன்பா லென்று
மாண்டவன் புதவி யீற்று முத்தியும் வழங்கல் வேண்டுந்
தாண்டவ மாடு மெந்தாய் தருதியென் றிறைஞ்சி வேண்ட கசூ

அந்தவா றருளிச் செய்தே மறைந்தன னிலிங்கத் தையன்
சந்தமா ரரசன் பின்னர்ச் சவுந்தர வுமையைப் போற்றிப்
பந்தவா பரண மாடை பற்பல வெறுப்ப வீசி
யெந்தவா னவரும் போற்ற விழாச்சிறப் பெடுத்த பின்னர் உ0

அத்தளித் தென்பா லோரூ ரணிநில முழுது மந்த
வித்தகற் காக நல்கி விளங்குமோ ரிலிங்க மாங்குச்
சித்தமிக் குவப்பத் தாபித் தருச்சனை செய்து பின்னுட்
பத்தருக் கெளியான் பாத பங்கயஞ் சேர்ந்து வாழ்ந்தான் உக

அன்றுதொட் டக்கினிப்பே ரண்ணல்சோ ழீசனுனன்
கன்றுமுட் டியர நீங்கக் கருதினோ ரெவரு மாங்கே
சென்றுபற் றறப்பார் தெய்வத் திருத்தலந் துருத்தி யன்றி
யென்றுமெவ் விடத்தும் வேறென் றில்லையாற் றேருங் காலே உஉ

மருவழ லீசன் பின்னுட் சோழீச னன வாறு
கருவொழிந் துய்யச் சொற்றுங் காதலின் வருணா னுங்கே
யருள்பெறக் குறிப்ப திட்டை யாற்றியர்ச் சித்தோர் வன்னேய்த்
தெருமர றீர்ந்து வாழ்ந்த கதையினைச் செப்ப லுற்றும். உங

**சோழீசப்படலம் முற்றியது.**

**ஆகப்படலம்** உச-க்குச் செய்யுள் அறுஎ

## 20-வது. சோழீசப் படலம்,

சோழ நாட்டை ஆளுபவனும், இறைவனுக்கு மிகுந்த அன்புள்ளவனும், எத்திசையிலும் பகைவரில்லாதவனும், ஆகிய விக்கிரமனென்னும் பெயருடைய ஓர் அரசனிருந்தனன். அவன் மனைவி "கோமளை" யென்னும் பெயருள்ளவள். இவள், தன்னைக் கொண்டவனாகிய அவ்வரசனுடன் வாழ்கின்ற காலத்தில், முன் செய்த தீவினை ஒன்று வந்தது. அதனால் அக்கோமளைக்குக் குட்டநோய் தலைப்பட அவளுடைய உடல் ஒளி மழுங்கியது. அதனை நோக்கிய கோமளைமாது கலக்கமிக அடைந்து நிலத்தில் வீழ்ந்தாள். அது நோக்கிய அரசன் நூல்

வல்லாரோடு, 'இவ்வினை யாது செய்தால் தீரு' மென ஆராய்ந்து மணி, மந்திரம், மருந்துகளை வழங்கினன். பெரியார் சொன்ன தானங்களைச் செய்தனன். பல விரதங்களைக் கொண்டாடினன். எத்தனையோ பல அறங்களை அறிவுடையோர் சொன்னபடியெல்லாம் செய்தனன். அவ்வாறு செய்தும் அந்நோய் அகன்றிலது. அதைக் கருதி அரசன் இனிப்பல தலங்களை அடுத்து ஆங்காங்குள்ள திருக்குளங்களிலேயும் மூழ்கி ஆங்கு எழுந்தருளிய சிவபிரானைத் துதித்து அவன் மாபெரும் புகழையே சொல்லிப் போகலாமென்று எண்ணி எழுந்தனன். தன் மனையாளைச் சிவிகையில் ஏற்றித்தானும் தேரில் ஏறிச்சென்று காசியை அடுத்தான். ஆங்குள்ள, "மணி கன்னிகை" யென்னும் ஆலயத்துக்கு முன்னாகப்பல தானங்கள் செய்து தன் இல்லாளோடு கங்கையில் மூழ்கினன். அத்தலத்தில் எழுந்தருளிய இறைவனை வணங்கி வேண்டும்பொருள்களை ஆங்குள்ளவர்கள் கொள்ள வழங்கினன். அடியவர்களுக்கு அறுசுவையோடு அன்னமளித்தனன். இவ்வாறே ஆங்கே சிலநாட்கள் தங்கிப்பின்னர் வேறுதலங்களில் செல்லக் கருதிச் சென்று ஆங்காங்குள்ள பலதலங்களை அடுத்துப் பலதீர்த்தம் ஆடி ஆங்கு எழுந்தருளிய எம்-பெருமானைப் போற்றியும் அந்நோய் நீங்காது மேலும் ஆக்கமாதலை நோக்கி வருத்தப்பட்டு உத்தால வனத்தை உற்றனன். ஆங்குள்ள தாமரைத் தடாகத்தைக் கண்டு அதில் தன் மனையாளோடு மூழ்கி எம்-பெருமானாகிய "சொன்னவாறறிவா" ரையும் "அம்பிகை" அம்மையையும், "அரும்பன்னவனமுலையா"ளையும் வணங்கிக்கொண்டு கோபுர வாயிலில் வந்தனன். ஆங்கு வானிலே, 'அரசே! இத்தலத்திற்குத் தென் கிழக்கில் ஒரு திருக்கோயில் உண்டு. அங்குப்போய் அங்குள்ள திருக்குளத்தில் முழுகினால் நீ முன்செய்த பாவம் அனைத்தும் அகன்றுவிடும். ஆதலால், நீ வருந்தற்க' வென்று ஓர் 'வான் வாக்கு' எழுந்தது. அதுகேட்ட அரசன் மனம் உருகித் தொழுது அவ்வாறே போய் அக்கினித் திசையில் தடாகம் ஒன்று கண்டு மனமகிழ்ச்சி அடைந்து தன் மனையாளை அதில் மூழ்குவித்த அளவிலே 'அக்கோமளை'யின் உடல் முற்றும் நோய் தீர்ந்து பொலிவுற்றது. அது கண்ட தேவர்கள் அனைவரும் பூமழை பொழிந்தனர். அம்மங்கையும் இன்பக்கடலில் ஆழ்ந்தனள். தனது தலைவனைத் தழுவிக்கொண்டனள். பின்னரும் அவ்விக்கிரமசோழன் கோமளையோடு அத்தடாகத்தில் மூழ்கி அழல் நாயனாகிய சிவபிரான் திருமுன் சென்று வணங்கி வலம் வந்து பன்னாளாக வழிபாடு செய்து வந்தனன். ஒருநாள் அழலீசனாகிய சிவபிரான் அவன் முன் எழுந்தருளி, அரசே! 'நினக்கு

வேண்டுவது என்னை? அதைக் கூறுக' என்று அருளிச் செய்ய, அரசன் 'அடியேனை அடிமை கொண்டருளிய நீர் எப்போதும் என் பெயரால் விளங்குதல் வேண்டும். உமதிடத்திலேயே எப்போதும் அடியேன் அன்புடையனுதல் வேண்டும். இறுதியில் வீட்டின்பமும் வழங்கியருள வேண்டும். இவ்வரங்களே அடியேனக்கு அளித்தருள்க, என்று விண்ணப்பஞ் செய்து வணங்கினன். எம்பெருமானும் அவ்வாறே அளித்து மறைந்தருளினர். விக்கிரம சோழன் மகிழ்ந்து எம் பெருமாட்டியாகிய அழகம்மையையும் வணங்கி வழிபட்டுப்பல அணி ஆடைகளைப் பலர்க்கும் வழங்கித் திருவிழாச் சிறப்புறக் கொண்டாடினன். அதன் பின்னர் அந்தத் திருகோயிலுக்குத் தென்பாகத்தில் ஓரூர்நில முழுதும் வாங்கி அப்பெருமானுக்கு விட்டு ஆங்கே ஒரு சிவ லிங்கமும் எழுந்தருளச் செய்து வழிபட்டான். அன்று முதல் அழல் தலைவனாகிய சிவபிரானுக்குச் "சோழீசன்" என்னும் திருநாமம் வந்தது. அப்பெருமானைச் சிந்தனை செய்பவர் எல்லாரும் ஆசையை நீக்கி அவனடியிற் சார்வார். எல்லாம் திருத்துருத்தியே ஆகும்.

**சோழீசப்படலம் முற்றியது.**

---

## உக-வது, வருணலிங்கப் படலம்.

நாற்ற வார்பொழி னற்று ருத்தியு
ளேற்ற மார்தர வின்னும் பூசித்தார்
பேற்றை யோதெனப் பன்னி பேசிடச்
சாற்ற லுற்றனன் றரும சன்மனே க

கருணை யெம்பிரான் கல்லி யாணத்தி
னருணி ரம்பவந் தடைந்த யாவரும்
பொருணி ரம்புறப் போற்றி மேவுழி
வருண னென்பவ னிதும தித்தனன் உ

மறையெ லாமெடுத் தியம்பு மாத்தலங்
குறைவி லாவளக் குளிர்து ருத்தியே
யிறைவ னிங்ஙன மேத்தி னோர்க் கெலா
நிறையும் பேரரு ணிமிட நல்குவான் ௩

ஒருதி னத்தினிங் குறுமி லாபம்வே
றொருத லத்தினுண் டறினு மெய்தரு
தருணி ரம்புமிவ் வற்பு தத்தலத்
தருமை யாவரே யறைய வல்லவர் ௪

தவாது நாமுறு சலோத ரப்பிணி
யவாவி னித்தல மகற்று முண்மையே
குவான லச்சிவக் குறிப்ப திட்டை செய்
துவாவிற் பூசிப்பா மென்று ளோர்ந்தனன் ௫

திரைசெய் காவிரித் தென்க ரைத்தலைத்
தரைசெய் நீழலுந் தாலங் கோயிற்கு
விரைசெய் சற்றுத்தென் மேற்குத் திக்கினால்
கரைசெ யோரிடங் கண்டு கொண்டனன் ௬

கருப்ப மாடமுங் காம ரிஞ்சியும்
விருப்ப மார்தர மேவு மற்றவு
மருப்பு விச்சுவ கன்ம னலவாய்ப்
பொருப்ப தாமெனப் புரிவித் தானரோ ௭

ஆங்கு நாயக னமரு மோர்குறி
பாங்கு மேவுறப் பதிட்டை செய்தனன்
றேங்கு காவிரித் தீர்த்த மாடினன்
வீங்கு யாவையும் விழைந்து தேடினன் ௮

மன்னு நூலினு வாக னுதிக
டுன்னு மாசெயாத் தூய காவிரி
மின்னு நீர்முகந் தாட்டி மேவுறப்
பன்னு பூசனை பாங்கிற் செய்தனன் ௯

குலவி லிங்கமுன் குடந்தம் பட்டுநின்
றிலகு மன்புமிக் கெழுந்து பொங்குற
வலன மைந்தமெய்ம் மயிர்சி லிர்த்திடப்
பலவி ருந்துதி பகர லுற்றனன் ௧௦

ஐந்து பூதமு மாகி யல்லவாய்
விந்து நாதமுங் கடந்த மேதகா
யெந்து செய்துமென் றிரங்கிமுன் னின்று
நைந்து ளார்க்கரு ளுத போற்றியே கக

விச்சு வாதிக விசுவ சேவிய
வெச்ச ஞர்தொழு மிறைவ நான்மறை
யச்சு வாவவற் றந்த மோர்தராப்
பச்சை மாமயில் பாக போற்றியே கஉ

மறப்பி ஞேர்தரம் வழுத்தி ஞரும்வெம்
பிறப்பி னீங்குபு பிறங்கு மாறருள்
சிறப்பின் மேயவ திகழும் பாகத்து
நறப்பின் ருழ்குழ ளுத போற்றியே கங

துய்ய நின்கழற் ஞெண்ட ஞகியும்
வெய்ய நோயினல் வெதும்பி நாடொறு
மைய நாயினே னழுத றக்கதோ
வுய்யு மாறரு ளும்ப போற்றியே கச

எங்கு மாகிய வீச நேசவோர்
பங்கு மால்கொளப் பகிர்ந்த பண்ணவ
தெங்கு வார்பொழிற் றிருத்து ருத்தியுட்
பொங்கு சீர்த்திசால் புராண போற்றியே கரு

என்று தோத்திர மியம்புவா னெதி
ரன்று நாயக னவ்வி லிங்கத்து
நின்று தோன்றின னீவி ழைந்ததெ
னின்று கூறென வியம்பன் மேயினன் கசு

அடிய னேன்பிர திட்டை யாற்றிய
படியி லிக்குறி பகரென் பேரின
னெடிய நாளெலா நிலவி யோங்கவு
முடிவி னீயிதின் முயங்கி மேவவும் கஎ

ஈது போற்றிடு மெண்ணி லார்களுந்
தீது தீர்ந்தருள் சேர்ந்து வாழவு
மோது மென்சலோ தரமு ருங்கவு
மாது பாகநீ வரம்வழங் கென்றான் கஅ

உரைத்த யாவையு மொருங்கு நல்கியே
வரைத்த வக்குறி புக்கு வைகினன்
விரைத்த கொன்றையான் வெய்ய நோய்தவிர்ந்
திரைத்த நீர்க்கிறை மகிழ்ச்சி யெய்தினன் கக

விடையு கைத்திடும் விமல னாரிடம்
விடைபெற் றெண்பதி மேவி வாழ்ந்தன
னடைவி ருச்சிகத் தாதி வாரத்தி
லடைமலர்ப் பொன்னி யாற்று மூழ்குபு உ0

நீறு பூசியுண் ணிகழு மன்பொடு
மாறு தீர்தரும் வருண லிங்கத்தைப்
பேறு வாய்ப்புறப் பேணிப் போற்றுவா
ரூறு தீர்ந்தெலா மடைவ துண்மையே உக

மருத்து முன்னெனும் வருணன் பூசித்துக்
கருத்து முற்றிய கதைவி ளம்பினம்
பொருத்து மன்புறக் காளி பூசித்துப்
பெருத்து நீள்வரம் பெற்ற தோதுவாம் உஉ

உக-வது, வருணலிங்கப்படலம் முற்றியது.

ஆகப்படலம் உகக்குத் திருவிருத்தம் அஎக.

## உக-வது, வருணலிங்கப்படலம்.

திருத்துருத்தியிலே சொன்னவாறறிவாராகிய மணவாளநாதர் திருமணக்கோலங்கண்டு மகிழ வந்த தேவர்கள் அனைவரும் அங்கேயே அவ்விறைவரைப் போற்றி இருக்கின்ற காலத்திலே வருணனென வன், "இத்திருத்துருத்தியில் இறைவனார் தம்மை வழிபடுவார்க்கு நிறைந்த பேரருளை வழங்கியருள்கின்றனர்- இத்தலத்தில் எய்தும் இனிய பயன் வேறு எந்தத்தலத்திலும் எய்தாது. திருவருள்

நிரம்பிய இத்தலத்தினது பெருமையை யாவர் எடுத்துச் சொல்லவல்ல வர்? ஆதலால்,என்னை விட்டு நீங்காத 'சலோதரம்' என்னும் நோயானது இத்தலத்திலேயே என்னை விட்டு அகன்றொழியும். இது உறுதியே. அதன் பொருட்டுச் சிவக்குறி ஒன்று எழுந்தருளச் செய்து எம்பெரு மானை வழிபடுவேன்" என்று துணிந்தனன். அதற்காக வருணன் காவிரிக்குத் தென்கரையிலே திருத்துருத்திக் கோயிலுக்குத் தென் மேற்கிலே ஓர் நல்லிடம் கண்டு விச்சுவகன்மனைக் கொண்டு அவ்விடத் திலேயே ஒரு திருக்கோயில் கற்பகிருகம் முதலியவாக அமைக்கச் செய்து ஆங்குச் சிவபிரான் எழுந்தருள்புரியும் சிவக்குறி ஒன்று நிறுவிக்காவிரி ஆடி வழிபாட்டிற்கு வேண்டும் பொருள்களெல்லாம் பொருந்தத்தேடி அக்காவிரி நீரைக் கொண்டு எம்பெருமானை வழி பட்டனன். அச்சிவலிங்கப் பெருமானை வருணன்,"குடந்தம்"என்னும் வணக்கஞ் செய்து அன்பு மீதூர மயிர்சிலிர்க்கப் பல அரிய துதிகளை அறைந்தனன். எம்பெருமானும் அதற்கு இரங்கி யருளி அவ்வரு ணனுக்கு முன் தோன்றி நின்று அன்பனே! "நீ விரும்பியது யாது அதனைக் கூறுக" வென்றருளினன். வருணனும் எம்பெருமானை வணங்கி ஐயனே! "அடியேன் வழிபட்ட இச்சிவலிங்கம் அடியேன் பெயரினாலேயே நீண்ட காலம் விளங்கவும், கடவுளீர்! எஞ்ஞான்றும் இதில் எழுந்தருளவும், இதை வழிபடுவார் எவர்களும் தத்தம் தீங் கெலாம் நீங்கிச் செழிப்புறவும், எனது வயிற்று வலியும் இன்றே ஒழி யவும், அடியேனுக்கு வரம் தந்தருள வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனன். எம்பெருமானார் அனைத்தும் வழங்கி அச்சிவக்குறியில் புகுந்தருளினர். வருணன் எம்பெருமானார் அருளைப்பெற்று விடை பெற்றுச் சென்றனன். இத்தலத்தில் எழுந்தருளிய வருணலிங்கப் பெருமானைக் கார்த்திகைத் திங்களில் ஞாயிற்றுக்கிழமையில் வழி படுவார் அனைவரும் தத்தமக்குற்ற ஊறுகள் அனைத்தும் ஒழியப்பெற்று இன்புறுவர். இது உண்மையே.

உக-வது, வருணலிங்கப்படலம்முற்றியது.

---

## உஉ-வது, ஓங்காளீசப்படலம்.

பொருவி லாத்து ருத்தியுண், மருவி யின்னும் பூசித்தார்
பெருமை யுன்னி யோதெனத், தரும சன்மன் கூறுவான் க

மறைக்கு லத்து நங்கையைக், கறைக்க ளத்தர் வேட்டசீர்
நிறைத்த பார்வை யார்களு, ணறைத்தண் கூந்தற் காளிதான் உ

மறையெ டுத்து ரைத்திட, நிறைவு பெற்ற மாத்தல
மறையு மித்த லமெனுக், குறைய றத்தெ ரிந்தனள் ஙா

வரமி குஞ்சி வக்குறி, விரவ விங்கு நிறுவியே
பரவ வேண்டு மென்றுளத், துரவி னோர்ந்தெ ழுந்தனள் ச

சொன்ன வாறறிபவர், நன்னர் வாழ்தி ருத்தளித்
தென்ன வாய டைந்தனள், பன்னல் வாய்ந்த காளியே ரு

பொருவி லாத விச்சுவ, கருமன் மேவ வெண்ணினள்
வெருவி வந்து தாள்பணிந், தருள்செய் வேலை யென்னென்றான் சு

இறைகுறிப் பதிட்டைசெய் முறையு ளத்தி லெண்ணினேன்
குறைவி லாத்தளி யொன்று, நிறைவினாற்று கென்றனள் எ

புத்தி யென்று தச்சனும், பத்தி யிற்றொ ழுதெழாச்
சுத்தி யின் னியற்றினு, னித்தியப் பெருந்தளி அ

அதுதெ ரிந்து வந்துநேர், முதுநி லம்பி ளந்துபண்
மதுமலர்ப்பெ ருந்தடங், கதுமெ னப்புரிந்தனள் கூ

வரந திம்மு தற்பல, திரமு றம்பு னலெலாம்
விரவ வங்குத் தாபியாப், பரவி மூழ்கி மேலெழீஇ கo

நீறு பூசி வெவ்வினை, மாறு கண்ம ணிபுனைந்
தேறு சீர்ப்ப தமைந்து, மூறு தீர வெண்ணியே கக

நாத னார ருட்குறி, போத வொன்று தாபியா
வேத வாக மம்புகன், றாத ரத்திற் பூசிப்பான் கஉ

வண்டு கிண்டு பூத்தட, மொண்டு மஞ்ச னஞ்செயா
வண்டு பன்ம லர்கடேய்த், தொண்டு பூண்டு போற்றுவாள் கஙா

இன்ன வாறு பூசனை, மன்ன வோம்பு காளிதான்
பன்ன வாய்ந்த வன்பினன், முன்னர் நின்று மாடுவாள் கச

பற்ப னுளு மிவ்வண, மற்பி னுற்றி வருபவள்
பொற்பு மேவு பத்தியாற், சொற்ப ராவு மிது செய்வாள் கரு

வேறு

நந்தியடி தொழுதேகி நண்ணியசண் டனைக் கண்டு
நந்தியைமீ ளவுமணைந்து நற்கமலக் கரங்குவித்து
நந்தியிட னின்றேகி நண்ணுகோ முகையடைந்து
நந்தியைமீ ளவுமணைந்து நாடுறுமிப் படியாக கசு

திரமாருஞ் சோமசூத் திரப்பிரதக் கிணஞ்செய்து
வரமாரும் பேரன்பின் மாகாளி தொழும்பொழுது
கரமாரு மழுமானுங் கதிர்ச்சடைமோ லியும்பொலிய
வுரமாருங் கணங்களொடு மும்பர்பிரான் வெளிநின்றான் கஎ

ஒளிநின்ற குறிநின்று முமையவளு முடனாக
வெளிநின்ற பெருமானை விரும்பலகைக் கொடியாள்கண்
டளிநின்ற மனநெகிழ வங்கைதலை மேற்குவியத்
துளிநின்ற விழியினளாய்த் தொழுதுதுதித் திடலுற்றாள் கஅ

மாமறையே கோவணமா மாமறையே பாதுகையா
மாமறையே யாதனமா மாமறையே வாசிகளா
மாமறையே வாய்மொழியா மாமறையே வந்தியரா
மாமறையே தேடுநராம் வள்ளானின் றர மெளிதோ ககூ

மறைகண்முழு வதுந்தாய்த்தாய் வந்துகுறு கவுஞ்சேய்த்தாய்
நிறைவலிப்பொன் மலைசாய்த்தாய் நேர்வருகா லனைமாய்த்தாய்
குறையமதி யுடறேய்த்தாய் குறிப்பவர்த முளப்பாய்த்தா
யறையுமெனக் கெளிவாய்த்தா யற்புதநின் னடிதொழுவேன் உ0

எண்ணார்தம் புரமெரித்தா யெதிர்வந்த கரியுரித்தாய்
பண்ணார்மென் மொழிவிரித்தாய் பசும்பவளச் சடைபரித்தாய்
கண்ணார்செந் தழறரித்தாய் கருதினர்தங் கரிசிரித்தாய்
தண்ணார்பைம் பொழிற்றுருத்தித் தலைவாநின் னடிபோற்றி உக

என்றுதுதி புகன்றிடுங்கா லெம்பிரா னடம்புரிந்தான்
குன்றுமுலை யுமையாள்கண் குளிர்ப்பேறக் கண்டுவந்தா
என்றுசின மாகாளி யதுகண்டாங் கெதிர்நடித்தா
ளொன்றுவியப் பிதுநோக்கி யும்பர்பூ மழைபொழிந்தார் உஉ

வேண்டுவர முரைத்தியென வெற்புவளைத் தவனருளத்
தூண்டுசின மாகாளி துரிசறுமிக் குறியென்பேர்
பூண்டுவிளங் கிடல்வேண்டுந் தீர்த்தமுப்பூ ணுதல்வேண்டுந்
தாண்டுசின மால்விடையாய் தரவேண்டு மிவையன்றி உங

பாயவிருச் சிகமாதம் பானுவாரத் தென்பேர்த்
தோயநனைந் தெழீஇச்சோம சூத்திரச்சூழ் தலைவிழைவோர்
நேயமிகு போகமெலா நிரம்பத்துய்த் தீற்றுவினை
யோயவரு ளுகவென்று ளோமென்று பிரான்மறைந்தான் உச

ஓமென்று மறைதலினு லோங்காளீச் சுரனெனும்பேர்
நாமென்று மதிக்கவரு ணயகன்பெற் றனன்கமலப்
பூமென்று மேதியெழு புனல்காளி தீர்த்தமெனத்
தோமென்று மரித்தமருந் தூநாமம் புனைந்தன்றே உரு

சிலைமதியா திரைநாளிற் சிறந்தவிருச் சிகமதியிற்
றலைமைபெறு பூரணையிற் சாற்றியவப் புனன்முழுகி
யுலைவிலருள் செயவல்ல வோங்காளீ சரைத்தொழுவார்
மலைவரிய பெரும்போகம் வாய்ந்துகதி மருவுவரே உசா

துருத்திநகர் விடலஞ்சிச் சூழ்ந்துநகர் காத்தலெனும்
விருத்திவினை பரமனருள் மேற்கொண்ட மாகாளி
யருத்திமிக வளித்திசைநன் கமருமவள் பதந்தொழுவார்
திருத்தியுறு போகமெலாந் திளைத்துவாழ் குவரம்மா உஎ

ஓங்காளீ சப்பெருமா னுற்றமரு மாலயத்து
ணீங்காத திருவிளக்கு நிரப்புநரு மற்றுமுள
பாங்காரும் பணியனைத்தும் பரவவியற் றிடுவாரும்
வாங்காத பெருஞ்செல்வ மருவிவாழ் குவரென்றும் உஅ

உடையவரா யிருப்பவர்க ளோங்காளீ சப்பெருமா
னிடையகலா தமர்கோயிற் கேன்றதுத வாரெனினும்
புடைமிளிரத் தளிக்கூறு புகவிலங்கா ராயிடினு
மிடைவறுமை பிணியாதி வெவ்வினைக்கோட் பட்டுழல்வார் உசு

வேறு.

ஓங்கா ளீசரை யோதினும், பூங்கா மன்றெழு புண்ணிய
நீங்கா மேன்மை நிகழ்த்துவாம், பாங்கா ரார்வம் பரவவே ங0

**ஓங்காளீசப்படலம் முற்றியது.**

**ஆகப்படலம் உஉ க்குத் திருவிருத்தம் சுoசு**

---

## உஉ-வது, ஓங்காளீசப்படலம்

எம்பெருமானாகிய திருத்துருத்திப் பெருமானுடைய திருமணங்காண வந்தவர்களுள் காளியென்பாள், "இத்தலம் மறைகளால் துதிக்கத் தகுந்த தென்று நினைந்து இதில் சிவக்குறி ஒன்று நிறுவி வழிபட வேண்டும்" என்று விருப்புற்றுத் திருத்துருத்தித் திருக்கோயிலுக்குத் தென்பாகத்தில் சென்றனள். ஆங்கு அக்காளியானவள் விசுவகன் மனை வர நினைத்தனள். அவ்வாறே அவனும் காளியை அடைந்து யான் செய்யும் பணி யாதென்று விண்ணப்பஞ் செய்தனன். அதற்கு அந்த அம்மையார் நான் இவ்விடத்தில் சிவக்குறி ஒன்று நிறுவி எம் பெருமானைப் பூஜிக்க நினைத்துளேன். அதற்காகச் சிறந்தொரு திருக் கோயில் செய்க வென்றனள். அதுகேட்ட தேவதச்சன் அவ்விடத்தே மிகத் தூய்மையான ஆலயம் ஒன்று எடுத்தனன். அதுகண்டுகாளி, மகிழ்ந்து ஒரு தடாகம் தோண்டி அதில் கங்கைமுதலிய நீரெலாம் அடங்க நிறுவி அதில்மூழ்கித் திருநீறு பூசி ஐந்தெழுத்தோதிச் சிவக் குறி ஒன்று நிறுத்தி அதில் எம்பெருமானை ஆகமவிதிப்படி ஆதரத்து டன் அத்தடாக நீர் கொண்டு ஆட்டி வழிபட்டனள். அங்ஙனம் வழி பாடு செய்தபின்னர் அன்பின் மிகுதியால் எம்பெருமான் திருமுன் னர் நின்று இன்பக்கூத்து செய்வாள் ஆயினள். இவ்வாறு பலநாள் வழிபடுகின்ற காளியானவள் ஒருநாள் முதலில் நந்தியை வணங்கிச் சென்று சண்டேசுரரைக்கண்டு மீளவும் நந்திபால் வந்து கும்பிட்டு அந்நந்திபால் நின்றும் போய்க் கோமுகையை அடைந்து மீளவும் நந்தி யைப்பார்க்கும் சோமசூத்திரப்பிரதட்சணத்தைச் செய்து வழிபடுகின்ற

காலத்தில் சிவபிரானுர் மான் மழுதரித்துச் சிவகணங்களுடன் வெளிவந் தருளினர். உமையாளோடு உம்பர்பெருமானுரைக் காளியானவள்கண் குளிரக்கண்டு நெஞ்சு உருகக் கைகளைத் தலைமேற் குவித்துப் பல நன் பொருள் அமைபத்துதி செய்தனள். அவ்வாறு துதிக்கும்போது சிவ பெருமானுர் திருநடனம் புரிந்தனர். உமையாளும் கண் குளிரக்கண்டு உவந்தனள். அதனை காளியானவள் கண்டு தானும் எம்பெருமானுக்கு எதிராக நடித்தனள். இதனைக்கண்டுவியந்து கடவுளர் யாரும் பூமழை பொழிந்தனர்.

அப்போது எம்பெருமானுர் காளியை நோக்கி "நினக்கு வேண்டும் வரங்களைக் கேட்க" வென்றருளிச்செய்யக் காளியானவள் இச்சிவலிங் கமும், இத்திருக்குளமும் என் பெயரால் விளங்கவேண்டும். இன்னும் கார்த்திகைத்திங்களில் ஞாயிற்றுக்கிழமையில் என் பேர் நினைந்து இத் திருக்குளத்தில் மூழ்கிச் சோம சூத்திரப்பிரதட்சணம் செய்பவர் எண் ணியபோகங்கள் அனைத்தும் துய்த்து இறுதியில் தம் வினைமுற்றும் ஒழிய அருளவேண்டு மென்று கேட்டுக்கொள்ள அதற்கு எம்பெருமா னுர் ஓ மென்று மறைந்தருளினர். அதனுல் அவர் ஓங்காளீச் சுரரென் னும் பேரும் பெற்றனர். அத்திருக்குளமும் காளிதீர்த்தமெனப் பெயர் பெற்றது. அவ்வாறே அத்தடாகத்தில் மார்கழித்திங்கள் திருவாதிரை நாளிலும், கார்த்திகைப் பௌர்ணமையிலும், மூழ்கிஅங்கெழுந்தருளிய ஓங்காளீசப் பெருமானை வணங்குவோர் அளவில்லாத போகத்தை அடைந்து இறுதியில் மேற்கதி பெற்று இன்புறுவர். காளியும் எம் பெருமானுர் திருவருள் பெற்று இத்திருத்துருத்தித்திருநகரைக் காவல்பூண்டு அப்பெருமான் அருளிய படியே வாயுமூலையில் அமர் வாளாயினள். அப்பெருமாட்டியை வணங்குகின்றவர் போகங்களனைத் தும் பெற்று வாழ்வர். இந்த ஓங்காளி நாதன் திருக்கோயிலுக்குத் திருவிளக்கு இடுவோரும், அதற்கு இன்னும் பல திருப்பணிகளைச் செய்வோரும் நீங்காத செல்வம் பெற்றுநெடிது வாழ்வார். செல்வர் களாயிருப்பவர்கள் இயன்ற பணிகள் அப்பெருமானுக்குச் செய்யாது விட்டாலும், அத்திருக் கோயிலுக்கு இடையூறுகள் ஏதேனும் இயற்றி னுலும், வறுமை கழியா நோய் முதலியவற்றை அடைந்து பெரும் பாவத் தொடக்குண்டு திரிவார்கள்.

உஉ-வது ஓங்காளீசப் படலம் முற்றியது.

———

## உரு-வது காமேசப் படலம்

கந்த வார்பொழிற் றுருத்தி நாயகன்கலி யாண
முந்த நோக்கிய பலருளு முயன்று பூசித்துப்
பந்த மாட்டின ரினுமெவர் பகரெனு மனைக்குச்
சந்த மார்தரத் தருமசன் மன்புகன் றிடுவான் க

கரும்பு வெள்ளிய முத்தங்கண் டொறுமெழக் கோட்டிச்
சுரும்பு பற்பல நாரியாய்த் தொடர்தரப் பூட்டி
யரும்பு பன்மலர் மாட்டிநே ரகிலத்து மோட்டி
விரும்பு காமமே மூட்டிமெய் வீட்டிவாழ் விறல்வேள் உ

மறைக ளாலெடுத் தியம்பிடப் படுவது மதியப்
பிறைகு லாஞ்சடைப் பிராற்குவப் புறுத்திடு பெற்றித்
திறையு ளெண்ணிய காரிய முடித்திடு மியல்பிற்
றுறைந ருப்பொழிற் றுருத்தியே யென்றுளத் துணர்ந்தான் ந

தால மேழினு னருச்சித்துத் தான்சுடு தலினுற்
கோல வாய்ந்தபா தகந்தவிர்ந் துயர்ந்தநற் குணமு
ஞால மாள்பவன் மனையொடு மத்தல நண்ணிச்
சால வாய்மனைக் குட்டந்தீர்ந் துய்ந்த நற்றகவும் ச

காண்ட நாயகன் கைதொழு தருச்சித்துத் துதித்துப்
பூண்ட வெவ்விய சலோதரம் போக்கிய திறமு
மாண்ட பேய்க்கொடி யுயர்த்தவள் குறிநிறீஇ யருச்சித்
தேண்ட வாநடந் தரிசித்துக் காவல்செ யியல்பும் ரு

மற்றும் பூசித்துப் பேறுபெற் றவர்பெரு மாண்பு
முற்று மெண்ணருந் தீர்த்தங்கண் முபங்கிய திறமு
முற்று மெய்விடு திறத்தினு ரிருங்கதி யுறலுஞ்
சுற்று மேவிய தலங்களு முணர்ந்துளந் துணிந்து சூ

ஈங்கு நாமுமோர் சிவக்குறி நிறுவி நூலியல்பி
னோங்கு பூசனை புரிந்துநா யகனரு ளுறலாந்
தேங்கு மற்றதற் காமிட மிதுவெனத் தேர்ந்து
பாங்குத் தால மாத்தளி நிருதித்திசை படர்ந்தான் எ

குறிசெ யோரிடம் விச்சுவ கன்மனைக் கொண்டு
பறிசெய் கோபுர மண்டபம் பயில்கருக் கிரக
நெறிசெ யேனவு மமைத்தனன் றென்றிசை நிலவி
யறிசெய் தீர்த்தமொன் றாக்கினன் பூசித்தற் கமைவான் ௮

அண்ண லார்குறி நிறுவிய வாகன மாதி
நண்ண லார்பல வுஞ்செயா நவிற்றிய தீர்த்தத்
தெண்ண லார்புன லாட்டியொள் ளிணர்மலர் சூட்டி
யுண்ண லாரமு தூட்டிநேர் நின்றுறத் துதிப்பான் ௯

சூடு பல்கலஞ் செறித்திடு பேழையுந் துய்க்கு
நீடு மின்சுவை யமுதமுண் டாகுநன் னிலமும்
பாடு மாமணித் தேர்செறி சாலையும் பண்பிற்
கூடு பாதல மாக்கிய குழகநிற் றொழுவேன் ௧௦

ஏவ மைத்திடு கூடும்வல் லேறுகட் டிடமு
நாவ மைக்குநற் சுவையுணு நல்குமட் டிலுநற்
றாவ மைத்ததற் காட்டுமாத் தோன்றுமா காமும்
பாவ மைத்தபாற் கடல்செய்தாய் நினைப்பழிச் சிடுவேன் ௧௧

சரிக்கு மாமதில் சாய்ந்திடக் கொள்சரா சனமுந்
தரிக்கு மான்மழுத் தானம ருறையுளுந் தனுமுன்
விரிக்கு மார்தனக் காமவள் விழைந்துதோன் றிடமுந்
தெரிக்கு மேருவாச் செய்தவ நின்னடி சேர்ந்தேன் ௧௨

சங்க ராசய சம்புவே சயதழற் கொழுந்திற்
பொங்க ராவணி புண்ணிய சயவெதிர் போந்த
வெங்க ராசல முரித்தவ சயவிழைந் தவருட்
டுங்க ராசய திரிபுராந் தகசய சயவே ௧௩

போற்றி வானவர் குலம்புரந் தினிதருள் புராண
போற்றி யெங்குமாய் நிறைந்தொளிர் புண்ணிய புனித
போற்றி யாவுமா யல்லவு மாயொளிர் புலவ
போற்றி யள்ளொளி விரித்திடும் வெள்ளியம் பொருப்ப ௧௪

ஒருத்தி மன்றல்செய் துயிருவப் பித்தபே ரும்ப
வருத்தி யைம்பொறி மாதவம் புரிபவர் மனந்தற்
பொருத்தி யானந்த மாநிறைந் தினிதமர் புராண
துருத்தி மேவிய சுந்தர நானுனைத் தொழுதேன் கரு

என்று தோத்திர மியம்புவே ணேக்கவவ் விலிங்க
நின்று தோன்றிய நின்மலன் மாரனை நேர்பார்த்
தென்று நீவிழைந் தமையெவ னுரைத்திடு கென்னத்
துன்று காதலிற் பணிந்துவே ளெழுந்திது சொல்லும் கசு

அந்த நாளறி யாமையா லடிகண்மே லடியேன்
சிந்த வோர்கணை மற்றதில் வந்தது தெரிந்தே
னெந்த நாளினு மறந்துமவ் வாறெதி ராமற்
சந்த மாறுநிற் கடிமையே யாம் வரந் தம்மோ கஎ

இன்னு மிவ்விலிங் கத்துநீ யென்பெயர் பூண்டு
மன்னு மாறுநிற் றரிசித்தோர் வளமலி போகந்
துன்னு மாறுமித் தீர்த்தமு மென்பெயர் தோற்றி
மின்னு மாறுநல் வரந்தர வேண்டுமென் றிரந்தான் கஅ

காமன் வேண்டிய வரமெலா நல்குபு கடுக்கைத்
தாம னவ்விலிங் கத்துளே மறைந்தனன் றரணி
தீமன்வாள்விழிச் சிற்பரன் காமேச னெனுமோர்
நாமன் றீர்த்தமு மப்பெயர்த் தாலென நவிலும் கசு

காம தீர்த்தத்திற் சிவநிசி நாட்கலந் தாடிக்
காம னேத்திய காமநா தனையுளக் கசிவிற்
காமர் பூக்கொடு போற்றுவார் கிருத்திடை நினைத்த
காம முற்றவு மெய்துவர் கதியும்பின் கலப்பர் உ௦

மாரவே டொழுங் காமநா தப்பிரான் வரவு
சார வோதின மாதவ ரெழுவர்கள் சார்ந்து
வீரமாமழு வேந்தியோன் பூசனை விழைந்து
பார வாவுநன் முத்தியிற் படர்திறம் பகர்வாம் உக

காமேசப்படலம் முற்றியது.

ஆகப்படலம் உ௩க்குத் திருவிருத்தம் கூ௩௦

## உ௩-வது காமேசப் படலம்

வேதங்களால் துதிக்கப்படுவதும், சிவபெருமானுக்கு மகிழ்ச்சியைச் செய்வதும், யாவர்க்கும் எண்ணிய காரியங்களை எளிதில் முடிக்க வல்லதும், திருத்துருத்தி யென்னுந் திருத்தலமே யாகும். இதில் அக்கினி வழிபட்டுப் பாவத்தைத் தொலைத்ததையும், சோழன் தன் மனைக்குண்டான குட்டநோயை மாற்றி உய்ந்ததையும், வருணன் வழிபட்டுச் "சலோதரம்" என்னும் நோய் நீங்கியதையும், காளி திருநடங்கும்பிட்டு ஊர்க்காவல் செய்கின்றதையும் பிறர்கள் வழிபட்ட திறத்தையும், நல்ல தூய்மையான சிவதீர்த்தங்கள் இருப்பதையும், இறப்போர்கள் வந்து மேற்கதி பெறலையும், இதனைச் சுற்றியுள்ள சிறந்த தலங்களையும் காமவேள் கண்டு உணர்ந்து இவ்விடத்தில் நாமும் ஓர் சிவக்குறி ஒன்று நிறுவி வழிபட்டு எம்பெருமான் திருவருளை நிரம்பப் பெறலாமென்னுஞ் சிந்தனையோடு திருத்துருத்தி ஆலயத்திற்கு நிருதித்திசையில் சென்றனன். ஆங்கே அக்காமவேள், தேவதச்சனையழைத்துக் கோபுரம், மண்டபம், கருப்பக்கிருகம், முதலியன அமைபத் திருக்கோயில் ஒன்று செய்வித்தனன். அதற்குத் தென்பாகத்தில் ஓர் திருக்குளந் தோண்டி அக்கோயிலில் எம்பெருமானை வழிபட எண்ணிச் சிவக்குறி ஒன்று நிறுவி அத்திருக்குளத்தில் மூழ்கி அந்நீரால் எம்பெருமானை ஆட்டி, நன் மலர்கள் சூட்டி, திருவமுது ஊட்டி எம்பெருமான் திருமுன் நின்று துதி சொல்லுவானாயினன். பின் பலவாறு துதித்து நின்ற காமவேளை எம்பெருமான் திருக்கடைக்கண் சாத்தியருளி "நீ விரும்பிய தொன்றை உரைப்பாய்" என்றருளிச் செய்யக் காமவேள் அன்புடன் வணங்கி, எம்பெருமானே ! அக்காலத்தில் அறியாமையால் அடிகள் மீது அடியேன் ஓர் அம்பைத் தொடுத்து அதனால் வந்த தீங்கைத் தெரிந்து கொண்டேன். "இனி அடிகளாகிய நும்மிடத்தில் எந்தக் காலத்திலும் எதிராமலிருக்கும்படி வரந்தந்தருள வேண்டும்" "இன்னும் இந்தச் சிவக்குறியிலே என் பெயர் பூண்டு தேவரீர் ! எழுந்தருளி உம்மைக் காண்பவர் எவர்க்கும் போகங்கள் அனைத்தும் வழங்கவேண்டும்." "இத்திருக்குளமும் என் பெயர்பெற வேண்டு" மென்று இரந்தனன். எம்பெருமானார் அவ்வரங்கள் அனைத்தையும் அவனுக்கு வழங்கியருளி அச்சிவக்குறியிலேயே மறைந்தருளினர். அன்றுமுதல் எம்பெருமானைக் காமேசனெனவும் அத்திருக் குளத்தைக் காமன் குளமெனவு இவ்வுலகம் வழங்குவதாயிற்று. காமதீர்த்தத்தில் சிவன் இரவில் மூழ்கி அக்

காமநாதனை வழிபடுவோர் கருத்தில் நினைத்தனயாவும் பெற்று இன்புறுவர்.

உ௩—வது, காமேசப் படல முற்றியது.

## உ௪—வது, எழு முனிவர் பூசைப்படலம்

எண்ணிய திருத்துருத்தி யிறைதிரு மணக்கோலங்
கண்ணிய பலருள்ளுங் கசிந்தினு மருச்சித்த
புண்ணிய ரெவரவரைப் புகன்றிட வேண்டுமெனுந்
தண்ணிய விநமரைக்குச் சாற்றுவன் றருமசன்மன் க

காசிப னுங்கிரசன் கௌதமன் மார்க்கண்டன்
மாசில்வண் புகழ்வசிட்டன் மாதவப் புலத்தியன்மண்
பேசிய தமிழ்விரித்துப் பிறங்ககத் தியனென்னு
மேசினன் முனிவரரோ ரெழுவரு மகிழ்கூர்ந்து உ

எண்ணிய சீவன்முத்தி யெய்தியின் புறுமாறு
கண்ணிய வுளத்தினராய்க் காமரு புவியுள்ள
தண்ணிய பெருந்தீர்த்த யாத்திரை முதற்சாற்றும்
புண்ணிய விரதமெலாம் போற்றிட வெழுந்தனரே ௩

ஆரரு ணந்திபிரா னவர்க்கெதி ருறத்தோன்றிப்
பேரரு ளெழுமுனிவீர் பேணிய தினிதடையக்
கூரரு ளித்தலமே குறிக்கொளும் படியுமக்கு
மோரருள் பிறிதிதுபோ லுதவுத லிலையென்றான் ௪

என்றலு மவனடிதாழ்ந் தெழுபெரு முனிவரருங்
கன்றல்செய் பவத்துயரங் கழிந்துயர் முத்தியுற
நன்றமை யித்தலத்து நாஞ்செயும் பணியாது
வென்றமை புகழ்ழோய்நீ விளம்பென வவன்விளம்பும் ௫

தெளிதரு மித்தலத்தோர் சிவலிங்கப் பதிட்டைசெய்து
களிதரு மலராதி கைக்கொடு பூசித்தா
லொளிதரு மிறைதோன்றி யுளங்கரு தியதளிக்கு
மளிதரு மனத்தினே யாற்றுமி னென்றகன்றான் ௬

மன்னிய சயிலாதி வாய்மொழி செவியேற்றுப்
பன்னிய திருத்துருத்திப் பரன்றளி வளித்திக்கிற்
றுன்னிய தளியொன்று துலங்குற வினிதாற்றி
யுன்னிய சிவலிங்க மொன்றதி னுறநிறுவி ௭

வரைதரு புனற்பொன்னி மஞ்சன மலர்தூப
முரைதரு நறுந்தீப முறுசுவை யாரடிசில்
புரைதரு முபகரணம் பொலியமற் றவுங்கொண்டு
கரைதரு முள்ளன்பிற் பூசித்துத் துதிகரைவார் ௮

அவனவ ளதுவெனல்கொண் டாட்டுவை யுலகமெலா
மவனவ ளதுவாயு மல்லையுமா யொளிர்வோ
யவனிமு னேரெட்டு மாகிய் வுருவத்தாய
வவமற வருள்புரியென் றறைந்தனன் காசிபனே ௯

பூதமுங் கடந்துபொறி புலன்களுங் கடந்தவைசார்
பேதமுங் கலைகாலப் பெருக்கமுங் கடந்துவிந்து
நாதமுங் கடந்தொளிரு நல்லவ பிறப்பாலா
மேதமென் பதையறுத்தி யென்றன னங்கிரசன் ௧0

மந்திர முதலாக வழங்குமோ ராறுருவு
மைந்தொழின் மூலமென வறையுமொன் பானுருவு
முந்திய மண்முதலெட் டுருவமு முற்றுமிலாய்
கந்துத லொழிந்தருள்செ யென்றனன் கௌதமனே ௧௧

காலனைக் கடிந்தடியேற் கருளிய கண்ணுதலே
மாலினைக் கணைசெய்து மாமதின்மூன் றுஞ் சுட்டா
யோலமென் றடைவானே ருயவிட முண்டவனே
சாலவின் பருளென்றான் றவத்துயர் மார்க்கண்டன் ௧௨

பிறவியை யினிவேண்டேன் பெறுதிமற் றதுவென்னின்
மறவியி னேதும்பிற கடவுளர் வழிபடலற்
றுறவிமற் றிவ்வெனக்கென் றுரைசெயும் படியளித்தி
யறவிய லொடுமென்று னருந்தவத் துயர்வசிட்டன் ௧௩.

பவமெனல் யான்வேண்டேன் பற்றுதி யொன்றென்னிற்
சிவசிவ சங்கரமா தேவவிச் சுவநாத
வுவ்மையி லாதகுணத் துத்தமவெனத் துதித்தே
தவ்றற வருளென்றான் றவத்துயர் புலத்தியனே கச

நினைவழுத் தாதவரெ னெடுங்குலத் துதியற்க
வினைவழி யுதித்திடினும் வீங்தொழி குகவுடனே
புனையிழை யொருபாகப் புண்ணிய விவ்வரந்தா
வினையல தறவடியேற் கென்றன னகத்தியனே கரு

எழுமு னிவரு மிவ்வா றேத்திடு மக்காலை
முழுமுதல் குறிநின்று மொய்யொளி கொளத்தோன்றிப்
பழுதற நீர்வேட்ட படியனைத் துங்கொடுத்தோங்
தழுவுற சீவன்முத்த ராய்த்தழைந் திருப்பீரால் கசு

முனிவர ரிலிங்கமெனு முழுப்பெய ரொன்றுற்றுத்
தனியமர் தருமிவணீர் தாபித்த செழுங்கோசங்
கனிதர விதுபோற்றல் கடைப்பிடிப் பவரெல்லாம்
புனிதமிக் கவராகிப் பொலிகுவர் நாணளும் கஎ

மன்னிய வுத்தால மரத்தளிக் கோசம்போற்
பன்னிய விதுமுதலாம் பற்பல கோசத்து
மின்னிய பொலிவெய்தி விளங்குவ மெஞ்ஞான்று
முன்னிய தவத்தீரென் றுரைத்தத னுட்புகுந்தான் கஅ

மறைமுடிப் பொருளானன் மறைதலு முனிவரெலாங்
குறையறுத் தனமென்று கூறுபு களிப்பெய்தி
நிறைதரப் பினும்பூசை நிகழ்த்திச்சின் னுள்வசித்து
முறைமையிற் பொலிசீவன் முத்தர்க ளாயமர்ந்தார் கசு

எழுமுனி வரும்போற்று மிலிங்கநன் மான்மியத்தைப்
பழுதற வெடுத்தோதல் வல்லவர் பாரிலெவர்
புழுகணிந் தொருவருணன் பூசித்த குறிபோற்றித்
தழுவொரு வன்கொடு நோய் தவிர்ந்தது மெடுத்துரைப்பாம் உ௦

எழுமுனிவர் பூசைப்படலம் முற்றியது.

ஆகப் படலம் ௨௪ க்குத் திருவிருத்தம் கரு௦

## உச—வது, எழுமுனிவர் பூசைப் படலம்.

காசிபன், ஆங்கிரசன், கௌதமன், மார்க்கண்டன், வசிட்டன், புலத்தியன், அகத்தியன் என்ற எழுமுனிவர்களும் ஒன்றுகூடிச் சீவன் முத்தியை அடைந்து இன்புற எண்ணி இந்நிலத்திலுள்ள தீர்த்த யாத்திரை முதலான நோன்புகள் அனைத்தும் செய்தற்கு எழுந்தனர். அப்போது நந்திபெருமான், அவர்கள் முன்னாகத் தோன்றியருளி முனிவர்காள்! "நீவிர் விரும்பியதை இனிது பெறத்தகுந்தது திருத்துருத்தியே. இதனைப் போல அருளை வழங்கத் தகுந்த தலம் வேறில்லை" என்றான். இதுகேட்ட போதே முனிவர்கள் அனைவரும், அப்பெருமான் திருவடியில் விழுந்து வணங்கி அடிகேள்! "இத்தலத்தில் முத்தி யின்பத்தைப் பெறுதற்கு யாம் செய்யும் பணியாது? அதனை அடியேங்களுக்கு அருளிச் செய்தல் வேண்டு" மென்று நந்தியடிகள் பால் விண்ணப்பஞ் செய்தனர். அப்பெருமானார் அம்முனிவர்களை நோக்கி அறவோர்காள்! "இத்தலத்திலே சிவக்குறி ஒன்று நிறுத்திப் பூக்களைக் கொண்டு பூசித்து வழிபட்டால் அக்குறியிலே நம் இறைவனார் தோன்றி உமக்கு உன்னியதை அளித்தருளுவர். ஆதலால் இப்போதே அன்போடு அதனைச் செய்வீர்களா" என்று கூறி அகன்றருளினர். நம் நந்திபெருமான் அருளியதை அகத்திற் கொண்ட அம்முனிவர்கள் அனைவரும் திருத்துருத்தியில் வாயுத்திசையில் திருக்கோயில் ஒன்று சமைப்பித்து அதில் சிவக்குறி ஒன்று நிறுவி, உள்ளன்பால் காவிரிநீர் கொண்டு வழிபட்டுத் துதி செய்தனர். தனித் தனியே முனிவர்கள் அனைவரும் துதி செய்தபின்னர் அத்துதிக்கு மகிழ்ந்தருளிய சிவபிரான் முனிவர் லிங்கத்தினின்றுந் தோன்றியருளி முனிவர்கள்! 'இத்திருத்துத்திக் கோயிலின் சிவக்குறியைப்போல் ஈங்குள்ள எல்லாச்சிவலிங்கங்களிலும் எப்போதும் விளங்குவோ' மென்று அருளி மறைந்தனன். எம்பெருமான் மறைந்தருளிய பின்னர் முனிவர் களிப்புற்றுப் பின்னரும் வழிபட்டுச் சில நாட்கள் அவ்விடமே தங்கிச்சீவன் முத்தர்களானார்கள்.

உச வது எழுமுனிவர் பூசைப்படலம் முற்றியது.

---

## உ௫-வது சிவபத்தன்நோய்தீர்ந்தபடலம்

வன்னியடி தொழுமிலிங்கந் தனையடைந்தோர் மாச்சோழன்
பன்னியருள் பெற்றதுபோற் பகர்மற்றைக் குறிகளைச்சார்ந்
துன்னியருள் பெற்றவரு முளரேனன் குரைத்தியென
முன்னிவிந மரைகேட்கத் தருமசன்மன் மொழிகுவான் க

கண்டையா னுகைத்தருளுங் காபாலிக் கன்புடையான்
றெண்டையா தரிப்பார்பாற் றெக்கபெரு நேயத்தா
னிண்டைமா மலரானு மிணையாகாத் தவமுனிவன்
பண்டைநா ளுளனொருவன் பரிச்சேப னெனும்பெயரான் உ

அனையன்மனை யொடுவாழ்நா ணெடுங்கால மருந்தவஞ்செய்
தினைதலற வொருமகவை யீன்றுசிவ பத்தனெனப்
புனையுமொரு பெயரிட்டுப் போற்றிவளர்த் திடவளர்ந்து
துனையமறை முதற்பலவுந் தொழுதந்தை பாலுணர்ந்தான் ந

மறையாதி கலைபலவுந் தந்தையினும் வடித்துணர்ந்தே
யிறையாதி பகவனொரு சிவனேயென் றிதயமமைத்
துறையாதி யாச்சிரமத் தொழுகுவா னந்நாளிற்
குறையாதி யெனவந்து கூடியதோர் கொடுங்கயநோய் ச

அன்னையு மத்தனுநோக்கி யழுதவலித் துளந்தேம்பி
முன்னைவினை யிப்படியோ முடிந்ததென முகம்புலர்ந்து
பின்னைமணி மந்திரநன் மருந்திவையாற் பெயர்த்திடவு
மென்னைபுரி யினும்பெயரே னென்றுபொலிந் ததுகயநோய் ரு

நிறைமதிய நாளுக்குநாட் குறையுநீர் மையின்மெய்
குறைபடுதன் முதற்பலவுங் குறித்துணர்ந்த சிவபத்தன்
முறையினொரு தந்தையடி பணிந்தெழுந்து முதிர்கொடுநோ
யறையுமென வருத்துதற்காங் காரணம்யா தருளென்றான் சு

சிவபெருமா னாலயத்துட் சென்றுதீ தியற்றினையோ
சிவபெருமா னாலயத்துச் செழும்பொருள்கள் கவர்ந்தனையோ
சிவபெருமா னாலயத்துக் கிடையூறு செய்தனையோ
சிவபெருமா னாலயத்துச் சிதைவுபார்த் திருந்தனையோ எ

பரமசிவ னடியாரைப் பயமுறுத்தி வைதனையோ
பரமசிவ னடியாரைப் பட்டினிவைத் துண்டனையோ
பரமசிவ னடியாரை யவமதிப்புப் பண்ணினையோ
பரமசிவ னடியாரைப் பரவாம லிருந்தனையோ அ

கற்றவரை யவமதித்துக் கண்ணின்றி வைதனையோ
கற்றவரை யோம்பாது கையகல விடுத்தனையோ
கற்றவரைக் கொடியவர்பால் விடுத்தனுக்கங் கண்டனையோ
கற்றவரைப் பொருளிழக்கக் கண்டுவப்புற் றிருந்தனையோ கூ

உற்றபெரி யவர்தருநீ ருருகையா லேற்றனையோ
வுற்றபெரி யவர்தருநீ ரோம்பாது சிந்தினையோ
வுற்றபெரி யவர்தருநீ ருழிகவென மறுத்தனையோ
வுற்றபெரி யவர்தருநீ றேலாம லோப்பினையோ க0

மறைநிந்தை புகன்றனையோ மன்னுசிவா கமமெனும்பஃ
றுறைநிந்தை புகன்றனையோ தூயகண பதியாதி
யிறைநிந்தை புகன்றனையோ வேற்றமறையவ ரொழுக்க
முறைநிந்தை புகன்றனையோ மூண்டதினு மெவ்வினையோ கக

நந்தவனஞ் சிதைத்தனையோ நந்தவனத் துளுந்தளிர்த்துச்
சந்தமிகு கூவிளங்க டரணிவிழச் சிதைத்தனையோ
வந்தமில்புண் ணியநதிக்க ணனுசிதங்கள் செய்தனையோ
முந்தவரு பசுக்கடமைப் புரவாது முனிந்தனையோ கஉ

கன்றுமெலிந் திளைத்தொழியக் கறந்துபா லருந்தினையோ
கன்றுமரித் தொழிந்தபினுங் கறந்துபால் கவர்ந்தனையோ
கன்றுமுளத் தான்புனலுண் காலையிடை விலக்கினையோ
கன்றுமுளத் தான்வருந்தக் கைத்தண்டாற் புடைத்தனையோ கந

பொருளடைந்துஞ் சிவதருமம் போற்றாது போக்கினையோ
பொருளடைந்தும் வறியவரைப் புரவாது புதைத்தனையோ
பொருளடைந்து மறமிதெனும் புரையோர்சொன் மறுத்தனையோ
பொருளடைந்து நல்வழியிற் போக்காது போக்கினையோ கச

இன்னுமெது செய்தனையோ வெவ்வினைவந் துற்றதுவோ
முன்னுமது கயநோயாய் முடிவுற்ற திப்பிறப்பின்
மன்னுமெது வந்தாலும் வள்ளலருட் குறிப்பூசை
யென்னுமொரு கழுவாயுண் டெவ்வினையுங் கெடுத்திடுமே ௧௫

கண்ணுதல்பூ சனைசிறந்த கழுவாயே யாமெனினும்
விண்ணுதன்மாத் தலத்தடைந்து செயினதிக விசேடமதா
மெண்ணுதலி னெவ்வுயிர்க்கு மெவ்வினையும் போக்கிடுவான்
மண்ணுதலோர் தலமுண்டு வண்டுருத்தி யதனுமம் ௧௬

அத்தலங்கண் ணுற்றூறு மன்புகொள வசித்தாலும்
பித்தலமந் தறஞானம் பெற்றுயர்வ ரையமில்லை
முத்தலமும் புகழ் குறியின் முறைபூசித் தினிதேத்திற்
கைத்தலவா மலகமெனக் கருதியவை யனைத்துமுறும் ௧௭

ஆதலினத் தலத்தடைதி யத்தலத்திற் பதுமமலர்ந்
தோதலின்முற் றுப்பெருமை யொருதீர்த்தம் பொலிந்தமருங்
காதலின்மற் றதின் மூழ்கிக் கருத்துறவெண் ணீறணிந்து
சாதலினுந் துபர்போக்கித் தநமெழுத்தைந் துங்கணித்து ௧௮

சொன்னவா றறிபவரைத் தூயபெருங் கருணையரும்
பன்னமா முலையாளை யலர்கெழுமுத் தாலநிழன்
மின்னவாழ் மணவாள வித்தகனை யம்பிகையை
நன்னர்வாய்ப் புறப்பணிந்து நாடுறமத் தளிநின்றும் ௧௯

ஒருநிருதித் திசையடையா வுதகவிறை பூசிக்கப்
பொருதுயர்செய் சலோதரநோய் போக்கியபுண் ணியக்குறியைத்
திருமலராற் பூசித்துச் சேவித்து வருவாயேற்
கருவமர்நோ யொடும்வருத்துங் கயநோயு மொழிதருமே உ0

என்றுரைத்துப் பரிச்சேபன் விடைகொடுப்ப வினிதிறைஞ்சிக்
கன்றுதலில் சிவபத்தன் கயநோயை முருக்கினமென்
றொன்றுபெருந் துணிபினனு யுடனெழுந்து வானேருஞ்
சென்றுபுகத் தவம்புரியுந் திருத்துருத்தித் தலம்புகுந்தான் உ௧

வானோங்கு கோபுரமுன் பணிந்தெழுந்து வாய்புக்குத்
தேனோங்கு மலருத்தா லகத்தருவைச் சேவித்துத்
தானோங்கு பெரும்பதுமத் தடமாடி நீறணிந்து
தானோங்கு மலரிரைத்துக் கருதுதளி வலஞ்சூழ்ந்து உ௨

தூயபெருங் கருணையுருச் சொன்னவா றறிபவரை
நேயமிகு மரும்பன்ன வனமுலைநின் மலத்தாயைப்
பாயவெழின் மணவாளப் பண்ணவனை யம்பிகையைத்
தோயவெழு பேரன்பிற் றொழுதுபூ சித்தனனே உ௩

உடையானை வெம்புலித்தோ லுடையானை வேணியினு
ரடையானை யெண்ணுரு ளடையானை யடுபூதப்
படையானை யெமக்குருவம் படையானை நறுங்கடுக்கைத்
தொடையானைத் திருத்துருத்திச் சொன்னவா றறிவானை உ௪

இவவண்ணஞ் சிலநாளிங் கினிதமர்ந்து பூசித்து
வெவ்வண்ண நோய்தவிர்த்து மேவவரு ணனையாண்ட
வவ்வண்ணப் பெருமானை யன்பினிரு தித்திசைபோய்க்
கைவ்வண்ண மலர்குவித்துக் கண்ணருவி பெருக்கினனால் உ௫

தனியமரு நிலைகண்டு சத்தியுறத் தாபித்து
நனிவிரும்பு பெயர்சுகந்த குந்தளமா தெனநவின்று
பனியமைந்த காவிரிநீர் முகந்தாட்டிப் பலபூவாற்
றுனிதவிரப் பூசித்துத் தொழுதெழுவான் சிவபத்தன் உ௬

மிக்கமறைச் சொல்லானை மேருவரை வில்லானை
யொக்கவெழு நல்லானை யுகைத்தருளும் வல்லானை
நக்கவரைப் புல்லானை நாடாருட் செல்லானை
யக்கணியு மெல்லானை யடியவர்மா சொல்லானை உ௭

புனலிறைவன் பூசித்த புண்ணியனை யிவ்வாறு
மனநெகிழப் பூசித்துச் சிவபத்தன் வருநாளி
லனகனுமங் கெதிர்தோன்றி யடர்கயநோ யொடுங்கருநோய்
பினமுறநீக் கினமென்று பேசிமறைந் தனனன்றே உ௮

அந்தவரு ணேசனையு மக்கினியீச் சுரனென்னும்
பந்தமில்சோ மேசனையும் பகரோங்கா ளீசனையு
நந்தலில்கா மேசனையு நன்முனிவ ரீசனையுஞ்
சந்தமுறத் தொழுதேத்தி மூலலிங்கந் தனையடைந்து உகூ

உள்ளமுரு கப்போற்றி யொழியாத விடைபெற்றுக்
கள்ளமிலாய் தந்தையர்தங் கண்ணடைந்து சிவபத்தன்
றெள்ளவொளிர் பெருமானைத் திருத்துருத்தியிடைப் போற்றித்
தள்ளமுடி யாக்கயநோய் சாடியதை யெடுத்துரைத்தான் ௫0

அந்தவிரு முதுகுரவ ரகத்துவகை யெழக்கேட்டுச்
சந்தமிகு மொருமகனைத் தழீஇயுச்சி மோந்திருந்தார்
பந்தமற மணந்துசிவ பத்தனும் பன்னாள் வாழ்ந்து
நந்தமிறை யவனடிக்கீழ் நண்ணிநயந் தின்புற்றான் ௫க

முந்தைவினை யாலடைந்து மொய்த்தகய நோய்முருக்கச்
சிந்தைசெயும் சிவபத்தன் றெளிந்துபோற் றியதுரைத்தா
மந்தைதவிர்ந் தொருகதிரோ னடைந்துருகிப் பூசித்து
விந்தைகெழு பகைதடிந்த மேதகவு மெடுத்துரைப்பாம் ௫உ

**சிவபத்தன் நோய் தீர்ந்த படலம் முற்றியது.**

ஆகப்படலம் உருக்கு திருவிருத்தம் கூஅஉ

---

## உரு-வது சிவபத்தன் நோய்தீர்ந்த படலம்.

முற்காலத்திலே "பரிச்சேபன்" என்னும் முனிவன் ஒருவன் உள்ளான். அவன் சிவத்தொண்டர் பால் மிக்க அன்புள்ளவன். அவன் மனையாளுடன் மகிழ்ந்து வாழ்கின்ற காலத்தில் மகவு ஒன்று பெற்றனன். அவன் புதல்வனுக்குச் சிவபக்தனெனப் பெயரிட்டு வளர்த்தான். அப்புதல்வன், மறைமுதலாயினவெல்லாம் தந்தைபால் கற்றனன். அவன் இறைவன், எம்பெருமானுன சிவனேயென்று துணிந்து நான்கு நிலையில் ஒன்றான முதல் நிலையில் நிற்பவனானன். அதுபோது 'முன்செய்த வினையே' யென்று கூறக் "காசநோய்" வந்துற்றது. அதனால் நாளுக்கு நாள் தன் உடல் குறையுறுதலைக் கண்டு தந்தையார் அடியில் விழுந்து வணங்கி "இக்கொடுநோய் வருத்துதற்குக் காரணம்

அருள வேண்டு" மென்று விண்ணப்பஞ் செய்தனன். அதுகேட்ட 'பரிச்சேபன்' எது எது செய்தனையோ? எவ்வினை வந்து இவ்வாறு விளைத்ததோ? எவ்வினையாயினும் சிவவழிபாடே அதனை விலக்கத்தக்கதாகுமென்றாலும், சிறந்த தலங்கண்டு செய்வது அதனினும் சிறந்ததாகும். அதற்கு இவ்வுலகில் சிறந்தது திருத்துருத்தியாகும். அது பார்த்தாலும், வசித்தாலும், மெய்ஞ்ஞானந்தரும். அதில் சிவ வழிபாட்டை முறையே செய்தால் நினைத்தவை அனைத்தும் அடையலாம். ஆதலால் நீ அதனை அடைந்து அதிலுள்ள தாமரைத் தடாகத்தில் மூழ்கித் திருவெண்ணீறு அணிந்து ஐந்தெழுத்தும் ஓதிச் சொன்னவாறறிவாரையும், அரும்பன்னவன முலையாளையும், உத்தாலநீழல் வீற்றிருக்கும் மணவாள நாதனையும், அம்பிகையையும் வணங்கி அத்திருத்துருத்தி ஆலயத்தினின்றும் நிருதித் திக்கை அடைந்து ஆங்குள்ள வருணலிங்கப் பெருமானை வழிபடுவாயேல், நினது கயநோய் அகன்று ஒழியும்" என்று உரைத்தனன். அப்போதே சிவபத்தன் அப்பரிச்சேபனை வணங்கி விடைபெற்றுக் கொண்டு இக்கய நோயை அகற்றினமெனத் துணிந்து திருத்துருத்தியில் வந்து தந்தை பணித்தவாறே வழிபாடு செய்து அப்படியே நிருதித்திக்கில் எழுந்தருளிய வருணலிங்கப்பெருமானையும் வழிபட்டுக் கண்ணின் நீர் சொரிந்து கவலை யுற்றனன். பின்னர் அப்பெருமான் தனியே அமர்ந்திருத்தலைக் கண்டு "மணப்பூங்கோதை" என்னும் பெயருடன் அம்மையை எழுந்தருளச் செய்து இருவரையும் காவிரிநீர் கொண்டு பல பூக்களால் பன்னாள் வழிபட்டனன் அது நோக்கியருளிய எம்பெருமான் ஆங்கு அவன் முன் எழுந்தருளி அன்பனே! "நினது கயநோய் இன்றோடு ஒழிந்த"தென்று மறைந்தருளினன். அவ்வாறே கயநோய் அகன்ற சிவபத்தன் ஆங்குள்ள தலங்கள் முற்றும்பணிந்து தாய்தந்தையர்களை அடைந்து தான் பெற்ற பேறு முழுதும் எடுத்துக் கூறினன். அது கேட்ட அவன் தாய் தந்தையர்கள் அச்சிவபத்தனை அகமுருகத்தழுவி உச்சிமோந்து மகிழ்ந்தனர். அச்சிவபத்தன் மணம் பெற்றுப் பன்னாள் வாழ்ந்து சிவபிரான் திருவடி நீழலிற் சென்று இன்புற்றனன்.

**உரு-வது, சிவபத்தன் நோய்தீர்ந்தபடலம் முற்றியது.**

---

## உசு—வது, கதிரவன்பூசைப்படலம்

உத்தம தலங்க ளுள்ளு முத்தம மாங்கு ருத்தி
யத்தலத் தெய்திப் பூசை யம்பிகா பதியை யின்னுஞ்
சித்தமிக் குவப்பச் செய்தார் யாவர்தேர்ந் துரைத்தி யென்ன
வித்தகத் தரும சன்மன் விளம்புவான் விநம ரைக்கே க

தழைகருங் கூந்தற் செவ்வாய்த் தடமுலைத் திதிமுன் பெற்ற
விழைபல மகார்க ளுள்ளு மிக்கமே தகவோன் வெற்றி
யிழைபுனை வித்துன் மாலி யெனும்பெயர் படைத்த வீரன்
குழைமனச் சுபர்க ளஞ்சக் கொறு கொறுத் தெழுபோர் வல்லான் உ

அன்னவன் கருணை யாலே யம்பிகா பதிதான் மேய
வென்னபஃ றலங்க ளுள்ளு மேற்றமாந் தலம்யா தென்று
மின்னகு மழைக்கோள் பாற்போய் வினயுணர்ந் தடைந்தானென்ப
வுன்னரு வளங்கள் வாய்ந்த வுத்தால வனத்தை மாதோ ௩

உத்தால வனத்தை யண்மி யுறுவன மனைத்து நோக்கி
யித்தலத் திதுபோல் வாய்ப்ப திலையென வுவகை பூத்து
நத்தாலத் திகிரி யேந்து நாதனுக் கணையா யுள்ளா
னத்தாலம் பலசொற் றூலு மருச்சீரிங் குளதென் றோர்ந்தான் ௪

யிந்தநற் றூனமோநா மெண்ணிய தெய்துந் தான
முந்தநங் குரவன் சொற்ற மொழிபழுதாமோவென்று
பந்தமுற் றெழிக்குந் தெய்வப் பதுமதீர்த் தத்துண் முழ்கிச்
சந்தநற் பூதிபூசித் தாங்கின னுருத்தி ராக்கம் ௫

மறையது சாரமென்ன வடித்தவைந் தெழுத்து மெண்ணிக்
குறையறச் சொன்ன வாறே குறித்தறி பவர்முற் சென்று
நிறைதரு மன்பிற் றூழ்ந்து ஞெரேலென வெழுந்து பூமுற்
கறையற நேடிக்கொண்டு காதலிற் பூசை செய்வான் ௬

அனகனைப் பூசை யாற்றி யடிதொழு தரும்ப ரன்ன
வனமுலை யவனைப் போற்றி மணவாளப் பிரானைத் தாழ்ந்து
பனவர்தங் குலத்துதித்த பார்வையைப் பரிந்தர்ச் சித்து
முனநெகிழ் தரவுத் தாலத் தருவையும் வழுத்தி னானே எ

பதிக்கொரு துணையாய் வந்த பாய்புகழ்க் களிற்றின் றாளுந்
துதிக்கினி தருளா நிற்குஞ் சுந்தரக் குமரன் றாளு
மதிக்கரி தாய மற்றை வரணவா னவர்பொற் றாளு
நிதிக்கல மாகச் சென்னி யேந்துபு நேயம் பூண்டு அ

ஆன்றபே ரழலோன் போற்ற வக்கினீச் சுரனைப் பின்னர்த்
தோன்றவோர் சோழன் போற்றச் சோழேச னைய வள்ளல்
சான்றபொற் பதமு மோங்கா ளீசன்பொற் றாளு மாமை
கான்றசீர் மேனி வாய்ந்த காமேசன் மலர்ப்பொற் றாளும் கூ

வருணனுக் கருள்சு ரந்த வருணேசன் மலர்ப்பொ ற்றாளு
மருணனி சுரந்தே ழையர்க் கருளிய பெருமான் றாளு
மருண்மனந் தபுத்துப் போற்றி வயங்குமோ ரிடத்தி ருந்து
தெருண்மலி தவமேற் கொண்டான் றிறல்கெழு வித்துன்மாலி க0

வளியுண வேனு மின்றி வண்பனிக் கால முற்று
மளிகெழு புனலுட் புக்கு மாதப மழற்றுங் கால
மொளிகிழ லழலுட் புக்கு முறுதவஞ் செய்தான் செந்தீ
வெளிமுக டளாவ நோக்கி விண்ணவர் வெதும்பி னாரே கக

ஆயதோர் காலத் தைய னவனெதிர் தோன்றி நின்று
மேயநின் கருத்தென் னென்ன விரைமலர் தூவித் தாழ்ந்து
நாயனே கதிரோ னுக்கு நல்வரந் தருதி யின்னும்
பாயவோர் காற்பொற் றேரும் பரிந்தருள் செய்தல் வேண்டும் கஉ

இன்னுமக் கதிரோன் போல யானுமா மேருச் சூழ்ந்து
மன்னுதல் வேண்டு மென்றா னருளுபு மறைந்தான் வள்ளன்
மின்னுசெங் கதிரோ னொன் மேவிய வித்துன் மாலி
பன்னுமோர் காற்பொற் றேரும் பரிப்பாகொ டெதிர்நின் றன்றே கங

சொன்னவா றறிவார் மேய கோயிலைச் சூழ்ந்து போற்றி
யன்னவாம் பரித்தேர் மேற்கொண் டலங்கவிண் ணெழுந்தான் யாரும்
பன்னவா மதிதி மைந்த னுப்த்திதி மைந்தன் பார்நின்
றென்னகா ரணமோ விண்ணத் தெழுந்தன னீறும்பூ தென்றார் கச

விண்ணெழு புதுமார்த் தாண்டன் வியனுல கவரை நோக்கிக்
கண்ணொடு நகையுந் தோற்றான் கருமசான் றென்றுட் கொள்வீ
ரெண்ணுறு பழிசற் றேனு மிலாவெமைக் கொள்மினென்று
துண்ணென முழங்கிக் கூறிச் சுடர்செய்பொற் றேர்ந டாத்தும் கரு

அன்றியு மொருவன் பெற்ற வன்னைய ரிருவர் மாட்டுத்
துன்றிய வொருபி தாவிற் குதித்துளேஞ் சொல்லு மீதால்
வென்றிசெய் சாதிபேத மேவினே மல்லோ மேனு
மொன்றுநஞ் சிறப்பன் னனுக் கிலையஃ துரைப்பக் கேண்மின் கசு

சிறுவிதி யாகஞ் சார்ந்து சிவவப ராதி யென்னு
மறுவின னவனஃ தில்லா மாண்பினேம் யாமா லின்னு
முறுபரி நடத்தும் பாக னுருவில் லவனம் பாகன்
பெறுமொரு மறுவி லாதான் பேசுவ தின்னு முண்டால் களஎ

பாகன்பெண் ணுருவ மாகப் பதைபதைத் தெழுந்தணைத்தோர்
மோகந்தீர் குரங்கைப் பெற்றான் மொய்குழன் மனையாட் சேர்ந்து
சோகஞ்செய் காலற் பெற்றான் றுதியிலோர் முடவற் பெற்றான்
மாகஞ்செய் மயன்றன் சாணை வைத்துறத் தேய்க்கப்பட்டான் கஅ

அவனுடைச் சரித மின்னு மறைதரி னருவ ருப்பாஞ்
சிவனுடை யுருவ மான செல்வன்கா ணென்னில் யாரப்
பவனுடை யுருவ மாகார் பத்திசெய் பவரெ லாமப்
புவனுடை முகக்க ணென்று புகன்றனன் முழங்கிச் செல்வான் கசு

குணவரை யவனுதிப்பிற் குடவரை யிவனு திப்பன்
புணரொரு மேருத் தென்பா லிவன்வரின் வடபாற் போதுந்
தணவரு மிவன்றென் பாற்சார் தருமிவன் வடபா லந்த
வணவொளி யாளன் செல்லி னிங்ஙன மகலான் சூழும் உ0

இருவரு மாறி மாறி யிங்ஙன முழித ருங்கா
லொருவரு மிரவு தீர்ந்தே யுலகெலாம் பகலேயாக
மருவருங் கருமந் தீர்ந்து மயங்கின வுயிர்க ளெல்லாம்
வெருவருந் தகைய ராகி வெதும்பினர் விண்ணோர் யாரும் உக

கழிதுயர்ப் பிரிவு ருத காட்சிமே வலினோர் புள்ளும்
விழிகுரு டாகக் காட்சி வியப்புமே வலினோர் புள்ளு
மொழிதரா வுவகை யுற்ற வொழிந்தபல் லுயிருஞ் சாம்பி
யழிதரு கருமத் தோடு மழுங்கின மேலும் மேலும் உஉ

தெருளுறு மொழுக்கம் வாய்ந்த சிலருரி மடந லாரை
யிருளுறிற் புணர லாமென் றெதிர்நோக்கி யேக்க முற்றார்
மருண்மிகு விடர்பல் லோரு மதித்தபோ தனுப வித்துப்
பொருண்மிகு முலகை வாழ்க்கைப் புங்கவர் போன்ரு ரன்றே உங

அந்தநா ளிற்றைமு கக்க ணம்மைபொத் திடுத லாலே
பந்தமா ரிருளே யெங்கும் பரந்தது பகறீர்ந் தென்பா
ரிந்தநா ளெதுநி மித்த மிருளொழி பகலே யாய
துந்தநா மறியோ மென்பா ருலகரிவ் வாறு தேம்ப உச

போற்றிடு புலவ ராசான் பொன்னுளிர் பொன்முன் சென்று
சாற்றிட வருபி ராதஞ் சங்கவ மத்தி யான
மேற்றப ரானம் யாரு மியம்புசா யான மென்னப்
பாற்றருங் கால மெல்லாம் படருநின் னுலா மின்னும் உரு

கணங்காட்டை யிலவ நாடி கவின்றிதி பக்க மாதங்
குணங்காட்டு மிருதி யாருங் கூறிடு மயன மாண்டு
பிணங்காப்பல் யுகம்ப ரார்த்தம் பேசிவை யனைத்துந் தோன்றற்
கணங்காச்சீர் நீயேயேது வவைதடு மாற்றம் பூண்ட உசு

திதிமகன் வித்துன் மாலி யென்பவன் சிவபி ரான்பாற்
றுதிதவஞ் செய்து நின்னே ராம்வரம் பெற்று நின்போற்
பதியொரு காற்றே ரேறிப் படர்குவ னவனை மாற்றித்
துதியுல கலேயா வண்ண நிறுத்தெனச் சொல்லிப் போனன் உஎ

செங்கதிர் சினமீக் கொண்டு செறிவலி வித்துன் மாலி
யங்கதிர்த் தேர்முன் றன்றேர் செலுத்திமற் றவனை நோக்கி
வெங்கனல் சிதறு மாறு விழித்துவில் வளைத்த திர்த்துத்
தங்கன லுருவ மாய சரம்பல சிதறி னானே உஅ

அனையனும் வரிவில் வாங்கி யம்புக ளெதிர்தொ டுத்தும்
புனையுமார்த் தாண்ட னம்பு பொருவறப் பாய்த லாலே
கனைகதிர்த் தேர்மு றிந்து கலினவாம் பரியு டைந்து
துனைதரப் பாகுஞ் சோர்ந்து துண்ணென மண்ணில் வீழ்வான் உசு

துருத்திநா யகனே யோலஞ் சொன்னவா றறிவா யோல
மருத்திகூ ரடியார் சோரா தாண்டுகொள் பவனே யோலம்
விருத்தியுத் தால நீழன் மேவிய பிரானே யோலம்
வருத்திமார்த் தாண்டன் சீற மயங்கினே னேல மோலம் ௩0

என்றுமண் வீழ்ந்தா னப்போ தெம்பிரா னவன்முன் றோன்றி
யொன்று மஞ்சற்க நீயென் றுரைத்தொரு கதிரை நோக்கிக்
கன்றுமுங் காரஞ் செய்தான் கடிதவன் றேர்கீழ் வீழ்ந்த
தன்றுமே லெழுந்த தம்மா வடல்வித்துன் மாலி பொற்றேர் ௩க

எழுதரு வித்துன் மாலிக் கின்னதி கார நல்கி
முழுமுதன் மறைந்தான் மண்வீழ் முளரிநண் புடைய வெய்யோன்
பழுதுவந் தடைந்த தென்னே பண்ணுவா மிதனுக் கென்று
கழுவுதல் குறித்துத் தந்தை காசிப னடியைச் சார்ந்தான் ௩உ

தந்தைபா னடந்த வெல்லாம் சாற்றிட வித்துன் மாலி
முந்தைநா ளிறைவன் பாங்கர்ப் பெற்றமை முழுது முன்னிச்
சிந்தைநோ யடைந்து நீயுஞ் செல்வன்பால் வரம்பெ றுமை
லந்தையா லென்செய் தாயென் றுராய்ந்தீ துரைக்க லுற்றான் ௩௩

மாற்றலன் பூசை யாற்றி வரம்பெறு துருத்தித் தான
மேற்றமிக் குடைய தெய்த வெண்ணிய வெல்லா முற்றும்
போற்றலும் புரிந்து செய்யிற் புணராத பொருளொன் றுண்டோ
தேற்றமங் கடைந்து போற்றிச் சிதைந்தது பெறுதி யென்றான் ௩௪

பெற்றவ னுரைத்த வார்த்தை பேணுபு தலைமேற் கொண்டு
நற்றவ னுவே னந்த நகுதலஞ் சார்ந்தென் றேர்பு
கொற்றவன் பரிபூ ணோர் காற் கொடிஞ்சியந் தேரோ டுற்று
னுற்றவன் வறிய னுகா துயருழத் தாலத் தானம் ௩௫

வளமலி துருத்தி புக்க மார்த்தாண்டன் பொன்னித் தென்பா
லுளமலி செம்பொற் கோயி லொளிர்வது கண்டுட் புக்கான்
களமலி நெஞ்சத் தார்தங் காட்சிக்கு மரிய தாய
தளமலி பதும தீர்த்தங் கண்டதன் கோடு சார்ந்தான் ரு௬

தங்கணு யகன்வந் தான்பே ரருள்பெறுஞ் சால நம்மைத்
திங்கணு டோறுஞ் செய்யுந் தீதுதீர்த் தருளு மின்னு
மிங்கண்மே வுறுமென் றேகைக் கண்ணீர்விட் டெழில்சீர்த்தென்ன
வங்கண்மேன் மேலுஞ் சிந்தி யலர்ந்தன பதும மெல்லாம் ருஎ

கருஞ்சிமி றிரைத்துப் போர்த்துக் கள்ளுண்டு களிக்குங் காட்சி
வருபகை யாய வெய்யோன் மாற்றலற் குடைந்து வீழ்ந்தான்
பொருமவன் மனைவி மாட்டுப் புக்கின்பந் துய்ப்பா னென்றே
யிருடிரண் டடைந்த தேய்க்கு மெண்ணரும் பதுமந் தோறும் ருஅ

செய்யபொற் றகட்டி னீலஞ் செறிதரப் பதித்தா லென்ன
வையபல் லிதழ்க டோறுங் கருஞ்சுரும் பமர மொய்க்கு
மொய்யொளிக் கண்ணன் கையின் முயங்கிய நவமீ தம்போற்
செய்யொளிப் பதுமத் துள்ளா லோதிமச் சினைபி றங்கும் ருகூ

தண்ணிய நறிய தீர்த்தந் தன்குறி வெளிசெய் தாங்கு
நண்ணிய பதுமம் பூத்து நயங்கொடு பொலித றோர்ந்து
புண்ணிய தீர்த்த மீது போலிலை யெனவி யந்து
கண்ணிய கதிரோன் மூழ்கி யெழுந்தனன் கரிசு தீர்ப்பான் ௬0

வெள்ளிய நீறுபூசி விரும்புகண் மணியும் பூண்டு
வள்ளிய வெழுத்தைந் தெண்ணி மாப்பெருங் கோயில் சூழ்ந்து
கள்ளியன் மலருத் தாலத் தருவையுங் கசிந்து போற்றி
யுள்ளியல் பெருமான் முன்போய்ப் பணிந்தன னுவகை விம்ம ௬க

வரவரும் பன்ன கொங்கை மங்கையை மணவா ளப்பே
ரிரவருட் பிரானைப் பார்ப்பார் மெல்லிய லாயி னாளை
யுரவுகொ ளன்பிற் போற்றி யுவப்புற்று வெளியே வந்து
கரவற வருணன் போற்றுங் கண்ணுதற் பிரான்முன் சார்ந்து ௬உ

புனலிறை சலோர்த ரத்தைப் போக்கியாட் கொண்ட வாறு
மனநெக்கு சிவபத் தற்குக் கயநோய்மாற் றியதும் பேசி
யனகனே யடியேன் றுன்ப மறுத்தரு ளென்று போற்றிப்
பனவரேழ் முனிவர் பூசை பண்ணிய குறிமுன் போந்து ௪௩

எழுவருக் கருள்சு ரந்த வெம்பெரு மானே நாயேற்
குழுவலன் பருளென் றேத்தி யுதாசன வீசன் முன்போய்
முழுவலி யழலோன் போற்றச் சுடுதலான் முகிழ்த்த பாவங்
கழுவிய விறையே நாயேற் காத்தருள் செய்யல் வேண்டும் ௪௪

வளவன்விக் கிரமன் போற்ற மணியுடற் குட்டங் நீர்த்துக்
கொளவவன் றென்பா லுட்டுங் குறியினுங் கலந்து வாழுங்
களமிலா முதலே யென்னைக் காத்தருள் செய்தி யென்று
புளகறப் பணிந்து போற்றிப் பச்சிம திசைப்பாற் சென்று ௪௫

அலகை வெங் கொடியாள் போற்ற வவட்கருள் சுரந்து நட்டங்
குலவநன் கருளிச் செய்த குழகனை யடிப ணிந்து
நலமிகு காமன் போற்ற நல்லரு ளினிது செய்த
வலனுயர் மழுவோன் செம்பொன் மலரடி பணிந்து போற்றி ௪௬

மேற்றிசை யொருகு ரோசத் தளவையின் விரும்பிச் சென்று
நாற்றிசை புகழும் வேய்யோ னுமருந் தவந டாத்தற்
கேற்றிசை தான மீதே யென்றுளத் தெண்ணங் கொண்டான்
சாற்றிசைப் பொன்னித்தென்பாற் றழைந்தியங் குதலுங் கண்டான் ௪௭

அங்கணோ ரரசி னீழ லெங்கரக் களிற்றைத் தாபித்
தெங்கணு யகனே யாது மிடையூறெய் தாம னெற்றிச்
செங்கணு யகற்செய் பூசை சிறப்பிக்க வேண்டு மென்று
வெங்கணு றலர்தூய்ப் போற்றி வேண்டிமற் றதன்மேல் பாங்கர் ௪௮

ஒருசின கரம்பு ரிந்து சிவக்குறி யொன்று தாபித்
தருகுற வொருதீர்த் தந்தொட் டதிற்கங்கை முதற்றீர்த் தங்கண்
மருவுற நிறுவி மூழ்கி மஞ்சன மதுவே கொண்டு
பெருகுறு மனபி னுட்டிப் பிறங்குபூ சனைசெய் தானே ௪௯

சிலபக லிந்த வாறு செயற்கரும் பூசை செய்து
குலவவோ ரிடத்த மர்ந்து வழியுணுக் கொள லு மின்றி
யலகறு பெருமான் பாத மிருதயத் தழுந்தச் செய்து
நலமிகு தவம்பு ரிந்தா னானிலத் திருளுண் பானே ருO

தினகர னிந்த வண்ணங் கொடுந்தவஞ் செய்யுங் காலை
யனலெழுந் தண்ட முற்ற வழற்றுதல் கண்ட வானோர்
கனமணி கண்டன் பாதங் கைகுவித் திறைஞ்சி யேத்தி
வனசநண் பாளன் செய்யுங் கொடுந்தவ மாற்று கென்றார் ருக

அளிகொடு மாற்றா யென்னி லடக்கிய கொடுவி டத்தை
வெளிவிடல் செய்தி யென்று விண்ணப்பஞ் செய்தா ரைய
னொளிகிளர் முறுவல் செய்யா வும்பர்காள் பரிதி யாற்றுந்
தெளிதவக் கனலை மாற்று வோஞ்சென்மி னீவி ரென்றான் ருஉ

என்றவர்க் கருளி யைய னிரவிமு னெண் ணிலாத
கன்றலி லிரவி தாமோ ருருக்கொடு கலப்புற் றென்ன
வன்றொரு வடிவந் தாங்கி யடைந்தன னதுதெ ரிந்து
குன்றெழுந் ததுசூழ் செம்மல் கொண்டன னச்ச மேன்மேல் ருங

மாற்றல னாய வித்துன் மாலிநந் தவத்தை மாற்ற
வாற்றலி னடைந்தான் யாது செய்துமென் றாயுங் காலை
யேற்றமர் பெருமான் செவ்வா யிளநில வரும்பி வெய்யோய்
தோற்றமீ றிலாத நாமோர் சூரியன் காண்டி யென்றார் ருச

ஐயன்வாய் மொழியி னாலு மவனருள் கலத்த லானுஞ்
செய்யவா னனைய மேனிச் சிவபெரு மானே யிந்த
மெய்யொடு மடைந்தா னைய மிலையென வெருவு நீத்து
வையகம் பரவுந் தாண்மேல் வீழ்ந்தனன் வாழ்ந்தே னென்று ருரு

வீழ்ந்தவன் வீழ்ந்த வாறே கிடத்தலும் விருப்பிற் றாட்கீழ்த்
தாழ்ந்தவர் தமக்கே நாளுந் தண்ணருள் சுரக்கும் பெம்மா
னாழ்ந்தவெந் துயருந் தீய வவுணன்வெம் பகையு மின்னே
போழ்ந்தனை யெழுதி யென்று பொலியவாய் மலர்ந்தா னன்றே ருசு

மறையெழு வாய்மொ ழிந்த வார்த்தைகேட் டுய்ந்தே னென்று
நிறைகதி ரவனெ ழுந்து நின்றன னவனை நோக்கிக்
குறையினந் திருத்து ருத்திக் கோயிலு ளடைந்து நீங்கா
நறைகெழு பதும தீர்த்த நானநா டோறுஞ் செய்து ருஎ

ஓங்குமுத் தால நீழ லுறைந்தெழுத் தைந்து மெண்ணிப்
பாங்குநங் குறியைப் போற்றி யோராண்டு பயில்வை யென்னி
னீங்குநின் றுயர மெல்லா நினைத்தவை யனைத்து முற்றும்
வாங்குதெண் டிரைநீர் ஞால மகிழ்கொளப் பொலிவை யென்று ருஅ

சொற்றுரு மறைந்தா னையன் சூரியன் மகிழ்ச்சி பூத்துக்
கற்றவர் புகழத் தன்னாற் பதிட்டைசெய் கணேசன் பாலு
மற்றமில் பெருமான் பாலு மருள்விடைபெற்றுப் போந்து
முற்றவர் புகுந்து ருத்தி மொய்வளத் தளிபுட் புக்கான் ருகூ

அருள்வளர் பதும தீர்த்த மாடியுத் தால நீழ
லிருள்கடி யைந்தெ ழுத்து முதற்பல மனுவு மெண்ணித்
தெருளமை கோசம் போற்றித் திங்கள்பன் னிரண்டு செல்லப்
பொருளமை பிரான் முனின்று துதிபல புகல லுற்றான் சூ0

எவன்வெளி வளிதீ நீர்ம ணிவையாகி யல்ல னானு
னெவனுயிர்க் குயிரு மாகி யெங்கணும் வியாபி யானு
னெவன்முத னடுவீ றாகி யிவற்றியை பொருதற் கில்லா
னவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் சூக

எவனருள் வலியா லெம்மோ டிந்துவு மியங்கா நிற்கு
மெவனருள் வலியாற் பூத மெலாந்தத்தந் தொழி னடாத்து
மெவனருள் வலியால் வாரி யேழுமே லெழா தடங்கு
மவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் சூஉ

எவன் மொழி யாரு மேற்பா ரெவன்மொழி யனைத்துங் கூறு
மெவன் மொழி யெவற்றி னுக்கு மியைபிர மாண மாகு
மெவன்மொழி யிறுதி யில்ல தெவன்மொழி யின்ப நல்கு
மவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் சூங

எவன்மல கேவ லத்தா ருயிர்க்கிலை தனுமுன் னீவோ
னெவன்புத்தி யினனற் புத்தி யினலற மியையச் செய்வோ
னெவன்மலங் கீழ்ப்ப டுத்தி யின்னரு ளின்ப முய்ப்போ
னவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் ௬௪

எவனிலை மரத்துட் டீயாய்க் கேலத் தியைந்து நிற்போ
னெவனிருங் கல்லுட் டீயாய்ச் சகலத்தி னியைந்து நிற்போ
னெவன்வலி யிரும்பிற் றீயாய்ச் சுத்தத்தி னியைந்து நிற்போ
னவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் ௬௫

எவன்மறை முழுதுஞ் சொற்றா னெவன்மறைப் பொருளா யுள்ளா
னெவன்மறை வழுத்தப் பட்டா னெவன்மறை யுடமை செய்தா
னெவன்மறை முடியின் வாழ்வா னெவன்மறை முடிக்குமெட்டா
னவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் ௬௬

எவன்றிரு நாமங் கூறிற் பாதக மெல்லா நீங்கு
மெவன்பணி விழைந்து செய்யி னெப்பெரும் பதமு முண்டா
மெவனுருத் தியானத் தாலே யின்பவீ டெளிதி னெய்து
மவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் ௬௭

எவனொரு துரும்பு நாட்டி யிமையவர் கலாமொ ழித்தா
னெவனிளங் கோக்க ணேட வீறொரீஇ வளர்ந்து நின்றா
னெவன்விட முழுதுந் துய்த்தே யேழைவா னவரைக் காத்தா
னவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் ௬௮

எவனொரு தடையு மின்றி யிம்மைவாழ் வனைத்து நல்கு
மெவனொரு பொருள்செய்யாமன் மறுமைவாழ் வெல்லாநல்கு
மெவனிவை யிரண்டுந் தீர வின்பவீ டெளிதி னல்கு
மவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் ௬௯

எவனொரு பெண்பால் வைத்தும் விகாரஞ்சற் றேனு மில்லா
னெவன்வினை யைந்துஞ் செய்து மொருவினை யேனு மில்லா
னெவனுருப் பலம ரீஇயு மோருரு வேனு மில்லா
னவனொரு துருத்தி மேயா னவனடி வணக்கஞ் செய்வாம் ௭௦

கற்றையஞ் சடையுங் காள கண்டமு மழுவு மானு
மொற்றை வெள்விடையு மெல்லா வுலகமு மீன்றபாலும்
பற்றைநீத் தவர்க்கே நாளும்பயன் படு மலர்ப் பொற்றாளு
மிற்றைநா ளடியேன் காண வெழுந்தரு ணிலையும் போற்றி எச

துருத்திமா நகரம் போற்றி சொன்னவா றறிவா ரென்னு
மருத்திகூர் நாமம் போற்றி யலங்குழுத் தாலம் போற்றி
விருத்திகூ ரருள ருப்பு மென்முலை பாதம் போற்றி
திருத்திசான் மணாளக் கோலம் போற்றியம் பிகைசீர் போற்றி எஉ

என்றிருந் துதிகள் பாடு மெழுபரித் தேரோன் முன்னர்க்
குன்றிருஞ் சிலையாக் கொண்ட கூறுமா றறிவார் தோன்ற
நன்றிருங் கழன்மேல் வீழ்ந்து நயப்பொடு சூழ்ந்து சூழ்ந்தவ்
வொன்றிருங் கதிரோ னிற்ப வேட்டவை யுரைத்தி யென்றான் எங

அடியனேற் கென்று நின்றாட் கருதெழு மன்பு வேண்டும்
படியில்கார்த் திகைமா தத்திற் பானுவா ரத்தி லிந்த
முடிவிலாக் காட்சி தந்தா யாதலான் முதல்வ வென்றுங்
கடிகெழு மித்த லத்திற் கார்த்திகைப் பானு வாரம் எச

நனிசிறப் பாதல் வேண்டு நயக்குமிந் நாளில் யார்க்கு
முனிவினீ தீர்த்த நல்கி முழுத்துயர் தீர்த்தல் வேண்டும்
புனிதமார் பொன்னித் தீர்த்தம் புகுந்தந்நா ளாடி னோர்நின்
பனிமலர்ப் பாதஞ் சேர்ந்து பரானந்தந் துய்த்தல் வேண்டும் எரு

இன்னுமத் தீர்த்த மாடி யிப்பெருந் தளியு ளாளு
மன்னுமிப் பதும தீர்த்தம் வழுவுறா வண்ண மாடி
முன்னுநின் சேவை செய்வோர் மூரிநீ ருலக முற்றும்
பன்னுமோர் குடைக்கீழ்த் தங்கப் பார்த்திப ராதல் வேண்டும் எசா

ஒன்றுமி னுயேன் பூசை யுஞற்றுபு வசித்த தான
மென்றுமென் பெயர்பூண் டோங்கி யிலகுறல் வேண்டு மாங்குத்
துன்றுமென் பதிட்டை யாய நின்குறி தொழுவோ ரெல்லாங்
கன்றுபவ் றுயரு நீத்துக் கருதியதடைதல் வேண்டும் எஎ

அரசடிப் பதிட்டை செய்த கணேசனை யருச்சிப் போர்கள்
விரசுபல் லூறுந் தீர்ந்து வேட்டவை யெய்தல் வேண்டு
முரவுறு தெவ்வு நீங்க வுலகெலா முவகை யெய்தப்
பரவதி காரம் பெற்றியான் முன்னையிற் படர்தல் வேண்டும் எஅ

இந்தநல் வரங்க ளெல்லா மினிதருள் செய்தி யென்று
சந்தவொண் கதிரோன் போற்றத் தம்பிரான் கருணை பூத்து
முந்தநீ வேட்ட யாவு முகந்துகொள் கென்று நல்கி
நந்தமற் றவன்மேல் வைத்த கருணையா னவில்வான் பின்னும் எகூ

தெளிவியா கரண முன்னுச் சிறந்தபன் னூலு நீதேர்ந்
தொளிகெழப் பயிலு வாயென் றுரைத்திலிங் கத்துட் புக்கா
னளிகெழு துருத்தி மேவு மண்ணல்போல் விழைவின் மேலுங்
களிகொள வாம்பொ ருத்துங் கடவுளர் மற்று முண்டோ அ0

எண்ணிய வரங்க ளோடு மெண்ணுத பிறவும் பெற்று
நண்ணிய மகிழ்ச்சி யோடு நலங்கொ டன்றேர்மே லேறிக்
கண்ணிய மேருச் சூழ்ந்து கடும்பகை யிருளோ டோப்பிப்
புண்ணிய முலகம் பூப்பப் புரிந்தனன் கதிரோ னம்மா அக

மிடைதிறல் வித்துன் மாலி விடாதலை யதிகா ரத்தி
லடையவும் வெறுப்பு மேவி யண்ணலந் துருத்தி சார்ந்து
கடையுறுப் பொன்னி யாற்றிற் கார்த்திகைப் பானு வாரங்
குடைதிற முற்று நம்பர் குரைகழல் சேர்ந்து வாழ்ந்தான் அஉ

அன்றுதொட் டலரி மேய வவ்விட மவன்பேர் பூண்டு
கன்றுத லில்லா தென்றுங் கதிராமங் கலமென் றூய
தென்றுமங் குறைபெம் மானு மேரம்பப் பிரானு மன்பி
னென்றுமக் கதிர்நா மம்பூண் டுறுவர முற்றூர்க் கீவர் அஙு

கார்த்திகைப் பானு வாரங் காவிரித் தீர்த்த மாடி
யார்த்தியுத் தாலக் கோவி லமர்பிராற் றரிசித் தேத்துஞ்
சீர்த்தியர் நினைத்த யாவுஞ் செயிர்தப வடைந்தா னந்த
பூர்த்திய ராவ ரன்னூர் பேறெவர் புகல வல்லார் அச

எழுபரித் தேரோன் பொன்னி யிருந்துறைத் துருத்தி புக்கு
வழுவறப் பூசித் தேத்திப் பெற்றது வகுத்துச் சொற்றுங்
கழுமலத் தவர்கள் சூழக் கதிர்க்குமத் துருத்தி யுள்ளாற்
றழுவருள் விசுவ நாதர் சார்ந்தது மெடுத்துச் சொல்வாம் அரு

**கதிரவன் பூசைப்படலம் முற்றியது.**

ஆகப்படலம் உசுக்குத் திருவிருத்தம் கOசுஎ.

---

## உசு-வது, கதிரவன்பூசைப்படலம்.

திதியின் மக்களில் சிறந்தவனும், தேவர் அஞ்சச் செய்யும் போரில் வல்லவனும் ஆன "வித்துன்மாலி" யென்னும் வீரனொருவன் சுக்கிரன்பாற் சென்று சிவபிரானார் எழுந்தருளிய திருத்தலம்பலவற்றுள்ளுஞ் சிறந்த தலம் யாதென்று கேட்டுத் "திருவுத்தாலவனமென்னுந் திருத்துருத்தியை அடைந்தனன். அவ்வித்துன்மாலி அத்தலத்தில் நிகழ்வன அனைத்துங் கண்ணுற்று ஆராலும் அளக்கமுடியாத அருமைச்சீர் இத்தலத்தில் உண்டென்று தெளிந்து அத்திருத்துருத்திக் கோயிலின் கண் உள்ள தாமரைத் திருக்குளத்தில் மூழ்கித் திருநீறு இட்டுத் திருக்கண்மணி பூண்டு திரு ஐந்தெழுத்து ஓதிச் சொன்ன வாறறிவார் திருமுன்சென்று அன்போடு வணங்கி எழுந்து பூக்கள் கைக்கொண்டு வழிபாடு செய்து அம்மையாகிய அரும்பன்னவன முலையாளையும், மணவாள நாதனையும், பரதன் மகளான நாறு சாந்திள முலையாளையும், வழிபட்டு ஆங்குள்ள திரு உத்தாலத் தருவையும் போற்றினன்.

பின்னும் முறையே துணை வந்த பிள்ளையார் முதலியவர்களையும், சோழீசன், ஓங்காளீசன், காமேசன், வருணநாதன், எழுமுனிவரீசன் முதலிய எம்பெருமானார் திருவடிவங்களையும் அறியாமை அகல வணங்கி ஆங்கு ஓரிடத்திருந்து அருந்தவம் புரிவான் ஆயினன். அவ்வாறு தவஞ்செய்யத் தொடங்கிய வித்துன்மாலி, காற்றுணவும் இன்றிப் பனிக்கால முழுது நன்னீரிலிருந்தும்,வேனிற்காலத்தில் வெந்நெருப்பில் நின்றும், கொடுமையாக அருந்தவம்புரிய அத்தவத்தழல் ஆகாயத்தில் அளாவக் கண்ட அமரர் அனைவரும் அஞ்சினர். எம்பெருமானார், அவ்வித்துன்மாலிக்கு இனிய காட்சி அளித்து அவனை நோக்கி உன் கருத்து யாது ? அதனை உரைப்பாயாக வென்றருளினர். அதுகேட்ட வீரன் விரைமலரிட்டு எம்பெருமான் திருவடி பணிந்து, அண்ணலே! "அடியேன் கதிரவனுக்கும் வரத்தை அளித்துப் பொற்றேரும் தந்தருளல் வேண்டும்" "இன்னும் அக்கதிரவன் போலவே நானும் மகாமேரு

வைச் சூழ்ந்து வருதல் வேண்டு" மென்று, வணங்கிக் கேட்டனன். எம் இறைவரும் அவ்வாறே அவன் கேட்டன எல்லாவற்றையும் ஈந்து அவ்விடத்தே மறைந்தருளினர். அவ்விடம் நின்ற வித்துன்மாலி அப்போதே எம்பெருமான் அருளால் எதிர் நின்ற பொற்றேருடன் திருத்துருத்திக் கோயிலை வலமாகச் சூழ்ந்து அத்தேர் மேல் கொண்டு எழுந்தனன். அதுகண்ட அமரர் அனைவரும். "திதி மைந்தன் அதிதி மைந்தன் ஆயினனே" என்று, வியந்து கூறினர். விண்ணில் எழுகின்ற கதிரவன் உலகத்தாரைப் பார்த்துச் சிவபிரானால் கண்ணை யும், பற்களையும், கழிந்தவனைக் கரும சாட்சி " என்று கருதுகின்றீர் கள்! ஒரு பழியுமில்லாத என்னை அவ்வாறு கொள்வீர்களாக! அன் றியும் யானும், அவனுந் தந்தை ஒருவனுக்கே தாய்மார் இருவர் வயிற் றில் வந்தனம். இதனால் எங்களுள் குலபேதம் இல்லையே. இல்லை யாயினும், எனக்குண்டான சிறப்பு அவனுக்கு இல்லை. அதையும் சொல்லுவேன். தக்கன் யாகத்தில் போய்ச் சிவனார் பால் குற்றஞ் செய்தனன். அவன் தேர்ப்பாகனோ? நொண்டி. என் வலவன் அக் குற்றம் ஒன்றுமில்லாதவனே. ஒரு நாள் அவன் பாகன் பெண்ணுருவ மாகக் கண்டு பதைத்து எழுந்து அப் பெண்ணைக் கூடிக் குரங்கைப் பெற்றனன். ஒரு மாதைக் கூடித் துன்பஞ் செய்கின்ற இயமனை ஈந்தனன். அம்மட்டோ? சனியென்னும் முடவனைப் பெற்றனன். பின்னர் ஒரு காலத்தில் மாமன் மயனால் சாணையில் வைத்துத் தேய்க் கப்பட்டனன். இன்னும் அவன் கதை அருவருக்கத் தக்கதன்றோ! அது நிற்க! அவன் சிவ வடிவமான செல்வனோ என்றால் யாரே அச்சிவபிரானார் வடிவமாகமாட்டார்." "அன்பர்கள் அனைவரும் அப் பெருமானுடைய முகக்கண்ணே" என்று சொல்லிக்கொண்டு வித்துன் மாலி கிழக்கே உதித்தான். அதுகண்ட அக்கதிரவன் மேற்கே உதித் தான். இனி வித்துன்மாலி மேருவுக்குத் தென்பால் வந்தால் அவன் வடபால் வருவான். வடபால் வந்தால் தென்பால் வருவான். இவ் வாறு மாறிமாறி இருவரும் வரவே, இரவில்லாமல் பகலே ஆக எவ் வுயிர்களும் மயங்கின. விண்ணவர் குருவான வியாழன், கதிரவன் பால் சென்று காலவேறுபாடுகள் எல்லாம் உன்னால் ஆகத் தக்கன ஆதலால் அவற்றை விடாமல் நிறுத்துக" வென்று கூறியிட அது கேட்ட கதிரவன் வித்துன்மாலியுடன் கணக்கில்லாத பாணங்களைப் பொழிந்து போர் செய்ய அப்போருக்கு ஆற்றாமல் "திருத்துருத்தி நாயகனே ஓல"மென்று தேரோடு மண்ணில் வீழ்ந்தனன். அப்போது எம்பெருமான் அவனுக்கு முன் தோன்றி நின்று, வித்துன்மாலி! "நீ

ஒன்றும் அஞ்சற்க!'' என்று கதிரவனை வெகுண்டு நோக்கி, பேரொலி செய்தருளினன். அப்பொழுது அக்கதிரவன் தேரானது கீழ்வீழ வித்துன்மாலியின் தேர் மேல் எழுந்தது. எம்பெருமான் வித்துன் மாலிக்கே அதிகாரம் தந்து அனுப்பியருளினன். கதிரவன் யாதோ? “தீங்கு வந்த''தென்று தன் தந்தையாகிய காசிப முனிவனை அடுத்து நிகழ்ந்ததை விண்ணப்பஞ் செய்தனன். அது கேட்ட காசிபர், கதி ரோய்! “திருத்துருத்தியோ எண்ணியதை அளிக்கும்.'' ஆங்கே சென்று இறைவனார் திருவருளைப் பெற்று உன் பதவியைப் பெறுக'' வென்றனர். அக்கதிரவனும் தந்தை சொல் மந்திரமாகக்கொண்டு திருத்துருத்தியை அடைந்து திருக்கோயிலினுள்ளே புகுந்து திருக் குளத்தில் மூழ்கித் திருநீறு திருக்கண்மணி பூண்டு ஐந்தெழுத்தும் ஓதி “சொன்னவாறறிவா''ரைப் பணிந்து முறையே ஆங்குள்ள தலங் களையும் வணங்கிக்கொண்டு திருத்துருத்திக்கு ஒரு குரோசமளவில் உள்ள இடத்தை அணுகி ஆங்கே தவஞ் செய்யக் கருதித் தென்பால் காவிரி நீர் செல்லுவதைக் கண்டு மகிழ்ந்து ஆங்கு ஓர் அரச மரத்தடியில் யானைமுகப்பெருமானை எழுந்தருளச் செய்து அப்பெரு மானை நோக்கி ஐயனே! இடையூறு ஒன்றும் எய்தாவண்ணம் சிவபிரா னார்க்குச் செய்யும் பூசையைச் சிறப்பிக்க வேண்டுமென்று வேண்டித் துதித்து, அதற்கு மேல்பால் திருக்கோயில் ஒன்று செய்து, அதில் சிவக்குறி ஒன்று எழுந்தருளச் செய்து, திருக்குளம் ஒன்று தோண்டி அதில் கங்கை முதலிய புனித நீர் கொண்டு வந்து நிரப்பிப் புனிதமாக்கி அந்நீர் கொண்டு எம்பெருமானை அன்போடு வழிபட்டனன்.

அக்கதிரவன் இவ்வாறே சிலகாலம் வழிபட்டுப் பின்னர் ஓரி டத்து இருந்து உணவு மின்றி எம்பெருமானாகிய சிவபிரானைச் சிந்தை யில் நிறுவி அரியதவத்தில் அமர்ந்தனன். அந்தத்தவஅழல் மிகச் சுடுதலால் அமரர் எல்லோரும் கண்ணுதற் பெருமானைக் கைகுவித்து இறைஞ்சி “இக்கொடிய தவத்தை மாற்றியருளுக'' வென்று வேண்டி னர். “அப்படியே ஆகுக'' வென்று அமரர் பெருமானார் அமரர்களுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டுக் கதிரவன் வடிவங் கொண்டு அவன் முன்னாக அவன் மயங்கச் சென்றருளினர். அது கண்ட கதிரவன் “வேறொரு கதிரவனோ வென்று அஞ்சிப் பின்னர் “எம்பெருமான் அருளால் சிவபிரானே'' யென்று தெளிந்து அடி அற்ற மரம் போல் அடி வீழ்ந்து இறைஞ்சி அருமையாகப் புகழ்ந்தனன். அதற்கு எம் இறைவனார் கதிரவ! நீ திருத்துருத்தியில் போய் நமது தாமரைத் திருக்குளத்தில் நாடோறும் மூழ்கித் திருநீறு திருக்கண்மணி பூண்டு,

ஐந்தெழுத்தும் ஓதி, நம் குறியாகிய சிவலிங்கத்தையும் வழிபாடு செய்து கொண்டு ஓராண்டு இருப்பாயாளுல் இவ்வுலகம் மகிழவிளங் குவை" என்றருளக் கேட்ட கதிரவன் எம்பெருமாஞர் அருளிய வாறே திருத்துருத்தியிற் போய் ஓர் ஆண்டு வழிபாடு செய்து எம் பெருமானைத் துதி செய்ய அதற்கு மகிழ்ந்தருளிய சிவபிரான் நினக்கு வேண்டுவது எது! அதனை வழங்குவமென்று அருளிச் செய்ய அக் கதிரவன் அக மகிழ்ந்து ஐயனே! இத்தலத்தில் இக்கார்த்திகைத் திங் களில் ஞாயிற்றுக்கிழமையில் இந்த அரிய நற்காட்சி தந்தருளினமை யால் "இத்தலத்தில் இத்திங்களும் இக்கிழமையுமே சிறப்புறல் வேண்டும். "இந்நல்நாளில் யாவருக்கும் புனிதநீர் வழங்கியருளி அவர் கள் துயரமெல்லாந்தொலைத்தல் வேண்டும்." 'இந்நாள் காவிரி நீர் ஆடி ஞோர் எவரும் நின்றிருவடி நீழலைச் சார்ந்து பேரின்பம் பெறுதல் வேண்டும்." "இக்குளத்தில் மூழ்கி நின்னை வழிபடுவோர் இம்மண்ணில் எல்லாமும் ஆட்சி செய்யும் பேரரசியலைப் பெறுதல் வேண்டும்." "இன் னும் அடியேன் தங்கித்தவஞ் செய்த தலம் கதிராமங்கலமென என்பேர் எய்தல் வேண்டும்" "அதில் நின்குறியையும், அரசக்கணேசரையும் வழிபாடு செய்வோர் எண்ணியது எய்துக' "யானும் என் அதிகாரம் பெற்று என் அகஞ்செல்லுதல் வேண்டும்." "இவ்வரங்கள் எல்லாந் தருக"வென்று பணிந்தனன். சொன்னவாறறிவார் அவன் கேட்டவரங் களையும், அவனுக்கு இயற்கல்வியையும் தந்து தமது சிவக்குறியில்மறைந் தருளினர். கதிரவன் வேண்டினவரங்களும் பிறவும் பெற்று மகிழ்ந்து உலகில் சென்று தனது அரசியலைப்பெற்று மகிழ்ந்தனன். அது கண்ட வித்துன்மாலி மீட்டுந் திருத்துருத்தியினையே சேர்ந்து கார்த்திகை ஞாயிறில் காவிரிமூழ்கி வழிபாடு புரிந்து சொன்னவாறறிவார் திருவடி நீழலைச்சார்ந்து இன்புற்றனன். அதுமுதல் கதிரவன் தவஞ் செய்த அவ்விடம் 'கதிராமங்கல" மெனப்பெயர் எய்தியது. அதில் எழுந்தரு ளிய எம்பெருமாஞர் 'கதிரவாசன் எனவும், அரசமரப்பிள்ளையார் "கதிரவக்கணேச" ரெனவும் திருப்பேர் எய்தி அக்கதிரவன் வேண்டிக் கொண்டபடியே அவ்விருவரும் வேண்டுவார்க்கு வேண்டுவனவெல் லாம் எளிதில் ஈந்தருளுகின்றனர். திருத்துருத்தியில் அக்கதிரவன் வேண்டுகோளின்படியே கார்த்திகை ஞாயிற்றுக்கிழமையில் காவிரிநீ ராடி எம்பெருமானை வழிபாடு செய்வார் எவராயினும் அவர் அனை வரும் எண்ணியன முற்றும் எய்தி இறுதியில் பேரின்ப முறுகின்றனர்.

உசு-வது, கதிரவன் பூசைப்படலம் முற்றியது.

---

## உஎ—வது, விசுவநாதப்படலம்

போற்றுங் கதிரோ னருச்சித்த திறம்பு கன்று
யேற்றுந் துருத்தித் தலச்சீ ரினுஞ்சொற்றி யென்னும்
வேற்றுங் கமார்கட் கருங்கூந்தல் விநம ரைக்குச்
சாற்றுந் தவத்தா னுயர்ந்தோங்கு தருமசன்மன் க

ஓவா வருள்கூர் பரன்மாம னுதிக்கப் பெற்றுக்
கோவா மணியிற் பொலிகற் கநற்கோத் திரத்தா
னேவா மனைமக்க ளுள்ளான் கலையாவுங் கற்றான்
றுவா வளியா னுருத்திர சன்ம னென்பான் உ

உடையா னடிக்கே மனமுய்க்கு முரவு மிக்கான்
விடையா ரவன்பொன் னடிப்பூசை வினையும் பூண்டோன்
றடையா துமின்றி வயக்குஞ் சிவசா தனத்தான்
மடையார் வயல்சூ ழுமுத்தா லவளத் தலத்தான் ௩

பொல்லா மலமாயை கன்மம் புரிபுன்மை தீர
வல்லார்க ளத்தனடி யாரை யருச்சித் தேத்து
நல்லா னவனுமம் வயக்கிடு நாவ னுளு
மொல்லாதன வெண்ணலு மின்றி யொழுகு நீரோன் ௪

மறையோர் முதல்யா வரும்வந் தடைந்தாலு முண்டி
குறையா தருத்தி யுவப்பிக்குங் குணத்தின் மிக்கான்
முறையா மழற்கா ரியமுட்டு முனிந் தியற்றி
நிறையா தரவிற் பயில்வோ னருணேய மிக்கோன் ௫

அன்னான் றுருத்தித் தலமேன்மை யறிந்திருந்து
மின்னார் மணிமா ளிகைக்காசியை மேவும் வேட்கை
துன்னு வவனே யிறந்தாற் கதிதுன்னு மென்று
தன்னு தரவிற் குறித்தான் பிறர்சாற்றல் கேளான் ௬

எந்நா ளளவாப் புகழ்க்கா சியையெய் துவோமற்
றெந்நாண் மிகுபுண் ணியக்கங்கை யினிது தோய்வோ
மெந்நாள் விசுவேசனை நோக்கி யிறைஞ்சு வோமென்
றெந்நாளும் யாரும் பெயர்த்தற்கரு மெண்ணந் தோய்வான் எ

ஒருநா ளெழுந்து மணமக்க ளொருங்கு நீத்துக்
கருநாள் கழிக்குந் தினம்வந்து கலந்த தென்று
திருமா லறியாப் பெருமா னெண்டிருத் துருத்தி
யொருமான் விடையும் பெறல்வேண் டிலனுற் றெழுந்தான் அ

வானேங்கு சைய வரைநீங் குபுமண் குதித்துத்
தேனேங்கு பூவு மணியுந் திறல்யா னைக்கோடு
மீனேங்கு வாரி நடுப்போய் நனிவீழ வீசித்
தானேங்கு பொன்னித் திருமாநதி தாண்டிச் செல்வான் கூ

நலமல்கு பற்ப னகரம் பொலிநாடும் பல்வீக்
குலமல்கு பற்பல் செறிகானுங் குலாவிப் பொங்கி
நிலமல்கு பற்ப னதியு நெடுங்குன்று நீத்து
வலமல்கு விந்த மணிமால் வரைவா யடைந்தான் க0

வேறு

உத்தம வொழுக்கம் வாய்ந்த வுருத்திர சன்ம னென்னும்
வித்தகன் வேட்கை கூர விந்தவெற் படைத லோடுஞ்
சத்தறி வின்ப ரூபத் தனிமுத லவ்வ னாதி
முத்தன்வண் டுருத்தி வாணன் முன்னின னவனை மீட்பான் கக

காசியின் வாசி யிந்தத் தலமெனல் கருத்திற் றேரான்
வாசியக் காசி யென்றே மதித்தனன் செல்லா நின்றான்
பேசிமுற் றுத பற்பல் வளங்களும் பிறங்கி மாக்கண்
மூசிமே லுயர்ந்த விந்த மூரிமால் வரைப்பா லுற்றான் கஉ

அனையவ னேகா வண்ண மாற்றிடை யொருபாம் பாகி
முனைகொடு மறித்துச் சால முனிந்துநீ யமர்தி யாமும்
வினைசெய் பாம்பாட்டி யாக மேவுதும் பின்ன ரென்று
தனைநிக ரிலாத குண்டோ தரன்முகம் பார்த்துச் சொற்றான் கந

துருத்தியி னதிகங் காசி யெனச்செலுந் துணிபி னானை
வருத்தியான் றிருப்பே னேலென் வலியெவ னாகு மென்று
விருத்திகூர் சினத்த னாகி விமலனா ரடியிற் சென்னி
பொருத்தினா னெழுந்து போனான் பொருவலிக் குறளன் மாதோ க௪

வேதிய னடைக்கு மாற்றோர் வெய்யபாம் புருவ மாகிக்
காதிய விழித்தீ மல்கக் கடுவளா முயிர்ப்பு வீங்க
மோதிய மாவும் புள்ளு முகம்புலர்ந் தஞ்சி யோட
வோதிய கலுழப் புள்ளு மூட்குறக் கிடந்தா னன்றே கரு

வழிநடந் தேகா நிற்கு மறையவன் றனக்கு நேரே
விழியழற் புலிங்கஞ் சிந்த வெவ்வுயிர்ப் பெழுந்து பொங்கப்
பொழிவிடத் தனைத்துந் தீயப் பொருப்பொன்று கிடந்த தேய்ப்பக்
கழிசெருக் கொடுகி டக்குங் காகோ தரத்தைக் கண்டான். கசு

காண்டலுந் துணுக்குற் றஞ்சிக் கையிணைப் பல்காற் றட்டி
யாண்டஃ தகலு மென்று முயன்றன னகலக் காணான்
மூண்டபல் லுருமுங் கூடி முழங்கினு மஞ்சா வஃது
பூண்டமை யிவன்கை தட்டுக் கஞ்சுபு போகுங் கொல்லோ கஎ

இனியெவன் செய்கு வாமென் றிருந்தலைப் புறஞ்செல் லாது
துனியின் வாற்புறத்துச் சேற றணிந்தன னடந்தா னாக
முனிவெழு கடுப்பிற் சீறி மொய்பொறிப் படம் விரித்துத்
தனியவன் செல்லும் பக்கந் திரும்பிற்றே தறுகட் பாம்பு கஅ

உள்ளத்தி னச்ச மேவ வுன்னிமற் றொருபாற் செல்லக்
கள்ளத்தி னமைந்த வெய்ய கட்செவி திரும்பிற் றங்கும்
விள்ளற்கு முடித ராவிவ் விதம்பல்கான் மாறிச் சேறல்
கொள்ளச்சற் றேனுஞ் சோர்வு கொளாது கொண் டதுவெங் கோபம்.

மறையவன் கருட சான மனுவல்லோ னாத லாலே
முறையினக் கருடற் கூவ முழங்கிமேல் வட்ட மிட்டுக்
கறைகெழு நாக மெல்லாங் கருகிட வஃது தோன்றிற்
றறையர வதுதெ ரிந்தோ ரழலுயிர்ப் பெழுவித் தன்றே உ0

சீறிய வரவு யிர்ப்பிற் செறியிரு சிறையுந் தீய்ந்து
மாறிய வலிய தாகி மறுகுபு மறையோன் முன்ன
ராறிய கடுப்பின் வீழ்ந்த தஃதுணர்ந் தந்த ணாள
னூறிய விடப்பற் பாம்பி னுரனையே மதித்து நின்றான் உக

நெட்டரா வுயிர்ப்பு மேவி நெடிபடு கான முற்றுஞ்
சுட்டது மாவும் புள்ளும் தொலைந்தன வாறு செல்வார்
விட்டதிவ் வழிச்செல் லாசை யென்றுமெய் நடுங்கி வீழ்ந்தார்
பட்டது பொல்லாங் கென்று பனவனு மெண்ணி னானல் உஉ

அலைசெயு மரவம் யாதே யாயினு மாக வின்னே
நிலைபெய ராது செய்வே னிகழ்மனு வலியா லென்று
கலைதெரி யந்த ணாளன் கருத்தினுண் மனுவாய் காலை
யுலைதல்செ யரவன் றனைச் சூழ்ந்துவீழ்ந் துயிர்த்த தன்றே உ௩

மற்றது வளைத்த லோடு மனுவுமீங் குதவிற் றில்லை
யெற்றிதன் வலிமை யென்னா வினைந்துளத் தச்ச மெய்தி
யுற்றிது பெருமான் செய்த வூறென்றே வுள்ளந் தேர்ந்து
வெற்றியந் துருத்தி மேய விமலனை விளிக்க லுற்றான் உ௪

சொன்னவா றறிவா யோலந் துருத்திநா யகனே யோல
மன்னவா கனன்முன் னோரு மறிவதற் கரியா யோல
மென்னதீ வினையி னானோ விவ்விட ருற்றே னோல
நன்னர்மா தேவ மூவர் நாயக வோல மோலம் உ௫

சங்கரா வோல மோலஞ் சம்புவே யோல மோலம்
பொங்கரா வணிந்த முக்கட் பூரணா வோல மோலம்
வெங்கரா சலமுரித்து மேனிமேற் போர்த்தா யோலம்
மிங்கரா வளைக்கப் பட்டே னென்செய்கே னோல மோலம் உ௬

அரும்புநேர் முலையாள் பாகத் தண்ணலே யோல மோலம்
கரும்புவார் சிலையாற் செற்ற கடவுளே யோல மோலம்
விரும்புவார் விழைவிற் கேற்ப வெளிப்படும் பொருளே யோல
மிரும்புநேர் மனத்தேன் றுன்ப மிரித்தரு ளோல மோலம் உ௭

என்றுநைந் துருகி யன்ப னிரக்கமுற் றழைக்கு மோசை
குன்றுவெஞ் சிலையாக் கொண்டோன் குழையொலி துளும்பு காதி
லொன்றிளங் கன்றி னோதை யீன்றவான் செவியுற் றென்ன
நன்றுசென் றேற லோடும் வெளிப்பட னயந்தா னன்றே உ௮

எவ்வுரு வெடுத்த போது மிவைவிடோ மென்பார் போல
வெளவிய மனுக்கு நீறு நெற்றிமட் டலங்கச் சாத்தி
வெவ்வியன் முழுது மாற்றும் விளங்குருத் திராக்கக் கோவை
கௌவிய தாகிச் சீர்ப்பக் கண்டத்தி லொன்று பூண்டு உகூ

தலைமிசைக் கலையை வாங்கித் தவாதமர் செங்கு மாக்கி
மலைவற வரையிற் சூழ்ந்தா ரிவரென வகுத்துக் கூற
விலையழுக் கென்ன வண்ண மிசைந்தவோர் கலைபு னைந்து
சிலைநிகர்த் தொளிருந் தோளிற் செறிவலி யமைந்த மார்பில் ௩௦

உள்ளன விவையென் பார்போ லுரகங்க ளெடுத்துப் பூண்டு
கள்ளமி லன்பர் சென்னி கலந்தருள் கொழிக்குங் கையில்
விள்ளருஞ் சிறுசு ரைக்காய்ப் பத்தரில் விளங்கக் கோத்த
தள்ளருங் குழலி ரண்டிற் சமைத்ததோர் கருவி கொண்டு ௩௧

ஒருவருந் தூர நின்று மோடிவந் திளைத்தார் போலத்
திருமுகம் வெயர்வு மல்கச் செறிந்துநெட் டுயிர்ப்புந் தோன்றப்
பருவரு மறையோன் காணும் படியெதிர் வந்து நின்று
ரிருவரு மற்றை யோரு மின்னமுங் காணு வையர் ௩௨

பணிக்கிர கணஞ்செய் வார்தம் படிவத்தின் வந்த வையர்
மணித்திரு முகத்து ரோம முறுக்கினர் மறையோன் காண
வணித்துநின் றிடலு நீயா ரென்றன னளித்தல் செய்வான்
எணித்துருத் தியில்வா ழைய ரேவவிங் குற்றே மென்றார் ௩௩

துருத்திவா ழைய ரேவப் போந்தன மென்ற சொல்லே
விருத்திசா றன்னோய் தீர்க்கு மருந்தாக வேதி யன்று
னருத்திகூர்ந் திந்த நாக மலைத்ததென் றனைய கற்றி
லிருத்தியென் னெஞ்சு ளந்த விறைவர்போ லென்று மென்றான் ௩௪

என்றலுங் கருவி வாய்வைத் திருந்திசை யெழுப்பி னான்சீர்
பொன்றலி ளெங்க ளையன் புகழ்மறை யவனைச் சூழ்ந்த
கன்றலி னரவ நேரே கலந்தது படம்வி ரித்துத்
துன்றலி னாடி யாடிச் சோர்வுற்ற தவச மாயே ௩௫

மறையவ னதனைக் கண்டு மனத் தொரா சங்கை பூண்டே
யிறையவ னேவப் போந்தா னென்றுளங் கோட லென்னே
நிறையவன் றானே வந்தா னுமென நினைத்த லோடும்
பிறையவன் முடிமேற் றோன்றக் கண்டனன் பேணித் தாழ்ந்தான் ௩௬

அந்தணன் பணித லோடு மவ்வுரு வுடனே மாற்றிச்
சந்தவுத் தாலமீழற் றழைமண வாளக் கோலச்
சுந்தரத் தெதிரே நின்றான் சூழ்ந்தகா கோத ரத்தின்
பந்தமெய் யொழித்து முன்னை யுருவுற்றான் பளகில் பூதன் ௩௭

இறையவ னுடல்கொல்லா மிதுவென வச்ச மெய்தி
நிறையுளத் துவப்பு முற்று நெரேலெனப் பணிந்து வீழ்ந்தான்
மறையவ னெழுக வென்று வள்ளல்வாய் மலர்ந்தா னுள்ளக்
கறையிலா னுய்ந்தே னென்று கைகுவித் தெழுந்து நின்றான் ௩௮

அளிமிகுந் துருத்தித் தானத் ததிகமெவ் விடத்து மில்லை
களிசெயுங் காசி வைப்பிற் கலக்குமோர் வேட்கை பூண்டாய்
தெளிசெயு முத்தாலஞ்சார் தெய்வமாத் தலத்தின் மேன்மை
வெளிசெயும் பொருட்டே யிந்த விளையாடல் செய்தோ மின்னும் ௩௯

நிறைவளக் காசி வைப்பை நீங்கியு மிருந்தோ மேலா
யறைபுகழ்த் துருத்தி வைப்பை யகன்றொரு கணமும் வைகேம்
மறையவ விதனை யோர்ந்து வந்துநந் துருத்தித் தானத்
துறைகுதி யீற்றின் முத்தி யுறுகுவை யின்னுங் கேண்மோ ௪0

கங்கையின் விசேட மாகிக் காவிரித் தென்பா னின்றும்
பொங்கியோர் வடபா லேகும் பொலிந்துநந் திருமுன் னாகத்
துங்கவந் நதிக்குக் கீழ்பாற் சுந்தர விசுவ நாதர்
பங்கமர் வல்லி யோடும் பண்புற வமர்வர் காண்டி ௪௧

கேத்திர பாலரென்னக் கிளரொளி வடுகர் யாரு
மேத்துநந் துருத்தி வைப்பிற் கிகலிலா வழலோன் றிக்கில்
வாய்த்தினி தமரா நிற்பர் மருவுமிந் நவ்மாங் காட்சி
மாய்த்துவல் வினையைத் தீர்க்கு மறையவ வுணர்தி யின்னும் ௪௨

விச்சுவநாதர் வேறு விளக்கஞ்சார் துருத்தி வேத
வச்சுவ நாத ராய யாம்வேறென் றகத்துட் கொள்ளேன்
மெச்சுவ தாய சீர்நந் துருத்தியே மேவு கென்று
நச்சுவ மான மில்லா நம்பிரா னருளிச் செய்ய ௪௩

மறையவ னங்கு மேவும் வலியிலா திளைத்தே னென்ன
முறையி னோர் பொய்கை தோற்றி முழுகென் றுமறைந்தானையன்
குறையிலா னதனுண் மூழ்கிக் குளிர்ந்தகா வேரி யாற்றுத்
துறையின்வந் தெழுந்தான் வானோர் தூமலர் மாரி பெய்தார் ௪௪

எழுந்தவன் விசுவ நாத ரம்மையோ டிருக்கக் கண்டான்
செழுந்தழற் றிக்கிற் சென்றான் வயிரவ ரிருப்புந் தேர்ந்தான்
கொழுந்துணர் மலர்க டூவிக் கும்பிட்டுக் கூத்து மாடி
விழுந்துதீ வினைகள் மாய மிகுகளிப் புற்றா னன்றே ௪௫

காசியி னிறக்கு மாறு கருதித்தா னடைந்த வாறு
மாசுற விடையில் வந்தோர் வாளரா மறித்த வாறுந்
தேசுசா றுருத்தி நாதன் றிருவடி நினைத்த வாறும்
பாய்சின விடையா ரங்குப் பரிந்தெதிர் வந்த வாறும் ௪௬

தென்றிசை யிருந்து பொன்னி வடதிசைச் செல்லு மென்று
நன்றிசெய் விசுவ நாதர் நயந்தங்க ணமர்வ ரென்று
மொன்றிய பிறவுங் கூறி யொளிரொரு பொய்கை தோற்றி
யின்றதின் முழுகு கென்று மறைந்தது மிசைத்தான் யார்க்கும் ௪௭

அன்றுதொட் டகிலத் துள்ளா ரரும்புகழ்க் காசி வைப்பி
னென்றுமிக் கேற்ற மாய திப்பெருந் துருத்தி யென்று
நன்றுளத் துணர்ந்தார் காசி நண்ணுதன் மறந்தார்நாளும்
வென்றிமிக் கோங்குந் தெய்வத் துருத்தியே விழைந்து வாழ்ந்தார் ௪௮

ஓங்குமா தவத்தின் மிக்க வுருத்திர சன்ம னென்பான்
வாங்குசீர்த் தென்பா னின்றும் வடபாற்போம் பொன்னி யாடிப்
பாங்குசேர் விசுவ நாதர் பதமலர் பணிந்து போற்றித்
தேங்குசீர்த் துருத்தி வாழ்நர் திருவடி யடைந்து வாழ்ந்தான் ௪௯

மேதகு துருத்தி யார்விச் சுவநாத ராய வாறு
காதலி னுரைத்தாஞ் சோம சேகரன் கனிவிற் றேடி
யாதரம் பயப்ப மேவி யவிர்குறிப் பதிட்டை செய்து
சாதலின் முத்தி பெற்ற சரித்திர மெடுத்துச் சொல்வாம் ௫0

உஎ வது விசுவநாதப்படலம் முற்றியது.
ஆகப்படலம் உஎக்குத் திருவிருத்தம் ககஎ

---

## உஎ வது, விசுவநாதப்படலம்.

குத்தால மென்னும் திருத்துருத்தித் திருநகரில் மறையவர் குலத்தில் கற்ககோத்திரத்தில் உருத்திரசன்மன் என்பான் ஒருவன் இருந்தனன். அவன் மனைமக்கள் நிரம்பினவன். சிவபிரானையே மெய்ப் பொருளெனத் துணிந்து அப்பெருமான் அடிக்கே வழிபாடு இயற்றும் உறுதி வாய்ந்தவன். சிவவேடமே செம்மையாப் பூண்டவன். சிவனடி யார் எவர்வரினும் அவர்க்கு உண்டி, உடை முதலியன உதவி வழிபாடு செய்பவன். அன்பும், அருளும் அமைந்தவன். அம்மறையவன், ஒரு நாள் இத்திருத்துருத்தியின் பெருமையை நன்கு அறிந்திருந்தும் அய லார் சொல்லவுங்கேளாது காசிப்பதியானது இறக்கமுத்தியை அளிக்கு மெனக்கருதி அதனைச் சார விரும்பினன். அம்மறையவன் அந்நாள் முதல் "எந்நாள் காசித்தலத்தை அடைவோம். எந்நாள் கங்கையைக் கலந்தாடுவோம். எந்நாள் விசுவநாதனைக் கண்டு இறைஞ்சுவோம்" என்று நெடுநாள் மிகுந்த வேட்கை உற்று இருந்தனன்.

இப்படி இருக்குங்காலத்தில் ஒரு நாள் அவ்வுருத்திரசன்மன் காசி யை நோக்கி எழுந்து மனைமக்கள் எல்லாம் விடுத்துத் திருத்துருத்தி இறைவனிடமும் விடைபெற்றுக் கொள்ளாமல் தனது பிறவியைக் கழிக்கும் நாள்வந்த தென்று களித்துக் காவிரியைக்கடந்து பற்பல நாடு நகர், ஆறு எல்லாமும் அகன்று சென்று விந்தமலையை அணுகினன். திருத்துருத்தியில் எழுந்தருளிய சொன்ன வாறறிவார், இத்தலத்தின் பெருமையை அறியாமற் செல்லுகின்ற அம்மறையவனை மீட்டு அதன் பெருமையை அறிவிக்கத் திருவுளங் கொண்டு குண்டோதரனை நோக்கி "அவ்வுருத்திரசன்மன் செல்லும் வழியில் நீ பாம்பாகி அவனை மறித்துக் கொள்வாய்! நாம் ஒரு பாம்பாட்டியாய்ப் பின்னர் வருவோம்" என்று திருவாய் மலர்ந்தருளினர். குண்டோதரன் எம்பெருமானர் கட்டளைப்படியே சென்றுஅவன் செல்லும் வழியில் கண்டோர் யாவரும் அஞ்சும்படி மலைப்பாம்பாகிக் கிடந்தனன். அப்பாம்பைக் கண்ட அவன்

அதற்குப் பயந்து மேற்செல்லாது கைத்தட்டால் ஒட்டியும் அகலாதாக வே இனி என் செய்வோமென்று அதன் தலைப்புறம் போகாமல் வாற்புறஞ் சென்றான். அதுகண்ட அப்பாம்பு அவன்மீது வெகுண்டு சீறிப் படம்விரித்துக் கொண்டு அவன் செல்லும் பக்கத்திலேயே திரும்பியது. புறம் போகாமல் வாற்புறஞ் சென்றான். அப்பாம்பு படம் விரித்துக் கொண்டு சீறி அவன் செல்லும் பக்கமாகவே திரும்பியது. அவன் மற்றொரு பக்கஞ் செல்ல அப்பாம்பும் அவன் பக்கமே திரும்பினது. இவ்வாறு அவன் பலவழியும் முயன்று பார்க்க அவனை அப்பாம்பு விட்டிலது. அருமறையோன் கருடமந்திரத்தில் வல்லவனாதலால் கருடனை அழைக்க அது வந்தும் அப்பாம்பின் உயிர்ப்பால் அக்கருடன் சிறகு இழந்து அம்மறையோன் முன்னர் மயங்கி விழுந்தது. அம் மறையோன் பாம்பின் வலிமையை அறிந்து வியந்து நின்றான். அப் பாம்பின் நெட்டுயிர்ப்பால் கானமும் எரிந்தது. அதிலுள்ள பறவைகள், விலங்குகள், வழிச்செல்வோர் எல்லாம் மயங்கும்படி ஆயிற்று. இது பார்த்த மறையவன் “இங்கு என்னோ? தீங்கு வந்தது” என்று எண்ணி எப்படியாயினும் இவ் அரவை இப்புடை பெயராமற் செய்வேனென்று ஒரு மந்திரத்தை நினைக்க அவ் அரவு அப்பார்ப்பானைச் சூழ்ந்து நின்று உயிர்த்தது. அவன் அதற்கு அச்சமுற்று இது திருத் துருத்திப் பெருமானால் நிகழ்ந்தது” என்று தெளிந்து அப்பெருமானை அஞ்சலித்து ஓலமிட்டு அழைத்தனன். எம்பெருமானார் அன்பால் அழைக்கும் அவ்வோசைக்கு இரங்கிப் பாம்பாட்டிபோல் வேடங் கொண்டு சுரைக்காய்ப் பத்தருள்ள இரட்டைக்குழல் ஒன்று கைக் கொண்டு மறையவன் முன்னர் வந்து நின்றருளினர். பார்ப்பான் “நீ யார் கூறுவென்று வினவப் பாம்பாட்டியார், திருத்துருத்தி ஐயர் கட்டளையால் ஈங்கு வந்தனமென்றார். அவ் அருண் மொழி கேட்ட அளவிலே மறையவன் இஃது நம் நோய்க்கு மருந்தா மெனக் கொண்டு அப்பாம்பாட்டியாரை நோக்கி இந்தப் பாம்பை இவ்விடம் விட்டு அகலச் செய்வையேல் எப்போதும் என் நெஞ்சில் அந்த இறைவர் போல் இருப்பாய்! என்றான். அது கேட்ட எம்பெருமானார் அவ் இசைக் கருவியை வாய் வைத்து ஊதினர். அப்பாம்பு அவர் திருமுன் படமெடுத்து ஆடி ஆடிச் சேர்ந்தது. அச்செயலைக் கண்ட மறையவன் “வந்தவர் இறையவரேயா” மென்று துணிந்து அவரை இறைஞ்சினன். எம்பெருமானார் அவ்வடிவத்தை மாற்றி மணவாளக் கோலத்துடன் எதிர்நின்றருளினர்.

குறளனுகிய குண்டோதரனும் பழய வடிவம் எடுத்தனன். இது கண்ட மறையவன் "எல்லாம் எம்பெருமானுர் திருவிளையாட"லென்று அப் பெருமானை வணங்கி வீழ்ந்து "வள்ளலாகிய சென்னவாறறி வார் எழுக" வென்று திருவாய்மலர, எழுந்து கைகுவித்து நின்ருன். அவனை நோக்கி அன்பனே! நீ காசித்தலத்தைச்சார விரும்பினுய்! ஆனல் திருத்துருத்தித்தலத்தின் சிறந்தது வேறென்று இல்லை. இதன் பெருமையை அறிவிக்கும் பொருட்டே யாம் இவ்வாறு வந்தோம். ஒரு காலம் காசியை நீங்கியும் இருந்தோம். திருத்துருத்தியை யாம் ஒரு கணப்போதேனும் நீங்கி இருந்ததில்லை. ஆதலால் இதை அறிந்து நமது திருத்துருத்தியில் தங்குக. இறுதியில் வீட்டின்பம் எய்துவாய் ! அன்றியும் அந்நகரில் நமதுமுன் கங்கையினும் சிறந்த காவிரி நதி தென் பாகத்தினின்று வடபால் ஓடும். அதற்குக் கீழ்பாகத்தில் விசுவநாதர் தமது இறைவியுடன் இனிது எழுந்தருளி இருப்பார். திருத்துருத்திக்கு அழலோன் திசையில் பைரவர் இருந்தருளுவர். இப்புதிய காட்சி தீவினைகள் அனைத்தையும் அகற்றும். "அவ்விசுவநாதரும் நாமும் வேறு" என்று கொள்ளற்க ! இப்போதே "திருத்துருத்தியைச்சார்க" என்று எம்பெருமானுர் அருள "அம்மறையவன் இங்கிருந்து அங்குச் செல்லுதற்கு இயலாதவனுக இருக்கிறேனே" என்று விண்ணப்பஞ் செய்தனன். ஆங்கு ஒரு பொய்கையைத் தோற்றி அதன்கண் மூழ்க வென்று இறைவனுர் மறைந்தருளினர். அவ்வாறே அம்மறையவன் அதன்கண் மூழ்கித் திருத்துருத்திக்காவிரி ஆற்றுத் துறையில் எழுந்து தேவர் பூமாரி பொழிய விசுவநாதர் அகன்றகண்ணம்மையாருடன் எழுந்தருளி இருக்கும் அரிய காட்சியையும், வைரவநாதர் வண்மையையும் கண் குளிரக் கண்டு கும்பிட்டுக்கூத்துமாடிக் களிப்புற்று, நிகழ்ந்தனயாவும் அந்நகரிலுள்ளார் அனைவருக்குங்கூறிக் காவிரி மூழ்கி விசுவநாதரை வழிபட்டுச் சொன்னவாறறிவார் திருவடி நீழலைச் சேர்ந்தின்புற்ருன்.

உஎ-வது, விசுவநாதப் படலம் முற்றியது.

---

## ௨அ-வது, சோமசேகாலிங்கப்படலம்

மின்னிய மாமறை யோர்பலர் சூழ விளங்கு துருத்தியிடை
மன்னிய செஞ்சடை யாரடி யின்னும் வழுத்தி யரும்பேறு
துன்னிய மாதவர் யாரவர் செய்கையைச் சொற்றி யெனமனைவி
பன்னிய வோர்ந்து தருமசன் மப்பெயர்ப் பண்பின னோதுறுவான் ௧

ஏதமி லாத தவத்தன் கருத்தம னென்னுமோர் மாமுனிவன்
மாதவ னாதியர் காணரும் வள்ளன் மலர்க்கழற் கன்புடையான்
போதம்வி ராமறை யாகம மாதி புராண முணர்ந்த வல்லான்
நீதமை யாக்குணத் தானவன் சேய்சோ மசேகர னென்பவனே ௨

தந்தையி னுங்குண மிக்கவன் பற்பல சாத்திர முந்தெரிந்தா
னந்தையி லாத விபூதி விழிமணி யன்பொடு போற்றிடுவா
னிந்தை யிலாவொரு மார்க்க நடக்கு நியதிய னீளறிவன்
முந்தையு ளாருளு மொப்பிலை யென்ன முதன்மை படைத்தவனே ௩

அன்னவன் றந்தை யடித்துணை போற்றி யமைய வினவிடுவான்
முன்னவன் முத்தொழி லாளருள் யாவன் முயன்றெவன் பத்திபுரிந்
துன்னவன் பந்த மறமெவ னுமை முரைக்கின் வினையகலு
மன்னவன் பாளர் துதிக்க வவனமர் மாத்தல மெத்தலமால் ௪

நீக்கமி லாவுணர் வோயிவை யோதி நிரப்பிடு வாயெனலு
மாக்க லளித்த லிரண்டு மழித்தலு ளாய்விடு மாதலினாற்
போக்கரி தாய முதல்வ னுருத்திரன் பூரணன் மற்றவன்று
னேக்கவ ளாவிய பந்த மனைத்து நொடியு ளொடிபடுமே ௫

மற்றவ னுமை முரைக்குமுன் வெற்புயர் வல்வினை நீறுபடும்
பொற்ற சிறப்பி னவனமர் தானம் புகலி னளவிலையா
லற்றமி லாதவவற்றுள் விசேட மதாயதொன் றேயதுதான்
கற்றவ ரேத்து திருக்கா விரித்தென் கரைக்கணுத் தாலவனம் ௬

அம்பிகை யக்கினி விக்கிர மன்புக ழாதித்தன் மாகாளி
வம்பிய லாத தவத்தெழு வோர்நல் வருணன் சிலைமதவேள்
பம்பிய சீர்ச்சிவ பத்த னுருத்திர சன்மன் பலவுலகத்
தும்பரு ளெண்ணில ராவயிற் போற்றி யுயர்வரம் பெற்றவரே ௭

அத்தல மான்மிய முற்ற வுரைப்பரி தார்க்கு மவணடையா
வுத்தம மார்பது மப்புனன் மூழ்கி யுவந்தோர் குறிநிறுவி
வித்தக மார்தரப் போற்றுதல் செய்யின் விழைந்தன யாவுமுறுங்
கைத்தல நெல்லியி னென்றியொன் ருத கலப்பு முறுமெளிதே ௮

என்றுரை யாட வுவந்தடி போற்றி யெழுந்தன னம்முனிவன்
குன்றுபெயர்த்து வருந்திருப்பொன்னித்தென்கோட் டிடையுற்றழகாய்
நன்று நிலாவுமுத் தாலப் பெருந்தளி நண்ணி நலவளமே
துன்று பதுமப் புனல்குடைந் தாடித் தொழுதுறச் சூழ்ந்தபினர் ௯

ஆயருண் மூல விலிங்கப் பிரானரும் பன்ன வனமுலையா
ணேயருண் மேய மலர்ப்பதம் போற்றி நிலவரு ளம்பிகையைப்
பாயருள் கூர்மண வாளப் படிவப் பரனைப் பணிந்தேத்தித்
தோயருண் மூழ்கு மவன்பது மப்புன றன்னினன் மீளவுமே ௧0

அத்தகு தீர்த்தத் தழற்றிசைப் பாலொளி ராவர ணத்தகத்தே
யுத்தம வாலய மொன்றுபு ரிந்தத னுட்டன் றெருபெயரால்
வித்தக மார்குறி யொன்று நிறீஇமிளிர் மஞ்சன மாதிகளாற்
சுத்தமி குந்துயர் பூசனை யாற்றித் துதித்திட லுற்றனனே ௧௧

சங்கர சம்பு சதாசிவ மால்வரைத் தையலோர் பாலுடையாய்
பொங்கர வாபர ணாபரி பூரண புண்ணிய வாழ்முதலே
செங்க ணளாய நுதலிறை வாமதிச் செஞ்சடை மோலியனே
யங்கண துங்கத் துருத்தியு ளாயடி யேனையு மேன்றுகொளே ௧௨

புற்புத மொப்ப தோர் யாக்கைக் கரண்செய்து புந்தியி லாதுழல்வே
னெற்புத வும்பணி யாய்பணி யாவு மெடுத்தணி யுந்திறலாய்
வற்புத வும்மழு வோய்மலை மங்கைம ணாள குணக்கடலே
யற்புத னேநற் றுருத்தியு ளாயடி யேனையு மேன்றுகொளே ௧௩

என்று துதிக்கு மவனெதி ரக்குறி நின்று மெழுந்தருளிக்
குன்று குழைத்தவன் வேட்ட துரையென முத்தி கொடுத்திடென
நன்று வணங்கின னீந்தன மென்று நவின்றத னுட்புகுதா
வென்று விளங்கு பரனமர்ந் தானதன் மேன்மையை யார்புகல்வார் ௧௪

மூதறி விற்சோ மசேகர மாமுனி முத்தி யுடனடைந்தா
ஞதரத் தோடக் குறிதொழு வார்க ளவாயதெல் லாமடைவார்
மேதக வார்சோ மசேகர நாதர் வரவு விளம்பினமாற்
காதரந் தீர்க்கும் பரதலிங் கேசர் வரவுங் கரைந்திடுவாம். கரு

**உஅ-வது சோமசேகரலிங்கப்படலம் முற்றியது.**

ஆகப்படலம் உஅக்குத் திருவிருத்தம், ககக௨

---

## உஅ-வது, சோமசேகரலிங்கப்படலம்.

**கருத்தமன்** என்னும் முனிவன் ஒருவன் இருந்தனன். அவன் சிவபிரான் திருவடிக்கீழ் நிறைந்த அன்புள்ளவன். வேதாகமங்களை நன்குணர்ந்தவன். அவனுக்குச் சோமசேகரன் என்கிற குணமிக்க புதல்வன் ஒருவன் உண்டு. அவன் தன் தந்தையினும் சிறந்த கல்வி கேள்விகளை யுடையவனுனன். திருநீறு திருக்கண் மணிகளை அன்போடு போற்றத்தக்கவன். நீதியால் ஒருநெறிசெல்லு நியதியுடையவன். இவனுக்கு ஒப்பொருவருமில்லையென்று சொல்லும்படி முதன்மை பூண்டவன். அப்புதல்வன் ஒரு நாள் தன் தந்தையடியை வணங்கி ஐயனே! எவன் மூவருள் முன்னவன்? எவன் அன்பால் துதித்திட மலத்தை மாற்றுவான்? எவன் திருப்பேர் இசைத்தால் எமது வினை ஒழியும்? அவன் எழுந்தருளிய திருத்தலம் யாது? இவற்றை முறையே அருளிச் செய்து என் உணர்வை நிரப்ப வேண்டும். என்று விண்ணப்பஞ் செய்தனன். அது கேட்ட **கருத்தமன்** குழந்தாய்! ஆக்கல், அளித்தல் இரண்டும் 'அழித்தல்' என்னும் ஒன்றில் அடங்கும். ஆதலால் உருத்திரனொருவனே முதல்வன். அவனே எங்கும் நிறைந்தவன். அவன் திருவடியைத் தரிசித்த அளவிலேயே நம்மை அளாவிய பந்த முழுதும் அகன்றொழியும். அவன் திருப்பேர் சொன்னல் சொல்லு முன்னரே மலைபோன்ற செய்வினைகள் யாவும் மாய்ந்தொழியும். ஆனல் அப்பெருமான் எழுந்தருளிய திருத்தலங்கள் அளவில்லனவாம். அவற்றுள் சிறந்தது ஒன்று. அதுதான் காவிரிக்குத் தென்கரையிலுள்ள திருத்துருத்தியாம். அதில் அம்பிகை, அக்கினி, விக்கிரமன், ஆதித்தன், மாகாளி, எழுமுனிவர், வருணன், மதவேள், சிவபத்தன், உருத்திரசன்மன், முதலிய எண்ணில்லாதவர்கள் எய்தற்கரிய வரங்களை எய்தினர். அத்தலப் பெருமை எம்மால் இசைத்தற்கரிது. ஆதலால் அங்குச் சென்று சிறந்த தாமரைத் திருக்குளத்தில் மூழ்கி அவ்விடத்தில் சிவக்

குறி ஒன்று நிறுவி வழிபட்டால் விரும்பின யாவும் பெறலாம். இறுதியில் ஒன்றி ஒன்ருதபேரின்ப வாழ்வையும் எளிதாகப் பெறலாம்.' என்றனன்.

அது கேட்ட சோமசேகரன் தந்தையார் அடியில் வீழ்ந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு காவிரிக்குத் தென் கரையில் வந்து திருத்துருத்தியை அடைந்தனன். ஆங்குள்ள திருக்குளத்தில் மூழ்கி அத்திருக் கோயிலை வலம் வந்து சொன்னவாறறிவாரையும், அரும்பன்னவன முலை யம்மையையும் வணங்கித் துதித்து மணவாள நாதரோடு அம்பிகை அம்மையையும் பணிந்து போற்றி மீட்டும் தாமரைத் தடாகம் சென்று அத்தடாகத்தின் அக்கினித் திசையிலுள்ள ஆவரணத்தில் சிறந்த திருக்கோயிலொன்று எடுத்து அதனுள் தன் பெயரால் சிவக்குறி ஒன்று நிறுவி அத்தடாக நீர் கொண்டு அன்புடன் வழிபட்டுத் துதித்தனன். அத்துதிக்கு மகிழ்ந் தருளிய சிவபிரானுர் அவன்முன் அச்சிவக்குறியில் எழுந்தருளிநின்று அன்பனே! நீ வேட்ட வரம் யாது ? என்றருள, அம்முனிவன் வீடு ஒன்றே யான் வேட்டனன். அது வழங்கியருள வேண்டு மென்று வணங்கினன். எம்பெருமானுரும் அதனைத் தந்தோ மென்று அச்சிவக் குறியில் மறைந்தமர்ந்தருளினர். அச்சிவலிங்கத்தின் பெருமை என் சொல்வோம். அவ்வாறே எம்பெருமானது அருளினுல் சோமசேகரன் வீட்டின்பமேவி இருந்தனன். அச்சிவக் குறியை வணங்குவார் யாவரும் வேண்டியன யாவும் வேண்டிய வாறே எய்துவர்.

**உஅ-வது. சோமசேகரலிங்கப்படலம் முற்றியது.**

---

## உகூ—வது, பரதலிங்கப்படலம்

மாது பாகர் வரத்தெவன் பெற்றனன்
றீது தீர்பர தன்னது தேருமா
ரோது கென்னும் விநமரைக் கோதுவான்
சாது மேய தரும சருமனே க

பரத னென்னும் பனவன் மனையொடு
விரத மாதவர் மேவுந் துருத்தியுள்
வரத நாயகன் வாழ்தளி யெய்தினன்
சரத முத்தி பெறலுளந் தாங்கியே உ

விதும லர்த்தளி மேயவ ஞதியோ
ரெதுகு றிப்பினு மெய்திநன் ரூட்டயர்
பதும தீர்த்தம் விதியிற் படிந்தபின்
முதுபு கழ்த்திரு நீற்றுண் முழுகினுன் ௩

சொன்ன வாறறி வாரைத் துணையரும்
பன்ன மாமுலை யாளை படிதொழாப்
பின்னர் மாமண வாளப் பிரானெடு
மன்ன நேரம் பிகையையும் போற்றியே ௪

வள்ள லார்தந் திருமுன் வலப்புற
மெள்ள லோவு மிலிங்க நிறவிஞ
ஞுள்ள நெக்குரு கும்படி யுத்தரப்
பள்ள வார்புனல் பண்பின்மொண் டாட்டிஞன் ரு

சாந்த நானந் தகைபெறக் கூட்டிஞன்
போந்த வாசப் புதுமலர் சூட்டிஞன்
நீந்த வாது செறியமு தூட்டிஞன்
வீந்த தாக வினைகளை வீட்டிஞன் சூ

இந்த வாறுபன் ஞளவ்வி லிங்கத்தைச்
சந்த மார்தரப் பூசிக்குந் தன்மையான்
பந்த மோவும் படியொரு நாட்டுதி
முந்த வோதலுற் ருன்றிரு முன்னின்றே எ

மதியி ரும்பகை மாறுபு வெவ்வராப்
பதியு நட்பிற் பயிலுமங் தாகினி
நதிய டங்கி யொருபுடை நண்ணுறப்
பொதியும் வண்மை பொலிசடை போற்றியே அ

அளவி லண்ட மனைத்து மொருநொடி
யளவி னீறு படுத்தற் கமைதரு
மள்வி லாற்ற லடுதழ லொற்றைக்க
ணளவின் மேவ் வமைநுதல் போற்றியே சூ

பன்னு கஞ்ச மலரப் பகல்செய்து
மன்னு மாம்பண் மலரவி ராச்செய்து
மின்னுங் கன்ம மெவற்றிற்கு மூலமாய்த்
துன்னுந் தெய்வச் சுடர்விழி போற்றியே ௧௦

எண்ணி லாவுயி ருய்வகை யெண்ணியே
யெண்ணி லாத விரும்பொருண் மாமறை
யெண்ணி லாகம மோதி யியக்கிடு
மெண்ணி லாத வெழிற்செவ்வாய் போற்றியே ௧௧

அன்பி லார்துதி யத்தனை யுங்கொளா
தன்பு ளார்துதி யத்தனை யுங்கொண்டே
யன்பு சாலிசை யாரென்று மல்குற
வன்பு வைத்த வருட்செவி போற்றியே ௧௨

சாற்று கின்றவீ சான முதலிய
போற்று நாமம் புணர்ந்து பல்வன்னமுற்
றூற்றும் பேரரு ளாள்விழி வண்டுறத்
தோற்றுங் கஞ்சச் சுடர்முகம் போற்றியே ௧௩

வான நாடர் வயங்கு மணிமுடித்
தான வேந்தன் சதுமுகன் மாலிவர்க்
கான கூற்ற மடக்கி யருள்செயா
மான மேய மணிக்களம் போற்றியே ௧௪

வலியி ஞுண்மிக்கு வானவர் யாவரும்
பொலியு மாலய மாகிப் பொருப்பினுக்
கொலிகு லாமுத லாய வொருவரை
மெலிய வீங்கு விறற்புயம் போற்றியே ௧௫

தாம ரைத்தலை யான்றலை தாங்கியு
நாம மேவக் கதிர்நகை மாட்டியும்
பாம மாகடன் மீன்கண் பறித்துநற்
றாமர் வாய்ந்தசெங் கைத்தலம் போற்றியே ௧௬

பாடு சால்பிறைப் பண்பினோர் கேழலின்
கோடு கொண்டதல் லானுமை யாண்முலை
யூடு தாக்க யுறுசுவ டேற்றொளிர்
சேடு வாய்ந்த திருநிறம் போற்றியே ௪௭

மேய பற்ப லுயிரும் பல்வீரையு
மாய பற்பல வெற்பு மளவறத்
தோய மேய தொகைப்பல வண்டமு
மேயச் சேருத ரத்தெழில் போற்றியே ௪௮

கூற்ற மாய்த்துக் கொதிக்குஞ் சலந்தர
னாற்றன் மாய்த்தரக் கன்வலி சிந்திமிக்
கேற்றம் வாய்ந்தெம் மிருப்பிட மாகுபு
தோற்றம் வாய்ந்து சுடரடி போற்றியே ௪௯

திருத்தி மேவிய சுந்தர போற்றிமிக்
கருத்தி கூரம்பி காபதி போற்றியுட்
டிருத்தி யெம்மையாள் சேவக போற்றி நூல்
விருத்தி சாலொரு வித்தக போற்றியே ௫0

என்று தோத்திரித் தேத்து மவன்முனை
மன்று நாயக னந்தப் பெருங்குறி
நின்று தோன்றி நினைத்தது கேளென
வென்று மேம்படு வேதிய னோதுவான் ௫௧

இந்த மாக்குறி யென்பெய ராலென்றுஞ்
சந்த மேவித் தழைத்து விளங்கவு
முந்த நோக்கினர் யாருமு ழுத்துயர்
சிந்த வோங்கிச் சிறப்புற்று வாழவும் ௫௨

அடியு னேனன் புறமனை யாளொடு
முடிவி லாநின் பதத்து முயங்கவுந்
தடித ராவரந் தாவென்றிறைஞ் சினு
னெடிவி லாமல னைத்து முதவியே ௫௩

அந்த மாக்குறி யுண்மறைந் தானையன்
பந்த மோவப் பதிந்தரு ளக்குறி
யெந்த நாளும் பரதலிங் கம்மெனுஞ்
சந்த மாரபி தானந் தரித்ததே உ௪

மனையொ டும்பர தன்முத்தி மாண்புற்ற
னனையன் பேரிலிங் கத்தை யறைந்தனந்
துனைய வந்து குறுமுனி சூழ்ந்துதாழ்
வினைய மோதலுற் றுமிகு வேட்கையால் உ௫

உகூ-வது, பரதலிங்கப்படலம் முற்றியது
ஆசப்படலம் உகூக்குத் திருவிருத்தம் ௧௧௫ள

## உகூ—வது, பரதலிங்கப்படலம்

பரதமாமுனிவன் தன்மனைக் கிழத்தியோடு வீட்டின்பம் எய்தலை விரும்பித் திருத்துருத்தியை அடைந்து தாமரைத்திருக்குளத்தில் மூழ்கித் திருநீறு இட்டுச் சொன்னவாறறிவாரையும் அரும்பன்னவன முலை அம்மையையும், மணவாளநாதரோடு அம்பிகையையும் வணங்கித் துதித்து வள்ளலாராகிய சொன்ன வாறறிவார் திருமுன்னுக்கு வலது பாலில் ஒரு சிவக்குறி நிறுவி மனமுருகத்தாமரைத் தடாகத்தின் நன்னீர் கொண்டு ஆட்டிப் புதுமலர் சூட்டி அமுதூட்டித் தன் வினைகளை வீட்டினன்.

இவ்வாறே பன்னாளாக அச்சிவக் குறியை முறைப்படியே வழிபாடு செய்கின்ற காலத்திலே ஒருநாள் அப்பரதமாமுனிவன் சிவபிரான் திருமுன் நின்று தோத்திரங்கள் பல செய்தான். அத்தோத்திரங்களை அங்கமாலையாகச் செய்த அப்பரதமாமுனிவன் முன்னைக எம்பெருமானார் அவ்விலிங்கத்தினின்றுந் தோன்றிப் பரதமுனியே! நினக்கு வேண்டுவன யாவை? கேட்க வென்று திருவாய் மலர்ந்தருளினர். அப்பெருமான் திருமுன்னர்ப் பரதமுனிவன் இச்சிவக்குறி எப்போதும் என் பெயரால் விளங்குதல் வேண்டும். அதைத் தரிசித்த எல்லாருடைய துன்பங்களையுந் தொலைத்தல் வேண்டும். அடியேன் என் மனையாளோடு வீட்டின்ப மெய்தி விளங்குதல் வேண்டும். இவ்வரங்களைத் தவறாமல் தந்தருள்க'' வென்று வணங்கி நின்றான், சிவபிரானார் அம்முனிவன் கேட்டவரங்கள் எல்லாவற்றையும் ஈந்து அச்சிவக்குறியும் பரதலிங்கமென வழங்கலாயிற்று. பரதமுனியும் இல்லறக்கிழத்தியான சுபத்திரையோடு வீட்டின்பம் எய்தி இன்புற்றான்.

உகூ-வது, பரதலிங்கப்படலம் முற்றியது

## ௩0-வது அகத்தியர்பூசைப்படலம்

ஔவிய முற்று மறத்துயர்த்து மான்ற பரமன் புராணக்கேள்வி
செவ்விய புண்ணிய மென்றுளத்துத்தேர்ந்த விதமரை மங்கைபோற்றிக்
கௌவிய பல்வள மார் துருத்திக் கண்ணினும் போற்றினர் யாவரென்ன
வெவ்விய தீவினை வேரறுக்கு மெய்ம்மைத் தருமசன் மன்புகல்வான் ௧

சந்தனங் குங்குமங் காகதுண்டந் தான்றி பலாவில வங்கம் வேங்கை
கொந்தவிழ் தேமலர்ப் பிண்டிவெட்சி குரவ மராமரங் கோங்குதேக்கு
நந்தலி லாண்விள வார்செருந்தி நமைஞெமை யோமைய மைமுன்னுன
வந்தமி லாத தருக்கண் மல்கி யண்ட மளாவும் பொதியவெற்பில் ௨

எங்க டவப்பயன் முற்றுமாறு மேமூல குந்தமி ழேறு மாறுந்
துங்க முனிவரர் சூழுமாறுந் தொக்க வமர ருவக்குமாறு
மங்க ணவனிமுற் றுய்யுமாறு மான்ற தவக்கொழுந் தோங்கு மாறுந்
திங்கள் முடிப்பரன் றுளுளத்துத் தேர்ந்தொரு கும்பமுனிவன்வைகும்

அந்த முனிவ னடிகள்போற்றி யற்புத மாரவன் சீடரெல்லாம்
பந்த வினைகண் முழுதொழியப் பாற்றிமெய்ஞ் ஞானங் கொடுக்கவல்ல
தெந்த வளத்தல மஃதுரைத்தால் யாங்க ளங்கெய் திறைஞ்சி வாழ்ந்து
மூந்த நினைத்தது பெற்றுய் வோமம் மொய்யொளி மாத்தலஞ் சொற்றியென்றார்

தேர்தரு சீட ரிதுவினவச் செந்தமிழ் நாறுஞ்செவ் வாய்முனிவ
னேர்தருமுள்ளத் தொருமுகூர்த்த மெண்ணித் துருத்தித் தலந்தெரிந்து
சீர்தரு மேனி மயிர்முகிழ்ப்பச் சென்னி மிசைக்கை குவியக்கண்ணீர்
வார்தரு மாறெழுந் தாடிப்பாடி வணங்கி யிருந்திது கூறலுற்றான்

நல்லகுணம்பொலிசீடர்காண்மெய்ஞ்ஞானந்தருதலமொன்றுகண்டேன்
வல்ல பிரானங்கு வைகுநாளும் வண்பது மப்புன லென்றென்றுண்டு
சொல்ல வினியவுத் தாலமொன்று தொக்குநிழல்செயும் வானநாடர்
புல்ல வருந்தவ மாற்றுவாரப் பொற்றலம் போலிலை யெத்தலத்தும் ௬

மன்னுந் திருக்கயி லாயவெற்பின் மான்மழு வேந்தி யுமையாள்கேட்கப்
பன்னும் பனிநெடு மால்வரைப்பால் பன்னிய மன்ற லெடுத்துரைக்க
வின்னு மொருகாற் கடிமணஞ்செ யென்றலுமேல்வரு கற்பத்தென்றான்
மின்னு மணியிழை யாள்புலந்து விளித்தன டோழியர் தம்மையட ௭

அதுதெரிந் தென்சொ லவமதித்தா யாதலி னாவுரு வாதியென்று
விதுவணி செஞ்சடை யானுரைப்ப மெல்லிய லஞ்சி வணங்கியேத்தி
யீதுபிழை யுள்ளங்கொ ளாதியென்னவீங்குறை நின்னைப் பதிட்டைசெய்யான்
மதுமலர்க் கூந்தன் மனைவியொடும் வண்புன னாட்டு மறையோனாவான்

அறியு மொருபசு வாய்ச்சரித்தி யாமு மொருவிடை யாய்ச்சரிப்போஞ்
செறியுஞ் சிலநாள் கழிந்தபின்றைத் தென்றிரு வாவடு தண்டுறைப்பான்
முறியும் பசுவி னுருவமப்பான் முன்னு மறையோ னியற்றும் யாகத்
தெறியுங் கதிரோர் புதல்வியாதி யாம்வந்து பின்னர் மணத்துமென்றான்

ஆரரு ளன்னையவ் வாறொராவா யற்புதத் தோரமூந் தூர்வணங்கிக்
கூரருண் மேவுகோ ழம்பம்போற்றிக் கோதக லும்பிப் பிலவனத்திற்
பேரரு ளானை வடவனத்துப் பிஞ்ஞக னோடு பணிந்தபர்நாட்
டேரரு ளாலவ் வுருவ நீத்துச் சென்று மறையோன் புதல்வியானாள் ௧௦

மறையவர் தங்குலச் செல்வியானாள் வண்புனற் காவிரி யாற்றுநாப்ப
ணிறைதிருக் கோயின்ம ணலாற்செய்து நிகழ்சிவ பூசையேழ்நாளியற்ற
முறையினெட்டாநா ளதுபலநாண் முயன்றமை யாலய மாயிற்றாங்குக்
கறையி லருட்குறி யும்பொலியக் கண்டு துருத்தியென் றோதிவாழ்ந்தாள்

பின்னருத் தாலத் தருவினீழற் பேணுங் கயிலைக் கணங்களோடு
நன்னர் மணவாளக் கோலங்கொண்டு நாயகன் வந்து மணந்தமர்ந்தா
னன்னமண வாளக் கோலங்காணு மாசை யெமக்கின்னு நீங்கிற்றில்லை
யுன்ன நன்றாமத் தலத்துநாமு முறுதுமுடன்போது மென்றெழுந்தான்

கற்றுயர் சீடர் பலரும்போதக் காமரு செந்தமி ழாளிபோந்து
பற்றுய ராவணம் பாற்றவல்ல பரமர் துருத்தி தலம்புகுந்து
முற்றுயர் வார்குடை யும்பதும மூரிப் புனலிற் படிந்தெழுந்து
கொற்றுயர் மாற்றும்வெண் ணீறணிந்து கோலம் பொலிகண் மணிபுனைந்து ௧௩

வென்றி தருமைந் தெழுத்து மெண்ணி விருப்பினட் டாங்கபஞ் சாங்கமாக
முன்றி லணைந்து திருமுன்றாழ்ந்து முத்தமி ழாளிமா ணாக்கரொடு
நன்றிசெய்மூல விலிங்கமுன்போய் நன்கு பணிந்தரும் பன்னகொங்கை
மின்றிகழ் நுண்ணிடை யாளைப்போற்றி மேவி யுத்தால தருவணங்கி ௧௪

அந்தத் தருநிழற் பீடமேய வண்ணலை யம்பிகை யோடுமேத்திச்
சந்தப் பரத னருச்சித்தேத்துஞ் சாமியைத் தாழ்ந்துத் தரத்துச்சென்று
சிந்தக் கொடுவினை மூன்புசோம சேகரன்போற்று குறியைப்போற்றி
நந்தத்தென் பாலின் வெளியணைந்து நாடுஞ் சகாயக் களிற்றைவாழ்த்தி

உருத்திர சன்மனுக் காகவங்க ணுற்றமர் விச்சுவ நாதற்போற்றி
வருத்து பிணித்துயர் முற்றுநீங்க வருணன்சிவ பத்தன் பூசைசெய்த
வருத்த நிகர்சடை யாரைப்போற்றி யன்பிற்றன் னோடு மெழுமுனிவர்
திருத்த மருவப்பணிந்துபோற்றுஞ் சிவலிங்கங் கண்டுதெரிசித்தேத்தி

நெருப்பும் வளவனுமன்பிற்போற்று நின்மலலிங்கந் தொழுது வாழ்த்தி
விருப்பு மலிய வளவன்றென்பான் மேவ நிறுத்து குறியைக்கண்டு
கருப்பு வில்லாளனுருவம்பொடித்த காளிப்பி ரானடி கண்டுதாழ்ந்து
சுருப்பு விராவொரு நாரியான்செய் சுந்தர லிங்கந் தொழுதெழுந்து கஎ

பார்புகழ் தேரழுந்தூர்ப்பிரானைப் பண்புயர் கோ ழும்ப வாழ்க்கையானை
யேர்மலி கோமுத்தி யாரமுதை யின்ப வடவனத் தொப்பிலானை
யார்தரு மன்பிற் பணிந்துபோற்றியாயிரஞ் செங்கதிரோன்புரம்போய்ச்
சோர்தரு மாறில் விருப்பம்பொங்கத் தூயபிரானைத் தொழுதுபோந்து

ஓங்குமார்க் கண்ட புரம்புகுந்தாங் கொப்பில் கைலாய நாதற்போற்றி
வீங்கு குறுமுனைப் பாவிசார்ந்து வேதக்கொழுந்தைத் துதித்திறைஞ்சித்
தீங்குதவிர் வில்லிய னல்லூரைச் சேர்ந்து சிவபெரு மானையேத்தி
யாங்குநின் றேகி யெதிர்கொள்பாடி யணைந்து பரமனைக் கொண்டுவாழ்ந்து

திருமணஞ் சேரியிற் றம்பிரானைச் சிந்தை களிப்பத் தொழுதிறைஞ்சிப்
பொருவரும் வேள்விக் குடிபுகுந்துபொன்னவிர் செஞ்சடை யாரைப் போற்றிக்
கிருது புரிமறை யோர்கள் சூழுங் கேத்திரபால புரத்தைச்சேர்ந்து
வெருவில் வடுகர் பதம்பணிந்து மீளவு மூல விலிங்கமுன்போய் உ0

மேயவுத் தால நிழற்பிரானே வேண்டுநர் வேண்டுவ தீயவல்லா
யாயவினிக்கு மருமருந்தே யற்புத சிற்பர ஞானமூர்த்தி
காய முதற்ப் லுலகும்ய்யக் காயுங் கடுவுண் கருணையாளா
வேயபலர்க்குமெய்ஞ் ஞானமீதி யென்று துதித்துத் தொழுதுநின்றான்

நேய மிருந்தமா ணாக்கரோடு நிற்குங் குறுமுனி யுள்ளுவப்ப
வாய பிரான்வெளிப் பட்டுஞான மளித்தன மாலென் றுரைத்தகன்றான்
பாய முனிவர னுண்மைஞானப் பயன்பெறு பற்பல சீடரொடுஞ்
சேய பொதிய வரையடைந்து சிந்தித்துப் போற்றி யிருந்து வாழ்ந்தான்

குறுமுனி மாணவர் கூட்டத்தோடுங் கூடித் தலப்பிர தக்கணஞ்செய்
தறுதியி லான்சொன்ன வாறறியு மண்ணலை யேத்தி யவாயதுற்றுக்
கறுவில் பொதிய வரையடைந்த காதையுரைத்தன மாயவன்சீர்
பெறுவள மேவு புகழ்த்துருத்தி பேணி யமர்திறம் பேசலுற்றும் ௨௩

௩0-வது அகத்தியர்பூசைப்படலம் முற்றியது.

ஆகப்படலம் ௩0-க்குத் திருவிருத்தம் ௧௧௮0.

---

## ௩0-வது அகத்தியர்பூசைப்படலம்.

சந்தன முதலிய மரச்செறிவுகள் சூழ்ந்த பொதியமலையில் செய்தவம் சிறக்கவும், தமிழ்செழிக்கவும் தவஞ்செய்கின்ற அகத்திய மாமுனிவரை அவர் மாணாக்கர் அனைவரும் வணங்கி, "அடிகேள்! அடியேங்களுக்குப் பந்த வினைகளைப்பாற்றி மெய்ஞ்ஞானம் தரத்தகுந்த திருத்தலம் ஒன்று உரைத்தருள வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனர். அம்முனிவர் சிறிதுபோது சிந்தித்துத் திருத்துருத்தியைத் தெரிந்து மிகமகிழ்ச்சியோடு, "மைந்தர்காள்! மெய்யறிவைக் கொடுக்கத்தக்க தலமொன்று கண்டோம். அதில் நம் இறைவன் எப்போதும் எழுந்தருளி உள்ளான், அதில் தாமரைத்தடாகம் என்று ஒன்று உண்டு. சொல்லவொண்ணாத உத்தாலமரம் ஒன்று ஆங்கு நிழல் செய்யாநிற்கும். அமரர் பலரும் அரியதவத்தை ஆங்குச் செய்வார். அந்தத் தலம்போல் பிறிதொருதலம் எவ்விடத்துங் காணேம். ஒரு காலத்தில் கைலைக்கிறைவனார் உமையவள் அறிய, மேருவில் நிகழ்ந்த தமது திருமணத்தை எடுத்துரைத்தருளினர். அது கேட்ட அம்மையார் இன்னொரு முறை என்னை மணஞ்செய்தருள்க" வென்றுவிண்ணப்பஞ்செய்தனள். அப்பெருமானார் "அது அடுத்த கற்பத்தில் ஆகுக" வென்று அருளினர். அதற்கு அம்மையார் அவரோடு ஊடித் தோழியர்களைப் பொழில் விளையாட விளித்துச் சென்றனள். அதுதெரிந்து எம்பெருமானார் "பெண்ணே! நீ என் வாய்மொழி மறுத்தமையால் பசு உருவாகுக" வென்றருள, அதற்கு அம்மையார் அஞ்சி வணங்கி, "இப்பிழையைத் திருவுள்ளத்துக் கொள்ளாதொழிதல் வேண்டு" மென்று விண்ணப்பஞ் செய்ய, எம்பெருமானார் "பெண்

ணே! இங்கு உள்ள உன்னைப் பிரதிட்டை செய்யாதவனாகிய ஒருவன் மனைவியோடும் சோழநாட்டிலே மறையவர் குலத்தில் பிறந்துள்ளான். நீ பசுவாகச் செல்லுக. யாமும் ஒருவிடையாகி வருவோம். சிலநாள் சென்ற பின்னர், திருவாவடுதுறையில் உன் பசு உருவம் மாறும், அதன் பின்னர் அம்மறையோன் செய்யும் வேள்வியில் ஒரு மகளாய் வருவாய். அப்போது யாம் அங்குவந்து மணஞ்செய்வோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். அதுகேட்ட இறைவியார் பிரியா விடை பெற்று அவர் அருளியபடியே ஒரு பசு உருவாகித் தேரழுந்தூர், திருக்கோழம்பம், திருவாலங்காடு ஆகிய பல தலங்களை வழிபட்டுத் திருவாவடுதுறையில் கோவுருவம் நீத்துப்போய் அம்மறையவன் புதல்வியானாள். அப்புதல்வியான அம்பிகை காவிரியாற்றின் நடுவில் திருக்கோயில் மணலாற் செய்து ஏழுநாள் சிவபூஜை இயற்றினாள். எட்டாம் நாளில் இறையவன் அருளால் அது ஒரு பெருங் கல்லாலயமாயிற்று. அதில் சிவக்குறியும் விளங்கக் கண்டு மகிழ்ந்து அதன்பேர் திருத்துருத்தியெனப் புகன்றனள். பின்னர் உத்தால நிழல் பெறக் கைலைக்கணங்களோடு எம்பெருமானார் இனிய மணவாளக்கோலம் கொண்டு சென்று அம்பிகையைத் திருமணஞ் செய்தருளினர். அம்மணவாளக்கோலங் காணும் ஆசையோ இன்னும் எனக்கு அடங்கிற்றில்லை. ஆதலால் அத்தலத்திற்கு நாமும் செல்லுவோம் எம்முடன் வருவீர்களாக'' என்று அகத்திய முனிவர் மாணவர்களை அழைத்து வந்தனர். அம்மாணவர்களுடன் முனிவர் பெரியார் அத்தலத்தில் தாமரைத் தடாகத்திலே மூழ்கித் திருநீறு திருக்கண்மணிபூண்டு திருவைந்தெழுத்தெண்ணிச் சொன்னவாறறிவார் திருமுன் சென்று ஐந்துறுப்பும், எட்டுறுப்பும் தோய வணங்கி, அரும்பன்ன வனமுலையம்மை, மணவாளநாதன், அம்பிகை, பாதநாதன், சோமசேகரன், துணைவந்த பிள்ளை, விசுவநாதன், வருணநாதன், எழுமுனிவர் லிங்கம், காளீசன், வேளீசன், முதலியதிருத்துருத்தியிலுள்ள எல்லாத் தெய்வத் திருவுருவங்களையும், தேரழுந்தூர், திருக்கோழம்பம், திருவாவடுதுறை, திருவாலங்காடு, கதிராமங்கலம் முதலிய தலங்களிலுள்ள எம்பெருமானார் திருவடிவங்களையும் போற்றி வணங்கி, க்ஷேத்திரபால புரத்திற்குச் சென்று வடுகர் திருவடிவத்தையும் வணங்கி, மீட்டுந்திருத்துருத்தியில் சொன்னவாறறிவார் திருமுன் வந்து துதிபுகன்றனர். அப்போது எம்பெருமான் அவர் முன் எழுந்தருளி ''உமக்கு மெய்ஞ்ஞானம் அளித்தோம்'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினன். அம்மெய்ஞ்ஞானம்

பெறுவித்த அகத்தியர் தமது மாணவர்களோடு பொதிய மலையிற் சென்று எம்பெருமானைச் சிந்தித்து இருந்தனர்.

௩0-வது, அகத்தியர்பூசைப்படலம் முற்றியது.

---

## ௩க-வது ஆதிகேசவப்படலம்

ஞால மீன்றவள் சுரபியாய்ப் பயின்றவந் நாட்கோ
பால ளுகிய மாயவன் செயலெவன் பகரென்
றேல வார்குழல் விநமரை விருப்பமிக் கிறைஞ்சச்
சீல மெய்த்தவத் தருமசன் மன்னிது செப்பும் க

வண்டு பாண்செய மதுப்பொழி வனத்துழாய்ப் படலை
விண்டு கோப்புரந் திடுமுரு நீத்தபின் மேக
மண்டு சோலைசூழ் துருத்திவா ழுண்ணனல்கல் யாணங்
கண்டு கண்களி கூர்தர வின்பத்துட் கலந்தான் உ

அளவி லானந்த மடைவதற் கேதுவா யமைந்த
களவி லாதகல் யாணமித் தலத்திடைக் கண்டோம்
பிளவி லாமணக் கோலமு மிவ்வயிற் பிறங்கும்
வளவில் சாலுமித் தலம்விடன் மூடரு மதியார் ௩

எந்த வண்ணநா மித்தலம் விடுதலென் றெண்ணிச்
சந்த மாமறு மார்பினுன் றம்பிரா னருளா
னந்த நாமுமிங் குறைவதே யென்றுள நயந்தா
னந்த மாதியிலப் பெருமா னெதிரடைந்தான் ௪

ஐய யானுமிங் கமர்வது குறித்துளே னருணீ
செய்ய வேண்டுமென் றிரந்தனன் சிவபிரான் றேர்ந்து
வைய முண்டவ நினைப்பிரி யோமெவ்வைப் பினுமிம்
மெய்ய வாவுமாத் தலத்தினே பிரிதலே விழைவோம் ரு

மேய சத்தியா யூர்தியாய் வெய்யகூர்ங் கணையாய்ப்
பாய மற்றுமாய்ப் பொலிநினைப் பிரிவது பண்போ
தேய மேத்துமித் தலத்தெமைக் காளிதாழ் தேத்திற்
காய தென்றிசை யண்மையி னமருக வென்றான் ௬

துருத்தி நாயக னருளிய சொல்லுவந் தேற்று
விருத்தி யாருயி ரளிப்பவன் றென் றிசை மேவி
யருத்தி கூர்தரக் காளிபூ சித்ததேத் தணித்தே
திருத்தி சான்றதென் பாலொரு சினகரஞ் செய்வான் எ

அண்டர் தச்சனை நினைத்தன னவன்டைந் துளத்துக்
கொண்ட தென்னென வினவினன் குறித்தமை யுணர்ந்து
மண்டலம்புகழ் கோபுரம் விமானமா மதின்மு
னெண்ட யங்குமற் றுள்ளவு மிலகுறச் செய்தான் அ

கண்ட மாயவன் மிகமகிழ்ந் தத்தளி கலந்து
கொண்ட காதலி னமர்ந்தனன் குறித்தவித் தலத்துத்
தொண்டர் சூழுமா றளிக்கெலா முதலமர் துணிபா
லண்டர் யாவரு மாதிகே சவனென வறைந்தார் கூ

துருத்தி யெல்லைநூல் குரோசமைந் தாலெனச் சொல்லு
மருத்தி கூரநாற் புறத்தினு மாலயங் கொண்டு
விருத்தி மேவ வாழ் விண்டுபல் வடிவத்து முந்தித்
திருத்தி மேவவாங் கமர்ந்ததித் தெய்வவிக் கிரகம் க0

மாய னிங்ஙனங் கோயில் கொண் டமர்ந்தது மதித்துச்
சாயன் மங்கைய ரிருவருஞ் சார்ந்தினி தமர்ந்தார்
பாய மாவிறல் விடுவச்சே னனுஞ்சிறைப் பறவை
மேய வேந்தனு மற்றுளோர் களும்விழைந் தமர்ந்தார் கக

ஆதி கேசவ னிங்ஙன மமருதல் குறித்துச்
சோதி மாமுடி யிந்திரன் முதலியோர் தொழுதார்
காதி யாரையும் வருத்திடுங் கடுந்தொழி லவுண
ரேதி யென்பது கையெடா தச்சமுற் றிரிந்தார் கஉ

பரவு வேலைசூழ் வையத்து வாழ்பவர் பலரும்
விரவு பேரரு ளாதிகே சவனடி மேவி
யுரவு சேர்பல பணிசெய்து மொழிவறத் துதித்துங்
கரவு தீர்தர விழைந்தன கைக்கொடு களிப்பார் கங

அந்த நாளினிற் காசிப கோத்திரத் தமைந்தா
னெந்த நாளுமிப் பிறவியே பகையென வெய்த்தான்
சந்த நூல்பல கற்றவ னற்குணஞ் சமைந்தா
னுந்த யாரும்புண் டரீகனென் றிசைக்கும்பே ருள்ளான் கச

ஆதி யாச்சிர மத்துநின் றகன்றிடா வன்னா
னாதி வெம்பவப் பிணிப்பறக் களைதரல் கருதி
யோதி வானர்தா ழாதிகே சவன்முன முற்று
னீதி மாதவஞ் செயற்கிட மிதுவென நினைந்தான் கரு

கூடபு லத்தொரு தீர்த்த முண்டாக்கினன் கோமுற்
படநு லத்தமை புனலெலா மதினுறப் பண்ணி
யிடமு றப்பொலி யதற்கொரு தன்பெய ரிட்டுத்
திடமு றப்புகுந் தாடினன் றிருத்து ழாய்பறித்தான் கசு

அந்த நீர்முகந் தாதிகேச வன்முடிக் காட்டிச்
சந்த மார்தரு தண்டுழாய் முதலிய சூட்டி
யுந்த நேர்சுவைப் பொங்கன்முற் பல்லவு மூட்டி
நந்த வன்புமுன் னின்றபஃ றேத்திர நவில்வான் கஎ

உலக ளந்ததோர் தாமரை மற்றதை யுண்டு
நிலவ மேயதோர் தாமரை நிறைந்தது தோன்றக்
குலவி விண்டதோர் தாமரை யென்னிலேர் குலவி
யலகி லாதநின் பெருமையை யாவரே யளப்பார் கஅ

கையுந் தாமரை கண்களுந் தாமரை யழகு
செய்யு முந்தியுந் தாமரை சேர்ந்தவர்க் கின்பம்
பெய்யுந் தாள்களுந் தாமரை யெனிலன்பு பெற்று
னையுந் தொண்டர்கள் கண்களே நல்லளி யாமால் கசு

திரைசெ யுங்கருங் கடலைமற் றதன்றெளி புனலுண்
டிரைசெ யுங்கரு முகிலையிந் திரநீல மணியை
விரைசெ யுங்கருங் குவளையை யுருகுவார் விழிகண்
டுரைசெய் நின்னுருக் காணிலென் படுவரோ வுரவோர் உ0

ஓதி மூலமென் றேவிடுங் கரிமுன முற்றாய்
நீதி மாதவர் நிதியமே நிசாசர ரேறே
சோதி மாமக டுணைமுலை புணர்துழாய்த் தோளா
யாதி கேசவ வடியனே னின்னடி யடைந்தேன். உக

என்று தோத்திர மியம்பியோ கிருந்தன னெருசார்
நன்று பற்பல நாட்செல நாரண னருள்கூர்ந்
தொன்று காட்சிதந் துரைத்திநீ விழைந்த தென்றுரைப்ப
வன்று தாழ்ந்துநின் னடிச்சேவை தருதியென் றறைந்தான். உஉ

துருத்தி யென்னுமிம் மாத்தலத் தெல்லையைச் சூழ்ந்து
விருந்தி மேயகா விரிநறு நீர்விழைந் தாடி
யருத்தி கூர்பரன் றிருமணக் கோலங்கண் டன்பு
பொருத்தி யாட்கொளு மூலலிங்கத் தையும் போற்றி. உங

பின்ன ரிங்குறி னெண்ணிய காரியம் பெறுவை
நன்ன ரேகென வருளுபு நாரணன் மறைந்தான்
முன்ன ரேயிஃ துளுற்றில மெனமுயன் றெழுந்து
மன்னர் முன்னவ னுயவன் மாத்தலஞ் சூழ்ந்து உச

மற்று மாயவன் சொல்லிய வண்ணமே முடித்துப்
பற்று மேவுற வடைந்தனன் மாலருள் பரப்பப்
பெற்று மான்மிய விரசையின் முழுகுபு பிணிதுன்
பற்று நித்திய சூரியாய் வைகுந்தத் தமர்ந்தான். உரு

ஆதி கேசவ னுலயப் பணிவிழைந் தவரு
மோதி மற்றவன் பெரும்புக ழுறத்துதிப் பவரு
நீதி மேவிய நிருபராய் நெடுநிலம் வாழ்ந்து
பூதி வாய்ந்து வைகுந்தமே வுற்றனர் பொலிவார். உசு

தண்மை யார்செழுந் துருத்தியு ளாதிகே சவமா
லுண்மை யார்வா வோதின மோங்குமார்க் கண்டன்
பெண்மை யாரொரு பாதியான் பெருங்குறி நிறுவி
யண்மை யார்தரப் பூசித்த திறமெடுத் தறைவாம். உஎ

௩௧வது-ஆதிகேசவப் படலம் முற்றியது.

ஆகப் படலம் ௩௧க்குத் திருவிருத்தம் ௧௨௦எ.

## ௩க வது ஆதிகேசவப்படலம்.

அம்பிகையான உமையம்மையார் கோவுருவானபோது கோபால ரூகிய திருமால் அவ்வடிவத்தை மாற்றிவிட்டு எம்பெருமாஞர் திருமணக் கோலங்கண்டு களிப்புற இன்பத்தில் மூழ்கி இருந்த பின்னர், அத்திருமாலானவர், சொன்னவாறறிவாரது திருமணக் கோலங் காணத் தகுந்த இத்தலத்தை யாரும் பிரிதற்கு அரிதாதலால் இதில் தங்குவதே நலமெனக்கருதினர். அது சமயம் சொன்னவாறறிவார் அவர்முன் தோன்றியருளினர். திருமாலானவர் "யான் இங்குத்தங்க உன்னினேன் எனக்கருள்க" வென்று விண்ணப்பஞ்செய்யச் சிவபெருமாஞர் "மாலோய்! எக்காலமும் நின்னை விட்டுப் பிரியோம்! ஆதலால் காளி வழிபட்ட திருக்கோயிலுக்குத் தென்பால் அண்மையாக அமருக," வென்றருளினர். எம்பெருமானுக்குச் சத்தியாயும், ஊர்தியாயும் பாணமாயும் விட்டுப் பிரியாத திருமாலானவர், அப்போதே அமரர் தச்சனை அழைத்துக் "காளீசர்திருக் கோயிலுக்குத் தென்பாகமாகக் கோபுரம், விமானம், சுற்றுமதில் முதலியன விளங்க ஒரு திருக் கோயில் அமைத்திடுக" வென்று கட்டளையிட அக்கட்டளையைத் தலையில் தாங்கி அமரர்தச்சனும் அவரருளிய படியே திருக்கோயில் சமைத்திடக்கண்ட திருமாலானவர், மிகமகிழ்ச்சி கொண்டு அதில் அமர்ந்தருளினர். இத்திருத்துருத்தியில் காத்தலுக்கு ஆதியாக அமர்ந்தபடியால் "ஆதிகேசவன்" என்னும் திருப்பேர்பெற்றனர். ஐந்துகுரோசம் அளவுடைய திருத்துருத்தியில் பல திருக்கோயில்கள் சூழ அவைகளுக்கு முதலாக அமர்ந்த இத் திருக்கோயிலில் திருமால் வடிவங்களிற் சிறந்த 'ஆதிகேசவ'னென்னும் விக்கிரகம் அருமை வாய்ந்து அமையப் பெற்றது. அப்பெருமான் திருக்கோயில் கொண்டருள அவருடைய தேவியர் இருவரும், விச்வசேனரும், கருடாழ்வாரும், அவருடன் அமர்ந்தனர். இந்திரன் முதலிய தேவர்கள் எல்லோரும் இறைஞ்சி மகிழ்ந்தனர். தீங்கு செய்யும் அவுணர்கள் நில்லாது அகன்றனர். மக்கள் அனைவரும் அப்பெருமாள் திருவடிவை வழிபட்டும், திருக்கோயில் பணிகள் செய்தும் வேண்டிய வேண்டியவாறே எய்தினர். அக்காலத்தில் காசிபர் கோத்திரத்திற் பிறந்த "புண்டரீகன்" என்பான் ஒருவன் இருந்தனன். அவன் முதலான நிலையில் ஒழுகுவாஞன். கலைகள் யாவுங் கற்றவன். பிறவியே பகையெனத் தெளிந்து நாளும் வருந்துபவன். அப்பகையை அகற்ற எண்ணி ஆதிகேசவப்பெருமான் திருமுன் சென்று இதுவே தவஞ்செய்தற்குத் தகுந்த தலமெனக்கண்டு அப்

பெருமானுக்கு மேல்பாகத்தில் திருக்குளம் ஒன்று உண்டாக்கி அதில் சிறந்த கங்கை முதலான புனித நீரெல்லாம் வரச்செய்து அதற்குப் "புண்டரீகத் தீர்த்த"மெனத் தன்பேர் நிறுவினன். பின்னர் அதில் மூழ்கி அப்புனித நீர்கொண்டு ஆதிகேசவப் பெருமானை நீராட்டித் திருத்துழாய் முதலியன கொண்டு சூட்டிச் சர்க்கரைப்பொங்கல் முதலிய திருத்தளிகை நிரம்பச்செய்து ஊட்டி அப்பெருமான் திருமுன் நின்று துதிகள் செய்து ஆங்கே ஓரிடத்தில் யோகத்தில் அமர்ந்தனன். பல நாட்கள் செல்ல ஆதிகேசவப்பெருமான் அவன்பால் நிரம்ப அருள் செய்து காட்சி தந்தருளி "அன்பனே! நீ விரும்பியது யாது? அது வழங்குவோம்" என்று திருவாய் மலர்ந்தருளினன். அது கேட்ட அப் புண்டரீகன் அப்பெருமானை வணங்கி, "அடியேனுக்குத் திருவடிப் பேறு ஒன்றேவேண்டும். அதனைத் தந்தருள்க" வென்று விண்ணப் பஞ் செய்தனன். அப்பெருமானும் தொண்டனை நோக்கி, "அன்பனே! இத்துருத்தி எல்லையை வலஞ் செய்து இதில் எழுந்தருளிய மணவாள நாதர் காட்சியைப் பெற்றுச் சொன்னவாறறிவார் திருவடியைத் துதித்து இங்குவந்தால் நீ எண்ணியது இனிது பெறுவாய்" என்று மறைந்தருளினர். அது கேட்ட புண்டரீகன், அப்பெருமான் அருள் விடையைப்பெற்று அவர் அருளிய படியே செய்து வைகுந்தத்தில் அமர்ந்தனன். ஆதிகேசவப் பெருமான் திருக்கோயில் திருப்பணி செய்தவர், அரசராய்ப் பெருஞ்செல்வம் பெற்று நெடுநாள் வாழ்ந்து "வைகுந்தம்" அடைவார்.

௩க-வது ஆதிகேசவப் படலமுற்றியது.

---

## ௩உ-வது மார்க்கண்டேசப் படலம்

அல்லியங் குழலாள் செய்ய வணங்கமர் நிறத்தோன் மேன்மை
புல்லிய துருத்தி மேய வரவினைப் பொருந்தத் தேர்ந்தே
னல்லிய லரனை யின்னும் பூசனை நவிற்றி னார்யார்
சொல்லிய வேண்டு மென்றாள் சொல்லுவான் றரும சன்மன். க

வேதமுற் றுணர்ந்த தூயன் மிருகண்டு வென்னுந் தெய்வ
மாதவன் குணம ரூத்து வதியொடு கூடி வாழ்நா
ளோதரும் புகழ்சான் முக்க ணுத்தம னருளி னாலே
போதமார்க் கண்ட னென்னும் புதல்வனைப் பயந்தா னன்றே. உ

ஒரு மகன் பதினுரண்டி னெழியுமென் றுணர்ந்த வந்தப்
பெருமகன் மனேவியோடு பேதுற்றுச் சாம்ப லோர்ந்து
திருமக னென்னை யென்று வினயவர் சொலத்தெ ளிந்து
பொருமகன் வலிசால் கூற்றைப் புராந்தகன் பூசைப் பேற்றால். ௩

பொருக்கெனக் கடப்பே னென்று புகன்றன னெழுந்து சென்று
திருக்கிளர் தலங்க ளெல்லா வற்றுள்ளுஞ் சிறந்த தாய
தருக்கவொண் சடையார் மேவு மணிகெழு காசி யென்று
வெருக்கடி யுளத்தி னுங்கு மேயினன் பூசை செய்தான். ௪

பூசனை புரியுங் காலைப் புண்ணிய விசுவ னுதர்
மாசறு மவன்முன் றேன்றி மார்க்கண்ட முனிவா விந்தப்
பேசருங் காசி வைப்பி னதிகமாய்ப் பிறங்குந் தான
நேசவண் டுருத்தி யொன்றே நிகழுயர் பெதனு லென்னில். ரு

அவனியின் மாந்தர் பூசை யாற்றிய தலங்க ளுள்ளுந்
திவண் முடியரசர் பூசை செய்தலம் விசேட மாகு
முவமையி லவற்றி னுள்ளு முத்தம விசேட மாகுந்
தவமிகு முனிவர் பல்லோர் தாழ்ந்துபூ சித்த தானம். ௬

அத்தகு தலங்க ளுள்ளு மரக்கர்பூ சித்த தான
முத்தம மவற்றி னுள்ளு மவுணர்பூ சித்த தோரில்
வித்தக விசேட மந்தத் தலத்துளும் விசேட மாகுஞ்
சுத்தமிக் குயர்வா னுடர் தொழுதுபூ சித்த தானம். ௭

அன்ன நற்ற லங்க ளுள்ளு மிந்திர னருச்சித் தேத்து
நன்னர்வண் டலம்வி சேட நயக்குமத் தலங்க ளுள்ளும்
பன்னவொண் பதுமப் பூவோன் பணிந்தமாத் தலம்வி சேட
முன்னரு மவற்றி னுள்ளு முராரிதாழ் தலம்வி சேடம். ௮

ஆயவத் தலங்க ளுள்ளு மலங்குநங் கணங்கள் போற்ற
மேயநற் றலம்வி சேடம் விளங்குமற் றவற்றி னுள்ளுந்
தூயநங் குமரன் பூசை தொடங்கிய தலம்வி சேடம்
பாயமற் றவற்றி னுள்ளும் பகருரும்வி சேட மாகும். ௯

நம்முடை மூத்த மைந்த னயந்துபூ சித்த தான
மம்மமற் றவற்றி னுள்ளு மாயிரம் விசேட மாகுங்
கொம்மைவெம் முலைநஞ் சத்தி குறிக்கொடு போற்றுந் தானஞ்
செம்மைசெ யணையாள் பூசை செய்தபஃ றலங்க ளுள்ளும். ௰

தளிமுத லெவையு நாமே சமைத்துநாந் தோற்ற மேய
வளிகெழு துருத்தி மேலா மத்தகு தானம் போல
வளிவழங் குலகி னில்லை மார்க்கண்ட வாங்குச் சென்று
தெளிதரத் தொழுதி யென்று செப்பினர் மறைந்து போனார். ௧௧

மறைமுடிப் பொருளா யுள்ளார் மறைதலு முணர்மார்க் கண்ட
னிறைபுகழ்த் துருத்தி மேவி நெடும்புனற் பொன்னி யாடிக்
குறையறு பதும தீர்த்தங் குடைந்துத்தா லகத்தைப் போற்றிக்
கறைகடி மூல லிங்கங் கைதொழு தின்புற் றானே. ௧௨

அம்மையை மணந்த கோலத் தையனைப் பனவர் செல்வக்
கொம்மைவெம் முலையி னாளைக் குறிக்கொடு தொழுது போற்றி
மும்மைமா வுலகஞ் சூழம் முழுத்தளி வளியோன் றிக்கிற்
செம்மையங் கதிரோ னூர்க்குத் திருந்துமீ சானத் திக்கில். ௧௩

கடிகையோ ரிரண்டி லொன்றிற் காணுமோர் தேத்திற் சென்று
மடிவிலோர் தளியுண் டாக்கி மகாலிங்க மொன்று தாபித்
தொடிவருங் கயிலை யேயா யொளிர்தலப் பெருமை தேர்ந்து
தடிதலி லாக்கை லாய நாதரென் றொருபேர் சாத்தி. ௧௪

மன்னுதன் பெயர்வி ளங்க மார்க்கண்ட தீர்த்த மென்று
பன்னுமோர் புனலுண் டாக்கிப் பகர் தீர்த்த மெலாந்தா பித்துத்
துன்னுமற் றதனுண் மூழ்கித் தூயவை யணைத்துங் கொண்டு
மின்னுமஞ் சடைக்கை லாய நாதரை விராய்ப்பூ சிப்பான். ௧௫

சத்திதன் னுருவ மாங்குச் சார்தரப் பதிட்டை செய்து
சுத்தியிற் பூசை யாற்றித் தொழுதெழுந் துண்மை தேர்ந்தே
யெத்திசை யிடத்துள் ளாரு மிட்டகா மியங்க ளெல்லாஞ்
சித்திசெய் கண்ணு ளென்று தெளிதர வொருபே ரிட்டான். ௧௬

ஓருமருப் புடையா ளுதி யும்பர்யா ரையுந்தா பித்துத்
திருகற வுவந்து பூசை செயாவரு மனைய ஞேர்நாண்
முருகலர் தொடைக்கை லாய நாதர்தம் முன்னர் நின்று
பொருவரு மன்பு பொங்கத் துதிபல புகல லுற்ருன். கஎ

சங்கர சயம்பு போற்றி தற்பரா னந்த போற்றி
பொங்கர வணிந்தாய் போற்றி புண்ணியப் பொருளே போற்றி
வெங்கர வொழிந்தா ருள்ள மிளிர்தழற் பிழம்பே போற்றி
யங்கர வரிவின் மேரு வாக்கிய வண்ணல் போற்றி. கஅ

கனன்மழுத் தரித்தாய் போற்றி காமனைக் கடிந்தாய் போற்றி
மினல்விரி சடிலமோலி வெண்டிங்கள் பரித்தாய் போற்றி
யுனல்செய்யு மவர்த முள்ளத் துள்ளொளி யானுய் போற்றி
யனல்செயுஞ் சினவொள்வேற்கூற்றடக்குமாற்றடைந்தேன்போற்றி. கசு

கண்ணினுண் மணியே போற்றி கயிலாய நாத போற்றி
யெண்ணினுண் மருவு நெய்போ லெங்குமாம் பொருளே போற்றி
பண்ணி னுளொலியே போற்றி பரானந்த வாழ்வே போற்றி
மண்ணினு ளோரைந் தாய வள்ளலே போற்றி போற்றி. உ0

ஒருமலர் சூட்டி யன்பா லுனைப்புகழ்ந் தெடுப்பார் கற்பத்
தொருமலர் முடிமேற் சூடி யும்பர்நா ட்டரசு செய்ய
வொருமலர் மிசைய மர்ந்தெவ் வுலகமும் படைக்க வுந்தி
யொருமலர் தாங்கி யெல்லா மோம்பிட வருள்வாய் போற்றி. உக

குடங்கைநீ ராட்டு வார்தங் குருமுடி மிசையே யெல்லா
மடங்குநீ ரேற்றிப் பார்க்கு மருளுரு வண்ணல் போற்றி
மடங்கரு மிருகண் கொண்டு நோக்குவார் தமக்கு மற்றுந்
திடங்கொளு நுதற்க ணென்று சேர்த்திடுஞ் செல்வ போற்றி. உஉ

தொக்கபட் டாடை நல்கிற் றேலுடை கொடுப்பாய் போற்றி
தக்கபொன் மணிப்பூ ணல்கிற் சர்ப்பப்பூ ணருள்வாய் போற்றி
மிக்கவன் போங்கத் தத்தம் பெருமதி விழைந்தீ வார்க்குத்
திக்கவாந் தலைமேற் கொள்ளச் சிறுமதி யளிப்பாய் போற்றி. உங

என்றுரைநந் துருகி யேத்தி யிரங்குமார்க் கண்டன் காணக்
குன்றுவெஞ் சிலைபாக் கொண்ட கொண்டலங் கண்டன் றோன்றி
நன்றுநின் பூசை யுள்ள நயந்தனம் யாது மஞ்சேல்
கன்றுவெங் காலன் சீற்றங் கடந்து நீயுய்த லுண்மை. உ௪

துருத்திமா நகரத்தெல்லைச் சுற்றுமைங் குரோச மாகு
மருத்தி கூர்ந்ததனு ளெம்மை யருச்சித்துத் துதித்கு மாற்றால்
வருத்தியா ருயிர்கொள் காலன் வரல்செயா னிவ்வெல் லைக்குள்
விருத்திகூர் கடவூர் மேவின் வெளிப்பட வருவன் கண்டாய். உ௫

ஆவயி னவனை யாரு மறிதரக் கொலல்கு றித்தா
மேவரு மினைய தான மிளிர்பெருந் துருத்தி யேனுந்
தாவருங் கதிர்பூசித்த தலமவன் பெயர்பெற் றுற்போற்
பூவரு நின்பேர் பூண்டு பொலிதரு மெந்த ஞான்றும். உ௬

ஒருகயி லாயநாத ரெனும்பெய ரொடுநின் பேரு
மருவுற மார்க்கண் டேச ரென்னுமோர் பெயரும் வாய்ந்து
பொருவறப் பொலிவோ நம்மைப் போற்றுவோர் வெங்காலற்கு
வெருவுறா போக மெல்லாம் விழைந்தவா துய்த்து வாழ்வார். உ௭

இனியநின் றீர்த்த மாட லெற்றைக்கும் விசேட மேனுந்
தனிவிருச் சிகநற் றிங்கள் சார்தரு பானு வாரம்
புனிதமார் விசேட மாசி மகமவற் றுள்ளும் பொற்பார்
நனிவிசே டமதா மெல்லா நண்ணுவா ராடு வோரே. உ௮

என்றுரைத்தருளி யைய னிலிங்கத்துண் மறைந்தானாக
வன்றுமார்க் கண்டனேகி யளிகெழு கடவூர் புக்குக்
குன்றுவெஞ் சிலையாற் போற்றிக் கொடுங்காலற் சாடப்பெற்று
வென்று மேம்படு துருத்தி மீட்டும்வந் திறைஞ்சி வாழ்ந்தான். உ௯

மார்க்கண்ட புரத்தி யாரு மறலியி னேனும் புக்கு
மார்க்கண்ட தீர்த்த மாடிவானவர் சிங்க மென்னு
மார்க்கண்டே சுரரைப் போற்றி வருபவர் நாளு மந்த
மார்க்கண்டன் போல வாழ்ந்து வளச்சிவ லோகஞ்சார்வார் ௩0

பொலிதரு புகழ்மார்க் கண்ட புரத்தீசர் வரவுசொற்று
மொலிகெழு பரத னென்பா னுவந்துவிண் ணப்பஞ் செய்ய
மலிதரு வானோர் யாரும் வரங்கொளத் தோன்றித் தீமை
நலிதரு மெதிர் கொள்பாடிப் பிரான்புகழ் நவில லுற்றும். ௩௧

**மார்க்கண்டேசப் படலம் முற்றியது.**

ஆகப்படலம் ௩௨க்குத் திருவிருத்தம் ௧௨௩அ

---

## ௩௨-வது, மார்க்கண்டேசப்படலம்.

மிருகண்டு முனிவர் 'மருத்துவதி' என்னும் இல்லாளோடு கூடி வாழ்கின்றகாலத்திலே இறைவனாகிய சிவபிரான் திருவருளினாலே ஒரு புதல்வன் 'மார்க்கண்டன்' எனப் பெற்றனர். 'அம்மார்க்கண்டன் என்பான் பதினாறு ஆண்டு ஒழியுமுன்னர், அவன் தாய் தந்தையர் வருந்துதல் நோக்கி அவர்கள்பால் வந்த வருத்தம் என்னையோ? என்று, கேட்டுத் தெரிந்து காலகாலனாகிய சிவபிரான் வழிபாடு ஒன்று லேயே அவ்வருத்தம் ஒழியுமேயன்றி வேறு எவ்வகையாலும் ஒழியா தென்று துணிந்து அவ் இருமுதுகுரவர்பால் விடைபெற்றுக்கொண்டு தலங்களிற் சிறந்த காசிப்பதியை அடுத்து ஆங்குச் சிவவழிபாடு சிறப்புறச் செய்தனன். அவர் முன் எம்பெருமானார் எழுந்தருளி முனியரசே! "இக்காசியினுஞ் சிறந்த தலம் திருத்துருத்தியாகும். ஏனென்றால் இம்மண்ணுலகில் மக்களால் வழிபட்டதலம் சிறந்தது. அதனினும் அரசர் வழிபட்டது சிறந்தது. அதனினும் முனிவர் வழி பட்டது சிறந்தது. அதனினும் அரக்கர் வழிபட்டது சிறந்தது. அதனினும் அவுணர் வழிபட்டது சிறந்தது. அதனினும் அமரர் வழிபட்டது சிறந்தது. அதனினும் இந்திரன் வழிபட்டது சிறந்தது. அதனினும் அலரவன் வழிபட்டது சிறந்தது. அதனினும் திருமால் வழி பட்டது சிறந்தது. அதனினும் சிவகணங்கள் வழிபட்டது சிறந்தது. அதனினும் முருகன் வழிபட்டது சிறந்தது. அதனினும் மூத்த பிள்ளையார் வழிபட்டது சிறந்தது. அதனினும் ஆயிரம் மடங்கு சிறந்தது, நமது அருள்வடிவாகிய உமையாள் வழிபட்டதலமே. அதனினும் நாமே திருக்கோயில் முதலாகச் சமைத்து அதில் நாமாகவே எழுந்து தோன்றிய இத்திருத்துருத்தி, மிகச்சிறந்தது. இதுபோன்ற தலம் எங்குமில்லை. ஆதலால் அத்தலத்திற் சென்று வழிபாடு செய்க" வென்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர். அவ்வருளிப் பாட்டைக் கேட்ட மார்க்கண்டர், திருத்துருத்தியை அடைந்து தாமரைத்

தடாகத்தில் மூழ்கித் திருநீறு திருக்கண்மணிபூண்டு சொன்னவாறறி வாரையும், மணவாளநாதரையும் பணிந்து வெளிப்போந்து காற்றின் திசையில் கதிராமங்கலத்திற்கு ஈசான பாகத்திலே உள்ளதோரிடத்தில் சிவக்குறி ஒன்று நிறுவினர். அப்பெருமானுக்குக் கைலாயநாதரெனத் திருப்பேர் இட்டனர். ஆங்கே ஒரு திருக்குளம் தொட்டு அதில் கங்கை முதலிய புனிதநீரெல்லாம் நிறுத்தினர். இறைவியின் திரு வடிவமும் இனிதாக நிறுவினர். அப்பெருமாட்டிக்குச் "சித்திசெய் கண்ணாள்" என்னும் திருப்பேர் தந்தனர். மூத்த பிள்ளையார் முத லிய சுற்றுக் கடவுளர் குழாங்களையும் நிறுவி அப்புனிதநீர் கொண்டே நூல் முறைப்படி வழிபாடுசெய்து வருவாராயினர். ஒருநாள், அம் மார்க்கண்ட முனிவர், கைலாயநாதர் திருமுன் நின்று, துதிகள் மிகப் புகன்றனர். மிகத் துதிகள் புகன்று அன்போடு உருகி நிற்கும் அம் முனிவர் முன்னாக, எம்பெருமானாகிய சொன்னவாறறிவார் எழுந் தருளி, "முனிவா! நீ அஞ்சற்க! நின்வழிபாட்டிற்கு மிகவும் மகிழ்ச்சி யுற்றோம்! கூற்றுவனை நீயே வெல்லக்கூடும். இஃது உண்மை. இத் துருத்தியின் எல்லை ஐந்து குரோசம் அளவுடையதாகும் இத னுள் எம்மை வழிபட்டுத் துதித்தமையால் இவ்வெல்லைக்குள் உன்பால் அக்கூற்றுவன் வெளிப்பட்டு வரமாட்டான். நீ கடவூரிற் சென்று வழி படுவையேல் ஆங்கு அவன் வெளிப்பட்டு வருவான். அப்போது அவனை எல்லோரும் அறியக் கொல்லுதற்கு நினைத்துள்ளோம்.

இதுவும் திருத்துருத்தியே ஆனாலும் கதிரவன் பூசித்த தலம் கதிராமங்கலமானாற்போல நின்னாற் பூசிக்கப்பட்ட இத்தலம் "மார்க் கண்டபுரம்" என வழங்கும். யாமும் கைலாயநாதரென்னும் பெய ருடன் "மார்க்கண்டேசர்" எனவும் விளங்குவோம். நின்னாற் செய் யப்பட்ட இத்திருக்குளம் நின்பேரெய்தி எப்போதும் சிறப்புறும். எப்போதும் அக்குளம் சிறப்புற்றாலும் கார்த்திகைத் திங்களில் ஞாயிற் றுக்கிழமையில் அதில் நீராடல் சிறந்தது. அதனினும் மிகச் சிறந்தது மாசி மகத்தில் நீராடலாகும்" என்று திருவாய் மலர்ந்து அச்சிவக் குறியில் மறைந்தருளினர். மார்க்கண்ட முனிவர், எம்பெருமான் அருளியவாறே திருக்கடவூரிற் சென்று இறைவனை வழிபட்டு இயமனை வென்று மீட்டுந் திருத்துருத்தியில் வந்து சொன்னவாறறி வாரைப் பணிந்து வாழ்ந்தனர்.

இந்த மார்க்கண்டபுரத்தில் யாவரும் மறதியாகப் போயாவது அத்திருக்குளத்தில் மூழ்கி மார்க்கண்டேசப் பெருமானையும் பணிந்தால் என்ஞான்றும் மார்க்கண்ட முனிவரைப்போல் வாழ்ந்து பின்னர்ச் சிவனுலகிற் சென்று இன்புறுவர்.

**கூஉ-வது, மார்க்கண்டேசப்படலம் முற்றியது.**

---

## நகூ-வது, எதிர்கொள்பாடிப்படலம்.

அந்த நாட்கடி யணிவி ழாவினுட்
பந்த மோவிய பரதன் சொற்கொளா
முந்த னென்செய்தான் மொழியென் பன்னிக்குச்
சந்தமாச் சொலுந் தரும சன்மனே. க

புனித மாதுலன் புகன்ற விண்ணப்பங்
கனிவி னுட்கொளும் கண்ணு தற்பிரான்
முனிவர் வானவர் மொய்ப்ப வாவயி
னினிய தாயதோ ரிலிங்க மாயினான். உ

எதிரி லாதவ னிலிங்க மாதலு
மெதிரின் மாதவ ரிலேகர் யாவரு
மெதிர்கொ டேமென விசைக்கு மேதுவா
லெதிர்கொள் பாடியென் றியம்பி னாரரோ. ந

தான நாயகன் றச்ச னைக்கொடு
வான மார்மதில் வயங்கு கோபுர
மான பொற்கருக் கிரக மாதியா
வேன வும்பொலிந் திடையச் செய்வித்தான். ச

நறிய பூப்பொலி நல்ல தீர்த்தமொன்
றறிய வாக்கிமற் றதனுண் மூழ்குபு
செறிய யாவையுஞ் சேர்த்துக் கொண்டுநா
னெறிய பூசனை நிரம்பச் செய்தனன். ரு

வெதிர்கொ டோளுமை மேய வாமத்தா
யதிர்கொள் செஞ்சிலம் பலங்கு தாளினைப்
முதிர்கொள் கேள்வியோர் முயங்கு முண்மையா
யெதிர்கொள் பாடியெம் மீச போற்றியே சு

உதிர்த ராதவன் புளுற்று வோர்வினை
பிதிர்த லாயற வருள்பெ ருக்குவோய்
கதிர்கொள் செஞ்சடைக் காள கண்டனே
யெதிர்கொள் பாடியெம் மீச போற்றியே. எ

என்று தோத்திர மியம்ப வக்குறி
நின்று தோன்றி நீநினைத்த யாவையு
மொன்று கென்றத னுட்பு குந்தனன்
கன்று மான்மழுக் கைபெம் மண்ணலே. அ

மிகுக ளிப்புள மேவி யிந்திர
னகுத ளுகத்தை நண்ணி வாழ்ந்தனன்
புகுமு ணர்ச்சியிற் போந்து வானவர்
தகுதி யிற்பணிந் தின்பஞ் சார்ந்தனர் கூ

வேந்த னூர்தரு வெள்ளை யானையும்
போந்து நீர்முகந் தாட்டிப் பூநறுஞ்
சாந்த மாதிய தழுவிப் பூசியா
வேந்து தன்பெய ரிட்டுத் தாழ்ந்ததே க0

அந்தநா ளயி ராவ தேசனென்
றெந்த வானரு மெடுத்துக் கூறினர்
சந்த வாரணந் தானினைத்தமை
முந்த வாய்ப்புற முயங்கி வாழ்ந்ததே. கக

இறைவன் றளிணை யெதிர்கொள் பாடியுண்
முறையி ணண்ணுபு முனிவர் சித்தர்க
ளறைவிச் சாதர ராதி யோர்பலர்
நிறைபப் போற்றுபு நீடு வாழ்ந்தனர். கஉ

இன்னும் பூசனை யெதிர்கொள் பாடியுண்
மன்னு மீசனை மரபி னுற்றியே
துன்னு மின்பமே தோய்ந்து ளார்பலர்
கொன்னு மத்தலங் கூறன் முற்றமோ. கங

மாடுவேண்டினும் வையமுற்று மாள்
பீடு வேண்டினும் பிறங்கு விண்ணமாள்
பாடுவேண்டினும் பாற்றி யாவையும்
வீடு வேண்டினு மாங்குமேவுவார் கச

மானம் வேண்டினும் வையப் பற்றறு
மோனம் வேண்டினும் முழுத்த விண்ணமேற்
றூனம் வேண்டினுந் தவலி லாச்சிவ
ஞானம் வேண்டினு மாங்கு நண்ணுவார் கரு

எதிர்கொள் பாடியெம் மிறைவ னாலயத்
ததிரி யங்களோ டாற்றும் பூசனை
யுதிர்த ரத்தடை யுஞற்று மூர்க்கர்கள்
பிதிர்த லுற்றளற் றழுந்தும் பெற்றியார் கசு

ஏற்ற மிக்கதோ ரெதிர்கொள் பாடியு
ளாற்றன் மிக்கவன் வரவறைந்தனந்
தேற்ற மார்மணஞ் சேரி நாயகன்
போற்ற வாம்புகழ் புகலு வாஞ்சில கஎ

**எதிர்கோள்பாடிப்படலம் முற்றியது.**

ஆகப்படலம் ௩௩க்குத் திருவிருத்தம் கஉருரு.

---

## ௩௩-வது, எதிர்கொள்பாடிப்படலம்.

பரதராகிய மாமனார் எம்பெருமானைத் திருமணக் கோலத்தோடு எதிர்கொண்டு அழைத்த இடத்தில் அப்பரத முனிவர் கேட்டுக் கொண்டபடியே அம் மணவாளநாதர் ஒரு சிவக்குறி வடிவமானார். அன்றுமுதல் அத்தலம் "எதிர்கொள்பாடி" யென வழங்கலாயிற்று. அத்தலத்தில் இந்திரன் தேவதச்சனைக்கொண்டு மதில், கோபுரம், கருக்கிருகம், முதலியன அமையத் திருக்கோயில் ஒன்று மிக அழகாக எடுப்பித்தனன். ஆங்கே ஒரு திருக்குளம் உண்டாக்கி அதில் மூழ்கிப் பூசைக்கு வேண்டும் பொருள்கள் பலவுங் கொண்டு நூல்முறைப்படி எம்பெருமானை வழிபட்டுத் துதிகள் பலவுஞ் சொன்னான். அவன் துதிக்கு மகிழ்ந்தருளிய எம்பெருமானார் அவன்முன் வெளித்தோன்றி

யருளி "அரசே! "நினக்கு வேண்டுவனயாவும் பெறுக" என்று திருவாய் மலர்ந்து அவ்விலிங்கத்துள்ளே மறைந்தருளினர். அவ் இந்திரன் மிகக் களிப்புற்றுத் தனது அமராவதியை அடைந்து வாழ்ந்தனன். வானவர் அனைவரும் அப்பெருமானை வழிபட்டு வாழ்வுபெற்றனர். அங்கு இந்திரன் ஊர்தியாகிய ஐராவதமென்னும் வெள்ளை யானையும் வந்து அப்பெருமானை வழிபட்டுத் தன்பெயரிட்டு வணங்கியது. அதனல் "ஐராவத ஈசன்" என்று அப்பெருமானுக்குத் திருப்பேர் திகழ்வதாயிற்று. இவ்வாறே முனிவர், சித்தர், விச்சாதரர் முதலிய பலரும் வந்து ஐராவத ஈசனை நிரம்பத் துதித்து வாழ்ந்தனர். இன்னும் யார் எது வேண்டினும் எம்பெருமானை இறைஞ்சிப் பெறுவார்கள். எதிர்கொள்பாடியில் எம்பெருமானுக்கு நித்திய நைமித்திகமாகிய சிறப்போடுபூசனைகளைச் செவ்வனே நடத்த ஒட்டாமல் இடையூறு இயற்றுகின்ற மூர்க்கர் நரகிற் சென்று துன்புறுவ ராவர்.

கூகூ-வது, எதிர்கோள் பாடிப்படலம் முற்றியது.

---

## கூச-வது, திருமணஞ்சேரிப்படலம்.

தூயநற் குணத்தான் மிக்க சுபத்திரை செய்யும் விண்ணப்பம்
நேயமிக் கேற்ற பெம்மா னென்செய்தா னிகழ்த்து கென்று
வேயமர் பசுந்தோட் செய்ய வாய்விந மரைவி னுவ
வாயமெய்த் தரும சன்ம னறைகுத லுற்றுன் மன்னே க

நார்கெழு சுபத்தி ரைக்கு நல்வரங் கொடுத்த வாறே
சீர்கெழு கருணை மூர்த்தி திருமணஞ் சேர்ந்த வங்க
ணோர்கெழு குறியொன் றுண னிமையவர் பலரும் நோக்கித்
தார்கெழு மென்பூத் தூவிச் சாலவும் வணங்கி நின்ருர் உ

விதியவன் வியந்து நோக்கி விச்சுவ கன்மற் கூவித்
துதிகருக் கிரக மத்த மண்டபஞ் சுடர்வி மான
மதிதவழ் மதில்செம் பொன்செய் வயங்குகோ புரமுன் யாவும்
பதிதருந் தளிசெய் வித்துத் தீர்த்தமும் பரவக் கண்டு ந

திருமணஞ் சேர்ந்த வங்கட் சிவபிரான் முளைத்த வாற்றுற்
றிருமணஞ் சேரி யென்று திருநகர்க் கொருபே ரிட்டுத்
திருமண வாளநாத னென்றெரு திருப்பே ரந்தத்
திருமணத் தமையுங் கோயிற் றெய்வநா யகனுக்கீந்து ச

மயிலியன் மாதர் சூழ மணததவீ சமர்ந்த வாறே
குயின்மொழி யுமையா ளாங்கோர் கோலங்கொண் டினிது வைக
வெயில் விடு மோலி வானோர் விழிகுளிர்ப் பேற நோக்கிப்
பயில்பெரு வணக்கஞ் செய்தார் பதுமனும் வணங்கி நின்றான் ௫

திருமலர்த் தவிசோன் றெய்வத் தீர்த்தநீர் நனிமொண் டாட்டி
மருமலர் பலவுஞ் சூட்டி வண்சுவை யுணவு மூட்டி
யுருமலர் விளக்கங் கோட்டி யுபசாரம் பலவும் பூட்டி
திருமல ரவர்மு னின்று நெடுந்துதி புகல லுற்றான் ௬

காரண மானாய் போற்றி காரணங் கடந்தாய் போற்றி
யாரண முடியாய் போற்றி யாரண முணராய் போற்றி
வாரண மானாய் போற்றி வாரண முரித்தாய் போற்றி
பூரண முதலே போற்றி பூரண னந்த போற்றி ௭

தருமவெள் விடையாய் போற்றி தண்ணவெம் படையாய் போற்றி
யொருமகள் புடையாய் போற்றி யுலகெலா முடையாய் போற்றி
பருவர லடையாய் போற்றி படுதலை யுடையாய் போற்றி
வெருவுதன் மிடையாய் போற்றி விளங்குசெஞ் சடையாய் போற்றி ௮

வரிசிலை மலையாய் போற்றி வயங்குக மலையாய் போற்றி
பரிவுள மலையாய் போற்றி பாகத்த மலையாய் போற்றி
திரிபுர மலையாய் போற்றி செழுங்கண்டன் மலையாய் போற்றி
யரியிட மலையாய் போற்றி யம்புறு மலையாய் போற்றி ௯

காதல மானாய் போற்றி கலந்தெங்கு மானாய் போற்றி
பரவுமா சடையாய் போற்றி பகருமா சடையாய் போற்றி
யரமதிக் கலையாய் போற்றி யறுபானாற் கலையாய் போற்றி
புரவுசெய் குணத்தாய் போற்றி புயங்கவன் குணத்தாய் போற்றி ௧0

கருமணந் துழலா வாறு கடைக்கணித் தருள்வாய் போற்றி
மருமணக் குயிலாள் பாக மணவாள நாத போற்றி
பெருமண மெவர்க்கு நல்கும் பெரும்பெயர் முதலே போற்றி
திருமணஞ் சேரி மேய சிவபெரு மானே போற்றி ௧௧

எனத்துதி புகலா நிற்கு மிண்டைமா மலரோன் முன்னர்க்
கனத்தினுங் கரிய கண்டக் கண்ணுதற் சாமி தோன்றி
மனத்ததென் னுரைத்தி யென்ன வள்ளலே யித்த லத்தெத்
தினத்தெவர் தெரிசித் தாலுந் திருவெலா நல்கல் வேண்டும் கஉ

அடிபனேற் கன்பு நின்பா லருமலைக் காலும் வேண்டு
முடிவினின் விழவு பூசை முயன்றுறச் சிறப்பிப் போர்தங்
குடியெலாந் தழைத்தல் வேண்டுங் கொள்வர மிவையே யென்றான்
படியுரு தருளிச் செய்து பராபர னிலிங்கத் துற்றான் கங

மலரவ னுவகை விம்ம வைகுதன் னுலகம் புக்கா
னவர்புகழ் மணவா ளப்பே ரண்ணற்கு வளியோன் றிக்கிற்
பலர்புகழ் பரதன் முன்னாட் பதிட்டைசெய் யிலிங்க மொன்று
நலர்புக ழதுகை லாயக் குறியெனு நாமம் பூணும் கச

பணவாள ராப்பூண்யாரும் பகர்கயி லாய நாதர்
மணவாள நாத ரென்றிம் மாட்சியர் தமைச்சே விப்போர்
குணவாள ராகி யன்பிற் குயின்மொழி யுமையைத் தாழ்வோர்
நிணவாள ராய்த்தெம் மாய்த்து நீடுபார் புரந்து வாழ்வார் கரு

பனவற்கு மருக னாகிப் பாவையை வதுவை செய்த
வனகற்கன் புடைய னாகிச் சத்திய வுலகை யண்மி
வனசத்தன் வாழு நாளின் மற்றவற் குரிய தாய
தினகற்பம் வருவ தோர்ந்து திருமணஞ் சேரி புக்கான் கசு

ஆயவக் காலை தன்னி லகிலத்துள் ளுயிர்கள் சாம்ப
மேயபன் மரமும் வெற்பு மிசைகிழக் காக வீழ்ந்து
தாயமென் கொடியும் புல்லுந் தரைத்தலை யூழ்த்தல் வாய்ந்து
தேயவுற் றெழுந்த தம்மா திரைக்கட லார்த்துப் பொங்கி கஎ

மறையவர் குலத்துத் தோன்று மங்கையை வதுவை செய்தா
னிறையவ னமையு மவ்வா றியற்றில னென்று கங்கை
முறைமையிற் சீற்றங் கொண்டு முன்னிவந் தடைத லேய்க்கு
நிறைதிரை சுருட்டு மாழி நீத்தமாங் கெழுந்த தோற்றம் கஅ

சினந்தலைக் கொண்டு மேவுந் தெய்வதக் கங்கை மங்கை
நனந்தலை யுலகங் காண நகுவளை யெறித லேய்ப்ப
வனந்தலை யகன்று நீங்க வகப்படு மனைத்துஞ் சிந்தி
மனந்தலை கவிழப்பறப்பல் வளையெடுத் தெறியு மாலோ ௧௯

ஒருமகள் வதுவை தன்னை யொழித்தாற்ற லுணர்ந்து கங்கைத்
திருமகள் கண்ணீர் சிந்துந் திறமென மூத்தஞ் சிந்தும்
பெருமகள வள்வாட் கண்கள் பிறழ்ந்தெங்கு நோக்கி யாங்குப்
பொருமக ளவளாட் டென்னப் பொங்குபன் மீனந் துள்ளும் ௨0

சிவபரன் வதுவை யாற்றுந் திருத்தகு நாளில் வாக்கு
மவமறு நறுநெய் மிக்குண் டலங்கினை யலங்கா வண்ணந்
தவறுசெய் திடுவே னென்று சாற்றுபு கெடுத்தன் மான
வுவமையின் முனிவ ரோம்பு முறுதழ லவித்த தன்றே ௨௧

திருகிய கங்கை மங்கை சினத்தழல் வெளிப்பட் டாங்குப்
பெருகிய பவளக் காடு பிறங்கியெவ் விடத்துந் தோன்றும்
பொருவற வானிற் பொங்கும் புனலையு நெடுங்கை நீட்டி
யொருவற விளித்தன் மானத் திரையெழீஇ யோதை செய்யும் ௨௨

திருமணஞ் செய்யப் பட்ட சேயிழை தனக்கு முன்னு
ளருமைசெய் தந்தை யாகி யமைந்துளீ ரெனச்சி னந்தாங்
கிருவிசும் பணவி நிற்கு மிகன்மலை யனைத்துஞ் சாய்த்துக்
கருகுத லில்லா தோங்கி யெழுந்தது கணக்கி னீத்தம் ௨௩

இவ்வண்ணந் திரைசெய் நீத்த மெழுந்தணித் தாதலோடுஞ்
செவ்வண்ண மலரோ னையன் றிருவடித் துணைகள் போற்றி
யவ்வண்ணக் கடலீங் கெய்தா வகையருள் செய்தி யென்னக்
கைவ்வண்ண மலர மைத்தான் கண்ணுதற் றம்பி ரானே ௨௪

கையமைத் திடலுமந்தக் கடலொரு தேத்துத் தங்கிற்
றையவவ் விடத்தை யின்னுங் கடறங்கு குடியென் றுய்ந்தோ
ரெய்யநன் கெடுத்து ரைப்பா ரெறிதிரைக் கடலச் சுற்று
மொய்யடங் கலுநீத் தாங்கோர் சிற்றுரு முயங்கிற் றன்றே ௨௫

சிற்றுரு வமைந்த வாரி திருமணஞ் சேரி மேய
கற்றையஞ் சடிலத் தையன் கமலநாண் மலர்த்தாள் போற்ற
வுற்றதென் னுரைத்தி யென்று னுனக்கு நான் மாலே யாதல்
பெற்றிட வேண்டு மைய பேசுவ துண்டா லின்னும் உ௬

தவாதநின் னுணை யால்யான் றங்கிய தேத்து யாரு
மவாவியேத் தெடுக்க நீயோ ரருட்குறி யாதல் வேண்டு
முவாவுரி மேனி போர்த்த வும்பர்நா யகவோர் முக்கட்
சிவாவிவை தருதி யென்னத் திருவருள் புரிந்தானையன் உ௭

வாரியோர் மாலே யாகி மணஞ்சேரிப் புறத்துச் சூழ்ந்த
தாரிய னற்றை நாடொட் டங்கட றங்கி டத்தோர்
சீரிய விலிங்க மானன் றேவர்பூ மாரி பெய்து
தூரிய முழங்கி யாங்குத் தொழுதருள் பெற்று வாழ்ந்தார் உ௮

வருகடன் மாலே யிட்டார் மணவாள நாத ரென்று
பொருவறத் துதித்துப் போற்றி விதிதன துலகம் புக்கா
ளொருவரு மாலே யாய வாரியோர் தீர்த்த மாகி
யிருநிலத் தாடு வாருக் கிரும்பயன் கொடுத்து மன்னும் உ௯

செறிபல வளமும் பொங்குந் திருமணஞ் சேரி மேன்மை
யறிதரச் சிறிது சொற்று மம்பிகை கருத்து வாய்ப்ப
வெறிபகை மழுவோ னுரு மியைவேள்விக் குடியின் மேன்மை
முறிதலில் பலவா மேனு மொழிகுதுஞ் சிலதொகுத்தே ௩௰

௩௪-வது திருமணஞ்சேரிப்படலம் முற்றியது.

ஆகப்படலம் ௩௪க்குத் திருவிருத்தம் ௧௨அரு.

---

## ௩௪-வது திருமணஞ்சேரிப்படலம்.

சொன்னவாறறிபவராகிய சிவபிரானர் சுபத்திரைக்கு வரங்கொடுத்த படியே திருமணஞ் செய்த அந்தக் கிருகத்தில் சிவலிங்க வடிவாய்த் தோன்றியருளினர். அக்கோலத்தை இமையவர் எல்லோரும் கண் குளிரக் கண்டுகளித்து வழிபட்டு நின்றார். பிரமன் வியந்து விசுவகன் மனே விரும்பி அழைத்து, ஆங்கே அப்பெருமானுக்கு மண்டபம்,

கோபுரம், கருப்பக்கிருகம் முதலிய அமையத் திருக்கோயில் ஒன்று அமைப்பித்தும், திருக்குளம் ஒன்று உண்டாக்கியும் திருமணஞ் செய்த இடத்தில் சிவபிரான் தோன்றி யருளினமையால் அத்தலத்திற்கு "திருமணஞ்சேரி" எனப் பெயரிட்டும் அதில் எழுந்தருளிய சிவபெருமானுக்கு "மணவாளநாதன்" என்று திருப்பெயர் தந்தும் வணங்கினன். எம்பெருமாட்டியாகிய அம்பிகை, திருமணத்தவசில் இருந்தபடியாகத் திருமணக்கோலங்கொண்டு வீற்றிருந்தருள அத்தேவர் முதலியோர் கண்குளிரக்கண்டு மகிழ்ந்து வணக்கஞ் செய்தனர். அலரவனும் அன்புடன் வணங்கினன். பின்பு அவ்வலரவன் தேவதீர்த்தமாகிய அத்திருக்குளத்தின் நன்னீர்கொண்டு ஆட்டிப் பூக்களைச்சூட்டி உணவு ஊட்டி வழிபாடு பலவுஞ் செய்து துதிப்பானாயினன். அவ்வாறு துதித்து நின்ற அலரவனுக்கு முன்னாகச் சிவபெருமான் அச்சிவக்குறியினின்றும் தோன்றியருளி, "அலரோனே! உனது எண்ணம் யாது? உரைக்க" வென்று கூறியருள, அலரவனுனவன் "எம்பெருமானீர்! இத்தலத்திலே உம்மை யாவர் தரிசித்தாலும் அவர்களுக்குச் செல்வமுற்றும் நல்கியருளவேண்டும். அடியேனுக்கு உம்மிடத்தில் அகலாத அன்புவேண்டும். உமக்குத் திருவிழா, நாட்பூஜை முதலியவற்றைச் சிறப்புடன் நடத்துவோர் குடிகள் செழிப்புற வேண்டும்" என்று கேட்டனன். எம்பெருமான் அவ்வாறே எல்லா வரமும் தந்தருளி அந்தச் சிவக்குறியுள் புகுந்து மறைந்தருளினன். மலரவனும் தன் உலகம் போய்ப் புகுந்தனன். அம்மணவாளப் பெருமானுக்கு வாயுத்திசையில் பரதனால் நிறுவப்பட்ட ஒரு இலிங்கமுமுண்டு. அதன்பெயர் கைலாய இலிங்கமெனப்படும். இந்த மணவாளநாதர் கைலாயநாதர் இருவரையும் தரிசிப்போர் அரசராகி இம்மண்ணுலகத்தில் நீடூழி வாழ்வார். பின்னர் ஒருநாள் பிரமன், பிரமகற்பம் வருகின்றதை நினைந்து திருமணஞ்சேரியிற் புகுந்தனன். அக்காலத்து உலகத்துள்ள உயிர்கள் வருந்தவும், மலை, மரம் முதலானவை மேல்கீழாக வீழவும், கொடி முதலியன உதிர்ந்து தேய்ந்துவிடவும் கடலானது பொங்கி எழுந்தது. அதுகண்ட அலரோன் மணவாளநாதனை உன்னி "ஐயனே! இக்கடல் அணுகாதிருக்க அருள்புரியவேண்டும்" என்றனன். எம்பெருமான் அதனை கையமர்த்தருள, அங்கேயே அக்கடல் தங்கியது. அது தங்கிய இடத்தை இன்னும் "கடல்தங்குகுடி" எனக்கூறுவர். அங்கே அக்கடல் ஒரு சிறு வடிவமாயிற்று. அவ்வாறான கடல் பின்னர்த் திருமணஞ்சேரியில் எழுந்தருளிய மணவாள

நாதன் திருவடியைத் துதித்து வணங்க, எம்பெருமான் "நினக்கு வேண்டுவது யாது?" என்றருள, அக்கடல் "உமக்கு நான் மாலையாதல் வேண்டும். இன்னும் யான் தங்கின இடத்தில் நீர் ஒரு சிவக்குறியாதல் வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தது. எம்பெருமானும் அப்படியே அவ்விடத்தில் இலிங்கமாயினன். தேவர் அனைவரும் பூமாரிபொழிந்து வணங்கி வாழ்ந்தனர். திருமணஞ்சேரியில் மணவாளநாதன் அக்கடலை மாலையாகக் கொண்டருள, மாலையாகிய அக்கடலும் ஒரு தீர்த்தமாகி எம்பெருமானை மாண்புறச் சூழ்ந்தது. இன்னும், அது மூழ்குவார்க்கு அரிய நலங்களை அளித்துக்கொண்டு எம்பெருமானைச் சுற்றி நிற்கின்றது.

௩௪-வது திருமணஞ்சேரிப்படலம் முற்றியது.

---

## ௩௫-வது, திருவேள்விக்குடிப்படலம்.

அருளுரு வாகிய வம்பிகை கொள்ள வரங்கொடுத்த
பொருளவன் யாது புரிந்தது தேறப் புகன்றிடுகென்
றிருளறு கூந்தல் விநமரை கேட்க விருந்தவத்தான்
மருளறு வாய்மைத் தருமசன் முன்புகல் வான்மகிழ்ந்தே (௧)

மேவார் புரஞ்செற்ற மேருவி னாயகன் வேள்விமுற்றி
யோவாத மங்கள நானஞ்செய் தானத் துவப்புமிக
மூவா முதன்மை யொருகோச மாக முளைத்தமர்ந்தான்
காவா சவன்முதல் வானவர் யாவருங் கண்டனரே உ

கண்டார் கரந்தலை மேற்குவித் தாரடங் காக்களிப்புக்
கொண்டா ருரோமஞ் சிலிர்த்தார் மிகவுங் குதுகலித்தார்
விண்டார் கவலை யனைத்துஞ்செந் தேன்மழை மேற்பொழியும்
வண்டார் நறுமலர் தூய்நெக் குருகி வணங்கினரே. ௩

தங்கண் மயனை விளித்துப் பொற்கோயில் சமைத்தியெனத்
திங்க ளுரிஞ்சும் விமானம்பொற் கோபுரஞ் செம்பொன்மதி
லங்கட் கருப்ப கிரகமுன் னுகை வறைபலவு
மிங்க ணிதற்கு நிகரிலை யென்ன வியற்றினனே ௪

குணவேள்வி முற்றிய வேதுவின் வேள்விக் குடியெனும் பே
ரணவா வமைய நவின்றூரம் மானரு ளம்பிகையைத்
தணவாது மங்கல நானஞ்செ யேதுவிற் றூமரைப்பூ
மணவாவி கௌதக தீர்த்தமென் றேதி வயக்கினரே ரு

நம்மா னடையக் கௌதக வீச னெனும் பெயரிட்
டம்மா திருமஞ் சனமாதிய நேடிமெய் யன்புமிகச்
செம்மா தவரும் வியப்புறு பூசை சிறப்பிற்செய்து
சும்மா விராம லெதிர்நின்று தோத்திரஞ் சொல்லுவரே. சு

ஏலங்கொண் டார்குழன் மங்கைபங் காவன் றெழுந்தவெய்ய
வாலங்கொண் டாருயிர் போகாது கண்டத் தடக்கியருள்
சீலங்கொண் டாய்முனேச் சூலங்கொண் டாயொரு தேசிகனுங்
கோலங்கொண் டாளுவ தென்றுகொல் வேள்விக் குடியவனே எ

பூதங் கடந்து பொறியுங் கடந்து புலன்முதலாம்
பேதங் கடந்து கலைமுற் கடந்து பிறங்குவிந்து
நாதங் கடந்து பொலியுநின் றூட்க ணயந்தமரக்
கோதங் கடந்தெழ லென்றுகொல் வேள்விக் குடியவனே அ

சற்றம் புயத்தமர் வான்முத லோருந் தகைப்பரிய
சுற்றங் கடிந்து பொருளாசை நீத்துத் துயருடலப்
பற்றங் கறுத்துநின் பாதார விந்தம் பதிந்தமருங்
கொற்றம் படைப்பது மென்றுகொல் வேள்விக் குடியவனே கூ

அன்றங்கொண் டாய்சடை மேற்புவி தேம்பியலைதலற
மின்றங்கொண் டாயொரு பாகா நடனம் விழைந்தியற்ற
மன்றங்கொண் டாய்கொடு மாமதின் மூன்றும் வன்றீக் கதுவக்
குன்றங்கொண் டாயுவந் தேன்றுகொள் வேள்விக் குடியவனே க0

அண்டத் தவுணர் வலியடைந் தானிணை யாதரிப்போ
மண்டத் தவரினைத் தான்மட வார்தம் மணிமுலைமே
லெண்டத் துருது துயில்வோமெஞ்செய்கை யினியதன்றே
கொண்டற்கண் டாவளங் கூர்தரும் வேள்விக் குடியவனே. கக

மால்விடுத் தாய்நின் னடியாரை யாங்கண் மருவலென்றோர்
பால்விடுத் தாய்பனி மால்வரை யீன்ற பசுங்கொடிக்கோர்
கால்விடுத் தாய்நம னாருயிர் மாளக் கனமதிற்கோர்
கோல்விடுத் தாய்வள மார்தரு வேள்விக் குடியவனே கஉ

என்று துதித்து விழிநீர் சொரிய விருகரமுஞ்
சென்று சிரமிசை யேற வுரோமஞ் சிலிர்ப்படையக்
குன்று நெகிழ நெகிழ்ந்துரு காநிற்குங் கோலத்தர்நே
ரன்று கருணைப் பெருமான் வெளிப்பட் டறைகுவனே கங

வாசவ னாதிய வானவர் காளிங்கு மாண்புபெற
நேசம் விராவ நமைப்பூசை செய்த நிகழ்ச்சியினாற்
பேசவொண் ணாவுவப் புற்றோது முள்ளத்துப் பேணியவை
மாசக லப்பெற்று வாழ்வீரென் றோதி மறைந்தனனே கச

பின்னுஞ்சின் னாளங் கமர்ந்தனர் பூசை பிறங்கச் செய்து
மன்னுங் கதிர்முடி வானோர் பரனருண் மாட்சிபெற்றுத்
துன்னுங் கொடிய யவுணர்தம் போரிடைத் தோல்வியுறா
மின்னுந் தமது லகம்புக்கு வாழ்ந்தனர் வீறுபெற்றே கரு

அளிகிளர் வேள்விக் குடிவாழ் பரமனுக் கன்புசெய்வோர்
களிகிள ரிம்மைப் பலபோகந் துய்த்துக் கருணையினா
லொளிகிள ரிந்திர னாதியர் வாழ்வு மொருங்கு பெற்றுத்
தெளிகிளர் சேவடி யொன்றி யொன்றாநிலை சேருவரே கசு

மறுவறு வேள்விக் குடிவாழ் பரசிவன் மான்மியத்தை
யறுதி பெறச்சொற் றிடுவா ரெவரிவ் வகிலத்தில்லை
யுறுதியி னாளுந் தொழுவா ருக்கின்ப முறச்சுரக்குந்
குறுமுனைப் பாலியின் மேன்மையுள் ளுஞ்சில கூறுதுமே. கஎ

ருரு-வது திருவேள்விக்குடிப்படலம் முற்றியது.

ஆகப்படலம் ருரு-க்குத் திருவிருத்தம் கங0உ.

## ௩௫-வது, திருவேள்விக்குடிப்படலம்.

சிவபிரான் திருமண முடிந்த பிறகு மங்களஸ்நானஞ்செய்த அவ்விடத்தில் சிவபிரானுர் ஒரு சிவக்குறி வடிவமாயினுர். அதைக் கண்டு வானவர் அனைவரும் சிரமேற் கைகுவித்து அடங்காத களிப்புற்று மயிர்சிலிர்க்க குதுகலித்தனர். மலர்தூவி நெக்குருகி வணங்கினர்.

பின்னர் அவ்வானவர் தம்முடைய மயனை அழைத்துக் கோபுரம், மதில், கருப்பக்கிருகம் முதலியன அமைய ஒரு திருக்கோயில் சமைத்துத் தருகவென, அவன் அதனை அவ்வாறே இயற்றித் தந்தனன் வானவர் அதுகண்டு வேள்வியை முடித்தபடியால் அத்தலத்திற்குத் " திருவேள்விக்குடி " எனத் திருப்பேரிட்டு, எம்பெருமான் எம்பெருமாட்டியாகிய அம்பிகையைக்கூடி மங்கலஸ்நானஞ் செய்தபடியால் கௌதகதீர்த்தமென்னும் பெயர் தோன்ற ஒரு திருக்குளமாக்கினர். பின்னரும் அவர் அப்பெருமானுக்கு கௌதக ஈசன் எனப் பெயரிட்டு அத்திருக்குளத்தின் நன்னீர் முதலியன கொண்டு சிறப்புறப்பூசித்துத் தோத்திரம் செய்தனர். அவர் முன்னே எம்பெருமானுர் தோன்றியருளி அவர் வேண்டுவன அளித்து மீட்டும் அந்தச் சிவக்குறியில் அமர்ந்தருளினர். வானவர் அனைவரும், சின்னுள் அங்கு அமர்ந்து நம்பெருமானை வழிபட்டு அப்பெருமான் அருளால் அவுணர்களை வென்று தங்கள் உலகம் புகுந்து விளக்கமுற வாழ்ந்து வந்தனர். அதுமுதல் திருவேள்விக்குடியில் எழுந்தருளிய சிவபெருமானுக்கு அன்பு செய்கின்ற பெரியார் அனைவரும், இம்மையில் பல போகம் நுகர்ந்து இந்திரச் செல்வராய் அச்சிவபெருமானுர் திருவடியில் நிலையாகிய பேரின்பவாழ்வைப்பெற்று வாழ்வார் ஆவர்.

௩௫-வது, திருவேள்விக்குடிப் படலம் முற்றியது.

---

## ௩௬-வது, குறுமுளைப்பாலிப்படலம்,

குறுமுனி தொழுத ஞான்று குறுமுளைப் பாலிசென்று
மறுவறுபிரானைப் போற்றி வாழ்ந்தன னென்று சொற்று
யறுதியி லதுதான் யாவ தறையெனும் விநமரைக்குத்
தறுகண்மை தீர்ந்த மேன்மைத் தருமசன் மன்சொல் வானுல் க

வாலிய பரதன் கன்னி மணவினை யாற்று ஞான்று
கோலிய பலவித் திட்டுக் குறுமுளை யாகும் வண்ணம்
பாலிகை யமைத்த தேத்துப் பற்பல முனிவர் கூடி
யாலிகை யாவா னேரு மருட்குறி யொன்று நட்டார் உ

குணமலி முனிவ ரெல்லாங் குறுமுளைப் பாலி யென்றோர்
மணமலி நாம மந்த வளாகக ரெய்தச் சாத்தி
யணவரு முளைப்பா லீச னெனும்பெய ரமலற் கிட்டுத்
தணவருந் தீர்த்த மொன்று தம்பெயர் விளங்க வாற்றி ௩

மற்றதி னுவந்து மூழ்கி மஞ்சன மாதி கொண்டு
கொற்றமிக் கன்பு பொங்கக் குறுமுளைப் பாலி யானைப்
பெற்றமொன் றுகையா நிற்கும் பெருமானைப் பூசை செய்தே
யற்றமின் றாக முன்னின் றருந்துதி புகலலுற்றார் ௪

## வேறு.

கற்பனைக ளத்தனையுங் கடந்தொளிரும் பிரானை
வெற்பனினி தளித்தகொடி மேவொரு பாலானை
யற்புதனை யடியார்க்கே யருள்செயவல் லானைத்
தற்பரனைத் தாழாத தலையென்ன தலையே
சங்கரனைத் தாழாத தலையென்ன தலையே. ரு

அண்டநா யகனுயிர்க ளத்தனையு மடிமை
கொண்டநா யகன்பவளக் கொழுஞ்சடைமேன் மதியத்
துண்டநா யகனெல்லாச் சுரருயிருங் காத்த
கண்டநா யகற்காணுக் கண்ணென்ன கண்ணே
கண்ணுதலையகற்காணுக் கண்ணென்ன கண்ணே சு

ஆழ்வானை யடியர்புரி யன்புளவர் பிறவித்
தாழ்வானை யாதவகை தண்ணளிசெய் தவர்தொம்
போழ்வானை யோங்குகுறு முளைப்பாலி புகுந்து
வாழ்வானை வாழ்த்தாத வாயென்ன வாயே
மாதேவன் றனைவாழ்த்தா வாயென்ன வாயே எ

என்றுதுதி புரிந்துவிழி யிணைகணீ ரிறைப்ப
நன்றுமலர்க் கரங்குவிந்து நகுதலைமே லமைய
நின்றுருகு மவரெதிரே நிலவுமுளைப் பாலி
யொன்றுகரு ணைப்படிவத் தொருவனெதிர் நின்று
னுமையம்மை மணவாள வும்பனெதிர் நின்றுன் அ

வேறு.

மழுவலோன் றோற்றக் கண்டு மாதவர் பணிந்து போற்றி
யுழுவலன் போடு வேட்ட தொருங்குபெற் றுவந்து வாழ்ந்தார்
பழுதிலக் குறியி னுள்ளான் மறைந்தனன் பகவன் மிக்க
செழுநலம் பெறுவா ரந்தச் சிவலிங்கந் தொழுவார் யாரும் கூ

மறுவறு முனிவர் யாரும் வணங்குபு துதித்துப் போற்றக்
குறுமுளைப் பாலி மேய குழகனுர் வரவு சொற்று
மறுதியில் பொன்னித் தீர்த்த மரும்புகழ் பதுமதீர்த்த
முறுநியி னுடிச் சில்லோ ருற்றபே றெடுத்துச் சொல்வாம். க0

ருகூ-வது குறுமுளைப்பாலிப்படலம் முற்றியது.

ஆகப்படலம் ருகூக்குத் திருவிருத்தம் கருகஉ.

---

## ருகூ-வது குறுமுளைப்பாலிப்படலம்

பரதன் மகளாகிய அம்பிகையை எம்பெருமானுன சிவபிரான் திருமணஞ் செய்தருள்கின்ற காலத்தில் முனிவர்கள் நல்ல பல விதைகளை முயன்று வைத்துக் குறுமுளையாகும்படிப் பாலிகை இட்டனர். அவ் இட்ட பக்கத்திலே அவர் சிவக்குறியொன்று நிலையுறச் செய்தனர். அவர்களே அந்த இடத்திற்குக் "குறுமுளைப்பாலி" என்று ஒரு பேரிட்டு, அதில் எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானுக்குக் "குறுமுளைப்பாலீசன்" எனத்திருப்பேர் புனைந்து, ஆங்கே ஒரு திருக்குளமும் தங்கள் பேர் தோன்றத் தோண்டி, அதன் புனிதநீர் முதலியவற்றைக்கொண்டு எப்பெருமானை வழிபட்டு மனம் உருகி நின்று துதிகள் பலசொல்லத் தொடங்கினர். அத்துதிகளை முடித்த அளவிலேயே எம்பெருமானுர் அம்முனிவர் முன் தோன்றியருளி அவர் கேட்டனயாவும் வழங்கி அச்சிவக் குறியின்கண் அமர்ந்தருளி

ஞர். அம்முனிவர் அனைவரும் அக்குறுமுளைப்பாலீசர் திருவருளால் எண்ணிய அனைத்தும் பெற்று இன்புற்று வாழ்ந்தனர்.

குறுமுளைப்பாலிப்படலம் முற்றியது.

———

## நஎ-வது, தீர்த்தச்சிறப்புரைத்தபடலம்.

கார்த்தபூங் குழற்செவ்வாய் விநமரையுட் கனிவெய்தி
யோர்த்தமாத் துருத்திநக ரிருந்தளிசே ரியங்குநதித்
தீர்த்தமோ டிரும்பதும தீர்த்தந்தோய்ந் தவரெவரெவ்
வார்த்தபே றடைந்தார்நன் கறையெனவே தியனுரைப்பான் க

பண்ணுமருந் தவத்துயர்ந்தான் பளகிலாக் குணப்பெரியோன்
கண்ணுமருட் செல்வமுடைக் கௌதமமா முனிமைந்த
னெண்ணுமருங் கலையுணர்ந்தான் சதானந்த னெனும்பெயரான்
விண்ணுமவ னியும்புகழு மேதகுசீர்த் தியன்மாதோ. உ

அனையவன்மெய்ஞ் ஞானமினி தடையவுளங் குறித்தானுய்
வினையமிகு தந்தையடி மேதகவிற் பணிந்தெழுந்து
நனையவித ழியந்தொடையா னற்றருள்சேர் தருஞானந்
துனையவடை தரயாது துணிந்தியற்று வேனென்றான். ந

என்றுரைப்பக் கௌதமமா முனிவரன்ற னுளத்தெண்ணி
நன்றமையுந் திருத்துருத்தி நன்னகரத் தென்பானின்று
மொன்றிவட பாலேகு மொருபொன்னித் திருநதியிற்
றன்றியவீ ரயனத்துந் துதிகெழுமத் துளைந்தாடி ச

திருப்பதும தீர்த்தமுமத் தினத்தாடி மாமேருப்
பொருப்புவளை சொன்னவா றறிபவரைப் போற்றிசெயின்
விருப்பமிகு மெய்ஞ்ஞான மேதகவி னுறுமென்று
னருப்புமுளக் காதலொடுஞ் சதானந்த ணங்கணைந்தான் ரு

புண்ணியவீ ரயனத்தும் பொன்னிநதிப் புனலாடித்
திண்ணியவாழ் வருள்பதும தீர்த்தமுமத் தினத்தாடி
நண்ணியபே ரருட்சொன்ன வாறறிநா யகற்போற்றிக்
கண்ணியமெய்ஞ் ஞானமுளங் கலப்பவுவந் தின்புற்றான் சு

மறைமுழுது மினிதுணர்ந்தான் வச்சனெனு மாமுனிவன்
குறைவிலருட் டந்தையடி குறித்திறைஞ்சி யடியேற்கு
நிறைகடனு மொருமூன்று நிவிர்த்திபுரி தரும்பொருட்டு
முறையினெரு மகட்புணர்ந்து முனிவின்மகற் பெறல்வேண்டும் எ

உண்மைஞா னமுமெளிதி னுற்றவிளங் குதல்வேண்டுந்
தண்மைடா யிதுபெறநான் றவம்யாது புரிவலென
வண்மைசேர் திருத்துருத்தி மாநகரத் தளிக்கெதிரா
யண்மையார் காவிரிநீ ரவிர்பதுமப் பெயர்நறுநீர் அ

இரண்டுமொரு மகரமதி யெழுங்காலங் குறித்தாடி
முரண்டுதபச் சொன்னவா றறியுமுதல் வனைப்போற்றித்
திரண்டுமிளி ரரும்பன்ன வனமுலைத்தே வியைவழுத்திற்
புரண்டுவினை யறவனைத்தும் புணருவைசெல் லுதியென்றான் கூ

தந்தையுரை தலைக்கொண்டு தவாமகர மதிப்பிறப்பி
லந்தைதபு திருத்துருத்தி யடைந்திருதீர்த் தமும்படிந்து
முந்தைமுதல் வனைப்போற்றி முன்னியயா வையும்பெற்றுச்
சிந்தைமகிழ் திளைத்தமர்ந்தான் செழுவச்ச முனிவரனே க0

காமர்புலத் தியமுனிவன் ககோளமுனி வரன்புலக
நாமமுனி வரன்குச்ச நாமமுனி வரன்முதலோர்
தேமருவு பூலோக சிவலோக மெனுந்துருத்தி
யேமமலி நகருற்றாரின்பமுளத் தூற்றெடுப்ப கக

துருத்திநகர் மேயானைச் சொன்னவா றறிவானை
வருத்தியுட லருந்தவஞ்செய் மாதவருட் பொலிவானை
விருத்தியுறத் தொழுதெழுசீர் வித்தகர்முன் னிற்பானை
யருத்திமிக வுத்தாலத் தமர்வானை யடிபணிந்து கஉ

மேடமதிப் பூரணையில் விருச்சிகமா மதிமேன்மை
கூடவரு கதிர்வாரங் குலவுதுலா மதிமுழுதும்
பாடமைகா விரிநீரும் பதுமநீ ரும்படிந்து
மாடமைகேத் திரப்பிரதக் கணஞ்செய்தார் மகிழ்ச்சிமிக கங

தழைபொதுளு முத்தாலத் தருப்பொலியுங் கோயிலுக்கு
விழைதரு தீத்திசையிடத்தும் வெங்கிருதித் திசையிடத்துங்
குழைதருமன் பினிற்கூடிக் குலமுனிவர் தனித்தனியே
பிழைதரலில் சிவலிங்கப் பிரதிட்டை செய்தனரே. கச

மன்னியதீர்த் தமுமாக்கி வழாவிதியிற் குடைந்தெழுந்து
துன்னியபன் மலர்சாந்தந் தூயதிரு மஞ்சனமிக்
குன்னியதீஞ் சுவையமுத முறப்பலவுங் கைக்கொண்டு
பன்னியநூற் படிபூசை பண்ணிமகிழ்ந் தனர்மன்னே கரு

இவ்வாறு பூசைபுரிந் தெம்பெருமா னுங்காங்குச்
செவ்வாறு கொளத்தோன்றிச் சிந்தித்த தருள்புரிய
வெவ்வாறு தவிர்த்துபரு மேதகுபன் முனிவரரு
மவ்வாறு மெய்ஞ்ஞான மடைந்தின்ப முற்றனரே கசூ

முனிவர்நிரு தித்திசையின் முழங்குமழ லோன்றிசையிற்
கனிவரும்பப் பூசித்த சிவலிங்கங் களைக்கண்டு
புனிதமிகு தளியாதி புதுக்குபுபூ சித்திடுவோர்
துனிகெழுதுன் பணைத்துமொரீஇத் தூயவாழ் வடைந்தமர்வார்.

பணிபுரிவார் பொருளளவைப் படிக்கேற்பக் கருங்கல்லா
லணிகுலவு மிட்டிகையா லாகும்வகை பிறிதொன்றாற்
றணிவுபெறத் தளிபுரிந்து தாய்தமையப் பூசித்தாற்
கணிதமிலாப் பயன்பெறுவர் கலப்புறுவர் முத்தியினும் கஅ

பொங்குபுகழ்த் திருத்தியகம் புகுந்திவ்வா றெண்ணில்லார்
தங்குபல்புண் ணியகாலச் சார்புணர்ந்தோ ரிருபுனலு
மங்குதநீர் தரவூழ்கி மகாலிங்கந் தரிசித்து
நங்குதவிர் பயனெல்லா நன்றடைந்து வாழ்ந்தனரால் கசூ

பொன்னிமா நதியகத்தும் புகழ்ப்பதுமப் புனலகத்து
மன்னியா டுபுபயன்பெற் றவரளவை வரம்புடைத்தோ
தன்னிகரி லாப்பதுமத் தடப்புனல்சுந் தரதீர்த்த
மென்றுமொரு பெயர்பெற்ற தினியதுவு மெடுத்துரைப்பாம் உo

௩எ-வது தீர்த்தச் சிறப்புரைத்தபடலம் முற்றியது.

ஆகப்படலம் ௩எ-க்குத் திருவிருத்தம் கஙஙஉ.

———

## கஉ-வது, தீர்த்தச்சிறப்புரைத்தபடலம்.

திருவருட் செல்வம் வாய்ந்த கௌதமமுனிவர் புதல்வரான சதானந்த முனிவரென்பார் ஒருவர் கலைகள் யாவுங் கற்றுணர்ந்து மண்ணுலகமும் விண்ணுலகமும் புகழத்தக்கப் புகழ்வாய்ந்தவரானார். அவர் மெய்ஞ் ஞானம் பெறவேண்டித் தந்தையார் திருவடியில் விழுந்து பணிந்து எழுந்து "எந்தாய்! அடியேன் சிவபரனார் திருவடிப்பேற்றிற்கு உரிய சிவஞானத்தை எளிதில் அடைதற்கு யான் என்ன தவஞ்செய்தல் வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனர். கௌதமர் அதனை நன்கு ஆராய்ந்து, "திருத்துருத்தியென்னும் திருப்பதியில் தென்பாகத் திலிருந்து வடபால் ஓடும் பொன்னி ஆற்றிலும், திருத்துருத்திக்கோயி லுள் உள்ள தாமரைத் தடாகத்திலும் அயனங்கள் இரண்டினும் மூழ்கி, ஆங்கெழுந்தருளிய சொன்னவாறறிவாரைப் போற்றினால், பிள்ளாய்! நீ விரும்பிய பேரறிவான மெய்யறிவு உண்டாகும்" என உரைத்தருளினர். அதுகேட்ட சதானந்தர் அவர் மொழிந்தருளிய படியே திருத்துருத்தியில் வந்து இரண்டு அயனத்தினும் பொன்னி ஆறு, தாமரைத் தடாகம் இவற்றில் மூழ்கி எண்ணிய மெய்ஞ்ஞானம் பெற்றின்புற்றனர்.

வச்சனென்னும் முனிவர் ஒருவர் தமது தந்தை அடியைப் பணிந்து "தந்தாய்! இல்லறத்தார் முடிக்கும் கடன்கள் மூன்றையும் அடியேன் முடித்தற்கு ஒரு இல்லாளைக்கூடி நன்மகனைப் பெறுதல் வேண்டும். பின்னர் உண்மை ஞானமும் எளிதில் உறுதல் வேண் டும். இதற்கு யான் என்ன தவம் இயற்றுதல் வேண்டும். அதனை அடியேனுக்குச் அருளிச் செய்தல் வேண்டுகின்றேன்" என்று விண் ணப்பஞ் செய்தனர். அதற்கு அவர் தந்தையார் தமது புதல்வரை நோக்கிப் "புதல்வா! சோழநாட்டில் திருத்துருத்திச் சொன்னவாறறி வார் திருமுன் ஓடும் காவிரியிலும், அவர் திருக்கோயில் உள்ளிருக்கும் தடாகத்திலும் தைத்திங்கள் பிறப்பில் மூழ்கி அப்பெருமானையும், அப் பெருமான்பால் எழுந்தருளிய அரும்பன்ன வனமுலையம்மையையும் வழிபட்டால் நீ நினைத்த எல்லாமும் எளிதில் எய்தலாம்" என்றருளி னர். அவ்வச்ச முனிவன் மனமிகமகிழ்ந்து தந்தைமொழியைத் தலைமேல் கொண்டு தைத்திங்கள் பிறப்பில் திருத்துருத்தியில் சென்று இரண்டு புனித நீராகிய தீர்த்தங்களிலும் மூழ்கி அங்கெழுந்தருளிய எம்பெரு மானை வணங்கி எண்ணியன எவையும் பெற்று இன்புற்று இருந்தனன்.

புலத்தியன், கஃகோளமுனிவன், புலகன், குச்சன் முதலிய முனிவர் பலர் பூமியில் கைலாயமெனப்படும் திருத்துருத்தி நகரில் வந்து சொன்னவாறறிவாரை இன்புறப் பணிந்து, சித்திரைத் திங்கள் பௌர்ணமையிலும், கார்த்திகைத்திங்கள் ஞாயிற்றுக்கிழமையிலும், ஐப்பசித் திங்கள் முழுதிலும் காவிரியாறு பதுமத்தடாகம் ஆகிய இரண்டிலும் மூழ்கிப் பக்கத்திலுள்ள தலபிரதட்சணமும் மகிழ்ச்சிமிகச் செய்தனர்.

இன்னும் அம்முனிவர் பெருமக்கள், திருத்துருத்திக்கோயிலுக்கு அக்கினித்திசையிலும் நிருதித்திசையிலும் தனிபே சிவலிங்கப் பிரதிட்டை செய்தனர். ஆங்காங்குத் திருக்குளங்கள் உண்டாக்கி அவற்றில் விதிப்படி மூழ்கி, அப்புனிதநீர், சந்தனம், பூ முதலிய பலவுங் கைக்கொண்டு நூல்முறைப்படி வழிபட்டு மகிழ்ந்தனர். எம்பெருமான் ஆங்காங்கு அவர்கள் முன்தோன்றி அருள்புரிய அவர்கள் மெய்ஞ்ஞானம்பெற்று இன்புற்றனர்.

இவ்வாறு மேற்கூறப்பட்ட இரண்டு திசைகளிலுமுள்ள (சிவலிங்கம்) சிவக்குறிகளைக்கண்டு திருக்கோயில் திருத்தி வழிபட்டவர் துன்பமுற்றும் நீங்கியவராய்த் தூய்மையான மெய்வாழ்வுபெற்று இன்புறுவார். இனித் தொண்டு செய்கின்றவர்கள் தம்பொருள் அளவைக்கேற்பக் கருங்கல்லாலும், செங்கல்லாலும் பிறவகையாலும் திருக்கோயில் செய்து வழிபட்டால் அளவில்லாத பயனை அடைந்து இறுதியில் வீட்டின்பமும் பெறுவார்கள். இப்படியே எண்ணில்லாத பெரியார் தூய்மையான காலத்தை நன்குணர்ந்து இரண்டு தீர்த்தங்களிலும் மூழ்கிச் சொன்னவாறறிவாரைக் கண்குளிரக் கண்ணுற்று மகிழ்ந்து எண்ணிய பயன் முற்றும் அடைந்து இன்புற்று வாழ்ந்தனர்.

கூஎ-வது, தீர்த்தச் சிறப்புரைத்தபடலம் முற்றியது.

———

## கூஅ-வது, சுந்தரதீர்த்தப்படலம்.

வெண்ணகைக் கருங்கட் செவ்வாய் விநமரை பதும தீர்த்தத்
துண்ணல மருவ மூழ்கி யுறபயன் பெற்றுு ருண்டே
லெண்ணலம் பொலிய வாராய்ந் தியம்புதல் வேண்டு மென்னக்
கண்ணலத் தரும சன்மன் கழறுத லுற்றான் மன்னோ க

வெள்ளிவெண் கயிலாயத்து மேயநம் பெருமா னோர்நாட்
டள்ளரு மாடி நோக்கத் தன்னுரு வழகிதாகி
விள்ளரு மதனுட் டோன்ற வியப்புமீக் கூரப் பார்த்துத்
துள்ளரு மகிழ்ச்சி பொங்கச் சுந்தரம் வருக வென்றான் உ

சுந்தர நாமம் பெற்றுத் தோன்றிய சூரிசி லாரைச்
சந்தத மலங்க னீற்று வட்டகை தாங்கு மாறு
செந்தளிர்ச் சடையா னுங்கோர் திப்பியப் பணிய ளித்தா
னந்துமப் பணியேற் றங்க ணயனார் பயிலு நாளில் ங

ஏற்றஞ்சார் வானோர் யாரு மிறக்கவந் தெழுமா லால
நாற்றஞ்சார் வதன்மு னண்ண நாயக னேவப் போந்து
மாற்றஞ்சா ரதனைப் பற்றி வந்தகா ரணத்தி னாலே
தோற்றஞ்சார் வலியா லால சுந்தர ராயி னாரே. ச

அன்னவர் நம்பி ரானுக் கலங்கலந் தொடையல் கட்டப்
பன்னரு மலர்கள் கொய்வான் பரவுநந் தனத்துட் புக்கார்
கன்னலங் குதலைச் செவ்வாய்க் கருங்குழ லெம்பி ராட்டிக்
கின்னசெய் தொழின்மேற் கொண்ட வமுதனை ரிருவ ருள்ளார் ரு

மற்றவர் நாமங் காமர் வளரனிந் திதையா ரெல்லாங்
கற்றவர் புகரு மாமைக் கமலினி யாமொன் பாரிச்
சொற்ற நின் னனையா ராங்குத் துன்னினர் துன்ன லோடும்
பெற்றமொன் றுயர்த்த பெம்மான் பேரருள் வலியி னாலே சு

தக்கண திசையுந் தெய்வத் தமிழுஞ்செய் தவஞ்சி றப்ப
வக்கண மவர்மேலெங்க ளையர்நோக் குற்ற தாகப்
புக்கது மனமு மந்தப் பொன்னனார் விழியு நோக்க
வொக்கமற் றவர்த நெஞ்சு முற்றது நாய னார்பால் எ

ஒருதலைக் காம மல்ல வாயினு மஃதென் றுன்னி
யிருதிறத் தவரு மீது தகாததென் றெண்ணி யஞ்சிப்
பொருவி றப்மனத்தை மீட்டார் பொன்னனார் பலபூக் கொய்து
திருவள ரலங்கல் கட்டச் சேர்தரு மிடத்தைச் சேர்ந்தார். அ

தருப்பணத் துதித்துள் ளாருந் தாம்புகு மிடம்பு குந்தா
ரருப்புமென் கடுக்கை மாலை யண்ணலா ரவரை நோக்கி
விருப்பமம் மடநல் லார்பால் விடுத்தனை யவரோ டிந்தப்
பொருப்புவிட் டகன்று தென்பாற் புவியகத் தடைந்து தோன்றி கூ

மற்றவ ரின்பந் துய்த்து வருதியென் றருளிச் செய்யச்
சொற்றமை தெரிந்துள் ளஞ்சித் தொழுதுமா னிடப்பாற் பட்டுப்
பற்றமைந் துழித ருங்காற் பரிந்துநீ தடுத்தாட் கொண்டாற்
சிற்றடி யேனு முய்வே னென்றனர் செய்வா மென்றார் க0

காலெலாங் கழுநீர்க் கொள்ளை களமெலாம் வான்றே யும்போர்
பாலெலாங் கருப்பங் காடு பணையெலாம் விளைசெஞ் சாலி
சாலெலாந் தரளஞ் சங்கந் தடமெலா மடவார் கூட்டஞ்
சேலெலா மவர்கண் போலுந் திருமுனைப் பாடி நாட்டில் கக

திரைகெழு பெண்ணை யாற்றுச் செழும்புன லுருவந் நாட்டு
ளுரைகெழு நகர்கட் கெல்லா முத்தம நகர மாகி
நிரைகெழு மாட மாலை நெருங்கியெவ் வளனு மல்கிப்
புரைகெழு மறவோர் மேவப் பொலிதரு நாவ லூரில் கஉ

மழுவல னேந்தி யோற்கு வழிவழி யடிமை செய்யுங்
கொழுமறை யாதி சைவர் குலஞ்செய்மா தவத்தி னாலே
தழுவருட் சடைய னார்க்குத் தனியிசை ஞானி யார்பாற்
செழுமையுற் றுலக முய்யத் திருவவ தாரஞ் செய்தார். கங

தனையனார் பிறந்தா ரென்று தந்தையார் மகிழ்ச்சி பூத்து
வினையமார் நறுநீ ராடி வித்துமுற் றூன நல்கி
முனையசூற் படக்கை யண்ணன் முதலவ னருளே யுன்னு
மனையரா யமர்ந்தார் சுற்றத் தனைவரு முவகை யுற்றார் கச

அருளிசை ஞானி யாரு மளவிலா வுவகை பொங்க
மருடபு புதல்வ னார்க்கு மஞ்சனம் விதியிற் செய்து
திருநுத னீறு சாத்தித் தேய்த்து மண்பொட்டு மிட்டுப்
பெருவரத் தீன்ற தன்மை பிறங்கிட வளர்ப்பா ரானார். கரு

இருவருமுணர மாட்டா விறைவர்க்குப் பித்தரென்று
மொருபெயர் சாத்துவார்க்கா ரூரரென் ஹெருபேர் சாத்தி
மருவுமைம் படையுஞ் செம்பொற் சுட்டியும் வயங்கு நாணுந்
தருமொளிச் செம்பொன் செய்த தண்டையுஞ் சாத்தி ஞரால் கசு

ஈசானர் புருடர் கோர ரிலங்கருண் வாமர் சாதர்
தேசாரு மிதய ருத்த மாங்கர்நற் சிகையரென்று
மாசாரக் கவசர் கண்ண ரத்திர ரிணையர் தம்மை
நேசாரு மாறுகூவி நிகழ்பெருங் காப்புச் செய்தார் கஎ

தருக்கமில் பேரா னந்தச் சமுத்திரத் தாட வல்லா
ருருக்கிளர் முகம சைத்திட் டுறிமுழந் தாள்க டம்மு
ளிருக்கையி னென்றெ டுத்திட் டொன்றெழி லுறம டித்துத்
திருக்கர நிலத்தி லூன்றிச் செங்கீரை யாடி ஞரே கஅ

வெய்யவர் புரங்கண் மூன்றும் வெந்திட முறுவல் செய்த
வையரு ளுவக்கு மாறே யான்றதா லாட்டு மையர்
செய்யபொன் மணியாற் செய்த செழுவளத் தொட்டி லேற்றித்
தையல ருவந்து தாலோ தாலென வுவந்தா ரன்றே. கசு

மழைமதக் கலுழித் தொண்டை வாரண முரித்துப் போர்த்த
பிழையிலெம் பெருமான் சங்கக் குழையொளி பிறங்கு காதி
னுழையிசைப் புலவர் தேம்ப வொண்டமி ழமுதச் செந்தேன்
றழைதரக் கொட்ட வல்லார் சப்பாணி கொட்டி ஞரே உ0

தவளவெண் ணகைவாய்த் தாய்க்குந் தந்தைக்கு முவகை பொங்கக்
கவளவெங் களிற்றுப் போர்வைக் கண்ணுதல் கருணை கூட்ட
வுவளகத் தினிது மேவி யொண்டொடிப் பரவை யார்தம்
பவளவாய் முத்தங் கொள்வார் பவளவாய் முத்தந் தந்தார் உக

வருகசெஞ் சடைப்பி ராஞர் வயங்கருண் முளையே நன்கு
வருகவொண் பவளச் செவ்வாய் குதட்டும்வான் பிறையே மெல்ல
வருகவெங் குலக்கொ ழுந்தே வருகக்கண் மணியே புல்ல
வருகவென் றழைக்குந் தோறும் வந்துவந் துவப்பு செய்வார் உஉ

பரவைவா யாம்பல் வேட்கை பதிதர வெழலா லொத்தாய்
வரமலி முளரி நாளும் மலர்த்திடாமையினு லொவ்வாய்
விரவுகூ ஞெளிவாய் நாகம் வெளிவிடா தொருசொ லாலென்
றுரவறிவி னர்தேர்ந் தாலோ ஞடவா வெனவு வந்தார் உ௩

மருவியாந் துச்சிலாக வாழுஞ்சிற் றிலேச்சி தைப்பார்
பொருவில்சிற் றடியி ரண்டும் புழுதியுண் முழுகா நிற்கக்
குருமுக முத்தங் கோப்பக் குறுநகை வாயின் மல்கத்
தெருவிடை மடவார் கட்டுஞ் சிற்றிலேச் சிதைத்தாரன்றே. உ௪

அந்தணர் முழக்கஞ் செய்ய வாகம முழக்கஞ் செய்யச்
சந்தத நம்பி ராஞர் தண்ணளி முழக்கஞ் செய்ய
முந்தநன் றெழுந்து துள்ளி யன்பினர் முழக்கஞ் செய்யச்
செந்தமிழ் முழக்கஞ் செய்யச் சிறப்பறை முழக்கஞ் செய்தார் உ௫

பரியுகைத் திடுத லோடு பாய்மதக் கலுழி வெள்ளேக்
கரியுகைத் திடுதல் பின்னர்க் கலப்ப தல்லாது வையக்
கிரியுகைத் திடுத லில்லே யெனக்கிளர்ந் ததுந டாத்தும்
பிரியமிக் கவர்போ லூர்ந்தார் பிறங்குபொற் சிறுதே ரம்மா உ௬

இன்னண மொழுகு நாளி லிலங்குப வீதஞ் சாத்தி
மன்னுபல் கலேக ளெல்லாம் வழுவறப் பயிற்றும் போது
நன்னலக் குறுமண் வேந்தர் நரசிங்க முனேயர் வந்து
பன்னருங் குமா ரூகும் பான்மையின் மகன்மை கொண்டார் உ௭

மணவினேப் பருவ மெய்த வளமலி புத்தூர் நாளுந்
தணவரும் வாழ்க்கை யாளன் சடங்கவி மறையோன் பெற்ற
குணமலி கன்னி தன்னேக் குறிக்கொடு முதியோர் பேசி
யணவிய பொருத்தந் தேர்ந்து மணஞ்செய்நா ளாராய்ந் தாரே உ௮

சிறந்தநா ளினிது தேர்ந்து மணத்திரு முடங்க றீட்டி
யுறந்தபல் லிடத்தும் போக்கி யுவகையிற் புத்தூ ராரு
மறந்தவாத் திருநன் ஞவ லூராரு மழகுமேவப்
பிறந்தவா தரத்தின் கோலந் தனித்தனிப் பிறங்கக் காண்பார் உ௯

காவண மெங்கு மிட்டுக் கதலிகைக் காடு செய்து
மாவணக் கமுகு வாழை வண்கரும் பாதி யாத்துப்
பூவணத் தொடைய றாக்கிப் பொலிந்ததோ ரணங்கள்வீக்கித்
தூவணப் பிறவு மோகை துளும்புற வமைத்தா ரன்றே ௩0

மணவினைத் திருநா ணூலின் வழிச்செயுங் கரும முற்றி
யணவுமஞ் சனநீ ராடி யரசர்தந் திருவும் வாய்ப்பப்
புணர்செய்பொன் னுடை சாத்திப் பொற்கல மணிப்பூண் மற்று
மிணர்கொள்பூந் தொடையுந் தாங்கி யியைமணக் கோலங்கொண்டார்

மறையவர் துவன்றி மல்க மங்கல வியங்க ளார்ப்ப
வறைபல கொடியு மோங்க வவிர்குடை யாதி மொய்ப்பக்
கறைதவிர் மற்றையோருங் கலந்தனர் நெருங்கிச் செல்ல
நிறையொரு பரிமேற் கொண்டார் நிலவியெம் மனமேற் கொண்டார்

கருப்புவி லொளித்து வந்த காமனே முகமைந்தின் றி
யுருப்பமி லொன்றே டுற்ற வும்பனே வம்பே நாளு
மருப்புமென் முலையா ராவி யலைக்குங்கூற் றவனே வென்று
மருப்பயின் மலர்மென் கூந்தன் மங்கையர் மருளச் சென்று ௩௩

மணம்வருஞ் சிறப்பி னாலே மணம்வந்த புத்தூ ரொன்று
தணவரு மொருபேர் பூண்ட தன்னிகர் நகருட் போந்து
குணமுற வெதிர்கொள் வார்தங் குழாத்தொடும் வீதி சூழ்ந்து
புணர்மண மனையுட் புக்குப் பொலிந்தன ரெம்மை யாள்வார் ௩௪

பல்வகை முகமன் யாரும் பரிந்தன ரினிதி னாற்றச்
சொல்வகை யடங்கா வெல்லா வியங்களுந் துவன்றி யார்ப்ப
வல்வகை யறிஞர் செய்த மணப்பெருந் தவிசி னேறி
நல்வகை மரீஇ யமர்ந்தார் நம்பியா ரூரர் மாதோ ௩௫

வளிகிள ருலகத் துள்ள மன்பதை யனைத்து முய்ய
வொளிகிளர் கைலா யத்தி னுரைத்தரு ளியவா றேபே
ரளிகிளர் பிரான்ற டுத்தாட் கொள்ளுவா னகங்கொண் டம்ம
தெளிகிளர் கேள்வி வாய்வை திகவொரு மறையோ னுவான் ௩௬

கிழவடி வன்றி வேறு கிளரொரு வடிவங் கொள்ளிற்
பழவழக் கென்று ஞாலங் கொளாதெனும் படியை யுன்னி
விழவுமை திருமு கத்தோர் வெள்ளிய முறுவ ரூன்ற
வழகிய விருத்த ராணு ரறையுமூ வடிவு மில்லார் ௩௭

உள்ளன வினையென் றியாரு முணர்தர வறிவிப் பார்போற்
கள்ளமி னீறு நெற்றி முதலிய விடங்க திர்ப்ப
வெள்ளலி லுருத்தி ராக்க மிருஞ்சிரங் கண்ட மாதி
நள்ளல்செய் தான மெல்லா நண்ணுபு விளக்கஞ் செய்ய ௩௮

விடையமர் பொருப்பு நீறு மெய்யுற வண்ணம் வேணிப்
புடையமர் பிறைது ரோணம் பொலியிற காதி போல
வுடையவ ரிவர்தாஞ் சென்னி யுரோமமும் விளர்த்தா ரென்ன
விடையொரு கறுப்பு மில்லாச் சிகைமுடி யியையச் செய்து ௩௯

கொடும்பசி யெழுந்த காலுங் கூறிலே னொருவ ருக்கு
மடும்புர மெரித்தா யென்று மகலுரு வடியே னேக்கை
விடுந்திற மென்னை யென்றோர் பாரிட மிகப்பி ணங்கக்
கடுங்கதிர் வெயின்ம றைக்குங் கைக்குடை யொன்று தாங்கி ௪0

வளமலி திருநெல் வேலி வைப்பிடைக் கொண்ட தேயோ
வுளமலி பாசு ரென்னு மோரிடங் கொண்ட தேயோ
கொளமலி பிறிதோர் தேத்துக் கொண்டதோ வுணர்த றேற்றேந்
தளமலி மலர்க்கை வேணுத் தண்டமொன் றான்றக் கொண்டு ௪௧

எழுசின வுழுவை யுங்கார் வழுவையு மெங்க டோள்க
டழுவிடஞ் சார்ந்தீ ரேனுஞ் சார்தீர் கோச மென்றே
யொழுகவ மதித்தல் செய்ய வொண்கலை யுத்த ரீயம்
பழுதற வரையான் மேனிப் பாற்சழுங் கலின்வெள் ளென்ன ௪௨

உயிரெலா முணர்வுற் றுய்ய வுணர்த்துத றனக்கே யன்றி
யயிருறும் பிறர்மாட் டின்றே யனுசிதந் தனக்கின் றேனும்
பயிலுறு முலகங் கொள்ளப் பௌத்திர நகைய னைத்தும்
வெயிலவற் கொழிக்கு மோர்கை விரலமை தரப்பு னைந்து ௪௩

கரத்துமின் விழியென் பில்லை கண்டத்தி லைல மில்லை
யுரத்தமை கமடமில்லை யொண்முடிப் பிறையு மில்லை
வரத்தநாஞ் செவியிற் றீர்தல் வழக்கெனச் சங்க மோவத்
திரத்ததா காமை தேர்ந்து செறிந்தபொற் குழைக டாழ சச

முடையத ளுடையி னேடு போர்வையு முயங்காக் காலை
யடையொரு நாமுந் தீர்த லறமென நீங்கி யாங்கு
மிடைமயிர்ப் பூணு னீங்க மேவுடை போர்வைக் கொப்பத்
தடையறு பஞ்சி னூற்ற வுபவீத நிறந்த யங்க சரு

தன்னுடைக் கொழுந னேடு சதுமறை முடியுந் தேருப்
பொன்னுடைப் பதும பாதம் போந்துதற் ருேய்த லாலே
யென்னுடை யேற்ற நிற்கே தென்றுமண்வானை பெள்ள
மின்னுடை முகில்சேர் வானு மெய்மையே யென்றே மாற சசு

இருவிடை யிருக்க வாசி யீரிரண் டிருக்க மின்னுந்
திருமுகி லிருக்க மண்ணுந் தீண்டுமோ செம்பொற் பாத
மொருபெருந் தேரென் றுள்ளத் துணர்ந்தன கொல்லோ வென்று
பெருகருட் கணங்க டம்முட் பேசுபு பிணங்கா நிற்க சஎ

வழிநடந் திளைத்தார் போல மலர்முகம் வெயர்வு தோன்றப்
பழிதபு முயிர்ப்பு வீங்கப் பைப்பய நடந்து வந்து
செழிபல வளங்கண் மல்குந் திருத்தகு புத்தூர் மேவி
மொழிமணத் தவிசி னம்பி முன்னர்வந் துற்று ரன்றே சஅ

மறையவர் வரவு நோக்கி வள்ளலார் மணஞ்செய் காலை
யிறையவர் போல வந்தா ரென்றுளத் துவகை பூத்தா
ருறையுமற் றுள்ளார் யாரு முவர்வர றவப்பே றென்றே
நிறையுளத் துவகை பூத்தா ருவப்புற னீதி தானே சகூ

ஐயரை யிருமி னென்ன வறைந்தனர் நாவ லூரர்
வெய்யது புணரா மற்றை வேதியர் களுமவ் வாறே
செய்பநன் முகமன் சொற்றூர் செப்பவு நிலையே நின்று
வையக முய்ய வந்த மறையவ ரீது சொல்வார் ரு0

வேதியர் பலருங் கேண்மின் மேயவிவ் வாரூ ரற்கு
மோதிய நமக்கு முண்டா லொருவழக் கதனைத் தீர்த்தாற்
றீதிய லாத மன்றல் செய்யலா மென்றார் கேட்டுக்
கோதிய லாருந் தீர்த்துக் கொண்டபின் செய்வே னென்றார் ருக

என்றுரை யாடி மேற்கொள் வழக்கினை யியம்பு மென்று
ரன்றுநம் மடிமை நீயென் றறைந்தன ரந்தணாள
ரொன்றுபன் மறையோர் யாரு முளத்திறம் பூது கொண்டார்
நன்றிவர் மொழிந்தா ரென்று நகைத்தனர் நாவ லூரார் ருஉ

ஏடநீ நகைத்தல் செய்தா யென்மொழி யவமதித்தாய்
நாடறி தரநின் றந்தை தந்தை முன் னெழுதி நல்கு
பாடமை யோலை யீது பாறிய தில்லை கண்டாய்
நீடலி விளமைத் தன்மை நிகழ்ச்சியோ வெனமு னிந்தார் ருங

மொழியிது புகற லோடு முன்னின்றார் தம்மை நோக்கித்
தழிவரு மன்பு ளத்துத் தங்கலா னகைத்த னீங்கிப்
பழியிலந் தணர்கள் வேறோர் பனவருக் கடிமை யாதல்
கொழிநிலத் தென்று மில்லை பித்தன்கொல் குறிக்கி னென்றார் ருச

பித்தனென் றுரைத்தி யின்னும் பேயனென் றுரைத்தி யெண்ணு
தெத்தனை யுரைத்தி யேனு மெண்ணுதல் வெற்றி யாமோ
வொத்ததன் றனது வார்த்தை யுணர்ந்திலை யென்னைச் சற்றுஞ்
சித்தமொன் றலைவு தீர்ந்து செய்திநம் பணியை யென்றார் ருரு

வடிவுள முருக்கா நிற்கும் வார்த்தைவெங் கோப மாக்கு
மொடிவிலோ ரோலை யுண்டென் றுரைத்தனர் காண்பே னென்று
படிபடு மோலை காட்டு கென்றன ரவையார் பார்ப்பார்
நொடியினீ யல்லை வேலை செய்யென்றார் நுவலொ ணாதார் ருசு

முனைகொடு நாவ லூரார் முதுமறை யவர்கை யோலை
தனைவலி மையிற் கவர்ந்து காண்பனென்றெழுந்து சார
வனையவ ரச்சுற் றோரி னப்பந்த ரகத்தே யோட
வினைகொடு தொடர்ந்து பற்றிக் கவர்ந்தனர் வெகுளி மிக்கார் ருஎ

ஓலைகைப் படுத லோடு முண்மையோர்ந் துணர்ந்தா ரல்லர்
வேலைசூ ழுலகிற் பார்ப்பா ரடிமையாய் விடுத லென்ன
மாலையென் றடன்கி ழித்து மடிதரப் பிசைதல் செய்தப்
பாலமே வுறவெ றிந்தார் முறையிட்டார் பயமொன் றில்லார் ருஅ

முறையிடு மறையோர் முன்பு முதுமறை யவர்கள் சென்று
முறைதபு வழக்குக் கொண்டு முனிதரப் பிணங்கு கின்றீர்
முறையினீர் வாழ்வ தெங்கு மொழிமினென் றுரைத்தா ரெல்லா
முறையுநன் குணர்த்த வல்லார் மொழிதர லுற்று ரன்றே ருகூ

உறையுளிவ் வெண்ணெய் நல்லூ ருதுநிற்க வென்கையோலை
முறைதபக் கவர்ந்து கீறி மொழிந்தவென் வழக்கைத் தானே
குறையற நிரப்பல் செய்தான் குற்றேவல் செய்ய வேண்டு
மிறையுநாந் தாழே மென்னு விசைத்தன ரெல்லாம் வல்லார் கூ0

வலியவன் வழக்கி லிந்த மறையவ னென்று தேர்ந்து
பொலிதரு வெண்ணெய் நல்லூர் புக்குநீ வாழு ரென்னிற்
கலிகெழு மங்குளார்பாற் கலந்திந்த வழக்குப் பேச
மெலியுநீ வருவை கொல்லோ வென்றனர் வெகுண்டா ரூரர் கூக

இங்குநீ கிழித்த வோலை படியோலை யென்பின் னாக
வங்குநீ செல்வா யென்னி லவைமுன மூல வோலை
மங்குத லிலாம லுள்ள ததைவயக் குவித்து நாளுந்
தங்குநீ யடிமையாதல் சாதிப்பே னென்று சென்றார் கூஉ

மறையவர் நிழலே யென்ன வள்ளலார் தொடர்ந்து சென்று
மிறையவர் நிழலே யென்னத் தொடர்பவ ரிவரே யன்றோ
முறையென்னுப் முடியு மென்று யாவரு முயன்று சென்றார்
குறையிலா வெண்ணெய் மேவிக் குலவவை யகத்துப் புக்கார் கூங

அவையகம் புகுந்த வைய ரந்தணர் பலருங் கேட்ப
நவையி னந்தொண்ட னிந்த நம்பியா ரூர னென்று
செவையுறக் காட்டு மோலை சிதறினு னஞ்சா னாகிச்
சவையுளீர் முன்னும் போந்தான் சாற்றுமென் வழக்கி தென்றார் கூச

மறையவ ரடிமை யாதல் வையத்து வழக்க மில்லை
முறைதப யாது சொற்றீ ரென்றன ரவையுண் மொய்த்தார்
கறைதப விவனை யீன்றான் றந்தைகை யெழுத்தேயுண்டு
நிறைதர வதனை யோர்ந்து நேர்ந்தது மொழிமி னென்றார் சுரு

பனைமட லுண்டேற் காட்டு மென்றனர் பதறி முன்போன்
முனையிவன் கிழியா வண்ண மொழிவரேற் றெரிப்பே னென்றா
ரனையவ ரோலை காட்டி னழிப்பது தக்க தாமோ
தினையள வேனுந் தீங்கு சேரொட்டேந் தெரிப்பீ ரென்றார் சுசு

என்றலு மாயை வல்லா ராவண மெதிரே வைத்தார்
தொன்றதாய் முடங்கலாய் மென்றுகில் பொதிந் ததுவாய் நேர்ந்த
தன்றதை யவையோர் நோக்கி யாங்கொரு கரணற் பார்க்க
நன்றவன் றெழுது வாங்கி விரித்துரை நவில லுற்றான் சுஎ

நாவலூ ராதி சைவ னுமமா ரூர னென்பேன்
மேவரும் வெண்ணெய் நல்லூர் விளங்கொரு பித்த னுக்குத்
தாவரும் யானு மென்னைச் சார்ந்தவென் வழியுள் ளாரும்
பாவரு மடிமை யென்கை யெழுத்தெனப் பகர்ந்தா னன்றே சுஅ

இன்னுமே லெழுத்திட் டார்க ளின்னரென் றறியச் சொற்றான்
றுன்னுபே ரவையார் கேட்டுத் திலக்குமா வணமுன் னூன்றுட்
பன்னுமா வணந்தெ ரித்தார் பனவ ராரூர ரேநீ
ருன்னுநும் பேர னார்கை யெழுத்தென வுணரு மென்றார் சுசு

உணர்பவ னிவனோ வாங்கிக் கிழித்திட லொன்றே தேர்ந்தான்
புணரவ னெழுத்து வேறிங் குறுவித்துப் பொருத்திப் பார்த்துத்
தணவற வுணர்மி னென்றார் சபையாரவ் வாறு தேர்ந்து
குணமுற றுணிந்து மேலாற் கூறுவ தில்லை யென்றார் எO

உள்ளநூ லுணர்ந்தீ ராதி சைவனென் றுணர்வீ ரென்னை
விள்ளரு மிவற்குத் தொண்டாய் மேவு கென் றுரைப்பீ ராகிற்
தள்ளரும் விதியை யாவர் தடுப்பவ ரென்று நின்றார்
கொள்ளரு மெண்ண மெல்லாங் கொண்டுழி தருமா ரூரர் எக

மறையவ ரிந்த வூரே வாழுமூ ரென்றீர் வாழு
முறையுள்யா துரைமி னென்று ரொருவரு மறியி ராகிற்
கறையற நம்பின் வம்மின் காட்டுது மென்று சென்றார் எஉ
முறைமையிற் றொடர்ந்தார் யாரு நம்பியு முயன்று சென்றார்

சென்றவர் யாருங் காணத் திருவருட் டுறையுட் புக்கா
நன்றவ ருருக் காணுது நான்மறை யவர்மருண்டா
ரின்றிவ ரென்செய் வாரென் றெண்ணுமா ரூரர் காண
வென்றவ ருமையா ளோடும் விடையின்மேற் றோன்றி னால் எங

காண்டலுந் துணுக்குற் றஞ்சிக் கையிணை தலைமே லேற
மாண்ட பேரன்பும் பொங்க மழையினுங் கண்ணீர் வாரப்
பூண்டமுன் றொடர்ச்சி மேவப் போற்றுபு வலிய வேவந்
தாண்டவன் கருணை யென்னே யடிமை கொண் டருளிற் றென்றார்

நன்மை சா னமக்குத் தொண்ட னீநம தேவ லாலித்
தன்மைசால் பிறவி யுற்றாய் தடுத்துநா மாளும் போது
வன்மையே யுரைத்த வாற்றல் வன்றொண்ட ரெனும்பேர் பெற்றாய்
தொன்மைசா னம்மைப் பாடுந் தொண்டுபூண் டியங்கு கென்றார் எரு

எதிரடைந் தடிமை நீயென் றிசைக்கவு முணரா நாயே
னதிர்சிலம் படியோ யானென் னறிந்துபா டுவனே யென்ன
முதிர்சினத் தெனைநீ பித்த னென்றனை யதுமுற்கொண்டு
விதிரறப் பாடுகென்றான் வேதங்கள் பாடும் வாயான் எசு

அருடலை யேற்று நின்றா ரண்ணலா ரிலிங்கத் துற்றார்
பெருகருள் வடிவர் பித்தா பிறைசூடி. யென்றெ டுத்தே
யிருடபு மடியேன் யானல் லேனென லாமே யென்று
பொருள்பெறு பதிகம் பாடிப் போற்றினர் புளகித் தாரே எஎ

ஆங்குநின் றரிது நீங்கித் திருநாவ லூர டைந்து
கோங்குவெம் முலைபா லாரைக் கோதறப் புகழ்ந்து போற்றி
வீங்குநீர்த் துறையூர் மேவி மிளிர்தமிழ்ப் பதிகம் பாடித் ·
தாங்குசெஞ் சடைப்பி ரானார் தவநெறி யருளப் பெற்று எஅ

வழியமர் தலங்க ளெல்லாம் வழாதுசென் றிறைஞ்சிப் பாடிப்
பழிதபு புகழ்வன் றொண்டர் பைம்புனற் பெண்ணை நீந்தி
யழிவில்பல் வளனு மன்னு மதிகைவீ ரட்டஞ்சார்வான்
விழிகுளிர்ப் படையுஞ் சித்த வடமட மேவி னாரே எகூ

ஆயதோர் காலை வெய்யோ னடங்குறு மமயம் வாய்ப்ப
நாயனூர் புகழ்சா னாவுக் கரசனூர் நகுகைத் தொண்டு
மேயதோ ரிடத்தை யங்தோ மிதிப்பதற் கஞ்சு வேனென்
றேயசீர் மடத்தாண் டார்தா ளெண்ணுபு துயின்றா ரன்றே அ0

ஆரூரர் துயிலுங் காலை யதிகைவீ ரட்ட மேய
நீரூர்செஞ் சடையார் யாரு நிறைதிரு மடத்திற் புக்குத்
தாரூர்தம் பாத மன்னூர் தலைமிசை வைத்துத் தாமு
மேரூர்கண் டுயில்வார் போல வினிதுகண் டுயின்றா ரன்றே அக

வன்றொண்ட ரதுதெரிந்து மறையோயுன் றாளென் சென்னி
யொன்றவைத் தனையே யென்ன வுதுதிசை யுணர்ந்து செய்த
தன்றது மூப்பால் வந்த தாமென வதற்கி சைந்தோ
ரின்றலை சென்னி வைத்துத் துயின்றன ரெம்மை யாள்வார். அஉ

ஆயதோ ரிடத்துஞ் சென்றே யந்தணர் பாதம் வைக்க
மேயவென் றலைமேற் பல்கான் மிதித்தனை நீயா ரென்ன
நாயனா ரறியாய் கொல்லோ வெனநவின் றிருக்க ரந்தார்
தேயமார் நாவ லூரர் வெருக்கொடு தெளிந்தா ரன்றே அங

தம்மானை யெனமுன் வைத்துத் தவலரு மதிகை மேய
வம்மானைப் பதிகம் பாடி யாழ்புனற் கெடிலத் தென்பால்
வம்மானை யேந்தி மாணி குழிவிராய்த் தொழுது பாடி
யெம்மானை நீறு பாடித் தினைநக ரிறைஞ்சி னாரே அச

வழியெலாங் கருப்பங் காடு வளைகருங் கோட்டு மேதிக்
குழியெலாங் கமலக் காடு குலவுற வயற்பா லுள்ள
வுழியெலாஞ் செங்நெற் காடா யுறுவள வழிந டந்து
விழியெலாங் கவருந் தில்லை யெல்லையை மேவி னாரே அரு

எல்லையை வணங்கி நந்த வனத்தினை யிறைஞ்சி மொய்க்கு
மல்லையுண் டொளிர்பொன் மாட வீதியை யணைந்து போற்றிக்
கொல்லையா னுகைப்பா னன்பர் குலாயெதிர் கொளவன் ஞரோ
டொல்லையுட் புகுந்து தாழ்ந்தா ரொப்பிலா னடஞ்செய் மன்றம் அசு

விழிகணீ ரருவி பாய மெய்யுரோ மஞ்சி லிர்ப்ப
மொழிதடு மாற வங்கை முகிழ்தலை மீது வைகக்
கழிமகிழ் சிறப்பப் பல்காற் பணிந்தெழு காத லாருக்
கழிவிலா னந்தக் கூத்த ரற்புத நடங்காண் பித்தார் அஎ

ஆனந்தம் பெருகப் போற்று நாவலா ரூரர் கேட்க
வானந்தக் கூத்தர் தம்பே ரருளினு காய வாக்கொன்
றானந்தத் தரள நன்னீ ராரூர்நம் பக்கல் வாவென்
றானந்தம் பயப்பத் தோன்றிற் றஃதுணர்ந் திறைஞ்சி யையர் அஅ

அம்பல மனைத்தும் போற்றி யாலய நின்றும் போந்து
கொம்பல ரெடுத்துலாநீர்க் கொள்ளிட நதிக டந்து
வம்பலர் கமலக் காட்டு வழிநடந் துவப்பி னேகி
நம்பல மாய காழி நன்னக ரெல்லை சேர்ந்தார் அசு

அரியவர் துவன்றி யேத்த வம்மைதன் முலைப்பா லுண்ட
பெரியவரவதா ரஞ்செய் பெரும்பதி மிதியே னென்று
விரியவ ராகந் தீர்ந்த வேதியர் சூழும்போது
தெரியவர் முன்பு காட்சி திருக்கழு மலத்தார் நல்க கூO

கண்டுகொண் டேனென் றீற்றிற் கலப்புறு பதிகம் பாடித்
தொண்டுகொண் டாள்வார் தம்மைத் தொழுதுகை குவித்துப் போற்றி
மண்டுநீர்ச் சடையார் கோலக் காவினை வணங்கி யப்பாற்
கொண்டுபுன் கூரை யுற்றுர் குளிர்முனைப் பாடி நாடர் கூக

புன்கூர்வாழ் வாரைப் போற்றிப் பொன்னிநீர் முழுகி யேறு
நன்கூர்வா ரமர்மா யூர நலமுறத் துதித்துப் போற்றி
வன்கூர்வெஞ் சூலத் தண்ணல் வழுவூர்வீ ரட்டந் தாழ்ந்து
பொன்கூர்முப் புரிநூன் மார்ப ரம்பர்மா காளம் புக்கார் கூஉ

அம்பர் மாகாள மேயா ரடியிணை தொழுது போற்றி
யிம்பரேத் தெடுக்குந் தெய்வப் புகலூரை யிறைஞ்சி யேத்தி
நம்பர்பே ரருணி னைந்து நடவைகாண் டலங்க ளேத்தி
யும்பர்சூ ழாரூ ரெல்லை யுற்றனர் நாவ லூரார் ௯௩

ஆரூரில் வாழ்வார்க் கெல்லா மாரூர ருமை ழைக்க
வேரூரும் படியிங் கெய்து மெதிர் கொள்வீர் யாரு மென்று
நீரூர்செஞ் சடையார் கூற நெடுநகர் வாணர் யாரும்
பாரூர்கைம் மலைமுன் யாவும் பரவவந் தெதிர் கொண்டாரே ௯௪

வந்தெதிர் கொண்டு போற்றி வணங்குவார் முனம்வ ணங்கிச்
சுந்தர வீதியூடு துணைந்தவ ரோடு செல்வா
ரந்தமி லவரை நோக்கி யெம்மையு மாள்வ ரோநம்
பந்தணை விரலாள் பாக ரெனப்பாடிக் கோயில் சார்ந்தார் ௯௫

வாயின்முன் னிறைஞ்சித் தேவா சிரியன்முன் வணங்கி மூன்று
ஞாயிலெய் தவர்வாழ் மூலட் டானநேர் நண்ணிப் போற்றி
வேயின்முன் முளைத்து ளாரை மிளிர்கம லால யத்துட்
டாயினல் லருள்செய் வாரைத் தாழ்ந்தன ருருகிப் பாட ௯௬

புற்றிடங் கொண்ட முக்கட் புராணர்தந் திருவாக் கொன்று
சொற்றிட மருவ நம்மைத் தோழனு வுனக்குத்தந்தோ
நற்றிட மிகுநீ வேள்விக் கோலமே நயந்தெஞ் ஞான்றுஞ்
சற்றிட ரேனு மின்றிச் சரித்தியென் றெழுந்த தன்றே ௯௭

இதுபெறற் கருக ணேயா னென்றுள முருகித் தாழ்ந்தா
ரதுமுத லெவருந் தம்பி ரான்றோழ னென்ற றைந்தார்
புதுமலர்த் தொடையுஞ் சாந்தும் புழுகுந்தம் மேனி பொங்க
முதுமொழிப் புலவர் வாழ்த்தத் தோன்றினர் முழுப்பே ரன்பர் ௯௮

வித்தக ரெங்கள் வீதி விடங்கநா யகர்முன் சென்று
சித்தமுள் ளுருகக் கண்ணீர் சிந்திடத் தொழுது பாடி
யத்தளி சூழ்ந்து பின்ன ரரநெறி கும்பிட் டேத்தி
யெத்தலங் களுஞ்சென் றுங்காங் கிறைஞ்சுபு பயிலா நின்றார் ௯௯

இவர்செய லின்ன தாக விதற்குமுன் கைலா யத்துத்
தவர்புக ழெம்பி ராஞர் தவாதபே ரருளி ஞலே
பவர்புரை மருங்குற் செவ்வாய்ப் பதியி லாதவர் குலத்துக்
கவரற வவதரித்தார் கமலினி யாரென் பாரே கOO

மதியிளம் பிறையோ தெய்வ மானிளம் பிணையோ வாசம்
பொதியிளந் தளிரோ மேன்மை பொலியிளங் கொடியோ யாருந்
துதியிளங் கொம்போ வண்ணச் சுடரிளங் கிளியோ சாரம்
பதியிளங் கரும்போ வென்ன வளர்ந்தனர் பதுமை போல்வார் கOக

பரவையா ரெனும்பேர் பெற்றுப் பந்தொடம் மனைப யின்று
குரவுவார் கூந்தற் செவ்வாய்க் கோற்றொடி யுமையாள் பாதம்
விரவுமோர் வேட்கை பொங்க விளங்குமோர் குறிப்புந் தோன்ற
வரிலாம் பலருங் காமன் வாழ்வென வளரா நின்றார் கOஉ

பேதையம் பருவந் தீர்ந்து பெதும்பையம் பருவ நீத்து
மாதரொண் பரவை யார்தா மங்கையம் பருவ நண்ண
வாதரம் பயக்குங் கொங்கை யலைதர மருங்குல் வாட்ட
மீதரம் பையருந் தாழ்ந்து மேவுறப் பொலியா நின்றார் கOங

ஆடுதல் கண்டு ளாரு மலங்குசெம் பவள வாயாற்
பாடுதல் கண்டு ளாரும் பசுமலர் நிறையப் பூத்து
மூடுதல் கொண்ட பொன்னங் கொடியொன்று முழங்கு வண்டர்
கூடுதல் கொளப்பெ யர்ந்தே யசையுமென் றுளங்கு றிப்பார் கOச

கருங்குழ லணிம ணிப்பொற் கலன்களுஞ் செவியிற் றோடு
மொருங்கிருள் பருகுஞ் செங்கே ழொருகதி ருதயஞ் செய்ய
மருங்குறேய் முலைமேன் முத்த வடங்கிளர் நிலவு செய்ய
வருங்குண மடவார் சூழ வாலயம் புகுந்தா ரன்றே கOரு

பூங்கோயின் மேயி னாரைப் புற்றிடங் கொண்டு ளாரைத்
தாங்கோலு மன்பிற் போற்றிச் சந்நிதி யரிதி னீங்கித்
தேங்கோதை மடவார் சூழத் திருமனைச் செல்வா னெண்ணி
யாங்கோல முன்றி லெய்து மவிரொளிப் பரவை யாரை கOசு

விதிகடைக் கூட்டக் கண்டார் மிளிர்திரு நாவலூரர்
பதிதரு விசும்பு நீத்த பாயொளி மின்னுக் கொல்லோ
துதிசெயு மெம்பி ரானுர் தோல்வியி லருளோ மேலா
மதிவியப் புறுத்து மீதோ ரற்புத மறியே னென்றூர் கூ௦எ

முன்னையூழ் வலியி னுலே முகிழ்முலைப் பரவை யாரு
மென்னையாள் பவரை நோக்கி யிலங்கெழிற் குமரன் கொல்லோ
வன்னையோர் பாகத் தண்ண லருளடைந் தவனே வென்றூர்
பின்னையா துரைப்பார் கோலப் பெருமணி மாடம் புக்கார் க௦அ

ஆயவத் தளியுள் ளாரை யாரூர ரிவர்யா ரென்னப்
பாயபே ரெழிலின் மிக்கார் பரவையா ரும்பர் யார்க்குஞ்
சேயரென் றவரு ரைப்பத் திரிதரா வுளந்தி ரிந்த
மாயமென் னென்று தேம்பி வன்மீகத் திறைமுன் சென்றூர் க௦கூ

நின்னடி யன்றி வேறு நினைத்தென்று மறித ராத
வென்னுளந் திரியச் செய்தா ளென்செய்வே னடியே னென்ன
வுன்னுளந் திரியச் செய்தா ளுறுமணம் புணர்வை நாளை
யின்னலங் கடலா ழாதி யென்றிறை யருளிச் செய்தான் கக௦

வேறு.

மயல்கொண்டு மனைப்புகுந்த மங்கையா ராலயத்து
ளியல்கொண்டு நேர்நின்ற வேந்தலார் யாவரெனத்
தயல்கொண்ட மேனியார் தடுத்தாண்ட வழகரெனப்
பயல்கொண்ட மதிநுதலார் பகரமனங் கொண்டிருந்தார் ககக

நாளையென நம்பெருமா னவின்றனனின் றுயிர்பிழைத்தால்
வாளைநிகர் கண்ணுளை மணஞ்செயலா மெனத்தேம்பி
வேளைவரல் குறித்திருந்தா ராரூரர் வெதிர்பொருவு
தோளையுடை மடவாருந் துயிலாதி நீத்தமர்ந்தார் ககஉ

இருவர்செய லிதுவாக வெம்பிரா னன்றிரவே
மருவரிய வாரூரில் வாழ்வார்பா லெழுந்தருளிப்
பொருவருநந் தோழனுக்கும் பொங்குமெழிற் பரவைக்குந்
திருமணஞ்செய் விதிப்படியே செய்மினென வருள்செய்தார் ககங

கற்றைவார் சடைமுடியா ரருள்செய்த படிகனிந்து
மற்றைநா ளிருவருக்குந் தக்கபடி மணம்புரிந்தா
ரொற்றைமால் வரைச்சிலையா ருண்மைபரு ளுளங்கொண்டு
பற்றையா ரிருவோரும் பரவின்பந் துய்த்தமர்ந்தார் கககச

இடையறு மின்பத்துளிவ்வாறு மகிழ்தருநாண்
மடையறு வயல்வளஞ்சூழ் முனைப்பாடி வளநாடர்
புடையறு வடியரொடும் பொலிபெருமான் றாள்வணங்க
வடையறு மலர்செறிதே வாசிரிய னெதிரடைந்தார் கககரு

ஆங்குநிறை யடியாருக் கடிமையாம் வகைநினைந்து
தேங்குமருட் புற்றிடங்கொண் டுறைவார்முற் சென்றடைந்தார்
வீங்குமடி யவர்குழுவுள் விறன்மிண்ட ரென்பவர்தா
மோங்குமவ ருளத்துண்மை யுணராது சினங்கொண்டார் கககசு

சீலவடிய ரைவணங்கான் செலுமிவனைப் புறம்பென்ன
ஞாலமறி தரவண்டா னம்மானென் றொருவர்சொலச்
சாலவரு ளன்னுனும் புறம்பெனக்கை தட்டுமென்று
ரேலவிது நிகழ்காலை யெழின்மணிப்புற் றிடங்கொண்டார் கககஎ

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேனென்
றெல்லைமுத லெடுத்தடியர் தமைப்பாடி யுவத்தியென
வல்லையவ ரவ்வாறு தனித்தனியே வகுத்தோதி
யெல்லையிலாப் புகழாரை யிறைஞ்சிபவர் நடுப்புக்கார் கககஅ

ஓவாத மகிழ்ச்சிமிக வாரூர ருறைநாட்டோ
மேவாத குண்டையூர்க் கிழவரெனும் வேளாளர்
தாவாத பரவையார் தந்திருமா ளிகைக்கமைய
நீவாத தண்டுலமுற் படியெடுக்கு நியதியார் கககசு

விளைவின்றி யதுசுருங்க முட்டுமே வியவொருநா
ளுளைவொன்றி யவர்வருந்தி யுணவின்றித் துயில்காலை
வளையொன்று திருக்குழையார் னென்மலைதந் தோமகிழ்ச்சி
திளையொன்று கவலையொழி யென்றருளிச் செய்தனரே கஉ0

அதுபொழுது விழித்துணரா வாளெடுக்க முடியாநென்
முதுமலைகண் டுடையவர்பான் மொழிகுவனென் றவர்வந்தார்
விதுவணிவா ரருளவெதிர் விரைந்தடைந்த வன்றொண்டர்
கதுமெனமற் றவர்க்கண்டு நென்மலையுங் கண்ணுற்றார் கஉக

கொடுத்தவரே யெடுப்பதற்காள் கொடுத்திடுவா ரெனக்கருதி
யடுத்தகோ ளிலிசார்ந்து நீளநினைந் தடியேனென்
றெடுத்தமுதற் றமிழ்பாட விரவருள்வோ மெனல்கேட்டு
விடுத்தகவ லையராகி மேவினார் திருவாரூர் கஉஉ

வலக்குரிய பூதங்க ளிரவிடைநென் மலைகவர்ந்து
நலக்குரிய திருவாரூ ரகம்புறமு நன்கிடலு
நிலக்குரியர் நெற்குரிய ரெனநிலவு பறைசாற்றிக்
கலக்குரிய சாந்தமுலைப் பரவையார் களிப்புற்றார் கஉங

நல்லபுகழ்க் கோட்புலியார் நாட்டியத்தான் குடியடைய
வல்லவவ ரெதிர்கொண்டு வன்றொண்டர் தமைப்போற்றி
யில்லநிறை தரப்புகுத்தி யீன்றவெழிற் சிங்கடியார்
சொல்லவரும் வனப்பகையார் தமைக்கொணர்ந்து தொழப்பண்ணி

இருவரையுங் குற்றேவற் கியைவித்துக் கொள்ளுமெனப்
பொருவருஞ்சீர் வன்றொண்டர் போந்தவிரு வருங்குறங்கின்
மருவுறவைத் துச்சிமோந் துறமகண்மை கொண்டெழுந்து
திருவளர்கோ யிலினவரைச் சிறப்பித்துத் தமிழ்பாடி கஉரு

சிங்கடியார் வனப்பகையா ரப்பனெனத் தமைச்சேர்த்துப்
பொங்கடியார் குழாஞ்சூழ வலிவலத்துப் புக்கிறைஞ்சி
யெங்கள்சிவ பெருமானை வலிவலத்துப் கண்டேனென்
றங்கியலுந் தமிழ்பாடி யழகியவா ரூரடைந்தார் கஉசா

பங்குனியுத் திரத்திருநாள் குறுகவரப் பரவையா
ரங்குநவில் பெருங்கொடையின் குறையறுப்பா னகத்தெண்ணிச்
செங்குமுத மலர்வாவித் திருப்புகலூர் சென்றடைந்தார்
பொங்குமருட் பெருமான்முன் போந்தகுறிப் புந்தெரிந்தார் கஉஎ

இறையவர்தந் திருவருளா லின்றுயிலாங் கணேந்திடலு
முறைமையின்முன் றெழுதெழுந்து முன்றிலினோர் புடையடைந்து
குறைவில்பல விட்டிகைகள் கொணர்வித்து நிலம்பரப்பி
நறைகெழுமுத் தரியமிடா நன்குதுயி லுற்றனரே கஉஅ

விழித்தனரிட் டிகையனைத்தும் விளங்குசெழும் பொன்னுகக்
கொழித்தபெரு மானருளே கொண்டாடி யுவந்தெழுவா
ரிழித்தக யவரைப்பாடா திவற்பாடு மெனப்பாடி
யொழித்தகவ லையராகி யுறக்கொண்டு புறம்போவார் கஉகூ

திருப்பனையூர்ப் புறத்தணையத் தேவர்பிரா னெதிர்வந்து
விருப்பமிகு நடங்காட்ட விழைந்ததுகண் டினிதிறைஞ்சி
யருப்பிதழி யாரரங்கி லாடவல்லா ரெனப்பாடிக்
கருப்புவயற் றிருவாரூர் கலந்தமர்ந்தார் வன்றொண்டர் கங0

ஆரூரிற் புற்றிடங்கொண் டமர்வாரைத் தொழுதிறைஞ்சி
யேரூரும் பிறதலங்கள் சூழவுஞ்சென் றினிதேத்தி
நீரூருஞ் சடைமுடியார் நிரம்புபுகழ் பலபாடி
வாரூரு முலைப்பரவை யாரொடுமுண் மகிழ்ந்தமர்வார் கஙக

நக்குமதி லெரித்தாரை நன்னிலத்துப் பெருங்கோயில்
புக்குநிகழ் தண்ணியல்வெம் மையினுனென் றறப்புகழ்ந்து
மிக்குமகிழ் வேதியர்சூழ் வீழிமிழ லையையடைந்து
திக்குடையீ ரடியேற்கு மருளுமெனுந் தமிழ் செப்பி கஙஉ

ஆங்ககன்று வாஞ்சியத்தி னண்ணலார் தளிபுகுந்து
பாங்குபெறப் பொருவனு ரென்றெடுத்துப் பாடியபின்
றேங்குவள மலிநறையூர்த் திருச்சித்தீச் சுரம்பணிந்து
வாங்குமரு ளார்நீரு மலருமெனப் பாடினுர் கஙங

திரைசெயரி சிற்கரைசேர் திருப்புத்தூர்த் தளிபுகுந்து
தரைசெய்புகழ்ப் புகழ்த்துணையார்க் கருள்செய்திறந் தனைப்பாடி
வரைசெய்சிலை யார்பதிகண் மற்றிடையுள் ளனபோற்றிப்
புரைசெய்கலை பலமலியு மாவடுதண் டுறைபுகுந்தார் கஙச

வேறு.

தேடுந் திருவா வடுதுறையிற் செங்கட்சோழர் திறஞ்சிறப்பித்
தாடுந் திருச்சே வடியாருள் ளுவத்தற் கமைந்த தமிழ்பாடி
நீடும் பொன்னித் தென்கரையி னிலவும் பதிகள் பலவணங்கிப்
பாடு மியலா லிடைமருதூ ரடைந்தா ரெவரும் பரிந்தேத்த கநடு

எந்தை பிரானே யெனமுடியு மியற்செந் தமிழ்ப்பா மாலைபுனைந்
தந்தை யடையா வன்றொண்ட ரடிகளுக்கேச் சுரம்புகுந்து
முந்தை முதல்வர் முன்னின்று முதிரு மன்பு பொங்கியெழ
நிந்தை யில்லாப் பிறையணிவா ணுதலாட்பாடி நேர்தொழுதார் கநகூ

விரும்பு கலய நல்லூரை மேவி யுறைவர் முன்னின்று
குரும்பை முலை யென்றெடுத்ததனுட் குலவு புராணங் களைச்சிறப்பித்
தரும்பு பதிகம் பாடிப்போ யழகர்குடமூக் கினையடைந்து
பெரும்புங் கவர்தாழ் திருமுன்னர் நின்று பாடிப் பெயர்ந்தனரால் கநஎ

ஆங்கு நின்று வலஞ்சுழியை யணைந்துபெருகு மன்புருக
வோங்கு பதிகம் பாடிப்போ யும்பர் பரவு நல்லூரிற்
றேங்கு கங்கைச் சடையாரைச் சேவித் தேத்தி யெவ்வளமுந்
தாங்குஞ் சோற்றுத் துறையழனீர் பாடித்தொழுதார் தமிழ்வல்லார்

உம்பர் பெருமான் கண்டியூ ருவந்து போற்றி யையாற்று
நம்ப ரடித்தா மரைவணங்கி நகுபூந் துருத்தி மாநகரத்
திம்ப ரேத்த வமர்வாரை யிறைஞ்சி யாலம் பொழில்வணங்கி
யம்ப ராக மலர்ச்சயனத் தமர்ந்தா ரங்க ணாரூரர் கநகூ

நிலவு வளஞ்சான் மழபாடி நினைக்க மறந்தா யோவென்று
குலவு பெருமா னெழுந்தருளிக் கூறிமறைய வுடனெழுந்து
கலவு கெடுநீர்ப் பொன்னிவட கரைப்பா லெய்தி யுள்ளுருகி
யுலவு பொன்னார் மேனியனே யென்றுபாடி யுறத்தொழுதார் கசூ0

திருக்கா விரியி னிருமருங்குஞ் சென்று சென்று பணிந்தேத்தி
யுருக்கா நின்ற பேரன்பி னுள்ளமுருகி மயிர்சிலிர்ப்ப
மருக்கா வளையு மானைக்கா வணைந்து வானோர் பெருமான்முற்
பெருக்கா தரத்திற் பணிந்தெழுந்து பிறங்கு பதிகம் பாடுவார் கசூக

கோழி வளவன் மணியாரஞ் சாத்து திறமுட் கோத்தமைந்த
வாழிவளர்செந் தமிழ்பாடி மற்றுஞ் சுற்று தானமெலாம்
பாழி மருவச் சென்றுசென்று பணிந்து பணிந்து கருணைக்கோ
ராழி யனையார் திருப்பாச்சி லாச்சி ராமஞ் சென்றடைந்தார் ௧௪௨

முன்பு பணிந்து பொருட்காதல் குறிப்பின் மொழிய முதல்வனார்
வன்பு மருவி னார்போல வாளா விருப்ப வுளம்புழுங்கி
யென்பு கரையப் பிரானார்மற் றில்லை யென்ன விசைக்கின்றா
ரன்புபெருகும் வன்றொண்ட ரான்ற முறைப்பா டுடையார்போல் ௧௪௩

பாட்டு முழுதுங் கேட்டுவந்து பரமர்நிதியங் கொடுத்தருள
வேட்டு வணங்கி யப்பாலும் விரும்புந் தலங்கள் பலபோற்றி
நீட்டு சடையார் பைஞ்ஞீலி நேர்சென் றிறைஞ்சி வன்றொண்டர்
நாட்டு தமிழ்ப்பா வாரணிய விடங்க ரீற்று நவின்றனரே ௧௪௪

அந்தத் தலநின் றெழுந்துபோ யழகரீங்கோய் மலையாதிச்
சந்தத் தலங்க ளுறப்போற்றி தமிழ்நா வலர்தம் பெருமானார்
முந்தக் கோங்கிற் பாண்டிக்கொடு முடியி னமச்சி வாயப்பேர்ப்
பந்தத் தொடர்நான் மறந்தாலும் பகரு மென்னா வெனப்பாடி. ௧௪௫

அன்ன தலத்தி னின்றும்போ யன்பர் கூட்டம் புடைசூழச்
சொன்ன மலியும் புகழ்க்கொங்கிற் றுவன்று தலமெ லாம்பணிந்து
பொன்னங் கடுக்கைச் சடைமோலிப் புத்தேணடனம் புரிகின்ற
பின்ன மில்லாக் காஞ்சிவாய்ப் பேரூ ரடைந்தார் பெருந்தகையார் ௧௪௬

பேரூர் வாழும் பெருமானார் பிரியாத் தோழர் வரவுணர்ந்து
சீரூர் தருமோர் விளையாட்டாற் செய்யிற் றொழில்செய் மாக்களெனக்
காரூர் நிறத்தோர் வடிவெடுத்துக் கருதுமரைக்கோ வணமசையப்
பாரூ ரழுக்குக் கலையொன்று பதும னுணரா முடிச்சூழ்ந்து ௧௪௭

ஒருமண் டொடுங்கூர்ங் கருவியெடுத் தொருதோ ளேற்றி வயற்புகுந்தார்
பருவம் பொலியு முமையுமொரு பள்ளியாகி யுடனணைந்தா
ளிருமைந் தர்களுந் தகுமுருக்கொண் டூன்றதாய்பின் றொடர்ந்தனராற்
பெருவன் றொண்ட ராலயத்துப் பேணிப் புகுந்தார் கண்டிலரால் ௧௪௮

எம்மா னெங்கு மறைந்திருந்தா னென்றுதேடி யுழிதருகா
லம்மான் சென்ற விடங்கண்ணு னந்தி யுணர்த்த வாங்குணர்ந்து
நம்மான் வயல்வாய்த்தொழில்புரியுங் கருத்தென்னென் றுநகைத்தருளிச்
செம்மா னயனப் பரவையார் கொழுந ரங்குச் சேர்தருவார் கசூகூ

ஆய காலை மண்டொடுகூர்ங் கருவி யங்கை யகங்கொண்டு
பாய வயலிற் கங்கரிந்து பரவ வரப்பி னேற்றிடுவார்
மேய மடைவாய் திறந்திடுவார் திறந்த மடையை விரைந்தடைப்பார்
தோய மொழியக் குளிரிழைத்த துவாரத் தலையின் மிதித்திடுவார் கருய

இளைத்தார் போல வரப்பின்மிசை யிருப்பார் வெயர்வு வழித்தெறிவார்
விளைத்தார் பச்சைப் பள்ளியிடு மன்னமிருகை விரித்தேந்திக்
களைத்தார் யாரும் வம்மினெனக் கரைந்து கனிவா யுண்டிடுவார்
திளைத்தார் மகாரைக் கூவுவார் செங்கையேந்தும் படியுரைப்பார் கருக

இந்தவண்ணம் வயற்றொழிலி னெம்மா னமைய வாரூரர்
சந்த மருவ வெதிரடைந்து தாழ்ந்து நிலத்துப் பணிந்தெழுந்தார்
மைந்தர் பார்ப்பான் பள்ளனடி வணங்கி னுனென் றுறநகைத்தார்
முந்த வுறுதோ மமைகருதி மொழிவார் நகையு முகத்தரும்ப கருஉ

அடிகள் வயல்வாய்த் தொழில்புரிதற் கடுத்த கருத்தை யறியகிலேன்
முடிக ணுன்கு மெங்கொழித்தீர் முயங்கு மழுக்குக் கலையெந்தக்
குடிக டரப்பெற் றீர்நுமக்குக் கூலி கொடுப்பா னெவனிந்தத்
தடிகள் விளையின் வாரமெவன் சாற்றல் வேண்டுஞ் சற்றெனக்கே

செம்பொன் பள்ளி சிராப்பள்ளி தெய்வக் கொல்லி யறப்பள்ளி
யம்பொன் பொலியும் மகத்தியான் பள்ளி யான்ற நனிபள்ளி
கொம்பிற் குயில்கூஞ் சிவப்பள்ளி கோதி லாத தவப்பள்ளி
வம்பிற் பொழில்சூழ் பரப்பள்ளி வையம்புகழுஞ் சிரப்பள்ளி கருச

இந்தப்பள்ளி முதலாக வெண்ணிலாத பெருவளச்சம்
பந்தப் பள்ளி யிடங்கொண்டீர் பச்சைப் பள்ளி மகிழ்வதற்கோ
முந்தக் கமடம் பிடித்தசிறுன் மொய்த்த மீனும் பிடித்திடுவா
னிந்தப் புதுமை நன்றுகுகு மென்று நகைத்துப் பேசினர் கருரு

அன்ன பொழுதவ் வுருவமறைத் தையர் தளியு ளெழுந்தருள
முன்ன ரிறைஞ்சி நடங்கண்டு மொழிமா லைகளும் பலசாத்தி
நன்ன ரந்தத் தலமொருவி நாடுங்காடுங் கடந்துபோய்ப்
பன்ன வருவார் வெஞ்சமாக் கூடல் பணிந்தா ராரூரர் கருசு

எறிக்குங் கதிர்வே யுதிர்முத்த மெடுத்துப் பாடி யெண்ணினர்தோம்
பறிக்குந் தலங்கள் பலபணிந்து பராய்க்கற் குடிசார்ந் திகன்முறிய
முறிக்கும் விடையா ருங்கொடியா யென்னு முதற்செந் தமிழ்பாடிக்
குறிக்கும் புகழா ராறைமேற் றளியை வந்து குறுகினார் கருஎ

ஆங்கு வணங்கி யின்னம்ப ரணைந்து பணிந்து புறம்பயத்தை
யோங்கு மங்க மோதியென வுரைத்துப் போந்து தொழுதகன்று
தேங்கு புகழ்க்கூ டலையாற் றூரார் சேர்ந்துஞ் சேரார் முதுகுன்றப்
பாங்கு மருவும் வழிதேர்வார் பரம ருமையோ டெதிர்நின்றார் கருஅ

நின்றார் தம்மை முதுகுன்ற மடைய நினைந்தேன் வழியுரைமி
னென்றா ரவரு மிதுவழியென் றிசைத்துத் துணையே யாய்க்கூடச்
சென்றார் திருக்கூ டலையாற் றூரார் சேர்த்து மறைந்தார் வியப்பெய்தி
நன்றா ரடிகள் வழிபோந்த தறியே னென்ன நவின்றேத்தி கருகூ

பின்னர் முதுகுன் றினையடைந்து பேணு நஞ்சி யிடைபாடி
நன்ன ரடையும் பொருள்வேண்டி மெய்யை முற்றப் பொடிநவில
வன்னர் பன்னீ ராயிரம்பொ னருள வாரூர் வரவேண்டு
மென்னமணிமுத் தாற்றிட்டாங் கியையுங் குளத்துக் கொள்கென்றார்

மச்சம் வெட்டி யாற்றிட்டு மன்னு கடம்பூர் பணிந்தேத்திக்
கச்ச மில்லா வளத்தில்லை கலந்து நடனங் கும்பிட்டாங்
கச்ச மகலப் பேரூரிற் கண்ட நிலைதே ரருந்தமிழ்சொற்
றெச்ச முதல்வன் கருப்பறிய லூரி னகஞ்சார்ந் திறைஞ்சினார் கசுக

சிம்மாந் தென்னுந் தமிழ்பாடித் தெய்வ மண்ணிப் படிக்கரைசார்ந்
தம்மா முன்ன வன்பாடி யணிவா ளொளிபுற் றூரடைந்து
கும்மா சகலத் தலைக்கலனென் றெடுத்துப் பாடிக் குலவுருமுன்
மும்மா வுருவார் கானாட்டு முள்ளூர் வள்வாய் பாடினார் கசுஉ

மத்த யானை யெடுத்தெதிர்கொள் பாடி யடைவோ மெனவழுத்திச்
சித்த மகிழ்ழூப் பதுமில்லை யென்னச் சிறக்குந் தமிழ்பாடி
யத்தர் வேள்விக் குடிதுருத்தி யணைந்து போற்றி யுளங்கசிந்து
பத்தர் போற்றச் சின்னாளங் கமர்ந்தார் பரவி வன்றொண்டர் ௧௬௩

மன்னு மாங்கு மணக்கோல வாழ்வு கண்டு மிகமகிழ்ந்து
பன்னு தானம் பலவணங்கிப் பரமர் திருவா ரூரடைந்து
முன்னு மணிப்புற் றிடங்கொண்ட முதல்வற் போற்றிப் பரவையார்
துன்னு மணிமா ளிகையடைந்தார் தோலா விறல்சால் வன்றொண்டர்

கதுமென் றெதிர்வந் திறைஞ்சினரெங் களையு நினைவிற் கொண்டருளிற்
றிதுநன் றிறம்பூ தெனத்தழூவி யீரைந் தீரா யிரஞ்செம்பொன்
முதுகுன் றிறைவ ரளித்தனர்நா முத்தாற் றிட்டு வந்தனமொண்
பதும முகத்தா யாலயமேல் பாங்கர்க் குளத்தி லெடுத்தளிப்பாம் ௧௬௫

வருதி யென்றார் முறுவலித்தார் மாதர் மொழிபொய் யாதென்
றொருதண் கமலா லயவடகீ ழூற்று ரவரு முடன்சென்றார்
பொருவி லன்ப ரன்றொன்று போகட் டடனே டுறுவார்போன்
மருவு குளத்து ளிறங்கினார் தடவி னார்மா நிதிகாணார் ௧௬௬

ஆற்றின் மடுத்த பொருள் குளத்திற் றேடற் கமைந்தீ ரழகிதென
வேற்றி னிமில்வெம் முலைமடவார் செவ்வா யிளவெண் ணகையரும்பச்
சாற்றின் பரவை முகத்தினகை தழைபத் தழையென் னிட்டளத்தை
மாற்றி னுய்வேன் பொன்செய்த மெய்யீ ரெனும்பா டலைவகுத்தார்

முழுதுங் கொடுக்க வேரம்பர் முன்னீ மாற்றுக் குறையுரைப்பப்
பழுதங் கறுத்தார் பெருமானார் பாறு தாங்கி யெனவெடுத்தே
யெழுது மறைபா டினர்சிலநா ளிருந்தார் பரவை பாரோடுந்
தொழுது நள்ளா றணைந்திறைஞ்சிப் பூவில்வாசத் தொடைபுனைந்தார்

பன்னு கடவூர் வீரட்டம் பணிந்து பொடியார் தமிழ்பாடி
முன்னு மயானஞ் சென்றிறைஞ்சி மருவார் கொன்றை மொழிசாத்தி
மின்னு வேணி வலம்புரத்தார் மிளிருந்திருமு னெனக்கினியென்
றன்னும் பதிக மதுபாடி யோங்கு சாய்க்கா டுறத்தொழுதார் ௧௬௯

திருவெண் காடு பணிந்தேத்தித் தேவர் பெருமா னனிபள்ளி
மருவி யன்பி ளுதியனென் றெடுத்துப் பாடி வன்றொண்டர்
பொருவி னின்றி யூரணிகொ ளாடை யெனும்பாப் புனைந்தேத்தி
வெருவி னீடேர் பணியாது செல்வார் நினைந்து மீண்டணைந்தார் கஎ0

பணியா விடலா மேயென்னும்ப திகம்பாடித் திருப்புன்கூ
ரணியார் பெருமான் கழல்போற்றி யான்ற கோலக் காவணையப்
பணியா பரண ரெதிர்காட்சி கொடுக்கப் பணிந்து பொற்றாள
நணியா ரன்பர்க் களித்ததிறஞ் சிறப்பித் தினிய தமிழ்நவின்றார் கஎக

காழி வலங்கொண் டிறைஞ்சிப்போய்க் குருகா வூரைக் கலந்திடுவான்
வாழி வருவார் பசிவருத்த மாற்றப் பொதிசோ றுடனெடுத்தே
யாழி யனைய புனற்றடமு மாக்கி நிழற்பந் தருமமைத்து
வீழி புரைவா யுமைகொழுந ரமர்ந்தா ரந்த வேலைதனில் கஎஉ

இளைத்த தொண்ட ருடனிளைத்தங் கெய்து மாரூ ரரைநோக்கிக்
களைத்த தெவனிப் பொதிசோறு கைக்கொண் டருந்திப் போதுமென
வளைத்த கருணை யென்றேற்றுண் டுவந்து வண்பந் தரிற்றுயில்போ
துளைத்த திறமே வுறப்பந்த ரோடுங் கரந்தா ருமாபதியார் கஎ௩

தெரிந்தித் தனையா மாற்றமறிந் திலனென் றெடுத்துச் செந்தமிழ்சொற்
றிரிந்து கழிப்பா லையைவணங்கித் தில்லை மன்ற மிறைஞ்சிப்போய்ப்
பரிந்து தினைமா நகர்பணிந்து பரவுநாவ லூரடைந்து
முரிந்து போகாக் கோவலனுன் முகனென் றெடுத்துப் பாடினார் கஎச

நன்று மலியுந் தண்டகநன் னாட்டுக் கழுக்குன் றினையடைந்து
கொன்று செய்த தமிழ்பாடிக் குலவு திருக்கச் சூரடைந்து
மன்று ணடிக்கும் பதம்போற்றி வருந்து பசிபால் வெளிவந்து
முன்றி லமர்ந்தார் கச்சூர்வாழ் முதல்வ ரிலந்தோ றமுதிரப்பார் கஎ௫

இரந்த வமுதுங் கறியுமளித் தினிது நுகரு மெனப்பகரப்
பரந்த கருணை யென்னென்று பரவி யேற்றுண் டினிதமர்ந்தார்
வரந்த வாத பெருமானார் மறைந்தா ரதுகண் டச்சமுற்றுச்
சுரந்த முதுவா யோரியென வெடுத்துத் தொடுத்துப் போற்றினார் கஎசா

ஆங்கு நின்று பஃறலமு மாங்காங் கெய்திப் பணிந்திறைஞ்சி
யோங்கு வளங்கூர் திருக்காஞ்சி யுற்றார் தொண்ட ரெதிர்கொண்டு
தேங்கு முவப்பிற் பணிந்தெழலுஞ் செங்கை கூப்பி யெதிர்பணிந்து
வீங்கு கருணைப் பெருமானார் மேய கோயி லுட்புகுந்தார் கஎஎ

மலையா டொழுத பாதமலர் வணங்கிப் போற்றி யின்புற்றே
யலையாள் சடையார் மேற்றளிநொந் தாவொண் சுடர்மா லிகைசாத்திக்
கலையாள் புலவ ரினிதேத்து மோண காந்தன் றளிகலந்து
நிலையாள் பெருமான் முன்னின்று நெய்யும் பாலும் பாடியே கஎஅ

மன்னுங் கச்சி யனேகதங்கா வதத்துத் தேனெய்த் தமிழ்பாடி
யுன்னும் வன்பார்த் தான்பனங்காட் டூரின் விடையின் மேல்வருவா
னென்னுந் தமிழ்மா லிகைசாத்தி யிலங்குந் திருமாற் பேறணைந்து
துன்னு மன்பிற் பணிந்துதிரு வல்ல நகருந் தொழுதனரால்

ஓங்கு திருக்கா ளத்திமலை யுற்று முதல்வர் கழலிறைஞ்சிப்
பாங்கு பெறுகண் ணப்பர்பதம் பணிந்துள் ளுருகிப் புளகித்து
வீங்கு புகழ்சால் செண்டாடும் விடையா வென்னுந் தமிழ்பாடி
யாங்கு மருவிப் பருப்பதந்தாழ்ந் தமைய மானு மெனப்பாடி கஅ0

திருக்கே தாரம் பணிந்தெழுந்து திகழ்வாழ் வாவ தெனப்பாடி
தருக்கே றாத மனத்தொண்டர் தாஞ்சூழ் தரநற் பதிபிறவு
முருக்கோன்பிற் பணிந்துபணிந் தும்பர் பெருமானருள்பெற்று
மருக்கே தகைவா சங்கமழு மொற்றி யூரில் வந்தடைந்தார் கஅக

தொண்ட ரெதிர்கொண் டுறவணங்கத் தொழுது வளஞ்சால்கோயில்புகுந்
தண்டர் பெருமான் றிருமுன்ன ரணைந்து பணிந்து நெஞ்சுருகிக்
கண்டு நிகரும் படிபாட்டும் பாடியென்று கசிந்தெடுத்துக்
கொண்டு துதித்துப் புறம்போந்து குலவ வங்க ணினிதமர்ந்தார் கஅஉ

நலமார் தொண்டை நன்னாட்டின் ஞாயி லுயர்ஞா யிறுவட்டத்
தலமா நகரின் மிளிர்நாலாங் குலத்து மேன்மை சமைந்துள்ள
நிலமார் புகழ்ஞா யிறுகிழவர் தம்பா னிலவ வவதரித்தா
ரலமா ரிவர்க்காக் கயிலைநின்று மருளாற் போந்த வனிந்திதையார் கஅ௩

பின்னந் தவிர்சங் கிலியாரென் பெயர்பெற் றமைதாள் விருப்போங்கப்
பொன்னங் கொடியோ வெனவளர்ந்து பொங்கு மங்கைப் பருவமுற
மின்னங் கொடிக்கு மணப்பருவ மேய தெனத்தந் தையார்புகல
வன்னம் பொருவு மனைவியார் தகவின் மணஞ்செய் தருளுமென்றார்

ஈது கேட்ட சங்கிலியா ரென்பார் நடுங்கி நிலத்தில்விழ
வோது தந்தை யாரொடுதா யாரு மோடி யுறவெடுத்துத்
தீது வந்த தெவனென்று செப்பி முகமன் பலசெய்யக்
காது கொடுஞ்சொ லென்பொருட்டுக் கரையீ ரிவ்வா றெனப்புகன்றார்

அன்று முதலச் சுற்றடக்கி யமர்ந்தா நண்மை யறியாது
தோன்று முறையு ளானொருவன் றாயோர் சிலரை மகட்பேச
நன்று விடுத்தா னவருமனை நண்ணி யுரைத்தா ரக்காலை
யொன்று மவனே யிறந்தானென் றோலை பொடுமோ ராளணைந்தான்

அன்ன துணர்ந்த சங்கிலியா ரம்மா னொற்றி யூர்த்தளிமு
னன்னரொருமா ளிகைசமைத்தெற் கொடுபோ யங்கு நாட்டுமெனச்
சொன்ன வாறே தந்தையார் துணிவுற் றியற்றித் தோழியரு
மென்ன திருவங் களும்பொருத்தி யிறஞ்சித் தமது நகரடைந்தார்

மன்னு மாடங் குடிகொண்டு வள்ளற் றளியோர் மண்டபத்துத்
துன்னு மெழினி யுள்ளமர்ந்து தூய மலர்மா லிகையியற்றி
முன்னு பெருமாற் கெடுத்துதவி வருவா ரொருநாண் முகந்தோற்றி
மின்னு நிகர மறைந்தாரை விதியிற் கண்டா ராரூரர் ௧௮௮

கண்ட பொழுதே யுளங்கலங்கிக் கரைசெய் தடங்காக் காதன்மிக
வண்டர் பெருமா னருள்வழியே யடைந்தா ரிருவ ரவருண்மயன்
மண்டு பரவை யவளொருத்தி மற்றை யொருத்தி யிவளென்று
கொண்ட வுணர்வின் விரைந்தெழுந்து கோமான் முன்னர்த் தொழுதுரைப்பார்

அண்ணா நின்னை யன்றி யொன்று மறித ராவென் னுளந்திரித்த
பண்ணார் மொழியாள் பரவையினிப் பதியு மொருத்தி யாயினா
ளெண்ணா நிற்ப தொன்றுமிலை யென்செய் வேனென் றிறைஞ்சுதலும்
பெண்ணோர் பாக னின்றிரவு பேசி முடிப்போ மென்றுரைத்தான் ௧௯0

இரவு வருவ தென்றுகவன் றிருந்தார் நம்பி யாரூர
ரரவு புனைவா ரன்றிரவே யவிர்சங் கிலியார் பாற்சென் று
குரவு புனையுங் குழலாய்நிற் கூடல் வேண்டி யெனையிரந்தான்
பரவு தவத்தான் மிகுமுயர்வு படைத்தான் புகழ்சால்வன்றொண்டன்

என்று புகலச் சங்கிலியா ரெழிலா ரூரிற் பரவைபா
லொன்று காத லுடையரவ ருணர்ந்து கொள்ளு மெனத்தெரிப்பக்
குன்று முலையா யனையன்பாற் கூடிப் பிரியா தொருசபத
மின்று விருப்பிற் கோடியென விசைத்தா ரூரர் முன்சென்றார் ௧௯௨

இறைவரணைந்தாரெனத்தெரிந்தங்கெதிர்சென்றிறைஞ்சியவரொருசொ
லறையு முனமென் முடிவுசெய்தீ ரறையு மெனயா மெடுத்தோத
நறையொண் குழலாள் சம்மதித்தா ணம்மா லொன்று மிலைநீசெய் [றார்
குறையொன் றுண்டென்றனர்யான்செய்குறையுண்டெனன்மெய் கொல்லென்

பிரியா திருத்தற் கொருசபதஞ் செய்யு மாறு பேசுகின்றா
ளாரியா யதனை யார்செய்வ துரைத்தி யென்ன வுளமஞ்சி
யரியாய் சபதஞ் செயவரும்போ தமையத் தளிசால் கருக்கிரகந்
தரியா தேகி மகிழடியிற் றங்கு கென்றார் சம்மதித்தார் ௧௯௪

பின்னு மவரை யறியாது பிறங்கு மொருசங் கிலிபாற்போய்
மன்னுஞ் சபதம் புரிகாலை மகிழ்க்கீ ழென்று சொல்கவென
முன்னு முண்மை யெடுத்தோதி முதல்வர் மறைந்தார் சங்கிலியார்
பன்னு மனைத்துந் தோழியர்க்குப் பகர்ந்து விடியற் றனிவந்தார் ௧௯௫

இரவு துயிலா தெதிர்பார்த்தங் கிருந்தார் மாமைச் சங்கிலியார்
வரவு தெரிந்து பின்படர்ந்து வள்ள லருளான் மணத்துமென
விரவு மயலா ரூரர்சொல் வாளா தணைந்தார் மெல்லியலார்
பரவு மிகுளை மார்சபதம் பண்ண வேண்டு மெனப்பகர்ந்தார் ௧௯௬

ஆனாற் றிருமுன் வாருமென வைய ரேநீர் மகிழடியிற்
றேனாற் புரிந்த மொழிகாணச் செய்த றகுமென் றவருரைத்தார்
மானாற் பொலிகண் மடமாது மறுக்கு மீதும றுத்தலினங்
கோனாற் பின்பு தீர்த்துமெனக் குறித்தார் செய்யத் துணிந்தனரே

மூவா மகிழை யாரூரர் முக்காற் றூழ்ந்து நுமையென்று
மேவா தொழியே னெனச்சபத வினைமுற் றினர்சங் கிலியார்கண்
டாவா பெரியோர் தமைச்சபத மாற்று மாறு செய்தனநந்
தாவா வருள்கூர் பிராணுணை தாங்கி யென்றுள் ளுடைந்தகன்றூர் ௧௯௮

ஆய காலை நகருள்ளா ரண்ண லருளா னழகுநல
மேய புகழ்ச்சங் கிலியார்க்கும் விரும்பு நாவ லூரருக்குந்
தூய மன்ற றகுதிபெற முடித்தார் தொலையா மகிழ்வெய்தி
நேய மருவி யிருவோரு நிறைபே ரின்பந் துய்த்தனரே ௧௯௯

பன்னா ளிந்த வாறுசெலப் பரவும் வசந்த காலமெனு
நன்னாளடையத் திருவாரூர் நயந்தார் பவனி நினைப்பெழலும்
பொன்னுண் மணிப்பூ ணாரூரர் புகல்பத் திமையு மென்றெடுத்துத்
தென்னா ளொருசெந் தமிழ்பாடிச் சேவித் தேத்தி யிரங்குவார் ௨00

பேரூ ரதனை நீங்குதற்குப் பெரிதும் விலக்காஞ் சபதமென
நீரூர் விழிய ராய்ப்புழுங்கி நிகழ்வார் நிகழுநா ளொருநா
ளாரூ ரதனை மிகவுநினைந் தண்ண லடிதாழ்ந் தெழுந்துபோய்ச்
சீரூ ரதனை நீத்தனர்கண் மறையத் திகைத்து மூர்ச்சித்தார் ௨0௧

அழுக்கு மெய்கொ டெனும்பதிக மடியேன் செய்த சபதமற
விழுக்கு வந்த துகருதி யென்கண் மறைத்தாய் தெரியும்வித
மொழுக்கு மருந்தொன் றுரையாயோ வொற்றி யூரா யெனப்பாட
வழுக்கு நீப்பா ரேதிலர்போல் வாளா விருந்தா ரதுகண்டு ௨0௨

போது வார்கள் வழிகாட்டப் போந்து முல்லை வாயிலணைந்
தேது செயல்சங் கிலிக்காக வென்கண் மறைத்தீ ரெனப்பாடக்
கோது தவிர்ப்பா ரங்குமுளங் குறியார் போல்வா ளாவமர்ந்தார்
சாது மாக்கள் வழிகாட்டத் திருவெண் பாக்கந் தனைச்சார்ந்தார் ௨0௩

அங்கு மேவிக் கோயிலுளி ரேயென் றறையக் கோலொன்று
தங்கு மாறு கொடுத்துளோம் போகீ ரென்று சாற்றியிட
வீங்குவேண்டா மிக்கோலென் றெறிய வவரு நேரெறியப்
பொங்கு நந்தி யிடைப்பட்டுப் புண்பட் டிரிந்தாங் கிருந்ததே ௨0௪

கொடுத்த கோலே கைக்கொண்டு குலவு மாலங் காட்டயல்சார்ந்
தடுத்த மூத்தா வெனப்பாடி யன்பி னூற லணேந்ததனை
யுடுத்த வரையார் புகழ்பாடி யோங்குங் கச்சித் தளிபுகுந்து
மடுத்த வன்பிற் றமிழ்பவள வண்ணு கண்டா வெனப்பாட ௨0௫

ஒருகண் கொடுத்து மூலச்சுவட்டுக் கோலக் காட்சி யுவந்தளிக்கப்
பெருகன் புடையா ராலந்தா னென்னப் பிறங்கு தமிழ்பாடி
யுருகுந் தரத்தி னத்தியுநண் பகலும் பாடி யும்பர்பிரான்
மருவுந் திருவா ரூரடைத லென்றென் றுரைத்து வழிக்கொள்வார்

வழியி னுள்ள பலதலமும் வணங்கி வணங்கித் தமிழ்பாடி
மொழியு மாமாத் தூரடைந்து முதிரு மன்பிற் போற்றிசைத்துப்
பழிதீர் தொண்டை நாடகன்று பரமர் மேப வரத்துறைசார்ந்
தழிவில் கல்வாய்த் தமிழ்பாடி யப்பாற் பதிகள் பலவணங்கி ௨0எ

பொன்னி நதிநன் னீராடிப் பொருவில் சித்த ரொடுஞ்செங்கட்
சென்னி பரவி வரம்பெற்ற திருவா வடுதண் டுறைக்கோயின்
முன்னி யடைந்து கங்கைவாழ் சடையா யென்னு மொழிமாலே
பன்னி யெனக்கா ருறவென்று பரவிப் பணிந்தார் வன்றொண்டர் ௨0அ

அந்தத் தலநின் றெழுந்தருளு மாரூ ரருக்கு தயகதிர்நேர்
சந்தத் திருமே னியின்மாமை சபதந் தவறுந் தோடத்தா
னந்தக் கருகுற் றொளிமழுங்கி நாடு மிருந்தை யுருவாய்ப்ப
வுந்தச் சமழ்ப்பி னதுநோக்கி யுள்ளம் புழுங்கி முகம்புலர்வார் ௨0௯

பரவை காணி னென்சொல்வாள் பாரோர் பலரு மென்னினைப்பா
ரிரவை வருத்துங் கருங்கண்டத் தெம்மா னருளு மிப்படியோ
திரவை யகத்தி னொருவருநேர் தெரியா வண்ணஞ் செறிந்தபிணி
யரவை யணிவார் திருத்துருத்தி யிடையி னகலு மெனத்துணிந்தார்

வேறு.

சொன்னவா றறிவார்தந் தொண்டரெதிர் கொண்டிறைஞ்சத்
தன்னமோர் பழியுமுறாச் சால்புடைய வன்றொண்ட
ரன்னமே லுயர்த்தவன்போற் றவர்கோயி லெதிர்தோன்ற
முன்னரே கைகுவித்துக் கோபுரத்தின் முன்னிறைஞ்சி ௨௧௧

உள்ளணைந்து வலங்கொண்டு திருமுன்ன ருறத்தாழ்ந்து
வெள்ளமெனக் கண்பொழிய விரவுரோ மஞ்சிலிர்ப்பத்
தள்ளரிய பிணியொழித்துத் தலையளிசெய் தருளென்ன
வள்ளலவ ரித்தளியுள் வடகுளத்துண் முழுகென்றார் ௨௧௨

முழுகென்ற மொழிகேட்டு மொய்த்தகா தலிற்பிணியாம்
வழுவென்ற துணிபினராய் வடகுளமேற் றுறைமுழுகச்
செழுநின்ற விளங்கதிரிற் றிப்பியமா முருப்பெற்றங்
கெழுகின்ற பேரழகோ டெழுந்துகரை நின்றனரே ௨௧௩.

முன்னுநோ யொழிந்தமையும் முன்னுருவிற் சிறந்தமையு
மன்னுமா நிலங்கண்டு வாழ்த்தெடுப்ப வன்றொண்டர்
மின்னுமா மேகமெனும் தமிழ்வேள்விக் குடியுஞ்சேர்த்
துன்னுமா றறப்பாடி யுவந்தங்கு வைகினரே. ௨௧௪

சின்னாளங் கினிதமர்ந்து செஞ்சடையார் தலமனைத்துந்
துன்னாவொண் டமிழ்பாடித் தொழுதெழுந்து விடைபெற்று
மன்னாத ரவிற்போந்து வழித்தலங்கள் பலதொழுது
தென்னாவ லூரிறைவர் திருவாரூ ரகம்புகுந்தார் ௨௧௫

பரவுமா லைப்பொழுதிற் பரவையுண் மண்டளிதொழுதேர்
விரவுதூ வாயாவென் றுரைசெய்விரி தமிழ்பாடிக்
கரவுதவிர் மூலட்டா னத்தமர்ந்தார் கழலிறைஞ்ச
வுரவுமிகு மத்தசா மத்தடைந்தா ருள்ளுருகி ௨௧௬

அடைபொழுது கைக்கிளையி னாற்குருகு பாயவெனு
மிடைசுவைச்செந் தமிழ்பாடி விருப்பொடுமுன் றொழுதிறைஞ்சி
யுடையவரை மீளாவடிமை யுமக்கேயென் றெடுத்தெணிற்றோம்
புடையாரூ ரீர்வாழ்ந்து போதீரே யெனமுடித்தார் ௨௧௭

மற்றைவிழி தாருமென வணங்கியேத் தெடுப்பார்க்குக்
கற்றைநெடுஞ் சடைமுடிமேற் கங்கையணிந் தவரருள்கூர்ந்
தொற்றைவிழி யிவர்க்கென்னா துவந்தருள வதுபெற்று
முற்றையலை யடைந்துதே வாசிரியன் முன்னமர்ந்தார் ௨௧௮

இவர்நிலைமை யிதுவாகப் பிரிவெய்தி யேக்கமுறுக்
கவர்மனமில் பரவையார் கவலுவா ரொற்றியூரா
ரவர்தரச்சங் கிலியாரை மணஞ்செய்த பான்மைசில
ரவரறியச் சொலப்புழுங்கி யழுங்கியுயிர்ப் பார்துயிலார் ௨௧௯

அதுபொழுது பண்டுபோ லடைந்தபரி சனமவர்த
முதுசினத்தா லுட்புகா ராரூரர் முன்னடைந்து
விதுமுகச்சங் கிலியாரை மேவியதோர்ந் தவருற்ற
கதுவழற்கோ பத்தால்யாங் கடியப்பட் டோமென்றார் ௨௨0

இனியாது செய்துமென வெண்ணியுல கியல்புணர்ந்த
நனியாரைக் கூவியவள் சினந்தீர நவிலுமென
முனியாராய்ப் பலவிதத்து மொழியவுங்கொள் ளாதபெருந்
துனியாரா யினியவர்பேர் சொலினுயிர்போ மெனவிரிந்தார் ௨௨௧

இரிந்தவர்க ணடந்ததனை யிறைஞ்சியுரைத் தனராகப்
பரிந்தமனத் தினராகிப் படாதபா டெலாம்படுவார்
புரிந்தசடை நெடுமோலிப் புற்றிடங்கொண் டுறைவாரே
தெரிந்தவா யெழுந்தருளிச் செயினுயலா மெனத்துதிப்பார் ௨௨௨

என்னையா ளுடையானே யெவ்வுலகுந் தொழப்படுவோய்
பொன்னைநேர் சடைமௌலிப் புற்றிடங்கொண் டினிதமர்வோய்
முன்னையூழ் வினையாலிம் முனிவுகொளப் படுந்துயர
மன்னைபோ லிவ்விரவே யெழுந்தருளி னறுமென்றார் ௨௨௩

அல்லனோ யடியாருக் கறுத்தல்செயான் பார்த்திருக்க
வல்லனோ வெம்பெருமான் வல்விரைந்தாங் கெதிர்தோன்றச்
செல்லனோய் தவிர்ந்தடிமேற் சென்றிறைஞ்சி நடந்தவெலாஞ்
சொல்லநீ துயராதி தூதுபோ வேமென்றான் ௨௨௪

என்றருள வுவந்திறைஞ்சி யானடிமை நீயாண்டா
னென்றுமிது புரியாயே லுய்யும்வகை யில்லையெனப்
பின்றொடர்ந்து கணங்களொடு பெருந்தேவர்க ளுந்தொடர
மன்றமர்வார் திருவாரூர் மறுகிலெழுந் தருளினர் ௨௨௫

வந்தாரைப் புறநிறுவி மயிலியலார் மாளிகைமு
னந்தாத புகழாதி சைவருரு நயந்தடைந்து
பந்தார்மெல் விரற்பரவாய் கடைதிறவா யெனப்பரிந்து
மூந்தார்வத் தொடுமணைந்தார் மொய்த்தகுழற் பரவையார் உஉ௬

புற்றிடங்கொண் டமர்வாரைப் பூசிக்கும்பெருந்தகையீ
ரிற்றையிர வொருதனியிங் கெழுந்தருளக் கருமமெவன்
சொற்றிடல்வேண் டிடுமென்று தொழநம்பி வரல்வேண்டு
முற்றசின மொழியென்று ருறச்சினந்தார் பரவையார் உஉ௭

சங்கிலியாப் புண்டார்க்கோர் சார்பிலையீங் கிதுகூறல்
பொங்கியநும் பெருமைக்குப் பொருத்தமில போமென்ன
வங்கவரு முறுவலியா வதுகொண்டவ் வுருமாறித்
துங்கமிகு கணங்களொடு தொண்டர்பான் மீள்பொழுது உஉ௮

எதிர்கொண்ட தொண்டர்தொழு தென்னுயிரா நிலைசெய்தீ
ரதிர்கின்ற சிலம்படியீ ரார்செய்வா ரெனத்துதிக்கக்
கதிர்கொண்ட முலைப்பரவை மனங்கரையும் படிகரைந்து
முதிர்கின்ற வெஞ்சினமே மூளமறுத் தனளென்றார் உஉ௯

ஆண்டவ னீயடிமையவண் மறுப்பளே லென்னடிமை
வேண்டுவதின் றுமக்கென்னுப் பதைத்துநில மிசைவீழ்ந்தார்
தூண்டுறுஞ்செஞ் சுடரனையார் தோழர்துயர் தரியாராய்
மீண்டுமவள் பாற்செல்வோம் வெருவலைநீ யென்றருளி உ௩0

உள்ளபடி யெழுந்தருள வுறங்காது கவலுவார்
வள்ளலா ரேமறையோர் வடிவினணைந் தனர்மறுத்தோ
மெள்ளவுற வென்செய்தோ மென்றுபுழுங் கினர்நிற்பத்
தள்ளரிய பெருமானுர் சார்தரவந் தெதிர்பணிந்தார் உ௩௧

பரவாய்முன் போன்மறுத்தல் பண்ணுதி சிறுசினமும்
விரவாய்நந் தோழன்வர வேண்டுமா லென்றிரப்ப
வுரவாயென் னறியாமைக் கொழிவுண்டோ வெனப்பணிந்தா
ரரவாய்செஞ் சடையாரு மீண்டனரன் புடையார்பால் உ௩உ

இப்போது முன்போல விசைப்பாரோ வென்றழுங்கி
யெப்போது மினியார்முன் னிறைஞ்சியெவன் செய்தடைந்தீர்
முப்போது மயன்முதலோர் மொழிபுகழீ ரெனக்கேட்ப
வப்போது நீபுகுமா றறைந்தோமென் றுரைத்தகன்றார் ௨௩௩

ஐபமறப் பரிசனங்க ளடையுமா முன்புகுத்திக்
கையமரொண் டொடியார்தங் கனகமா ளிகைபுகுந்தார்
தையலா ரெதிர்கொண்டு தாழ்ந்தழைத்துக் கொடுசென்றார்
செய்யுமே வலரகா லத்தாற்சேய் மையரானார் ௨௩௪

ஆங்குநிகழ் கூன்குருடு தீர்த்தேவற் காம்படிசெய்
தோங்குபுகழ் வன்றொண்ட ரொள்ளிழையா ரொடுகலந்து
வீங்குமகிழ்ச் சியரானார் விமலரைத்தூ தேவியசொல்
வாங்குகடல் புடையடுத்த வைப்பெங்கும் பரந்ததால் ௨௩௫

ஏயர்கோன் கலிக்காம ரிதுகண்டு மனம்புழுங்கத்
தூயர்பால் வன்றொண்டர் சொற்றிடநட் புறத்துதுமென்
றாயவர்பால் வயிற்றோர் கொடுநோயை யடைவித்தார்
தீயதது செயப்புழுங்கிச் சிவனேயென் றவரழுதார் ௨௩௬

அணையார்முன் னெழுந்தருளி யாரூரன் றீர்ப்பனென
நினையாது பணிகொண்டா னீக்குதல்வேண் டாவென்று
முனைவாளில் வயின்கீண்டு முடுக்கினர்நோ யொடுமாவி
புனையாரு ரரைத்தீர்த்தி போதியென வேவினார் ௨௩௭

ஆயவரு மேகியவர் நிலைகண்டுள் ளழிவெய்திப்
பாயவிவர் போலுவனென் றவருயிர்கொல் வாள்பற்ற
மேயவவ ரூறின்றி விரைந்தெழுந்து தடுத்தருளி
நாயனேயென் றிறைஞ்ச நயந்திவரு மிறைஞ்சினார் ௨௩௮

இருவர்களு மளவளா யியைபெருமங் கலநின்று
பொருவரும்புன் கூரிறைஞ்சிப் போற்றியந் தணாளனெனுந்
திருவளர்சொற் றமிழ்பாடித் திருவாரூ ரவரோடும்வந்
துருவளர வமர்ந்தனர்மற் றவர்விடைகொண் டேர்க்கேக ௨௩௯

வேறு.

அந்த நாளின் மலைநாட்டி னுன்ற கொடுங்கோ ளூர்க்கரசர்
சந்த மேவு புகழ்க்கழறிற் றறிவா ராடுந் தாட்கன்பர்
முந்த வியற்றும் பெரும்பூசை முடிவிற் சிலம்பி னொலிகேட்பார்
நந்த வொருநாள் பாணித்துக் கேட்டார் தாழ்த்த னவிறியென ௨௪௦

மன்று ணமது வன்றொண்டன் பாடல்கேட்டு வரத்தாழ்த்தோ
மென்றுநவில நினைப்பித்தா ரென்று மகிழ்ந்து புறப்பட்டுக்
கன்று சுரமா திகணீத்துக் காமர் புனனாட் டுறுதில்லை
யொன்று களிப்பிற் புக்கிறைஞ்சி யவரைக் காணா துயங்குவார் ௨௪௧

நாவ லூரர் தமைக்காண்பா னயந்து திருவா ரூரடைந்தார்
காவன் மதின்மூன் றெரித்தாரை நாகைக் காரோ ணத்திறைஞ்சித்
தாவின் மணிப்பூ ணவமணிகள் சாந்த மாடை பரிசுரிகை
யோவில் பிறவும் பெற்றவரு மூவந்து திருவா ரூர்வந்தார் ௨௪௨

வந்தார் தம்மை மகோதைபார் வணங்க வணங்கி யளவளாய்ச்
சந்தார் முலையா ளொருபாற்புற் றிடங்கொண் டாரைச் சார்ந்திறைஞ்ச
முந்தா ரடியார் சேரமான் றோழ னென்றோர் பேர்மொழிந்தா
ரந்தார்ப் பரவை யாரில்ல மடைந்தா ரமுதோ ரிடத்தயின்றார் ௨௪௩

வீதிவிடங்கப் பெருமானார் விளங்கும் பவனி சேவித்துப்
பாதி மதியை யணிந்தார்தம் பதிகள் பிறவுஞ் சேவிப்பா
னேதி வலிக்கோ தையர்தொடர வெழுந்து நாகைக் காரோணத்
தாதி திருமுன் காரோணத் திருந்தீ ரேயென் றீற்றறைந்து ௨௪௪

ஆங்கு நின்று திருமறைக்கா டணைந்தி யாழைப் பழித்தன்ன
வோங்கு தமிழ்மா லிகைசாத்தி யுன்னுங்கோடிக் குழகர்தளி
தேங்கு விருப்பிற் சென்றுகடி தாயென் றொருசெந் தமிழ்பாடித்
தாங்கு வளஞ்சா திருப்பாண்டிப் புத்தூ ரணைந்து தாழ்ந்தேத்தி ௨௪௫

எதிர்கொ ளரசர் முதற்பலரு மிறைஞ்ச விறைஞ்சி யாலவாய்
முதிரன் பொழுகப் புகுந்திறைவர் முன்னரிறைஞ்சித் தமிழ்பாடிக்
கதிரும் புகழார் திருவுடையா ரென்னும் பதிகங் கரைந்துபோ
யதிரும் கழலார் பூவணத்து ளெம்மா னடிக ளிறைஞ்சினார் ௨௪௬

மீட்டு மதுரை நகர்புகுந்து விமல ராப்ப னூர்நலமே
காட்டு திருவே டகம்பணிந்து கவினூர் தருகோத் திட்டையெனும்
பாட்டு மலிய வெடுத்தோதிப் பரமர் பரங்குன் றிணைவணங்கித்
தோட்டு மலர்த்தார் மார்பர்வளந் தொகுகுற் றால நகரடைந்தார் உ௪எ

குற்றா லத்தார் கழல்வணங்கிக் குறும்ப லாவைக் கும்பிட்டு
முற்றா மதியார் நெல்வேலி முன்னிப் பணிந்து பன்னூலுங்
கற்றா ரிராமேச் சுரம்பணிந்து கருதாங் கேகே தீச்சுரத்து
ளுற்றார் மகிழ நத்தாரென் றுரைசெய் பதிகம் பாடிப்பின் உ௪அ

ஆங்கு நின்று திருச்சுழிய லடைந்தா னுயென் றெடுத்தேத்தி
யோங்கு மங்க ணுறைவார்க்குக் கனவிலும்பர் பிரான் றோன்றித்
தேங்கு கானப் பேர்நகர்யா மிருப்ப தென்று தெரிவிக்க
ரீங்குந் திறத்தார் தொண்டரடி பாடி நேர்ந்து கும்பிட்டார் உ௪௯

சிறந்த புனவா யிலையடைந்து சித்த நீயென் றெடுத்தேத்தி
யறந்த வாத பாதாளிச் சுரமும் பாடி யாரூரி
னுறந்த காத லொடும்புகுதா வும்பர் பெருமான் கழல்வணங்கி
மறந்த வாவேற் சேரருடன் மன்னி யமர்ந்தா ராரூரர் உ௫0

விள்ளாக் காதன் மிகப்பெருக வெள்வேல் வெற்றிச் சேரலனு
ரெள்ளாத் திருவ முனைப்பாடி யிறைவர் தமைப்பன் னாளிரக்கத்
தள்ளாப் பொலிவிற் பரவையா ரிசைவும் பெற்றுச் சம்மதித்தார்
கள்ளாற் பொலியு மலர்ச்சோலைக் காமர் மலைநாட் டணைவதற்கே உ௫௧

வீதி விடங்கப் பெருமானூர் விடைபெற் றெழுந்து தலங்கடொறும்
பாதி மதியம் புனைந்தாரைப் பரவிக் கண்டி யூரமர்ந்த
சோதி மலர்த்தா டொழுதேத்தித் தூய வையா றெதிர்தோன்ற
நீதி யரசர் தொழற்காசைப் பட்டே னென்று நிகழ்த்தினூர் உ௫உ

உரவு மிருகா விரிப்பெருநீ ரோங்கி யோடக் கோலொழிக்கப்
பரவும் பரிசொன் றறியேனென் றருமை பயக்கும் பதிகமெடுத்
தரவும் மதியும் புனைந்தசடை யையாற் றடிக ளோவென்ன
விரவு புனன்மேல் பாற்பளிக்கு வெற்பி னுயர்ந்து நின்றதே உ௫௩

நின்ற காலை மணமறெரிய நேரேநடந்தை யாறெய்தி
யொன்ற விறைவர் கழல்போற்றி மீட்டு மவ்வா றுறநடந்து
மன்ற வுயர்தென் கரையேற மலைபோ னின்ற துமுன்போற்
சென்ற துணர்ந்து வியப்புற்றார் சேர ரோடு மாரூரர் ௨௫௪

அங்கு நின்று பலதலமு மாங்காங் கிறைஞ்சித் துதித்தேத்திக்
கொங்கு கடந்து மலைநாடு குறுகிக் கொடுங்கோ ளூரடைந்து
பொங்கு புகழ்சா திருவஞ்சைக் களத்துப் புகுந்து போற்றினா
ரெங்கு நிகழ முடிப்பதுகங் கையென் றியலுந் தமிழ்புனைந்தே ௨௫௫

மத்த யானை யெருத்தத்து வன்றொண் டரையேற் றுபுசேரர்
சித்த முவந்து பின்னிருந்து செம்பொற் கவரி புடையிட்டி
யொத்த மணிமா ளிகைக்கொடுபுக் கோங்குஞ் சிங்கா தனத்தேற்றிச்
சுத்த மருவு பூசைபுரிந் துவந்து பல்காற் றொழுதனரே ௨௫௬

சிறந்த வமுது கொளச்செய்து செழுவி னோதம் பலதெரித்துப்
பிறந்த பயன்பெற் றேமென்று பேணு நாளி லாரூர
ரறந்த வாத திருவாரூ ரண்ண லடிகண் மிகநினைந்தே
யுறந்த வாரூ ரானைமறக் கலுமா மேயென் றுரைத்தெழுந்தார் ௨௫௭

வேறு.

அதுகண்டு சேரர்பிரான் பிறவஞ்சி யுடன்றொடர
மதுவொன்று தார்ப்புயத்தார் மற்றவரை யிரந்திறைஞ்சி
விதுவொன்று சடைப்பெருமான் விளங்கருளா லரசளித்து
முதுவொன்றி நகரமர்வீ ரெனமொழியச் சம்மதித்தார் ௨௫௮

மதியமைச்சர் தமைக்கூவி வயங்கியநம் பண்டாரத்
துதிபொருள்க ளத்தனையுஞ் சுரக்கவாண் மிசையேற்றி
யதிவிரைவின் வம்மினென வனையருமவ் வாறுவரப்
பதிவிரவா ரூரர்முனஞ் செலவிட்டுப் பணிந்திருந்தார் ௨௫௯

கொங்குநாட் டகம்புகுதக் குளிர்முருகன் பூண்டியகங்
தங்குநா யகர்பூதர் தமையேவி யவைகவரா
வங்கும்மே விபகொடுகு வெஞ்சிலைகேட் டளித்ததற்பின்
றெங்குநீ டிருஞ்சோலைத் திருவாரூ ரகம்புகுந்தார் ௨௬௦

வேறு.

ஆரூ ரடைந்த திருநாவ லூர ரணிப்பொற்புற்றி
னீரூர் சடையரைக் கும்பிட்டு நேய நிலாவுபுகழ்
பாரூர் பரவை யவர்மா ளிகையிற் படர்ந்தமர்ந்தார்
சீரூர் தரநன் கமர்தலி னுள்பல சென்றனவே ௨௬௧

சேரர்தங் கோவை மிகநினைந் தாரொர் தினத்தெழுந்தா
ரூரர் வளவர் திருநாடு நீங்கி யொருகொங்குற் றப்
பாரார் புகழ்புக் கொளியூருற் றூர்நறும் பங்கயப்பூந்
தார ரொருமனை மன்றலி னோதை தழைந்ததுவே ௨௬௨

அடுத்த மற்றோர்மனை கேதத்தி னோதை யளாவியதிங்
கடுத்த தென்னேவென வையாட்டை மைந்த ரவரிருவ
ரடுத்த குளப்புன லாடச் சென்றாரவி நாசிவந்தா
னடுத்தவன் மீன்கொளச் சுந்தரன் றீர்ந்தன னுருயிரே ௨௬௩

வந்தா னுபநய னஞ்செயி லஃது வராதொழிந்த
கந்தா னமுமி லிஃதென் றனர்சிலர் கான்முளையா
னுந்தான் மனைவி யொடும்வந் துவகை துவன்றிறைஞ்ச
வந்தான் வறிது செலலென்று பொய்கை யடுத்தனரே ௨௬௪

உன்பெயர் பெற்றவ னுய்வான் முதலை யுறவிழுங்க
வென்பெயர் பெற்றவன் வீவானின் னுடனு மிப்படியோ
மன்பெயர் பெற்ற வுரைப்பா ரெனுந்தமிழ் மாலைகொண்டென்
றன்பெயர் பெற்றவன் றனைக்காலன் வன்மீன் றாச்சொற்றியே

என்று பிரானைத் தொழுமடு நீர்முதல் யாவுமுண்டா
யன்று முதலை யுமிழ்ந்தது மைந்தனை யண்டரெலாந்
துன்று மலர்மழை தூர்த்தார்நன் னூற்கடி துன்றவித்து
நன்று மலிகொடுங் கோளூரை நோக்கி நடந்தனரே ௨௬௬

தாங்கா வுவகை தலைக்கொண்டு தீயர் தலைவரெதி
ராங்கா தரத்தி னணைந்தடி வீழ வளாய்த்தழுவி
நீங்கா விருப்பி னஞ்சைக் களஞ்சார்ந்து நிலம்பணிந்து
நாங்கா முழுறுந்தலைக் குத்தலை மாலை நவின்றனரே ௨௬௭

பற்று விடுத்த குறிப்பறி விக்கப் பரமர்நிழ
லெற்று வெள்ளானை யருள்புரிந்தா ரண்ட ரேற்றிடுகோற்
சுற்றுவண் டோழர் தமைநினைந் தார்துரங் கத்தவரு
முற்றுமுன் சென்றனர் பல்லார் மெய்நீத்துட லுற்றனரே ௨௬௮

தானென்னை முன்படைத் தானெனுஞ் செந்தமிழ் சாற்றிச்சென்று
கோனென்னை யாளும்பிரான் கயிலாயங் குறுகினர்வெய்
யோனென்னை யாண்டனை யென்றுமுன் செய்பணி யுற்றமர்ந்தார்
மானென்னை யென்னுங்கண் ணுருமுற் செய்பணி வாய்ந்தனரே. ௨௬௯

காரரு மெய்ப்பிணி யன்னூர்க்குத் தீர்த்தருள் காரணத்தாற்
பாராருஞ் சுந்தர தீர்த்த மெனும்பெயர் பன்னிடுவார்
சீராருஞ் சுந்தர தீர்த்தப் பெயருற றேர்ந்துரைத்தாந்
தாராருந் தோட்சும தியாதி யோர்தொழ ருஞ்சொற்றுமே ௨௭௦

சுந்தரதீர்த்தப்படலம் முற்றியது.

ஆகப்படலப் ௩௮-க்குத் திருவிருத்தம் ௧௬௦௨.

---

## ௩௮-வது சுந்தரதீர்த்தப்படலம்.

கைலைமலையிலே எம்பெருமானாராகிய சிவபிரானார் ஒருநாள் கண்ணாடியை நோக்கியருளத் தமது திருவுருவம் மிக அழகாகத் தோன்றியது. அதைப் பார்த்து அவர் சுந்தரமே வருகவென்று அழைத்தனர். தமது திருவுருவ நிழல் சுந்தரராய் வரக்கண்டு நம்பெருமானார் அவரை எஞ்ஞான்றும், தமது அணுக்கத் தொண்டராக்கித் திருநீற்றுவட்டகை தாங்கும் அரிய பணியொன்றை அவர்க்களித்தனர். அப்பணியைப் பெற்றுத் தொண்டனார் ஆங்கே பழகுகின்ற காலத்திலே அமரரும் பிறரும் அழியும்படிப் பாற்கடலில் தோன்றி எழுந்த நஞ்சினைச் சிவபிரானார் கட்டளைப்படி தன் கையால் எளிதாக எடுத்து வந்தனர். அதனால் அவர் ஆலாலசுந்தரரென்னும் பேரும் பெற்றனர். அவ்வழகர் ஒருநாள் எம்பெருமானுக்கு வழக்கப்படித் திருமாலைப்பணிசெய்யும் பொருட்டுத் திருநந்தன வனத்தில் சென்றனர். ஆங்கே இறைவியாகிய அம்மையாருக்கு அப்பணிசெய்யும் பொருட்டு அநிந்திதை, கமலினி

என்னும் அரிய பெண்களிருவரும் அவ்வனத்தே வந்தனர். சிவ பிரானார் திருவருளினாலே தென்தேயமும் தமிழும் சிறப்பெய்தச் சுந்தரர் அவர்கள்மீது காதல் உற்றுநோக்க அவர்களும் அவ்வாறே நோக்கினர். அதனால் இவ்விருதிறத்தார்களுடைய மனமும் ஒன்று கியது. பின்னர் இருதிறத்தாரும் இது தகாதென்று கருதித் தத்தம் மனத்தைமீட்டு அப்பூக்களைக் கொய்துகொண்டு தத்தம் பணியிற் சென்றனர். ஆங்குத் திருமுன் வந்த அழகரை எம்பெருமானார் திரு நோக்களித்து அழகா! நீ மாதர்மேல் அவாவுற்றபடியால் அம்மாதர் களோடு இவ்விடம் விட்டு நீங்கித் தமிழ்நிலத்திற் சென்று அம்மாதர் இன்பந்துய்த்து வருவாயாக" என்று அருளிச்செய்தனர்.

அவ்வாறு அருளிச்செய்ததை அறிந்தவர் பிறவிக்கஞ்சி எம்பெரு மானைத் தொழுது அடிகேள்! அடியேன் மண்ணிற் பிறந்து மயங்குங் காலத்திலே அடியேன் உய்யத் தடுத்தாட்கொண்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய எம்பெருமானாரும் அவ்வாறே யாகுக என்றருளிச் செய்தனர்.

பின்னர் அவ்வடிகள் திருமுனைப்பாடி நாட்டிலே திருநாவலூரிலே ஆதிசைவ மறையவர்குலத்திலே சடையனார் மனைவியார் இசைஞானி யார் திருவயிற்றில் அவர்கள் செய்த அருந்தவத்தினால் திருவவதாரஞ் செய்தனர். சடையனார் தமக்குப் புதல்வர் தோன்றினாரென்று மகிழ்ச்சி யுற்று விதை தானங்கள் செய்து நம் சிவபெருமானார் திருவருளென்றே இருந்தனர். அவர்கள் சுற்றத்தாரும் அவ்வாறே மகிழ்ச்சியுற்றனர். இசை ஞானியாராகிய தாயார் தம்புதல்வருக்கு மகிழ்ச்சியுற நீராட்டித் திருநீறிட்டு மண்தேய்த்துப் பொட்டிட்டுத் தமது தவத்திற்கேற்ப வளர்ப்பாரானார். தந்தையார் புதல்வருக்கு ஆரூரரென்னும் பாட்டனா ரது அரிய திருப்பெயரையே அணிந்தனர். ஒவ்வொரு பருவத்திற் கேற்பச் செய்யத் தகுந்த சடங்குகள் அனைத்தும் செவ்வனே நிகழ்வுற் றன. ஆரூரர், தமது பருவங்களுக்குரிய செங்கீரை முதலிய திரு விளையாடல்களையும் விடாது பயின்றனர். இப்படி நிகழும் நாளிலே முறைப்படி ஆரூரருக்கு முப்புரிநூலணிந்து கலைகள் அனைத்துங் கற் பிக்கப்பட்டன.

அந்நாட்டை ஆண்டுவந்த நரசிங்கமுனையரையர் என்னும் குறு நிலமன்னர், ஆரூரர் அருமையை நோக்கி அவரைத் தமக்குக் காதல் மகனாகக் கொண்டு களிப்புற்று வளர்த்தனர். ஆரூரருக்குத் திருமணப்

பருவம்வர அடுத்துள்ள புத்தூரிலே சடங்கவி மறையவன் பெற்ற கன்னியை மணம்பேசி மணநாட்குறித்துத் திருமணவோலைதீட்டி அதைப் பலவிடங்களிலும் செல்லவிட்டு மணம் அறிவித்து மணவினை தொடங்கப்பட்டது.

ஆரூரர், பொன்னுடை, பொற்கலன் முதலியன அணிந்து அரசத் திருவிற்கேற்பத் திருமணக் கோலங்கொண்டு சுற்றங்கள் சூழக் குதிரை மேற்கொண்டு திருப்புத்தூரை யடைந்தனர். அந்நகர் அன்றுமுதல் ஆரூரர் மணம் வந்த சிறப்பினாலே "மணம்வந்த புத்தூர்" எனப்பெயர் வழங்கலாயிற்று. அந்நகரில் ஆரூரர் பல்வகை இயங்களும் ஒலிப்பத் திருமணக்கோலத்தோடு வந்து எதிர்கொள்வாரோடும் வீதியில் திருவுலாப்போந்து மணமண்டபத்திற் புகுந்தனர்.

பின்னர், ஆரூரர் பல்வகை முகமன்கள்பெற இயங்கள் எல்லாம் இயம்பத் திருமணப் பீடிகையில்ஏறினர். அது சமயத்தில் கைலையில் எம்பெருமானாகிய சிவபிரானார் தாம் முன்னர் அருளியபடியே நரைத்துத் திரைத்த ஒரு முது அந்தணராகித் தண்டூன்றிக்கொண்டு வெயிலை மறைக்கக் குடைதாங்கி வழிநடந்து இளைத்தவர்போல் மெல்ல மெல்ல நடந்து திருப்புத்தூரில் திருமணத் தவிசிலிருக்கின்ற நம்பியாரூரர்முன்னாக வந்தனர். அதுகண்ட ஆரூரராகிய மணவாளர் மகிழ்ச்சிமிகக் கொண்டனர். அவரும் பிறரும் முதிய ஐயராய் வந்த முக்கட்பெருமானை இருந்தருளக் கேட்டுக்கொண்டனர். அப்போதே அவையோரை நோக்கி அக்கிழ அந்தணராய் வந்த பெருமானார், மறையோர்காள்! "அனைவருங் கேண்மின்! இந்த மணமகனாகிய ஆரூரனுக்கும் நமக்கும் ஓர் வழக்குண்டு. அது தீர்ந்த பின்னரே மணம் நடைபெற வேண்டும். அஃது என்னை எனில்? ஆரூரன் என்றும் எமக்கு அடிமை ஆவ"னென்ன, அதுகேட்ட ஆங்குள்ளாரனைவரும் அதிவியப்புற்றார். ஆரூரரும் இது நன்றே என்று நகைத்தனர். அதற்கு அக்கிழவர், "ஆரூரனை நோக்கி" ஏட! நீ நகைத்தது என்னை? உன் பாட்டனார் எழுதித்தந்த அடிமையோலை என்பால் இன்னும் இருக்கின்றது நீ கூறிய இது இளமைத் தன்மைபோலும்." என்று முனிந்தருளினர். அது கேட்ட ஆரூரர், மறையவர்களை நோக்கிச் சிரித்தலைவிட்டு "ஓர் அந்தணன் மற்றொரு அந்தணனுக்கு அடிமையாதல் இவ்வுலகத்துண்டா? இல்லை. இதனால் இங்கு வந்துள்ள இவர் பித்தரோ" என்றார். அதுகேட்டவுடனே முதியவராய் வந்தவர், "நீ என்னைப் பித்தனென்றாலும் பேயனென்றாலும் எண்ணாமல் இன்னம் எத்தனை சொன்

ணயானுலும் நீ எண்ணிக்கொண்டது வெற்றியாகுமா? நின் வார்த்தை ஒத்தது அன்று. என்னே, இத்தனைக்கும் இன்னுனென்பதைச் சற்றும் அறிந்திலாய்! நின் சஞ்சலத்தை விடுத்து எனக்கு நீ பணி ஒன்றே செய்க.'' என்றருளினர்.

இவர் இங்ஙனம் இசைப்ப ஆரூராருக்குக் கிழவராய் வந்த பெருமானுடைய திருஉருவமோ சிந்தையை உருக்கா நின்றது. அவர் வார்த்தையோ கோபம் உடனே உண்டாக்குகின்றது. என் செய்வார்! பாபம்! அதனுல் "ஆரூரர் அந்தணர் பெரியார் அடிமை யோலை ஒன்று உண்டு என்றமையால், அதைப் பார்ப்போ" மென்று துணிந்து ஐயரை நோக்கி "அடிமையோலையைக் காட்டுக" என்றனர். அதற்கு அந்தணமுதியோர் "என் ஓலையைப் பார்ப்பார் அவையோராவர். நீ பணி ஒன்றே செய்யக்கடவை" என்றூர். அது கேட்ட ஆரூரர் 'அந்தணக் கிழவருடைய ஓலையைப் பார்ப்பே' னென்று விரைந்து எழுந்து ஐயரைத் தொடர அம்முதியோரான ஐயர் அஞ்சினுர் போன்று திருமணக் காவணத்திடையே ஓட அவரை விடாது தொடர்ந்துபற்றி அவ்வோலையைப்பறித்துப் பார்ப்பாரொருவர் வேறொரு பார்ப்பாருக்கடிமையாதல் எங்கு அடுக்கும், எனக்கூறி ஓலையைக் கிழித்து அப்பாலெறிந்தனர். ஐயராய் வந்த கிழவர் 'அச்சபையில் ஓ'வென்று முறையிட்டனர். அங்குற்ற மறையோர்கள் யாரும் அம்முதியோர் முன்னுகச்சென்று "பெரியீர்! இம்முறைகெட்ட வழக்கைக் கொண்டுவந்து பிணங்குகின்றீர்! நீர் எங்குள்ளீர்" என்று கேட்க எல்லாம் உணர்ந்தவராகிய எம்பெருமானுர் "யாம் இங்கு இருக்குமிடம் இவ்வெண்ணெய் நல்லூர்; இதுநிற்க! ஆரூரன் என் கைஓலையைப்பறித்து என் வழக்கை நிரம்பச் செய்துவிட்டான்; ஆதலால் அவன் என் குற்றவேல் செய்யவேண்டும். இனித் தாழ்த்தவேண்டாம்" என்றூர். அதற்கு ஆரூரர் "பெரியீர்! உமது ஊர் வெண்ணெ நல்லூராயின் அங்குள்ளார்பால் கலந்து இவ்வழக்கைப் பேச வருவீரா?" என்று கூற அந்தணர் பெரியார் "ஆரூர! நீ கிழித்த ஓலை படியோலை; இதற்கு மூல ஓலை ஒன்று வைத்துப்பொதுவாரிடத்து எனக்கு அடிமையாவதைச் சாதிப்பே"னென்று சொல்லித் திருவெண்ணெய் நல்லூரை நோக்கிச் செல்ல, ஆரூரர் அவர் நிழல்போல அவரைப் பின்தொடர்ந்து போனுர். ஆரூரர் சுற்றத்தாரும், பிறரும் என்னுகுமோவென அறிய முயன்று அவருடன் சென்றூர்.

அங்நகரில் அவையகத்திற்சென்ற அந்தணமுதியோர் அவையோர் பலருங்கேட்க "பொதுவீர்! இவ்வாரூரன் எனக்கு அடிமையென்று

காட்டிய படி ஓலையைக் கிழித்து அஞ்சாமல் உங்கள் முன்னும் வந்து நிற்கின்றான். இதுவே என் வழக்கு" என்றனர். அதற்கு அவை யோர், "முதியீர்! மறையவர் அடிமையாதல் வையகத்து வழக்கமில்லை. ஆதலால் நீர் கூறுவது ஒரு சிறிதும் பொருந்தாது" என்றார். எம் பெருமானார் அதுகேட்டு "ஆரூரருடைய பாட்டனார் தமது கையால் எழுதிக்கொடுத்த மூல ஓலை என்பாலுண்டு. அதைப் பார்த்து உமக்குத் தோன்றியது உரைப்பீர்" என்றார். பொதுவோர், "பழய ஓலை ஒன்று உண்டேல், அதைக் காட்டுக" என்றனர். அப்பெரியார், "இவ்வாரூரன் இதனையுங் கிழிக்காவண்ணஞ் செய்வீராயின் காட்டுவேன்" என்று சொன்னார்.

அதற்கு அப்பொதுவோர், "தினையளவேனும் தீங்குவராவண்ணங் காப்போம்; காட்டுக" என்றார். அப்போதே அப்பெரியராய் வந்தருளிய எம்பெருமானார் அடிமையோலையை அச்சபையோர்க்கு முன்னாக நீட்டினார். அதுமிகப் பழமையாகத் தோன்றியதைக்கண்டு அச்சபை யோர், கரணன் ஒருவன் கையிற்கொடுக்க அவன், அவ்வோலையை வாங்கி "நாவலூர் ஆதிசைவன் யான்; என் பேர் ஆரூரன்; வெண்ணெய் நல்லூர் பித்தனுக்கு யானும் என் வழியிற் பிறந்தவரும் வழி வழி அடிமையே; இது என் கையெழுத்து," என வாசித்தனன். மேல் எழுத்திட்டார்கள் இத்தனையர் என்பதையும் வாசித்தனன். இதைக்கேட்ட அவ்வவையோர் ஆரூரரை நோக்கி "நீர் உமது பாட்டனார் கையெழுத்தோவென்று" அறிவீர் என்றார். அது அறிந்த எம் பெருமானார், "ஆரூரன் அடிமையோலையைக் கிழித்தெறிவானன்றி அறிய வல்லவனோ? நீவிர் ஆரூரன் பாட்டனார் கைச்சாத்தை வருவித்து ஒப்பு நோக்கி உணர்வீர்களாக" வென்றார் அவ்வாறே அச்சபையோர் பொருந்தத் தேர்ந்து ஆரூரரை நோக்கி 'இனிமேல் இயம்புவது ஒன்றுமில்லை' என்றார். ஆரூரர் மனம் வருந்தி 'ஐயன்மீர்! நீவிர், என்னை ஆதிசைவனென்று உணர்வீர்; என்னை "இந்த அந்தணனுக்குத் தொண்டனாகுக' வென்று விதியாக உரைத்தால் முன்னை ஊழ் வினையை முடிக்க வல்லவர் யாவர்' என்று கூறி நின்றார். அவையோர் "அந்தணர் பெரியீர்! நீர் வாழும் ஊர் இந்தவூர் என்றீர்; உமக்கு உறையுள் எது?" என்று கேட்க ஐயர் "நீவிர் ஒருவரும் என்னிருப்பிடத்தை அறியீரானால் நம்பின் வருவீராக காட்டுவே" னென்று போனார். யாவரும் அவரைத் தொடர்ந்தார். நம்பியாரூரரும் பின் சென்றார்.

எம்பெருமானுர் எல்லோரும் அறியத்திருவெண்ணெய் நல்லூரில் 'திருவருட்டுறை' என்னுந்திருக்கோவிலுட் புகுந்தருளினர். ஆங்குள்ள அனைவரும் அறியாமல் மயங்கினர். அங்கு நின்ற ஆரூரர் கண்டுகளிப்புற ஆண்டவன் விண்ணில் உமையம்மையாரோடும் விடையின்மேல் எழுந்தருளி நின்றார். எம்பெருமானுர் அருட் காட்சியைக் கண்ட வளவிலே ஆரூரர் அஞ்சி, இருகைகளும் தலைமேலேற அன்பு நிறைய அருவிபோல இன்பக்கண்ணீர் இருபாலும் பொழிய முன் தொடர்பு வந்து கூடியிட "ஆண்டவன் வலிய வந்து அடிமை கொண்டருளியது என்னே"! என்று வியந்து நின்றனர். அருள்விடைப் பெருமானுர் நம்பியாரூரரைத் திருவருள் நோக்கஞ்செய்து "ஆரூரா! நமக்கு நீ வழித்தொண்டன். நமது கட்டளையால் இப்பிறவியை அடைந்தாய்; ஆயினும் நாமே தடுத்தாட்கொள்ள உன்னிடம் வந்தபோது நம்மை வன்சொற்களைச் சொல்லி வன்மை பேசினுய்! அதனுல் வன்றொண்டனென்னும் பெயர் பெறுக; இனி நம்மைப் பாடும்பணியே மேற்கொண்டு இந்நிலத்தில் இயங்குக." என்று திருவாய் மலர்ந்தருளினுர். அதற்கு ஆரூரர் "அடிகேள் அடியேன் நம் தொண்டனென்று நீர் சாதிக்கவும் அதை அறிய மாட்டாத நாயேன், எங்ஙனம் உம்மைப் பாடுவேன்" என்று விண்ணப்பஞ்செய்ய, அருட்டுறைப் பெருமான் அன்பனே! "நீ என்னைப் பித்தனென்று, பேசினுய்! அதை முதலாகக்கொண்டு பாடுக" என்று எம்பெருமானுர் அடியெடுத்து அருளிச்செய்ய வன்றொண்டரும் "பித்தா பிறை சூடி" என்றெடுத்துப் பாடிப் பிரியாவிடை பெற்றுக்கொண்டு ஆங்கு நின்றுந் திருநாவலூர் முதலாக எம்பெருமானைப்பாடிப் பணிந்தேத்தத் தொடங்கினர். திருத்துறையூரில் திருத்துறைநாதர் பால் 'தவநெறி' பெற்றுச் 'சித்தவடம்' அடைந்து, திருநாவுக்கரசு நாயனுர் திருப்பணிசெய்த திருத்தலத்தை மிதித்திட அஞ்சி அச்சித்தவட மடத்தில் திரிபுராந்தகனுகிய இறைவன் திருவடியை நினைந்து துயின்றனர்.

திருஅதிகைப் பெருமானுர் ஒரு திருவிளையாடல் செய்ய அருமைத் திருவுளங்கொண்டு நரைதிரை முதிர்ந்த அந்தணராய் வன்றொண்டர் திருமுடியில் தமது திருவடியை வைத்துத் தாமும் தூங்குவார் போன்று தூங்கினர். அதை யறிந்த வன்றொண்டர் "ஐயரே! என் தலையில் கால் வைத்தீரே" என்ன, அவர் "என் முதுமையே திசை மயங்கச் செய்தது ; பொறுத்தருள்க" என்று கூறியருளினர். ஆரூரர் அதுவிட்டு மற்றொரு விடத்தில் துயில, ஆங்கும் அதிகைவீரர் சென்று

அவர் தலையில் திருவடியை வைத்தருள, ஆரூரர், நீர் யாரென்ன? அவர் என்னை நீ அறியாயோ? வென்று மறைந்தருளினர். அது கண்டு அஞ்சி அங்கிருந்தபடியே அதிகைப் பெருமானைப் பாடி மாணி குழி முதலிய தலங்களை வணங்கித் தில்லைநகரடைந்து திருக்கூத்துடை யானை எல்லையில்லாத காதலோடும் பணிந்து இன்புற்ற வன்றொண் டர் கேட்க "விண்வாக்கு" ஒன்று "ஆரூர! நீ ஆரூரில் நம்பக்கம் வருக" வென்று உண்டாயிற்று. அஃதறிந்த நம்பியாரூரர், எம்பெரு மானை வணங்கி அம்பலத்தைத் துதித்துக் கொள்ளிடநதி கடந்து காழிப்பதியை யடைந்து ஆளுடைய பிள்ளையார் திருவவதாரஞ்செய்த திருநகரென்று அதனை மிதிக்க அஞ்சி அதனை வலம்வரத் திருக்கழு மலத்தார் புறத்தே காட்சி தந்தருளப் பெற்றுப் பதிகம் பாடித் திருக் கோலக்காவை வணங்கினர். பின்னர், அவர் திருப்புன்கூர், மாயூரம், வழுவூர், அம்பர், புகலூர் முதலிய தலங்களை வணங்கித் துதித்துப் பாடித் திருவாரூர் எல்லையை அடைந்தனர். ஆரூர்த்தியாகர் 'நாம ழைக்க ஆரூரன் வருகின்றான். எல்லோரும் எதிர் சென்றழைமின்.' என்று நகர மாந்தர்களுக்குக் கனவில் அறிவிக்க, அங்ஙனமே எல் லோரும் எழுந்து எதிர்கொண்டு அழைத்தனர். அவர்கள் அழைக்க வந்த ஆரூரராகிய வன்றொண்டர். திருவாரூர்ப் பூங்கோயிலில் புற்றி டங்கொண்ட பெருமானை வணங்கி எழும்பொழுதில் அவ்வன்மீக நாதர் திருவாக்கு ஒன்று "ஆரூர! நம்மை உனக்குத் தோழனுத் தந்தோம்; நீ எப்போதும் மணக்கோலத்தோடு வழங்குக" என்று எழுந்தது. அதுகேட்டு ஆரூரர் இது பெறற்குரியனோ என்று மன முருகி வணங்கினர். அதுமுதல் எவரும் தம்பிரான் தோழன் என ஆரூரரை அழைக்கத் தொடங்கினர். ஆரூரரும் பூமாலை, சந்தனம், புழுகு முதலிய அணிகளைப் பெற்று அறிஞர் வாழ்த்த விளங்குவா ராயினர். அங்கிருந்தே வீதிவிடங்கரைப் காலந்தவறாமல் கண்ணீர் ஒழுகப் பாடி அரநெறி ஆலயத்தையும், பிறதலங்களையும் வணங்கி வரு வாராயினர்.

இவர் இங்ஙனமிருக்க இதற்குமுன் கையிலாயத்தில் எழுந்தருளிய சிவபிரானார் திருவருளால் கமிலினியார் திருவாரூரில் பதியிலார் குலத் திலே தோன்றினர். அவர் பரவையார் என்னும் பெயர்பெற்றுப் பேதைப் பருவம் பெதும்பைப் பருவமிரண்டும் கடந்திட மங்கைப் பருவம் வாய்ந்தனர். அவர் மங்கையர் யாருஞ் சூழப் பூங்கோயிலில் புற்றிடங்கொண்ட பெருமானை நாடோறுங் கண்டுகளிக்க வருவார்,

ஒரு நாள் அப்பெருமானைக் கண்டு களித்து அவர் திருமுன் பிரியா விடை பெற்றுத் திருக்கோயிலுக்கு வெளியே செல்வாராயினர். அது போது அப்பரவையாரைத் தம்பிரான்தோழர் விதி கடைக்கூட்டக் கண்டு அற்புதமென வியந்து நின்றார். அப்பரவையாரும் நம்பியாரூரரை முருகரோ? எம்பெருமான் திருவருள் முழுவதும் பெற்றவரோ? வென்று தம்முள் நினைந்துகொண்டு தமது மாளிகையிற் புகுந்தனர்.

அவர் சென்ற பின்னர் ஆரூரர் அங்குள்ளாரால் இன்னாரெனத் தெளிந்து அவர்மீது காதல்கொண்டு வருந்தி வன்மீகநாதர் முன்செல்ல வள்ளல் தலைவராகிய சிவபிரானார் "நாளையே உனக்கும் அவளுக்கும் மணம் முடிப்போம் கவலாதொழிக" என்று அருளிச்செய்து அன்றிரவே ஆரூரிலுள்ளார் அனைவர்களுக்கும் அறிவித்து இருவருக்கும் மணமுடித்தனர். நம்பியாரூரர் பரவையாரோடு கூடி இன்பம் நுகர்ந்தனர். இவ்வாறு இன்பம் நுகர்ந்து நம்பியாரூரர் ஆரூரி லிருக்குநாளிலே தேவாசிரியன் மண்டபமணுகி அங்குக் கூடிய அடியார்களை உளத்தால் வணங்கி எம்பெருமான் றிருமுன் சென்றனர். ஆங்கு அடியார் கூட்டத்துள் விறன்மிண்டர் என்பார், அவர் உளத்தின் தன்மை அறியாது அவர்மீது வெகுண்டு தொண்டர்களை வணங்காமல் சென்ற வன்றொண்டர் தொண்டர்களுக்குப் புறம்பென்று கூறினர். பின்னரும் அவர் ஆங்குள்ளாரால் வன்றொண்டர், எம்பெருமானாகிய சிவபிரானால் ஆளப் பெற்றவரென்று அறிந்து அவரை ஆட்கொண்ட எம்பெருமானும் அடியார்களுக்குப் புறம்பெனக் கைதட்டுமென்று அத்தொண்டர்களை நோக்கிக்கூற அவர்களெல்லோரும் அப்படியே செய்தனர். அதனைத் திருவுளங்கொண்ட புற்றிடங்கொண்ட பெருமானார் "வன்றொண்டரை நோக்கியருளித் 'தில்லைவாழந்தணர்' என்று அடியெடுத்துப் பாடி அடியார்கள் அனைவரையும் உவப்பிக்க"வென்று அருளிச் செய்தனர். வன்றொண்டரும் அவ்வாறே பாடித் தொண்டர்களை மகிழ்வித்து அக் கூட்டத்தின் நடுவில் புகுந்தனர்.

அக்காலத்தில் பரவையார் வீட்டிற்குவேண்டிய நெல்லைக் கொடுக்கின்ற கட்டளை பூண்டவரான குண்டையூர்க் கிழவரென்னும் வேளாளர், ஒரு நாள் விளைவு சுருங்கலால் அக்கட்டளை குறைபடவே அதற்கு வருத்தமுற்று உண்ணாமல் துயிலும்போது எம்பெருமானார் கனவில் தோன்றி "நென்மலை தந்தோம்" வருந்தற்க: வென்றருள, அக்குண்டையூர்க் கிழவர் எழுந்து எங்கும் நென்மலையாக இருக்கக் கண்டு

மகிழ்ந்து எடுக்க ஆளில்லையே யென்று, உடையவராகிய வன்றொண்டர் பாற் செல்ல, அதற்கு முன்னரே வன்றொண்டரும் அதனை எம்பெருமானல் அறிந்துகொண்டு விரைந்து வந்து அக்கிழவரையும் நென்மலையையுங்கண்டு களித்துக் "கொடுத்தவரே எடுப்பதற்கு ஆளுங் கொடுப்ப" ரென்று துணிந்து அடுத்துள்ள திருக்கோளிலிப் பெருங் கோயில் சேர்ந்து எம்பெருமானை "நீளநினைந்தடியே" னென வெடுத்து 'ஆளிலை யட்டித்தரப்பணியே' யெனப்பாடி அவரருளால் பூதங்கள் திருவாரூரிற் கொண்டுவரப்பெற்று மகிழ்ந்தனர். பின்னர்த் திருநாட்டியத்தான் குடியிற்சென்று கோட்புலி நாயனர் "தமது புதல்வியர்களாகிய சிங்கடி, வனப்பகை இருவரையும் தொழப்பண்ணி, ஏவல்செய்ய ஏற்றுக்கொள்ள வேண்டு" மென்று பணிந்தபோது வன்றொண்டர் அவர்களைத் தம்புதல்வியர்களாகக்கொண்டு பதிகத்தில் சிறப்பித்துப் பாடித் திருநாட்டியத்தான் குடிப்பெருமானை வணங்கினர்.

பின் வலிவலம் வந்து வணங்கி எங்கள் சிவபெருமானை வலிவலத்திற் "கண்டே"னென, அருந்தமிழ் பாடித் திருவாரூரை யடைந்தனர். பங்குனித் திருநாள்வர ஆரூரர் பரவையார் வேண்டுகோளுக்கு இசைந்து திருப்புகலூரிற் சென்று எம்பெருமானர் அருளால் செங்கல் பொன்னுக் கண்டு அதைப்பெற்று அதனல் 'பாடுவாரெல்லாம் பிறரைப்பாடாது எம்பெருமானையே பாடல் வேண்டு' மெனப் பாடி மகிழ்ந்து திருப்பனையூர் வந்தனர். அங்கு அவர் எம்பெருமானர் திருநடங் காட்டக்கண்டு மகிழ்ந்து பாடி ஆங்கு நின்றும் திருவாரூர் வந்து அமர்ந்திருந்தனர். அங்கிருந்தபடியே ஆரூரர் அதைச் சுற்றிய பிற தலங்களையுங்கண்டு துதித்து வந்து பரவையாரோடு கலந்து மகிழ்ந்திருந்தனர். பின்னர் நன்னிலத்துப் பெருங்கோயில், திருவீழிமிழலை முதலிய பல தலங்களையும் வணங்கிப் ஆரூரர் பாடி வந்தனர். பின் வன்றொண்டர் திருவாஞ்சியம், திருநறையூர்ச் சித்தீச்சுரம் முதலியன வணங்கி அரிசிற் கரைப்புத்தூரிற்சென்று ஆங்கே புகழ்த்துணை நாயனர் அருள் பெற்ற அருமைத்திறம் பாடி வணங்கி இடையுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு திருவாவடுதுறையிற் சென்று அங்குக் கோட்செங்கட் சோழநாயனர் அருமைத்திறம் சிறப்பித்துப் பாடித் திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், திருக்கலயநல்லூர், குடமூக்கு, திருவலஞ்சுழி, நல்லூர், திருச்சோற்றுத்துறை, திருக்கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி ஆகிய தலங்களை வணங்கிக்கொண்டு வந்து, திருவால்பொழிலில் எம்பெருமானை இறைஞ்சித்துயின்றனர்.

அப்போது மழபாடியில் எழுந்தருளிய பெருமான் ஆங்கெழுந் தருளி மழபாடி நினைக்க மறந்தனையோ? வென்று மறைந்தருள, வன்றொண்டர் உடனே எழுந்து காவிரியின் வடபால் சென்று அம்மழபாடியில் "பொன்னார்மேனி," பாடித் தொழுதனர். பின் ஆரூரர் திருவானைக்கா சென்று சோழன் பதக்கத்தை எம்பெருமான் பெற்ற திறம்பாடி வணங்கித் திருப்பாச்சிலாச் சிராமஞ்சென்று பொருட் காதல்கொண்டு முறைப்பாடுடையார்போல் எம்பெருமானைப் பாடிப் பொருள் பெற்றுத் திருப்பைஞ்ஞீலியிற் சென்று வணங்கி ஆங்கு நின்றும் ஈங்கோய்மலை, பாண்டிக்கொடுமுடி முதலியன வணங் கிப் பாடி, ஆங்கு நின்றும் போய்க் கொங்கு நாட்டிலுள்ள தலங்கள் முற்றும் வணங்கி, ஆங்குள்ள திருப்பேரூரை யடைந்தனர். பேரூரில் திருநடனஞ் செய்தருளும் பெருமானார், தமது தோழராகிய வன் றொண்டர் வருகின்றதைத் திருவுளத்திற்கொண்டு மண்வெட்டியை யெடுத்துத் தோளிற்சேர்த்து உமையாளும், மைந்தர்களும் உடன்வர உழவுத் தொழில்புரிய ஆங்கொரு வயலிற் புகுந்தனர். அஃதறியாத வன்றொண்டர் திருக்கோயிலை யடைந்து எம்பெருமானைக் காணாமல் தேடி வருந்தினர்.

அது நோக்கிய நந்திபெருமான் அவ்வாரூரருக்குப் பேரூர்ப் பெருமான் சென்ற விடத்தைக் கடைக்கண்ணால் அறிவிக்க அறிந்து கொண்ட வன்றொண்டர் எம்பெருமான் வயலிற் புகுந்து மள்ளத் தொழில் புரிவது என்னோ? வென்று புன்சிரிப்பு கொண்டு அவ் வயற் பக்கமே சென்றனர். அப்போது பேரூர்ப் பெருமானார் மண் வெட்டியைக்கொண்டு மள்ளத்தொழில் புரிவாராயினர். ஆங்கே எம் பெருமானார் திருவிளையாட்டாக உழவுத்தொழில் செய்வதைக் கண்டு மகிழ்ந்த வன்றொண்டர் எதிர்சென்று வணங்கிட எம்பெருமானார் 'பார்ப்பான் ஒருவன் பறையனை வணங்கினா'னென்று நகையாடினார் தம்பிரான் றோழராகிய ஆரூரர், அடிகாள்! நீர் இவ்வயலிற் றொழில் செய்யவந்த திருவுளந்தான் யாதோ? அறிகிலேனே உமது பெருமை எங்கே? உமக்குக் கூலிகொடுப்பார் யார்? என்று இன்னுஞ் சிலவாக நகைமொழிகளைக் கூறினர். அப்போதே பேரூர்ப் பெருமானார் அவ் வுருவத்தை மாற்றித் திருக்கோயிலிற் சென்று திருநடங்காட்டியருள அப்பெருமானார் அருள் நடத்தைத் தமது கண்குளிரக்கண்டு மகிழ்ந்து பாடிப் பிரியாவிடைபெற்று அப்பேரூர் நின்றும் திருவெஞ்சமாக் கூடல் என்னுந் தலத்தை யடைந்து இறைவனைப் பாடிப் பணிந்து

அதனை விட்டுச் சோழனாட்டில் வந்து கற்குடி, ஆறைமேற்றளி, இன்னம்பர், புறம்பயம் முதலியன பணிந்து பாடிக் கூடலையாற்றூர் அடைந்தும் அங்குச் செல்ல வழி அறியாது திருமுதுகுன்றம் நோக்கி நடந்தனர். ஆங்கே எம்பெருமானார் உமையாளோடு வழி நின்று ஆரூரார் கூடலையாற்றூருக்கு வழி கேட்க, இதுவே வழியென்று சொல்லி வன்றொண்டரை அழைத்துப்போய் அக்கூடலை ஆற்றூரை அடைவித்து மறைந்தருளினர்.

அதுகண்ட ஆரூரார், அவ்வற்புதந் தோன்றக் கூடலையாற்றூர் இறைவனைப் பாடிப் பணிந்து திருமுதுகுன்றிற் சென்று எம்பெருமானிடம் பன்னீராயிரம் பொன்பெற்று மச்சம் வெட்டிப் பழமலைப் பெருமானருளால் ஆரூர்த் திருக்குளத்தில் எடுத்துக்கொள்ள மணிமுத்தாற்றில் இட்டு ஆங்கு நின்றும் போய்க் கடம்பூரை வணங்கித் தில்லையில் வந்து பேரூரிற்கண்ட பெருமையை வைத்துப் பாடித் திருக்கருப்பறியலூர், திருமண்ணிப்படிக்கரை, வாளொளிப்புற்றூர், திருக்கானாட்டுமுள்ளூர், எதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி, ஆகிய தலங்களை வணங்கிப் பாடித் திருத்துருத்தி அடைந்து ஆங்கே சின்னாள் தங்கிச் சொன்னவாறறிவாரைப் பரவித் திருமணக்கோலங்கண்டு மகிழ்ந்து பிறதலங்களையும் வணங்கிக் கொண்டு திருவாரூரடைந்தனர்.

பரவையார் தமது "திருமனையில் எழுந்தருளிய வன்றொண்டரை எதிர்பணிந்து எம்மையும் மறவாதிருந்தீரோ? என்ன, அச்சுந்தரப் பெருமானார் "திருமுதுகுன்றர் அருளிய பன்னீராயிரம் பொன்னையும் மணிமுத்தாற்றிலிட்டு வந்தனம். அவை முற்றும் மேலைத் திருக்குளத்தில் எடுத்துத் தருகின்றோம் வருக" வென்று அம்மையாரை அழைத்துப்போந்து அக்குளத்தில் வடகீழ் பாகத்தில் இறங்கித் தடவினர். அவ்விடத்தில் ஆரூரார் காணாமையால் பரவையார் நகையாடக்கண்டு மனம் புழுங்கி எம்பெருமானைப் பாடிப் பொன் முழுதும் பெற்று ஆங்கெழுந்தருளிய மூத்த பிள்ளையார் மாற்றுரைத்துக் காட்டக் கொண்டு பரவையாரோடு சின்னாள் ஆங்கு இருந்தனர். சிலநாட் சென்ற பின்னர் ஆரூரார் திருநள்ளாறு, திருக்கடவூர், மயானம் திருவலம்புரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருநனிபள்ளி முதலிய தலங்களைப் பணிந்து திருநீடூர் மறந்துபோக மீண்டும் நினைந்து வந்து "பணியாவிடலாமே" எனப்பாடிப் பணிந்து திருப்புன்கூரிற் சென்று எம்பெருமானைப் பணிந்து திருக்கோலக்கா என்ற தலத்தை அடைய ஆங்கே பெருமானார் எதிர்காட்சி

தந்தருளப் பணிந்து திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்குப் பொற்றாளம் அருளியதைச் சிறப்பித்துப் பாடினார்.

பின்னர் ஆரூரர் சீகாழிப்பதியை வலம்வந்து திருக்குருகாவூருக்குப் போக அவர் பசி வருத்தங்கண்ட எம்பெருமானார் வழியிடையே பொதிசோறு கொண்டு தடாக முண்டாக்கிப் பந்தலுமிட்டுக்கொண்டு இருந்தனர். அவ்வழியே வருகின்ற வன்றொண்டரை அப்பெருமானார் 'உண்டு களை தீர்ந்து போகலா'மென்றுகூற அத்தொண்டரும் அப்பொதிசோறு உண்டு நீரும் அருந்தி களைதீர்ந்து அப்பந்தலில் துயிலவே எம்பெருமானார் அப்பந்தலுடன் மறைந்தருளினர். துயின்று எழுந்த வன்றொண்டர் "இத்தனையாமாற்றை அறிந்திலே" னென்று வெள்ளடைப் பெருமானை வியந்துபாடி வணங்கித் திருக்கழிப்பாலை, திருத்தில்லை, திருத்தினைநகர், திருநாவலூர், தண்டக நாட்டிலுள்ள திருக்கழுக்குன்றம் முதலிய பலதலங்களையும் வணங்கிக்கொண்டு திருக்கச்சூரை யடைந்து எம்பெருமானைப் போற்றிப் பசியால் வாடித் திருக்கோயில் திருமுன்னாக இருந்தனர். சிவபெருமானே ஓர் அந்தணராய் வீடுதோறும் போய்ப் பலியேற்றுவந்து தமக்களித்தருள அச்சோறுங் கறியும் உண்டு ஆரூரர் அந்தணர் கருணையை வியந்திருக்க அந்தணராய் வந்தார் ஆங்கே மறைந்தருளினர். அதனைக்கண்ட வன்றொண்டர் அச்சமுற்று எம்பெருமானைப் பாடித் துதித்தனர்.

அதன் பின்னர் ஆரூரர் எம்பெருமான்பால் பிரியா விடைபெற்று ஆங்குள்ள பல தலங்களையும் வணங்கிக்கொண்டு காஞ்சிமாநகரஞ் சென்றனர். அந்நகரத்தார் எதிர்கொண்டழைக்க, அவர்களுடன் வன்றொண்டர் திருக்கோயினுள்ளே போய் ஏகாம்பரரை வணங்கி பாடித் திருமேற்றளி, ஓணகாந்தன்றளி, கச்சியனேகதங்காவதம், பனங்காட்டூர், திருமாற்பேறு, திருவல்லம் முதலிய தலங்களைப்பணிந்து திருகாளத்திப் பெருமானை வணங்கித் திருக்கண்ணப்பர் பாதமும் பணிந்தனர். அதன் பின்னர் அவர் நந்திபருப்பதம், திருக்கேதாரம் முதலியன பணிந்துபாடித் திருவொற்றியூர் வந்து வள்ளற்பெருமானை நெஞ்சுருகிப் பாடி அத்திருக்கோயிலின் புறத்தேவந்து இருந்தனர். அப்போது தொண்டைநாட்டிலே ஞாயிறு என்ற ஊரிலே வேளாளர் குலத்திலே ஞாயிறுகிழவர் பால் உதித்த அனிந்திதை யான சங்கிலியார் மங்கைப் பருவமுற்று வளரக்கண்டு அவர் தந்தையார் மணம்பேசுதலை அறிய, அவர் வருந்தி வீழ்ந்தனர். அதுகண்ட தாய்தந்தையார் அம்மணம் பேசுதலை விடுத்தனர். இஃதறியாத பழயமுறைமையுள்ளா

ஞொருவன் முதியோர்களை விடுத்து மணம் பேசி மாய்ந்தனன். இனி அவர் அங்கிருத்தல் கூடாதென்று திருவொற்றியூரை அடைந்து தனி மாடமும் அதற்கு வேண்டிய செல்வங்களும் தந்தையாரை அமைத்துக் கொடுக்கச் செய்து அதில் தோழியருடன் அமர்ந்து எம்பெருமானுக்குத் திருத்தொண்டு இயற்றுவாராயினர். ஒரு நாள் சங்கிலியார் வழக்கப்படித் திருக்கோயில் மண்டபத்தில் திரையின் உள்ளே இருந்து திருமாலை கட்டி அத்திரை நீக்கித் தோழியர்பால் எம்பெருனுக்குக் கொடுத்துவிட்டு அத்திரையினுள்ளே மின்போல மறைந்தனர். அங்ஙனம் மறைந்த சங்கிலியாரை ஆரூரர் ஊழ்முறையால் கண்டனர். ஆரூரர் சங்கிலியாரைக் கண்டபோதே அவர்மீது அடங்காக் காதல் உண்டாக இறைவன் அருள்வழியே வந்த இருவருள் ஒருவர் பரவையார், மற்றொருவர் இச்சங்கிலியார் போலுமென்று வியந்து இறைவன் முன்னர் வந்தனர். ஆங்கே நாவலூரர் எம்பெருமானை நோக்கி "இறைவா! உன்னையன்றி அறியாத என்னுள்ளத்தைத் திரிவித்த அப்பரவையைப் போல் ஈண்டும் ஒருத்தி ஆயினள். அடியேன் இனி எண்ணுகின்றது ஒன்றுமில்லை. யான் என் செய்வே"னென்று வணங்கினர். வள்ளல் பெருமானுர் "இன்றிரவே மணம் பேசி முடிப்போ" மென்று வாக்களித்துச் சங்கிலியாரிடஞ் சென்று அவர் உடன்பாடு பெற்று ஆரூரக்கு அறிவித்து ஆரூரர் வேண்டிக்கொண்டபடியே மகிழமரத்தின் அடியின் கீழ் வீற்றிருந்தருளி ஆங்கே சங்கிலியாரைப் பிரியேனென்று ஆரூரரைச் சத்தியஞ்செய்து கொடுக்கச்செய்தனர். அதனுல், இருவருக்குந் திருமணம் நிறைவெய்தவே வன்றொண்டர் அங்கே சங்கிலியாருடன் கூடி இன்புற்று இருந்தனர்.

பின்னர் ஒருநாள் நம்பி யாரூரர் வசந்தகாலத்திலே திருவாரூரில் வள்ளல் தலைவனுகிய தியாகேசப் பெருமான் திருவுலாக் காட்சியில் நினைவு கொண்டு "பத்திமையுமடிமையு" மென்று எடுத்துப் பாடி பிரிவுக்கு வருந்தித் திருவொற்றியூரை விட்டகலவே சபதந்தவறினமையால் இருவிழிகளும் தெரியாமல் போக மயங்கி எம்பெருமானை 'மருந்தொன்று' அருளப் பாடவும், அவ்வொற்றியூரர் அருளாது வாளா இருந்தனர். அதுகண்ட ஆரூரர் வழிச் செல்வார் வழிகாட்டிட வந்து திருமுல்லைவாயிலை அடைந்து "சங்கிலிக்காக என் கண் கொண்டா" யென்று பாடி வணங்கித் திருவெண்பாக்கம் வந்து அங்கு எழுந்தருளிய பெருமானைக் "கோயிலுளீரோ" என்று கூறினர். எப்பெருமானும் "உளோம் போகீ" ரென்று கோல் ஒன்று கொடுத்தருள, ஆரூரர்

அதனைப் பெருது எறிந்திட்டார். மீட்டும் அப்பெருமான் எதிரே வீசி னன். அக்கோல் நந்தி யிடைப்பட்டுப் புண்படுத்தியது. பின்னர் வன் றொண்டர் அக்கோலையே கைக்கொண்டு திருவாலங்காடு,திருவூற லென் னுந் தலங்களை வணங்கிப்பாடித் திருக்கச்சி யேகம்பத்தில் வந்து ஏகாம் பரநாதரைப் பாடித் துதித்து ஒரு கண் பெற்றுக்கொண்டு திருவாமாத் தூரை அடைந்து போற்றித் தொண்ட நாடு கடந்து நடுநாட்டில் திரு வரத்துறை யென்னுந் தலத்தை அடைந்தனர். ஆங்கு எழுந்தருளிய அரத்துறை நாதரை அன்புடன் பாடிப் பணிந்து அப்பால் பல தலங் களையும் வணங்கிக்கொண்டு காவிரியைச் சார்ந்து அதின் மூழ்கித் திருவாவடுதுறையில் வந்து "கங்கைவார் சடையாய்" என்று கோமுத்தி நாதனைப்பாடி வணங்கினர். வன்றொண்டர் அத்தலத்தை விட்டு எழும்போது திருவொற்றியூரில் செய்த சபதந் தவறினமையால் கதிர்போல் ஒளி விளங்கா நின்ற தமது திருமேனி அழகு குன்றிக் கரிபோல் கருகக் கண்டு மிகக் கவலையுற்று இதனைப் பரவை கண்டால் என் சொல்லுவாள்? இவ்வுலகர் தாம் பார்த்தால் என் நினைப்பார்? எம்பெருமானுர் அருள் இருந்தபடி தான் இதுவோ? ஆனாலும் யாவ ரும் அறியாதபடி எழுந்த இந்த நோய் திருத்துருத்தியை அடைந்தால் நம்மைவிட்டு அகன்றேடு மெனத் துணிந்தனர்.

அவ்வாறு துணிந்து எழுந்த நம்பியாரூரர் திருத்துருத்திச் சொன்ன வாறறிவார் திருத்தொண்டர்கள் எதிர்கொண்டு வணங்கச் சென்று திருக்கோயில் எதிர்தோன்றக் கண்டு கைகுவித்துக் கோபுரத்தின் முன்னே வணங்கித் திருக்கோயிலுள்ளே புகுந்து திருமுன் வணக்கஞ் செய்து வலங்கொண்டு மீட்டும் இறைவர் திருமுன் பன்முறை விழுந்து பணிந்து எழுந்து கைகுவித்து நின்று கண்களின் நீர் பொழியவும், மெய் சிலிர்க்கவும் எம்பெருமானே! அடியேன்மீது தலை அளிசெய்து தீராத இந்நோயைத் தீர்த்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்த னர்.வள்ளலாராகிய சொன்னவாறறிவார் அவர்பால் இரங்கியருளி அன் பனே! வருந்தற்க! இக்கோயிலுக்கு வடபாகத்திலுள்ள தாமரைத் தடா கத்தில் முழுகுக" வென்று திருவாய் மலர்ந்தருளினர். அவ்வருமைத் திருவாக்கைக்கேட்ட வன்றொண்டர் தம்மைத் தொடர்ந்த இப்பிணி இன்றேடு ஒழிந்ததெனத் துணிந்து வடகுளத்தின் மேலைத் துறையி லிறங்கி எம்பெருமானை நினைந்து முழுகவே இளஞ்சூரியனைப் போலத் திப்பியமான திருமேனி பேரழகுபெற்று விளங்க எழுந்து அக்கரை மேல் நின்றனர். அப்போது வன்றொண்டர் திருமேனி முன்னையினும்

பேரழகுற்று விளங்குவதைக் கண்ணுற்ற உலகோரெல்லாம் வியப்புற்று வாழ்த்தியிட "மின்னுமாமேக" மென்று எடுத்துத் திருவேள்விக் குடியையும், திருத்துருத்தியையும் சேர்த்துத் துதித்துச் சொன்னவா றறிவாரை மீட்டும் பணிந்து மகிழ்ந்து சிலநாள் அத்தலத்திலேயே தங்கினர். அங்கிருந்தபடியே திருநாவலூரர் பல தலங்களையும் வணங்கி வந்து சொன்னவாறறிவார் திருமுன் பிரியாவிடை பெற்றுக்கொண்டு பிரிந்து திருவாரூரை அடைந்தனர். ஒற்றைக் கண்ணுடன் வந்த வன்றொண்டர் திருவாரூரில் மாலைப் பொழுதில் 'பரவையுண்மண்டளி' யென்னும் கோயிலில் புகுந்து "தூவாயா" என்று எடுத்துப் பாடித் திருமூலட்ட நாதரை வணங்கி அன்று நடுயாமத்திலே கைக்கிளை தோன்ற "குருகுபாய" என்று பாடிப் பின் "மீளாவடிமை" யென எடுத்து "ஆரூரீர் வாழ்ந்து போதீரே" என முடித்து வருத்தமுற்று வணங்கப் புற்றிடங்கொண்ட பெருமான் தம்மீது திருவருள் செய்யவே மற்றைக் கண்ணையும் பெற்று மகிழ்ந்து தேவாசிரியன் மண்டபத்தை அடைந்தனர். இவர் இங்ஙனம் இருக்கப் பரவையார் திருவொற்றியூரிலே ஆரூரர் சங்கிலியால் தொடக்குண்டமையைக் கேட்டுப் பிணங்கிப் மனம் புழுங்கி அன்றிரவில் தூங்காதவ ராயினர். வன்றொண்டர் பரிசனங்கள் வழக்கப்படிப் பரவையார் அகத்துக்குச் செல்ல அவர் வெகுண்டதை அறிந்து அங்கு நில்லாது மீண்டனர். அதை அறிந்த ஆரூரர் பரவையார் ஊடலைப் பலவகையாலும் தீர்க்க முயன்றும் முடியாமையை உணர்ந்து புற்றிடங்கொண்ட பெருமானை வரங்கிடந்து அடிகேள்! தாமே எழுந்தருளிப் பரவையின் ஊடலைத் தணித்தருளா தொழியின் என் உயிரும் இன்றே ஒழியுமெனப் பன்முறையால் முறையிட்டு வணங்கினர்.

வள்ளற் பெருமானார் அவர்பால் இரக்கமுற்று அவர் முன்னே தோன்றியருளி "அன்பனே! இன்றிரவே யாம் தூதுபோய்ப் பரவையின் ஊடலை மாற்றுவோம்! அதற்காக நீ! கவலாதொழிக" வென்று திருவாய் மலர்ந்தருளித் திருவாரூர் வீதிவழியே ஒரு முறையன்றி இருமுறைசென்று பரவையார் ஊடலைத் தீர்த்து இருவரையுங் கூட்டியருளினர். ஆரூரர் வேறு ஏவலாளர் இன்மையால் பரவையார் அகத்தில் தொண்டு செய்ய வந்த தொண்டர் கூனையும், குருட்டையும் நீக்கி ஏவல்கொண்டு பரவையாரோடுகூடி மகிழும் நாளில் வன்றொண்டர் செல்வத் திருவாரூர் வள்ளற் பெருமானைத் தூது போக்கியு

சொல், உலகெல்லாம் பரவவே அதனை ஏயர்கோன் கலிக்காமர் கேட்டு வருத்த முற்றதை அறிந்த ஆரூரர், புற்றிடங்கொண்ட பெருமான் திருமுன் சென்று அக்கலிக்காமர் நட்பினைப்பெற அருள் செய்யும்படி வேண்டினர். அதனால் வள்ளற் பெருமான் திருவருளால் கலிக்காமருக்கு வயிற்றுவலி வந்திடப் பொறுக்க முடியாமல் சிவபெருமானை நினைந்து வருந்திட அவர் கனவில் எம்பெருமான் தோன்றி 'ஆரூரன் அகற்றுவன்' என்று திருவாய் மலர்ந்தருளக் கலிக்காமர் கடவுள் அருமை அறியாது 'பணி கொண்டவன் இப்பிணி போக்குதல் வேண்டா' வென்று நினைந்து தமது வயிற்றை வாள் கொண்டு கிழித்தனர். அதற்குள் ஆரூரர் வள்ளற் பெருமான் கட்டளையால் கலிக்காமர் இல்லத்திற்குச் சென்று அவர் கிடந்த நிலையைக் கண்டுதாமும் அவ்வாறாக எண்ணி அவர் கைவாளைப் பற்றியிட அதற்குள் கலிக்காமர் உடலில் ஓர் ஊறுபாடு இன்றி எழுந்து கைவாளைப் பிடித்துக்கொள்ள இருவரும் அளவளாவி அகலா நண்பர் ஆயினர். அது கண்டு உலகோர் வாழ்த்தினர்.

பின்னர் ஆரூரர் கலிக்காமருடன் திருப்புன்கூரில் சென்று "அந்தணாளன்" என்றெடுத்துப் பாடிச் சிவலோக நாதரைப் பணிந்து பிரியா விடைபெற்று அவருடன் திருவாரூரில் போய் அமர்ந்தனர். அந்நாளிலே கலிக்காமரும் விடைபெற்றுத் தமது ஊருக்குச் செல்லவே ஒருநாள் மலை நாட்டிலே கொடுங்கோளூரிலே 'கழறிற்றறிவா' ரென்று காரணப் பெயர்பெற்ற சேரமான்பெருமாளானவர் பூசையின் முடிவிலே வழக்கப்படியே இறைவனார் திருச்சிலம்பொலி கேளாது ஒழிய அதற்கு அஞ்சி நின்ற பெருமாள், எம்பெருமானார் "அம்பலத்தில் ஆரூரன் பாடலைக் கேட்டிருந்த படியால் யாம் தாழ்த்தன" மென்று அருளிச் செய்யக் கேட்டு, 'ஆரூரனை நினைப்பித்தது எம்பெருமானார் திருவருளே' என்று துணிந்து அப்பொழுதே எழுந்து சேனைகளுடன் தில்லையில் வந்து நடேச வள்ளலை வணங்கி ஆரூரரைக் காணவேண்டித் திருவாரூரை அடைந்து புற்றிடங்கொண்ட பெருமானைக் கண்ணுற்று மகிழ்ந்து வணங்கினர். அப்போது வன்றொண்டர் திருநாகையிற் போய்க் காரோணப் பெருமானை "பத்தூர் புக்கு" என்று எடுத்துப் பாடிப் பணிந்து பல மணிகள், குதிரை, பல வாசனைப் பொருள்கள் முதலிய வெல்லாம் பெற்றுத் திருவாரூரில் வந்து சேரமான் பெருமாளைக் கண்டு அளவளாவிப் புற்றிடங் கொண்டாரை அச்சேரருடன் வணங்கி அவர் அருளால் "சேரமான்றோழர்" எனப் பெயரும் பெற்று

அவரைப் பரவையார் அகத்திற்கு அழைத்துச் சென்று விருந்திட்டனர்.

பின்னர் ஆரூரர் அச்சேரருடன் பல தலங்களை வணங்க எழுந்து மீட்டுங் காரோணஞ் சென்று வணங்கி அங்கிருந்து திருமறைக் காட்டிற் போய் "யாழைப் பழித்தன்ன" என்று எடுத்துப்பாடி மறைக் காடர் மணவாளக் கோலங்கண்டு வணங்கிக் கோடிக் குழகர் தலத்தை அடைந்து "கடிதாய்" என்று எடுத்துப் பாடி அமிர்த கடேசரை வணங்கி ஆங்கு நின்று அகன்றுபோய்ப் பாண்டி நாட்டிலே திருப்புத் தூரை அடைந்து திருத்தளி நாதரை வணங்கி ஆலவாயில்போய் அழகனை வணங்கித் திருப்பூவணத்தில் பூவண நாதரைத் "திருவுடையா"ரென்று எடுத்துப்பாடி வணங்கி திருவாப்பனூர், திருவேடகம் முதலியன இறைஞ்சித் திருப்பரங் குன்றிற்போய் "கோதிட்டை" என்று எடுத்துப் பாடிப் பரங்கிரி நாதனைப் பணிந்து திருக்குற்றாலம், திருக் குறும்பலா, இராமேச்சுரம் முதலிய எல்லாம் பணிந்து ஈழ நாட்டில் திருக்கேதிச்சுரம் வந்து 'நத்தார்புடை' என்று எடுத்துப்பாடிக் கேதீச்சுரரை வணங்கித் திருச்சுழியலில் திருமேனி நாதரை "ஊனாய்" என்று எடுத்துப் பாடிக் கும்பிட்டு அங்குத் தங்கினர். ஆங்குத் துயின்ற வன்றொண்டர் கனவில் கானப்பேரர் தோன்றி "நாமிருப்பது கானப்பே"ரென மறைந்தனர். உடனே வன்றொண்டர் விழித்துக் கொண்டு "தொண்டரடி" என்று எடுத்துப் பாடித் திருக்கானப் பேரில் போய்க் காளீசனை வணங்கித் திருப்புன வாயிலில் சென்று "சித்தநீ" என்று எடுத்துப் பாடிக் கும்பிட்டு அங்கிருந்தபடியே சேரர் பெருமானுடன் திருவாரூரில் சென்றிருந்தனர். அப்போது தோழராகிய கழறிற்றறிவார் மலை நாட்டிற்கு ஆரூரர் எழுந்தருளப் பன்முறை வேண்டிக்கொண்டனர். அவர் வேண்டுகோளுக்கு இணங்கிய வன்றொண்டர் புற்றிடங் கொண்டார் திருமுன் பிரியா விடைபெற்றுப் பலதலங்களை வணங்கி அச்சேரருடன் திருக்கண்டியூர் வந்து வீரட்டேசுரரை வணங்கி வரும்போது திருவையாறு எதிர்தோன்றக் காவிரியாறும் பெருகி ஓடலைக் கண்டனர். அப்போது "பரவும்பரிசொன்றறியேன்" என்று எடுத்துப் பாடக் காவிரி நீர் முழுதும் ஓட்ட மில்லாமல் பளிங்குமலைபோல் நிமிர்ந்துநின்று வழிகாட்ட இது எம்பெருமான் அருளென்று அதனைக் கடந்து அக்கரையிலேறி ஐயாற்றடிகள் திருமுன் சென்று இறைஞ்சி மீட்டும் அவ்வழியே வந்து தென்கரை சேரவே மலைபோல் நின்ற காவிரிநீர் முன்போல் சென்றது. ஆரூரர்

சேரருடன் அங்கிருந்து பல தலங்களையும் வணங்கிக்கொண்டு கொங்கு நாடு கடந்து மலை நாட்டை அடைந்தனர்.

வன்றொண்டர் திருவஞ்சைக் களத்தில் சென்று "முடிப்பது கங்கை" என்றெடுத்துப்பாடி அஞ்சைக் களத்தப்பனை வணங்கினர். அவர் தோழராகிய சேரமான் பெருமாளானவர், அரசியற் சிறப்புடன் வன்றொண்டரை அழைத்துத் தமது அரண்மனையில் அரியணையில் ஏற்றி வழிபாடியற்றிப் பன்முறை வணங்கினர். அவர் ஆரூர்ப் பெருமானை நினைவுகொண்டு "ஆரூரானை மறக்கலுமாமே" என்று பாடித் திருவாரூர் நோக்கி எழுந்தனர். அதுகண்ட பெருமாக் கோதையார் பின் தொடர்ந்து அவர் அருளிய கட்டளையைத் தாங்கி முன்போல் அரசாள மீண்டு அமைச்சர்களைக் கூவிப் பொன்மணி முதலிய பெருஞ் செல்வங்களை ஆட்சுமையாக ஆரூரர்முன் போகப்பணித்துத் தந்நகரில் சென்று அரசு வீற்றிருந்தனர். ஆரூரர் தமது முன்னுகச் சென்ற ஆட்சுமைகளைத் திருமுருகன் பூண்டியில் முருகாவுடையார் பூதகணங்களால் கவர்ந்து கொள்ள "கொடுகு வெஞ்சிலை" பாடி மீட்டும் பெற்று வணங்கித் திருவாரூரிற் சென்று புற்றிடங்கொண்ட பெருமானை வணங்கினர். ஆட்சுமை முற்றும் பரவையார் அகம் சென்றன. சில நாட்களான பின்னர் வன்றொண்டர் தமது தோழரை நினைந்து இடைப்பட்ட பல தலங்களை வணங்கிக்கொண்டு கொங்கு நாட்டிற் போய்த் திருப்புக் கொளியூரில் வர ஒரு வீட்டில் அழுகை ஒலியும், மற்றொரு வீட்டில் மண ஒலியும் கேட்டனர். அங்குள்ளார் "சுந்தரன், அவி நாசி யென்னும் அந்தண மக்கள் ஐயாட்டைப் பருவத்தினர் இருவர் தாமரைக் குளத்தில் நீர் விளையாடும்போது சுந்தரனை முதலை விழுங்கிட அவிநாசிக்குப் பூநூன் மணம் நடக்கிறபடியால் மணவொலியும், சுந்தரனில்லாமையால் அவ்வீட்டு அழுகை யொலியும் கேட்கப் படுகின்றன" வென்று விண்ணப்பஞ் செய்தனர். ஆரூரர் அதனைக் கேட்டு அப்புதல்வனை இழந்தவர் வந்து வணங்கக் கண்டு அவர்க்கஞ்சாமை அளித்து ஆங்கேயுள்ள அவிநாசி யென்னும் ஆலயத்துள் புகுந்து "அவிநாசிப் பெரியீர்! நுமது பெயர் பெற்றவன் பிழைப்ப, என்பெயர் பெற்றவன் இறப்பதோ? இது உமது திருவிளையாட்டோ? என்று "உரைப்பா" ரெனும் தமிழ் பாடி முதலையும், இயமனும் பிள்ளையைத்தர அருள் செய்வீராக என்றனர். அப்போதே அவிநாசிப் பெருமான் அருளால் திருக்குளம் நீர் நிரம்ப, முதலை கரையில் பிள்ளையைக்கக்க அமரர் பூமழை பொழிந்தனர். மண்ணோர் வாழ்த்தினர்.

வன்றொண்டர் அப்புதல்வனுக்குப் பூநான் மணம் முடித்துக் கொடுங் கோளூரில் போய்ப் பெருமாக் கோதையார் எதிர் கொண்டழைக்கத் தழுவிப்போய்த் திருவஞ்சைக் களத்தில் அஞ்சைக் களத்தப்பனை "தலைக்குத்தலைமாலை" என்று எடுத்துப் பாடித் தமக்குப் பற்றுவிட்ட குறிப்பைத் தெரிவிக்க அப்பொழுதே திருக்கைலை யெம்பெருமான் அருளால் இந்திராதி தேவர் அவரை வெள்ளையானையில் ஏற்றியிடத் தமது தோழரை நினைந்தனர். அத்தோழரும் வன்றொண்டர் முன் சென்றனர். அவர்வீரர், உடல் விடுத்து முன் போயினர். நம்பி யாரூரர் "தானெனை" என்று எடுத்துப் பாடிக்கொண்டு கைலையிற் சென்று முன் "பணியில் அமர்ந்தனர். சங்கிலியார் பரவையார் இருவரும், அங்குச் சென்று தம் பணியில் நின்றனர். இவ் வன்றொண்டருக்குக் கருமேக நோயைத் தீர்த்தமையால் சுந்திர தீர்த்தமென்றாயிற்று.

சுந்தரதீர்த்தப் படலம் முற்றியது.

---

## ௩௧-வது விநமமைமுதலியோர்பூசைப்படலம்.

திங்களங் கண்ணி வேய்ந்த சிவபரன் றுருத்தி மேய
மங்கள பதும தீர்த்தம் வயங்குசுந் தரதீர்த் தப்பேர்
வெங்கள மறுமா பெற்ற விதம்விந மரை தெரிந்து
பொங்கள வில்லாச் சீலத் தவற்கிது புகல லுற்றான். க

மூவகைச் சிறப்பும் வாய்ந்த முழுப்பெருந் துருத்தி மேவி
மேவருந் தீர்த்த மூழ்கி விமலனைத் தரிசித் தேத்துந்
தாவருங் காத லுள்ளந் தழைந்ததென் றுரைக்க வன்னா
னேவற வெனக்கு மந்தக் காதலுண் டென்றெ ழுந்தான் உ

தருமசன் மனுங்கு ணத்தாற் றழைவிந மறையுஞ் சேர்ந்து
பொருவருந் துருத்தி சார்ந்து துணைவந்த களிற்றைப் போற்றி
யொருவருஞ் சுயம்பு கோயி லுட்புகூஉப் பணிந்து சூழ்ந்து
முருகலர் பலவு மொய்த்த சுந்தர தீர்த்த மூழ்கி ௩

ஓங்குமுத் தால நீழ லும்பனம் பிகையைப் போற்றி
தாங்குபே ரருள்சால் சொன்ன வாறறி வாரைத் தாழ்ந்து
கோங்கரும் பன்ன கொங்கைக் கோற்றொடி யுமையை யேத்தி
வீங்குமா தரத்திவ் வாறு விழைவொடு வசித்தா ராண்டு ௪

இந்தவா றுண்டு செல்ல விலங்கரும் பன்ன கொங்கைச்
சந்தமார் மயிலஞ் சாய லுமையருள் சார்த லாலே
கந்தமா லிகைமென் கூந்தல் விநமமரை கருப்ப மெய்தி
முந்தவோர் மகவுபெற்று முழுகின ளுவகை வெள்ளம் ௫

மிகுமகிழ் சிறப்ப வுத்தா லகனெனும் பெயர்வி ளம்பி
நகுபுகழ்த் தரும சன்ம னுபக னடியிற் றாழ்ந்தா
னிருவினைக் குழவி யோடு மிருவரும் விடைபெற் றேகிப்
புகுதம திருக்கை புக்குப் பொலிதர வாழ்ந்தா ரன்றே ௬

தழைதரு புகழ்நன் னுச்செள தரிசன முனிவன் கூற
விழைதரு சுமதி கேட்டு விரைந்தெழுந் தடியிற் றாழ்ந்து
பிழைதபு மனைய தானம் விருப்பொடு பேணிப் போற்றக்
குழைவுத் தாலஞ் சமையங் கூறுதி யாவ தென்றான் ௭

நன்றுரை செய்தா யெற்கு நபந்துசென் றிறைஞ்சுங்காத
லொன்றுமுன் னேயுண் டென்னு வுடன்முனி வரனெழுந்தான்
றன்றுணை யமைச்ச ராதி யாவருந் தழுவ வோகை
துன்றுற முடிவேந் தாய சுமதியு மெழுந்தா னன்றே ௮

முனிவனு மமைச்ச ராதி மொய்த்தபல் கிளையுஞ் சூழப்
பனிமதிக் கவிகை வேந்தன் பாய்புகழ்த் திருத்தி புக்குத்
துனிதவிர்த் தெம்மை யாளுந் துணைவந்த களிற்றைப் போற்றி
கனிதரு மன்பி னுள்ளங் கசிந்தொளிர் கோயில் புக்கான் ௯

சுந்தர தீர்த்த மூழ்கிச் சூழ்ந்துநற் றிருமுன் றாழ்ந்து
சந்தவுத் தால நீழற் சாமியம் பிகையைப் போற்றி
யந்தமில் புகழ்சால் சொன்ன வாறறி பவரை யண்மிக்
கந்தமென் மலர்க டூவிக் கைதொழு திறைஞ்சி யேத்தி ௧௦

அருப்புமென் முலையாண் முன்னு மணந்தவ்வா றுருகிப் போற்றி
விருப்பமிக் குறலாற் சின்னாள் விடாம லத்தலத்து வைகிப்
பொருப்புவிற் குழைத்தா ருக்குப் புரிகுழ லுமையா ளுக்கு
மிருப்புமுன் னுக வெல்லாப் பணிகளு மியைய வாற்றி ௧௧

விளைநில மணிம ணிப்பூண் மிளிர்பரி வட்ட மாதி
வளைபல திருவு நல்கி வளரபி டேக மார்வங்
கிளைநிவே தனம்பன் ஞளுங் கிளர்விழாப் பலவு மாற்றி
முளையுறு மன்ன தான முதற்பல வறமுஞ் செய்தான் ௧௨

ஏழுநா வுடையோன் பூசை யியற்றிய தலமுன் ஞக
வாழுமாத் தலங்க ளெல்லா மாங்காங்கு மருவிப் போற்றிச்
சூழுமாத் திருவு நல்கிச் சொன்னவா றறிவார் பாதந்
தாழுமா தரவின் மீட்டுஞ் சார்ந்தனன் வணக்கஞ் செய்வான் ௧௩

இன்னண மொழுகு நாளி லெம்பிரான் காட்சி நல்கி
யன்னவன் வேட்ட வெல்லா மருளினன் முனிவ ஞதி
யென்னரு பணிந்து போற்றி யெண்ணிய வனைத்தும் பெற்றூர்
தன்னம ரிருக்கை புக்கான் றராதிபன் சுற்றத் தோடும் ௧௪

வினமரை யாதி யாக மேதகை யினர்பல் லோரு
மனகநற் றுருத்தி மேவி யருச்சித்த விதந்தெ ரித்தா
மனனமர் நைமி சத்து வாழ்முனி வரர்பல் லோருந்
தனகுறத் துருத்தி சார்ந்து வாழ்ந்தமை சாற்ற லுற்றும் ௧௫

௩௯வது விநமனர்முதலியோர்பூசைப்படலம் முற்றியது.
ஆகப்படலம் ௩௯க்குத் திருவிருத்தம் ௧௯௭.

---

## ௩௯-வது விநமரைமுதலியோர்பூசைப்படலம்.

திருத்துருத்தியின் கண்ணுள்ள பதும தீர்த்தம் சுந்திர தீர்த்த மான வரலாற்றைக் கேட்ட விநமரை, தன் நாயகராகிய தருமசன்ம ரிடம் மூவகைச் சிறப்பும்பெற்ற திருத்துருத்தியை "யான் அடைந்து ஆங்குள்ள தாமரைக் குளத்தில் மூழ்கிப் பரம்பொருளாகிய சொன்ன வாறறிவாரைக் கண்ணுற்றுப் பரவ, அன்புள்ளம் என்பால் உயர்கின் றது" என்று விண்ணப்பஞ் செய்யவே தருமசன்மன் தனக்கும் அஃ துண்டென்று சொல்லி எழுந்தனன். இருவரும் ஒன்று கூடித் திருத் துருத்தியை அடைந்து துணைவந்த கணபதியைத் தொழுது திருக் கோயிலுள்ளே இருக்கும் தாமரைத் தடாகத்தில் மூழ்கி மணவாள நாதர், அம்பிகை, சொன்னவாறறிவார் அரும்பன்ன வனமுலையா ளாகிய எல்லாரையும் பணிந்து ஆங்கே மிக விருப்பத்துடன் தங்கினர்,

ஒரு ஆண்டு சென்ற பின்னர் அரும்பன்னவனமுலையாளாகிய உமையம்மையின் திருவருளால் விநமரை கருப்பமுற்று ஒரு ஆண் மகவு பெற்றனள். தருமசன்மன் அப்புதல்வனுக்கு உத்தாலகனென்னும் பெயரிட்டுக் குழந்தை மனைவியுடன் சொன்னவாறறிவாரை வணங்கிப் பிரியாவிடைபெற்றுத் தனது இருப்பிடஞ் சேர்ந்து இனிதாக வாழ்ந்தனன். இவ்வரலாற்றைச் சௌதரிசன முனிவர் சொல்லச் சுமதி யரசன் கேட்டு விரைந்தெழுந்து அம் முனிவனை வணங்கி "யானும் அத்தலஞ் சார்ந்து உத்தாலத் தருவைப் போற்றுதற்குச் சமயங் கூறுக" வென்றுகேட்க அம்முனிவரும் தமக்கும் அவ்விருப்பம் உண்டென்று உடன் எழுந்திட அம்முனிவருடன் சுமதியரசன், அமைச்சர், சுற்றத்தார் முதலியோர் சூழ்ந்துவரத் திருத்துருத்தியை அடைந்து திருக்கோயிலுள்ளே சென்று வட குளத்தில் மூழ்கிச் சொன்னவாறறிவார் திருமுன்னே வந்து வணங்கி உத்தால நீழலிலுள்ள மணவாள நாதரையும், அம்பிகையையும் துதித்து வணங்கிச் சொன்னவாறறிவாரை மலராலும் நீராலும் வழிபட்டுச் சின்னாள் அங்கேயே தங்கி அப்பன் அம்மை யிருவருக்குந் திருப்பணிகள் பல செய்து விமானிலம், மாணிக்க அணிகள், பரிவட்டம் முதலிய திருவங்கள் பலவற்றையும் அமைத்து அபிடேகம், நிவேதனம், முறையாக நடைபெற நித்தியமாகிய நாட் பூசையும், திருவிழாக்களும் செய்வித்து அன்னதான முதலிய பல அறங்களும் இயற்றினன். அதன் பின்னர் அக்கினீச்சுரம் முதலிய இடங்களிற் சென்று ஆங்காங்கு எழுந்தருளிய எம்பெருமானைப் போற்றி அவ்விடத்தில் வழிபாட்டிற்கு வேண்டிய திருவங்களும் அமைத்து மீட்டும் வந்து சொன்னவாறறிவார் திருவடியைப் போற்றிச் சின்னாள் அங்கேயே தங்கினன். இவ்வாறு அச்சுமதி ஆங்குத் தங்கியபோது சொன்னவாறறிவார் காட்சி கொடுத்தருளத் தான் விரும்பின எல்லா நலங்களையும் பெற்று மகிழ்ந்தனன். முனிவன் முதலிய பலரும் எம்பெருமானை வணங்கி வேண்டிய வேண்டியவாறே பெற்று மகிழ்ந்தனர். பின்னர்ச் சுமதி யரசன் அமைச்சர் முதலாயினரோடு தனதிருப்பிடஞ் சேர்ந்தின்புற்றனன்.

௩௬-வது விநமரைமுதலியோர்பூசைப்படலம் முற்றியது.

---

## ௪௰-வது நைமிசமுனிவர்பூசைப்படலம்.

சூதமுனி வரன்றுருத்தி மான்மியத்தை யிவ்வாறு தொகுத்துக் கூற
வேதமுனி வரர்கேட்டு மிகமகிழ்ந்து சிவானந்த வெள்ளத் தாழ்ந்து
நாதமகன்றெளிர்பரவாழ்வெளிதினுறற் குபாயமிதே நவில்வே றின்றென்
ருதரவி னவன்பாதம் பன்முறைதாழ்ந் தெழுந்தவச ராயி னூரால் க

ஆற்றுமக முடித்தடைந்தார்க் காற்றுமுக மன்பலவு மடைவே யாற்றிச்
சாற்றுபுரா ணந்தெரித்த முனிவரற்கும் பேருவகைத் தழையச் செய்தே
யேற்றுமிசை வருவாரைத் தரிசிக்க வேண்டுமெனு மெண்ணங் கொண்டு
போற்றுமவ னெடுந்துருத்தி மாத்தலத்தி லனைவோரும் புக்கா ரன்றே.

புக்கமுனி வரர்பலருந் துணைவந்த களிற்றினடி போற்றி யேத்தி
நெக்கமனத் தினராகி யாலயமுற் கோபுரத்தை நிரம்பத் தாழ்ந்து
தொக்கவளத் தளிபுகுந்து சுந்தரத்தீர்த் தத்தினிய தூநீ ராடித்
தக்கவிபூ தியுங்கண்ம ணியும்புனைந்தைந் தெழுத்துமெண்ணித் தகச்சூழ்ந்தாரே.

சூழ்ந்துதிருமுன்னடைந்தோரெட்டுறுப்புநிலந்தோயத்தொழுதெழுந்து
வாழ்ந்து சொன்ன வாறறியும் பெருமான்முன் குறுகிநறு மலர்தூய்ப் போற்றி
வீழ்ந்துஞிமி றுழக்குகுழலருப்பன்ன வனமுலையாள் விரைமென் பூந்தா
ளாழ்ந்தபெரு கன்பொடுபோற் றினர்தழைவுத் தாலநிழ லடைந்தார் மன்னே

ஆங்குவளர் பெருமானை யவனெதிர்வா ழம்பிகையை யன்பிற் போற்றி
வீங்குதிற லாவரண வானவரை யாங்காங்கு விருப்பி னேத்திப்
பாங்குபுனை யழலீச முதலாய பற்பலவும் பரவிக் கும்பிட்
டோங்குபுகழ்க்கேத்திரஞ்சூழ்ந்தும்பர்பிரான் முனமீட்டு முற்று ரன்றே.

மன்னவா றறியுந்த னாளரா யினுநின்னை மறந்தா ரென்னி
லென்னவா றறிபவர்மற் றென்னுவ ருன்னடிக ளெந்த ஞான்றும்
பன்னவா றறிந்துய்ய வெமக்களித்த பெருங்கருணைப் பரமா னந்தா
சொன்னவா றறிவோய்வண் டுருத்திநா யகவென்று துதித்துப் போற்றி.

இரும்பன்ன மனங்குழைத்தெங் களையாண்ட பெருங்கருணை யிமையச் செல்வி
யரும்பன்ன வனமுலையா யருள்புரிய வேண்டுமென வன்பிற் போற்றிச்
சுரும்பன்ன கண்மணிமா லையரிருவர் பாலும்விடை தொழுது வாங்கிப்
பெரும்பன்னமலர்செறிநைமிசவனஞ்சார்ந்தானந்தம்பெருக வாழ்ந்தார்.

இந்தநல மலிதுருத்திப் புராணத்தை யெழுதுவோ ரெழுது விப்போர்
சந்தமுற வாசிப்போர் பொருடெரிவோர் பொருடெரிந்து சாற்ற லுற்றோர்
பந்தவினை முழுதுமறப் பூசிப்போர் நேசிப்போர் பலர்க்கு மூறு
சிந்தவுறுபொருளளிப்போர் வியந்திடுவோர் யாவர்களுஞ் சிறப்பினோங்கி.

மண்ணுலகப் பெரும்போக மனைமக்கண் முதலியோர் மருவத் துய்த்து
விண்ணுலகபோகமெலா முறையினனு பவித்தெவரும் விழைந்துசேரக்
கண்ணுலக மாயசிவ லோகமடைந் தின்பங்கள் கலந்து வாழ்வா
ரெண்ணுலகத் தினையபுரா ணம்புகுமி லிடராதி யிரிந்தோங்குமமே.

துருத்திநகர் வாழ்கவுத்தா லகம்வாழ்க மணக்கோல சுந்த ரேச
னருத்திகொளம் பிகைவாழ்க வரும்பன்ன வனமுலைப்பே ரம்மை வாழ்க
விருத்தியருட் சொன்னவா றறிபரமர் வாழ்கவவர் மேன்மே லன்பு
பொருத்தியெமை யாளமணி மன்றெடுத்த குஞ்சிதச்செம் பொற்றாள் வாழ்க.

௪௦-வது நைமிசமுனிவர்பூசைப்படலம் முற்றியது.

ஆகப்படலம் ௪௦க்குத் திருவிருத்தம் ௧௬௨௭.

---

## ௪௦-வது நைமிசமுனிவர்பூசைப்படலம்.

சூதமுனிவர் நைமிசவனத்தில் முனி கணங்களை நோக்கித் திருத்துருத்திப் புராணத்தைச் சுருக்கிக் கூறியருள அம்முனிவர் எல்லோரும் மிகமகிழ்ந்து சிவானந்த வெள்ளத்தில் மூழ்கி நாதங்கடந்த நல்வாழ்வை எளிதிலுறச் செய்வது இதுவேயன்றி வேறு உபாயமில்லை என்று அறிந்து அச்சூதமுனிவர் திருவடிகளில் விழுந்து வணங்கினர். அதன் பின்னர் அம்முனிவர்கள் தொடங்கிய வேள்வி முற்றவும் முடித்துவிட்டுச் சூதமுனிவர்முதலாக அங்கு வந்தவர் அனைவர்களுக்கும் முகமன் மொழிந்து விடுத்துச் சொன்னவாறறிவாரைத் தரிசித்து மகிழ எண்ணித் திருத்துருத்தி நகரை அடைந்தனர். ஆங்கு வந்த முனிவர் அனைவரும் துணை வந்த விநாயகரைப் பணிந்து ஆலயத்தின் கோபுரத்தின் முன்வந்து வணங்கிச் சுந்தரப் புனிதநீரிற் படிந்து திருநீறு, திருக்கண்மணிபூண்டு ஐந்தெழுத்தோதி எம்பெருமானை வலம் வந்து திருமுன் ஐந்துறுப்பும், எட்டுறுப்பும் மண்ணில் தாழப்பணிந்து சொன்னவாறறிவாரையும், அரும்பன்னவனமுலை அம்மையையும் நீரோலும் மலராலும் வழிபட்டு உத்தால நீழல் அடைந்தனர். பின்னர்

ஆங்கெழுந்தருளிய மணவாள நாதரையும் அம்பிகை இருவரையும் அன்பால் அம்முறையே வழிபட்டு அக்கினீசம் முதலிய திருக்கோயில் களையும் வணங்கி மீட்டும் சொன்னவாறறிவார் திருமுன்வந்து, அரும் பன்னவனமுலையாளோடு மேவிய சொன்னவாறறிவீர் ! அருள்செய்ய வேண்டுமென்று அன்பால் போற்றி செய்தனர். அதன் பின்னர் அம்முனிவர் அனைவரும் பிரியாவிடை பெற்று நைமிசக்காட்டை அடைந்து இன்புற்று வாழ்ந்தனர். இப்புராணத்தை எழுதுவோர், எழுதுவிப்போர், வாசிப்போர், பொருளறிவோர், அறிந்து சொல்லு வோர், பூசிப்போர், நேசிப்போர், இவர் அனைவர்க்கும் பொருள் அளிப்போர், புகழ்ந்திடுவோர் எல்லோரும் இவ்வுலகில் மனைவிமக்களு டன் பெரும் போகந்துய்த்துப் பின்னர் விண்ணுலகத்தில் சென்று போகம் அனைத்தும் நுகர்ந்து அதனின் மேலான சிவனுர் உலகஞ் சேர்ந்து பேரின்பம் உறுவார். இப்புராணம் இருந்த இல்லம் எல்லா இடரும் நீங்கி எல்லாச் செல்வத்தோடும் இனிதாக விளங்கும்.

நைமிசமுனிவர்பூசைப்படலம்முற்றியது.

திருத்துருத்திப்புராணம் முற்றியது.

அரும்பன்னவனமுலையாள்மேவியசொன்னவாறறிவார்திருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

உ.

கணபதி துணை.

## இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்ற பதிகங்கள்

---

## திருத்துருத்திக்கச்சிவிநாயகர்பதிகம்.

மாமேவு பவளா சலக்குவட் டுதயமெழு மழவிளங் கதிர்நிகர்த்து
மணிமௌலி பொலியவவ் வரைமூடியி னிருபாலு மணிகொழித் திழியருவியிற்
பாமேவு கருஞிமி றிரைப்பக் கபோலம் பகுத்துவிடு தானமொழுகப்
பனிமதிப் பிறையொன் றடுத்தமர்ந் தாலெனப் பகரொரு மருப்பிலங்கத்
தேமேவு மலரிறைத் தடியர்சய சயவென்று திசைதொறு முழக்கெடுப்பச்
செறுவலிக் கருமூடி கத்திவர்ந் தியாங்கண்மகிழ் தேக்கவந் தருள்புரிகுவாய்
காமேவு தண்ணளி யமைந்தடையு நர்பாது காத்தறம் வளர்த்திடுதலாற்
கற்பத் தலத்தினும் விருத்திச் துருத்தியமர் கச்சிக் களிற்றுமூகனே. (௧)

குலவுதவ முனிவரர்க ளமருந் தவச்சாலை குவலயம் படிதராமே
கூறுமச் சாலையுட் சைவா கமந்தீட்டு கோசங்கள் சிதைதராமே
நிலவுதழல் படுகுண்டம் வேதிமே கலையொடு நிதம்புதி தியற்றுறுமே
நித்தியமுன் னுயகரு மம்பலவு மத்தவர் நிகழ்த்தலிற் குறைவராமே
புலவுகம ழங்குசம் பாசநமை யேவியது போதுமென் றுவகை மலியப்
பொங்குஞ் சினத்துலவு கருமூடி கத்துப் பொருக்கென விவர்ந்துபலவாக்
கலவுபல வண்டத்து லாவருந் திறலுடைக் கருணையா மறியவலமோ
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௨)

ஏதியென வெவ்வள விருப்பன வவற்று விறுத்தல்செய் யாதவராமு
மிமையவ ருடம்புமுத லெத்துணை யுடம்பவை யிரிந்திடற் காயவரமும்
நீதிதரு மட்டாங்க பஞ்சாங்க முதலிய நிகழ்த்துவந் தனைவிலக்கும்
நிகழுமற் றுள்ளவு நினைந்துமிச் சிரவுருவ நிலவமற் றொன்றமைந்து
சோதிதரு கோடொன்று கொண்டுகய முகன்வலி தொலைத்துவிற லூர்தியாக்கிச்
சோர்விலவனமரர்பாற்பெற்றவையுமேற்றருள்சுரந்துபல்லுயிர்செய்வினையைக்
காதிநல மேயுதவு நினதுபெரு மாண்பெவர் கருத்தமைத் தோதவல்லார்
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்று முகனே. (௩)

ஏற்றமிகு மொருமுனிவ னேம்பழற் குழிநாப்ப ணிரியாத கிரியைஞான
மென்னுமிரு சத்திக ளொடுந்தோன்றி யம்முனியோ டேற்றமர் புரிந்துபலருஞ்
சாற்றவொளிர் புரவுமணி கைக்கொண்ட மாற்றலன் றன்வலி யடங்காப்பெருந்
தானைவலி யொடுகவர்ந் தம்மணியும் வாங்கியத் தாபதற் கினிதளிக்கத்
தேற்றமத னல்வர லுணர்ந்தனைய தவனுஞ் சிறந்தமார் பிற்றரித்துச்
சிந்தா மணிக்குஞ் சரப்பிரா னென்றேத்தல் செய்யவவன் வினையனைத்துங்
காற்றவெழு மருள்பொழிந் தினிதமரு மாடலைக் கண்டுவிண் டிடவல்லரார்
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௪)

தெள்ளமுத மயமாக வுமையம்மை நல்கிய திருந்துமோத கஞ்சமாய்த்
தீயகொடு நஞ்சமய மாகவொரு பேதைதரு செழுநாவ லங்கனிகடா
மெள்ளலரு மமுதமாய்த் தாம்புரித றவரு றியற்றிடக் கண்டோமினு
மியலுத்த மாங்கம்வே றுகவும் பார்க்கவு மிருசெவிக ளார்கேட்கவு
முள்ள பொரு ளிதுவென்று வாய்பேசவும் பிறவுஞற் றவுமியங் கல்செயவு
முண்மையிற் கண்டுளே மென்னிலெவர் நின்னுட லுட்கொண்ட ளக்கவல்லார்
கள்ளமகன் மாதவர்க் கானந்தமாய்ப் பரவு கற்பனை கடந்தவாழ்வே
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் சச்சிக் களிற்றுமுகனே. [௫)

எந்தவா னவரருள் பெறக்கருதி னுலுமனை யேத்திவழி படுவரெழுவா
யேத்திவழி படல்செயா ரென்னிலவ ரெண்ணிய திழந்துமிடை யூறுமுறுவார்
முந்த வார்வம் பெருகு மாறுநி னடிப்பூசை முற்றும் புரிந்துபோற்றின்
முன்னிய வினைத்துமுற் றுததல வேயிந்த முறைமைநா னுணர்த லாலே
பந்தமா மலகன்ம மாயையொரு மூன்றையும் பாற்றிநின் னறிவு தொழிலாம்
பாதநிழல் புக்கின்ப முறுமாறு நின்னையே பற்றித் துதித்தல் செய்வேன்
கந்தமா மலரிடுந ரெய்ப்பில்வைப் பேபுகழ்நர் கலைகணே யமலவாழ்வே
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௬)

மருவுபல புவனத்து மெந்தவா னவர்வடிவு மண்சிலை வடுத் தாரமொண்
மாசைக ளிவற்றுளொன் றுற்செய்து வயிறளவின் மருவாம லஃகுமென்னில்
வெருவுமிக வாய்ந்தந்த வடிவருச் சனைசெயார் விடுவாவ் வாறுதேர்தல்
வேண்டாது பேருதரம் வாய்ந்தநின் றிருவுருவ மேதகப் பூசைபுரித
லொருவுதல் செயாதவர்கள் யாவரே யேனுமவ ரும்பர்மக வான்மலரின்மே [ன்
லொருவன் முதலோர்களினுமதிகரென் றருமறையுரைத்தல்சிலரெண்ணுமையெ
கருவுதவிர் மாதவர் கசிந்தேத் தெடுக்கவொளிர் கருணையானந்த வாழ்வே
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௭)

பொங்குங் கருங்கடல் பரந்ததென் னென்றுபல புவனமுமொ ரையமெய்தப்
புக்ககட னின்றுமலை யின்றெழுந் தஃதெனப் பொருதொழில் வலாரியெண்ணித்
தங்குந் திறற்கொடிய சதகோடி யொல்லைத் தடற்றுநின் றுருவல்செய்யச்
சகமுழுவ தும்புதை படச்சிறை விரிக்குமொரு தறுகட் கலாப மயின்மே
லெங்குங் கதிர்க்குமொரு பவளா சலம்பொர விவர்ந்துபல படையொடுமெதி
ரேற்றுமாற் றலனுக வப்பா ரிடைக்கவிழ வெழுகாக மோடுகழுகுங்
கங்கும் புகழ்ந்தடை விறற்படை கைதொட்டநின் காமர்விறல் யாவர் புகழ்வார்
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௮)

துதிக்கையோ டிருசெவியி னின் றமொரு மூவரைத்தோற்றிஞ யண்ட மணுவாத்
தோற்றிட வுயர்ந்தாயோர் சனகனிடு முணவெலாந் துய்த்துமிகு பசிதெரித்து
மதிக்கைகொ டவன்பணிய முப்பொருளினுண்மையைவகுத்தவற் குறநவின்றுய்
யையமுதல் பரவுமோ ரறுகளவுபோதாத வண்ணந் தெரித்தல்செய்தாய்

விதிக்கைபுரி வானுங்க ராதபுரு சுண்டிமுதல் மேலோர்கள் பலரிறைஞ்ச
விழையுமா னந்தமய மேயாய் விளங்கினுய் வெய்யேனின் னுண்மைதேர்ந்து
கதிக்கையுறு மாறுபே ரருள்புரிவ தென்றுகலை காணு வதீதமுதலே
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௧)

மலையுமொரு பொருளன் றெனக்கறிக் குந்திறல் வயக்குநின் னூர்திவாழ்க
மலர்பொருவு கைத்தலப் பாசாங்குசப்படை வயங்கியெந்நாளும் வாழ்க
நிலைமருவுஞான முங் கிரியையு மெனக்கலை நிரம்பினரெடுத்துரைக்கு
நேயமிகு சித்திபுத்திகளெனுஞ் சத்திக ணிரம்புசீ ரோங்கிவாழ்க
வலைகட லுடுத்தபுவி முழுதுநின தருளடைந் தாதரம் பெருகிவாழ்க
வற்புதம் விராவுநின் னணியல்பூ ணுகியவருந்தவத் தெவையும்வாழ்க
கலைவதி வினைப்பரவு செங்குந்தர் மரபுங் கதித்துநீ டூழிவாழ்க
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௧0)

திருத்துருத்திக்கச்சிவிநாயகர் பதிகம் முற்றிற்று.

---

## திருத்துருத்திச்சுப்பிரமணியசுவாமிபதிகம்.

பூமேவு சமயங்க ளோராறினுக்கும் புலங்கொளுங் காட்சி நல்கப் [று
பொலிந்தனவெனச்சொலுந்திருமுகமொராறும்பொலன்செய்மணிமுடியொரா
பாமேவு செங்கதி ரிராறுநிக ராமெனப் பகர்மணிக் குழையிராறும்
பன்னிரு தடம்புயப் பெருவரையி னருவியிற் பசுநற வொழுக்குதொடையு
மாமேவு கானவர் குலக்கோதை யொடுமேலை வானவர் குலக்கோதையும்
வளரொளிய வடிவேலு மார்பினு லும்பொலிய மயில்வா கனத்துவருவாய்
தேமேவுசோலைபுடை சூழுந்துருத்தித் திருத்தணியி லமரண்ணலே
சீறுவெம்பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௧)

நீடுமக மேருவைத் திசைவரை யொடுங்கொண்டு நிலவுபந் தாடல்செயவு
நேமிமால் வரையையொரு கைக்கடக மாக்கொண்டு நிகரமற் றென்றுயவு
மோடுகதி ரைச்சிறு மதாணியென மார்பிடை யுறப்பூணைய வுஞ்சலதிக
ளோரெழு மொருவிரற்கொடுதெறித்திலையெனவொழிக்கவுந் திசையெட்டினுங்
கூடுகளி றெட்டுந் துதிக்கைகண் முடிந்தொருகை கொண்டிழுத் திடவும்வல்ல
குலவீர வாகுவைத் தம்பியென மகிழுநின் கொற்றமெவர் முற்ற வுணர்வார்
சேடுமலி காவிரித் தென்பாற் றுருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௨)

பொருவரிய மாதவத் தொருநா ரதப்பெயர்ப்புங்கமுனி புரிதவத்துப்
போந்துபல வண்டமுமிடித் துத் தகர்த்துநுண் புழுதிசெய் துலாவுகின்ற
வெருவரிய செறிமயிர்த் திருகுகோட் டுத்தகரின் விறல்கண்டு நடுநடுங்கி
மேலைவா னவரடைந் தோலமென வருகுபொலி வீரவா குவைநோக்கியப்

பருவமிகு தகரினை யேற்றிவரு கென்னப் பணிப்பவவ னுதவவேறிப்
பாரிடம் போதாமை தெரிதரச் செண்டாடு பண்பெவ ரெடுத்துமொழிவார்
திருவமிகு கல்விச் சிறப்புயர் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௩)

வெள்ளியங் கயிலையின் முதற்சிகரி வாய்தலின் விநோதப் பொருட்டமருநாள்
வித்தகற் சேவைசெய் தஞ்சலிசெ யாதேகும் விதியினறி யாமையுள்ளத்
துள்ளி யிலனைப்பற்றி வம்மென வுரைக்கவாங் கொருகுறண்மு னுய்ப்பநோக்கி
யொழியா வகந்தையுளை யெத்தொழில் வலாயென வுஞற்றுதலில்வல்லேனென
வெள்ளியொரிருக்குரையெனக்குடிலைமுன்சொலவியம்பியதனுட்பொருளெவ
னியம்புதி யெனத்தெரி தராமையாற் சென்னியி னிரங்கப் புடைத்தடைத்தாய்
தெள்ளியருமென் னுணர்வர் நின்புகழ் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங்கொடியாளனே. (௪)

பெருகுகொடு வஞ்சநவில் குருகுவரை நிலைதபப் பெருவான் கரக்குமாறு
பேரமரு ஞற்றுமள வில்லா விறற்றகுவர் பிணவரை யுயர்ந்துதோன்றக்
கருகுநிறம் வாய்ந்துகரைகொன்றிரங்கும்பெருங்கடன்முழுதும் வற்றவனையார்
காயத்து நின்றும்வெளி வந்தநெய்த் தோரெனுங் கடறிரை யெறிந்துபெருக
முருகுமலிமாலைப் புயத்தனையர் குடிகொண்ட முதுநகர மதுபாழ்பட
முன்னித்துதிக்கும்வா னவர்குடிகொணகர்களி முகந்துமேன் மேற்றழைதரத்
திருகுதவி ரயிலொடுநின் விரலென் றுருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம்பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங்கொடியாளனே. (௫)

பொருந்திய தமிழ்க்கெல்லை யாகும்வட வேங்கடப் பூதரமு மாதரவினாற்
போதுமூன் றும்போதுமூன்றுதவு வெற்பும் பொலிந்துயர் பரங்குன்றமு
மருந்தியநறும்பழ முதிர்க்கும் பொழிற்கிரியு மவிர்சந்த னாசலமுமெல்
லலர்பொருஞ் செங்கையிற்றண்டுகொடுமழவடிவமைந்தருள் கொழிக்கும்வரையு
மருந்தியவுண்மாந்துதலெனப்பிரானொருமொழிவயப்பொருண்மனங்கொள்ளுவா
வாய்மலர்ந் தருளியமர் மால்வரையு மற்றுநீ மருவுமருள் யாவருணர்வார் [ன்
திருந்திய வளம்பல விராவுந் துருத்திப் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம்பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௬)

களிமருவு வேட்டுவர் குலக்கொடி படர்ந்துமகிழ் கலவத் தழைந்ததருவே
கற்பகப் பொழிலாடு தெய்வதப் பிடியைக் கலந்துவிளை யாடுகளிறே
யளிமருவு மாதவ ருளக்கமல மலர்நாப்ப ணள்ளூற வூறுதேனே
யாயிரங் கதிரொருங் குதயமெழ லெனவடி யடைந்தவர்க் காங்காட்சியே
வளிமருவு புடவியி னயர்ந்தோ தினுங்கருணை மழைபொழிசெழுங்கொண்டலே
வந்தித் துளாகையெவ் வானவரு மெஞ்ஞான்றும் வந்திக்க வைக்குநிதியே
தெளிமருவு நின்னடிக் கன்பரு டுருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங்கொடியாளனே. (௭)

மூவர்முத லாயபர சிவன்மேனி யிற்பாதி முனிவரிய தாக்கவர்ந்து
மூதண்ட புவனப் பரப்பிற் சராசர முகிழ்த்திடக் கருணைசெய்தும்
யாவரெது கருதினர் கருதிய படிக்கவர்த மிதயத் தமர்ந்தளித்து
மிச்சைஞா னக்கிரியை பரையாதியைவர்முத லெண்ணில்சத் திகளாகியும்[னும்
பூவர்முதலோர்தொழிலனைத்துமொருதன்றெழிற் பொலிவெனச் செய்துமின்
புகலளவில் சத்தியுள தினதுகைச் சத்தியே புகன்றள விடப்படுவதோ
தேவர்பல முனிவர்க டுதிக்குந் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (அ)

அத்தரொரு மொழியுண்மை யிற்றெனத் தெளியுமா றருளுநின் குரவுபுகழ்கோ
வழகிய குறக்கோதை பாற்பொருளி னியல்பறிய வாற்றியநி னுடல்புகழ்கோ
முத்தர் கருதச்சூ ரெறிந்தமரர் சிறைமீட்ட முனிவினின் வாகைபுகழ்கோ
மூகையென வைகியறி வோங்குநா வலர்கலக முழுதறுத் தருளல்புகழ்கோ
பத்தர்பல ரெண்ணிய படிக்கவர்முனஞ்சென்று பரிவினீ யருளல்புகழ்கோ
பயனுறு நாயினேன் யாதினை யறிந்தொரு பயன்படப் புகழவல்லேன்
சித்தர்பல முனிவர்க டுதிக்குந் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே (கூ)

ஓங்குநின் பான்மருவு சத்திமா ரிருவரு முவந்துபொழி கருணைவாழ்க
வுயர்தம்பி மார்வீர வாகுமுத லாயதிற லொன்பதின்மர் வாகைவாழ்க
வாங்குகடல் வைப்புமறை யச்சிறை விரிக்குநின் மாமயிற் றோகைவாழ்க
வருமிறுதி நாளுருத்திரனிலும் பொலிநின்கை வடிகொளொண் சத்திவாழ்க
வீங்குபுக ழமைநிற் புகழ்ந்துபா டும்புலவர் வெற்றியின் விளங்கிவாழ்க
விருப்பொடு நினைப்போற்று செங்குந்தர் தம்மரபு மேன்மேலு மோங்கிவாழ்க
தேங்குபல் வளம் பொலி விருத்தித் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவுமாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௧0)

திருத்துருத்திச்சுப்பிரமணியசுவாமிபதிகம்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

ப. சிங்காரவேற்பிள்ளையவர்கள் செய்த

# அரும்பன்னவனமுலையம்மை பதிகம்:

பூமருவு மமரர்களும் புகலரிய வகமாகிப் புண்ணியம் பழுத்த முதலாய்ப்
புகழ்மறையுந் தெரியாத பொருளாகி நின்றநீ புகழ்பாத னென்ற பெரியான்
மாமருவு மாலவன முறமருவித் தவஞ்செய மகிழுமிறை வன்னுருவிலே
வந்ததொத் திடவேள்வி யாரழலின் பிள்ளையாய் வந்தவம் பிகையென்னவே
நாமருவும் பேர்பூண்டு மக்களைப்போன் றுநீ மண்ணில்விளை யாடல்செய்தே
நலந்தருமுன் னிறைவனைமறுமணம்பூண்டனைநாளுமுன் னருள்வேண்டினேன்
ஆமருவு முனதுமல ரடிபரவ வழியெஞ்சா தகந்தூய்மை தந்தருளுவாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன முலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

காலமுத றத்துவ நெறியெலாங் கடந்தெங்கள் கண்ணுதல் கருத்திலுளிரும்
காணரிய வருளாகும் பல்கோடி சத்தியே கருதரிய தக்கன்மகளாய்
ஏலவொரு வீரபத் திரனுனை முகனோடு மிருபுதல்வர் வரவருளினாய்
இமயநற் புதல்வியாய் இமையவர்க் கரசருள வெழின்முருக னைத்தந்தனை
கோலமுறு தென்னவன் பெண்மக வாகிவளர் கோவுக்கி ரனையீந்தனை
குலவுநீள் காவேரி கரைப்பரதன் புதல்வியே குலமகன் றனைப்பிரிந்தே
யாலமுறு மரவுமணி யிழந்தென்ன வலமருவே னடியனேற் கருளுகண்டாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன முலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

எண்ணலரு மன்னை நீ யெத்திற மாயினை யியலுமத் திறமாகவுந்
இறைவனு மாயின னென்றதனை யறியாத எழின்முனிவ னொருவனறிய
விண்ணவரு மறிவரிய விமலன்செம் பாதியென விளங்குநின் னருளென்னவே
மேலவ னெனத்தகு மாலவனுமறியாமல் மேன்மகனை யிழந்தயர்ந்தான்
நண்ணலரு மெய்ப்பொரு ளுனையலா தில்லையென நாடுவா ரகத்துவளரும்
நயமான கற்பக முனைவிடுவனல்லனே நாயினேற் கிரங்கியருள்வாய்
அண்ணலருந் துணையாகி யரியவுயிர்க் குயிராகி யருள்புரிய நின்றவன்னாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன முலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

தாயுநீ தந்தைநீ யுற்றவர் பெற்றவர் தயைமிக்க யுன்னையல்லால்
தரைமுதலா மெவ்வுலகு மியாவ ருளரோசொற் றஞ்சமென வடையவம்மா
தோயுமரு ளுடையபல கடவுளரி வியாவருனைத் தொழுதுநின் றருள்பெறுதார்
தொக்கவிராக் கதரசுரர் முதலான கொடியவருந் தூயவுன் னருள்பெறுரோ
காயுமோர் புல்லனைய பேதையேன் நிதமுமே கணக்கிலாப் பீழைமூழ்கிக்
கண்டுகொள் வாரொருவ ரிலையென்ன வன்னையே கருதியுனை வந்தடைந்தேன்
ஆயுமறை வறிவரிய வருணீரா லாட்டியெனை யகமகிழச் செய்தருளுவாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன முலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

எண்டிசைக் கெண்டோளும் அறுதிசைக் கறுமுகமும் எழில்பெறக்கொண்டவெம்மான்
இயற்றியிடு மைந்தொழிற் கொருதுணையாய் நின்றுதவும் எண்ணரிய சத்தியாகிக்
கொண்டலெனநின் றுலகைக்காத்தருள்செய்வித்தகனுங்கோனவன் தங்கையாகிக்
கொள்ளைகொள வருளுநின் னருளினுக் காகாத கொடியனே னெனினுமம்மா
பண்டையுள வினையினாற் பகுத்தறி விலாதபெரும் பாவியே னாகிநின்றேன்
பரையுன்னையல்லாமலொருதெய்வமில்லையெனப்பார்த்துன்னைவந்தடைந்தேன்
அண்டபகி ரண்டமுத லுயிரெலாம் பெற்றவருள் அன்னையே வழியருளுவாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன மூலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

எக்காலு முன்னையன்றி நினையாத பெருமக்க ளிதயத்து ளொளிருமணியே
இரவுபக லுயிரெலா மாட்டிமே லாடியரு ளெம்பிரா னுளக்களிப்பே
முக்காலும் வழிபடுவா ரிருளெலா மிரிந்தோட முன்னியரு ளொளிவிளக்கே
மூடனேன் வினையென் னும்வெயிலுக்கோர்நிழல்செய்யுமொட்டலர் தழைந்ததருவே
இக்காலும் பேதையேன் மனநிறைவு வொருசிறிது மில்லாமல் வாழ்தறகுமோ
வேழைக் கிரங்கியரு ளென்னம்மை நின்னுமம் எண்ணுமலேயிருந்த
அக்காலு மறிவிலார்க் கருள்செய்யு மன்னையா யரன்றுணை யானவெந்தாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன மூலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

உலகெலா மாகியே யுடலாகி யவ்வுடலு ளுயிராகி யெவ்வுயிர்க்கும்
ஊழ்முறையி லூட்டியரு டாயாகி நின்றநீ யொருங்குவைத் தன்னமிடுவோன்
விலகாம லன்னமிடு காலையி லொருவற்கு விரும்பியுண விட்டவதனை
வேண்டாம லேகருணை யண்டாம லேயயர மீளப் பறித்தன்முறையோ
நலகலைக ளறிவிலே னெனினுமுயி ரானவெனை நடுங்குறச் செய்தறகுமோ
நவிலுமுக் கண்ணனொடு நாலுமுக் கண்ணனையு நலமுறத் தழுவியருள்வாய்
அலகிலா வினையினே னெனினுமுன் னருளினு லடியேற்கும் வழியீகுவாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன மூலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

மாயாத கலையைந்து மீராறு கலைகளும் மருவுமிட மாகி வாழ்வாய்
மந்திரந் தந்திர மருந்துமாய் யாவர்க்கும் வருபிணியை மாற்றியருள்வாய்
ஓயாத மாயைக்கு வித்தாகி யவ்வித்தி னுளிர்கின்ற விளைவுமாவாய்
உணர்வரிய பொருளாகி யொருவனாய் நின்றசிவ னுருபாக மாகிநின்றாய்
வீயாத வினையினுக் கொருதுணை யாகிநீ வினையெலாங் கடந்துநின்றாய் [தம்மா!
வெள்ளறிவி னேன்வினையோ வென்னம்மை நின்னருளோ வெலற்கரியவலிய
ஆயாத மனமுளே னெனினுமுன் னருளேனுக்கு மடியேற்கும் வழியீகுவாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன மூலையம்மை யருள்பெருக வந்தவுமையே

ஒழியாத வொலியெலா மடக்கியிடு மமயத்தி லுணர்வரிய வொளியதாகி
உண்மையா யுணர்கின்ற வறிவனு ருள்ளத்தி லூறியிடு மின்பவுருவே
கழியாத காலமே வடிவான வெண்ணரிய கண்ணுதல் கண்களிக்குங்
கலைமகளு மலைமகளுங் காண்பரிய மலைமகளாய்க் கட்டழகி யென்னவந்தாய்

பழியாத வுன்னருளுண்டென்ன நம்பியே பாவியே னுனையடைந்தேன்
பகரரிய துயரெலாந் தொகுதியா யெனைவாட்டப் பார்த்தலுன தருளாகுமோ
அழியாத மனமுளே னெனினுமுன் னருளினு லடியேற்கும் வழியீகுவாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன முலையம்மை யருள்பெருக வந்தவுமையே.

மன்பெரு நாயகர் சொன்னவா றறிவரென மாண்புபெற யாருமறிய
மகிழவே மணங்கொண்டு வணங்கொண்டு வுத்தால வனங்கொண்டுவாழுமணியே
இன்பமுற வந்தெவரும் வேண்டுவார் வேண்டுவன வெளிதிலுற வருள்புரிந்தாய்
எளியனே னளியவுன தினியதல மருவியுன தியைந்தபுகழ் மறவாமலே [மோ
துன்பமுறமுயன் றுமென்கையின தும்பொய்யதாய்த்தொலைவுறுதன் முறையதா
தூயவுன் திருவருளின்வழியெஞ்சா துயர்ந்தொளிரத்தொன்மகன் றனையளிப்பாய்
அன்பின்வழி வந்தசிங் காரவே லவன்புனையு மரியசொன் மாலைமகிழ்வாய்
அருத்தித் திருத்தியரும் பன்னவன முலையம்மை யருள்பெருக வந்தவுமையே.



அரும்பன்ன வனமுலையாள் சொன்னவா றறிவர்திரு வடிகள்வாழ்க
கரும்பன்ன தோளிருந்த நாறுசாந் திளமுலையாள் கருணை யாளி
இரும்பன்ன மனங்குழைத்தென் இருவினையின் வலியதனை எரிமுன்னுன
துரும்பன்ன வெனவாக்கும் என்னம்மை இன்னருளின் தூய்மைவாழ்க.

முற்றிற்று.

Printed at The India Printing Works, Mylapore, Madras.

# திருத்துருத்திப்புராணம்
# பிழை திருத்தம்.

---

## முகவுரை.

| பக்கம். | வரி. | பிழை, | திருத்தம். |
|---|---|---|---|
| iii | 25 | தலங்களின் | தலத்தின் |
| vi | 17 | பாலி | பாடி |
| ,, | 18 | பாடி | பாலி |
| ,, | 20 | பாரதன் | பாரத |
| xii | 3 | மெஞ் | மெய்ஞ் |

## நூல்.

| | | | |
|---|---|---|---|
| 11 | 11 | வைப்ப | வைப்பு |
| 18 | 29 | படுகா | படுகர் |
| 21 | 5 | ஞுறழ்ந்த | ஞுறந்த |
| ,, | 25 | மைமயி | மயி |
| 25 | 9 | ரம்மை | ரம்பை |
| 26 | 24 | காலைத் | காலைக் |
| 30 | 23 | ஆக் | ஆகப் |
| 37 | 12 | வோரா | வொரர் |
| 39 | 19 | தந்த | தந் |
| 40 | 31 | மெஞ் | மெய்ஞ் |
| ,, | 26 | தழிஇ | தழீஇ |
| 41 | 3 | குரியவ | குரியவர் |
| ,, | 15 | மருனம | மறுமை |
| ,, | ,, | டன்னி | டனி |
| 42 | 10 | பூசிக்குங் | பூசிக்குமுழக்கு |
| 44 | 9 | பனையத் | பனைய [ங் |
| 45 | 7 | ( ) | வேறு |
| ,, | 19 | மென்னோ | மொன்றோ |
| 46 | 4 | மலராப் | மலரா |
| ,, | 22 | ணகரி | நகரி |
| 47 | 3 | டுவ | வெ |
| ,, | 5 | சக்கரம் | சக்கரப் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 47 | 25 | றழ்ந்தா | றந்தா |
| 48 | 11 | டிறையி | மறையு |
| 50 | 4 | திரிய | திரியு |
| 57 | 24 | இரண்டு | இரண்டடை |
| 58 | 24 | நாளின | நாளின் |
| 61 | 3 | தான் | தாண் |
| ,, | 24 | மீன்ருன் | மீன்ருள் |
| ,, | 25 | தது | திது |
| 62 | 2 | தங்கை | நங்கை |
| 63 | 9 | றிருமு | றிருமுக |
| 63 | 11 | இறைஞ் | இறைஞ்சி |
| 69 | 9 | வேள் | வேள்வி |
| 69 | 22 | சிவபிரான் | சிறக்கக் |
| 70 | 25 | யாரும் | யாறும் |
| 71 | 27 | ணுற | னுற |
| 73 | 14 | வுது | வது |
| ,, | 24 | மறை | யறை |
| 74 | 4 | மற்து | மற்று |
| ,, | 3 | முதற்கு | முகற்கு |
| 79 | 18 | மான் | மால் |
| 80 | 19 | குழிஇ | குழீஇ |
| 81 | 28 | தறை | திறை |
| ,, | 29 | யின்றென | யினவனு |
| 82 | 30 | விப | வின்ப |
| 83 | 4 | ளினன் | ளினர் |
| 85 | 9 | தூயய | தூயவ |
| 90 | 26 | பவன் | பவள் |
| 93 | 20 | சத்த | சந்த |
| 94 | 13 | ளினர் | ளினன் |
| ,, | 16 | ஞர் | ன் |
| ,, | 23 | மெற்றன | பெற்றண |
| 95 | 3 | லழிக் | லழுங் |
| 96 | 19 | ரழங் | ரழுங் |
| 98 | 6 | எங் | வங் |
| 100 | 2 | பான் | மான் |
| ,, | 9 | வெளை | வேளை |
| ,, | 15 | செய்தனர் | செய்தனன் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 103 | 5 | கொவு | கோவு |
| ,, | 22 | கருனை | கருணை |
| ,, | 23 | தும் | நும் |
| 105 | 30 | கேயி | கோயி |
| ,, | 10 | ளினர் | ளினன் |
| 106 | 13 | னரந் | அந் |
| 107 | 16 | சீதா | சீதர |
| 108 | 3 | வரம்ப | வரம்பை |
| 111 | 19 | லேயெ | லேயே |
| 112 | 17 | கண்டு | கொண்டு |
| 119 | 6 | றுனே | றுணே |
| 121 | 14 | வா னு | வா ணு |
| 122 | 29 | ெ | பெ |
| 128 | 19 | மாக்கிப | மாக்கிய |
| 129 | 25 | டன் | டன |
| 134 | 29 | ங்மைகச | மங்கைசெ |
| 138 | 25 | ஓம | ஓம |
| 140 | 5 | னீது | ளீது |
| 144 | 3 | மெய்தி | மெய்த |
| 151 | 14 | மிட்டு | மிட்டுப் |
| 153 | 7 | ஞூடல் | ரூடல் |
| 154 | 16 | றுவண | றாவண |
| 157 | 5 | னன்றே | ளன்றே |
| ,, | 9 | மீல் | மில் |
| 158 | 6 | றொன்று | றொன்னு |
| 158 | 22 | மஞெ | மணெ |
| 160 | 8 | ருன் | ருள் |
| 161 | 8 | ருன் | ருள் |
| 162 | 6 | கினன் | கினள் |
| 165 | 16 | பொரு | பெரு |
| 166 | 16 | தேழி | தோழி |
| ,, | | சொய்து | செய்து |
| 167 | 10 | பெருமனே | பெருமானே |
| ,, | 12 | வேண்டு | வேண்டும் |
| 170 | 29 | ணீவே | ணிவே |
| 171 | 5 | ுன் | தன |
| ,, | 7 | கானில் | காளில் |
| ,, | 18 | தனு | துணு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 174 | 10 | பயங் | பயஞ் |
| 175 | 15 | ண ணு | ண னு |
| ,, | 6 | ருளுயெ | ருளுமெ |
| ,, | 28 | ணழலி | ணழலீ |
| 178 | 25 | தஸ்ப | தன்ப |
| 179 | 16 | மிவர் | யிவர் |
| ,, | 28 | ரானை | ரானைப் |
| 192 | 7 | அதனை | அதனைக் |
| 198 | 12 | தாய | தா |
| ,, | 13 | வவ | யவ |
| 200 | 24 | கள் | காள் |
| 207 | 28 | யவனை | யவளை |
| 213 | 19 | ரேவப் | வெய் |
| ,, | 29 | மணபி | மன்பி |
| 216 | 6 | கேலத் | கேவலத் |
| 223 | 25 | வவனே | யவணே |
| 225 | 2 | ணடை | ணட |
| 227 | 6 | மர் | மா |
| ,, | 27 | வனைக் | வனைச் |
| 238 | 3 | பண் | பன் |
| 240 | 32 | ஈந்து | ஈந்திட |
| 241 | 30 | மைாய | மையா |
| 242 | 23 | துருத்தி | துருத்தித் |
| 261 | 17 | செய்யும் | செயும் |
| 270 | 6 | க்க | க்கக் |
| 278 | 19 | புகரு | புகலு |
| ,, | 20 | நின் | மின் |
| 279 | 24 | படக் | படைக் |
| 283 | 22 | டோள்க | டோல்க |
| 299 | 29 | குகு | கு |
| 306 | 28 | வீங் | விங் |
| 309 | 3 | யூரா | யூராள் |
| ,, | 4 | ரவ | பவ |
| 322 | 30 | கையி | கை |
| ,, | 31 | கமி | கழ |
| 324 | 26 | கிப் | கி |
| ,, | 30 | கோட் | கோச் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 328 | 8 | பெரு | பெருமா |
| ,, | 19 | ஆரூர | ஆரூரரு |
| 330 | 18 | கிப் | கி |
| 331 | 35 | ளாள் | ளால் |
| 332 | 13 | கோதி | கோத்தி |
| ,, | 16 | கேதி | கேதீ |
| 334 | 13 | சுந்திர | சுந்தர |
| ,, | 24 | விநமறை | விநமரை |
| 335 | 13 | குழைவு | குழைதரு |
| 336 | 12 | யென்னரு | யென்னரும். |

பதிகம்.

| | | | |
|---|---|---|---|
| 346 | 5 | யுங் | யுந் |
| ,, | 6 | செய | செய்ய |
| ,, | 28 | யுன்னை | வுன்னை |
| 346 | 34 | வறி | யறி |
| ,, | 8 | மண்ணில் | கண்ணி |
| 347 | 7 | துன்ணை | துன்னை |
| 348 | 6 | ெபரு | பெருகு |

பிரதிபேதத்தால் வந்த பிழை திருத்தங்களும் இதில் சேர்க்கப்பட்டன.



ஆனந்த ஸாகர பிரஸ், மாயவரம்.